வ்யா.—ஏழாம்பாட்டு. (வானுளாரித்யாதி) தன்மிடுக்காலே காவலாகவைத்த இந்த்ராதிகளையும் நலியாநிற்பானாய், திரைக்கிளப்பத்தையுடைத்தானகடலை அகழாகவுடைத்தான லங்கைக்கு நிர்வாஹகனாயிருக்கிற ராவணனை ஆதித்யகிரணம்போலே கூரியஅம்புகளாலே வரப(ப)லத்தாலேபூண்கட்டின முடிகளானவை பனம்பழம்போலே உதிரும்படி வில்லைவளைத்தவன். (கானித்யாதி) காட்டிலே திரியக்கடவதான மயில்களினுடைய திரள்களானவை ஆட, திரண்ட மேகங்கள் வாத்யம்போலே த்வநிக்க, மதுபாநமத்தமான வண்டுகள் இனியஇசைபாடா நின்றுள்ள, ராவணனோடு பொருதஶ்ரமம் ஆறும்படி ஆடல்பாடல்கேட்டுப்போதுபோக்கியிருக்கலானதேசமாயிற்று.

மூ.—

அரவுநீள்கொடியோனவையுளாசநத்தை' யஞ்சிடாதேயிடவதற்குப்
பெரியமாமேனியண்டமூடுருவப் பெருந்திசையடங்கிட நிமிர்ந்தோன்
வரையின்மாமணியும் மரதகத்திரளும்வயிரமும் வெதிருதிர்முத்தும் [னே
திரைகொணர்ந்துந்தி வயல்தொறும்குவிக்கும் திருக்கண்ணங்குடியுள் நின்று

| பதம். | உரை. |
|---|---|
| அரவு | ஸர்ப்பத்தை |
| நீள்கொடியோன் | நீண்டத்வஜத்திலுடைய துர்யோதநன் |
| அவையுள் | அந்தஸபையில் |
| ஆசநத்தை | பொய்யாஸநத்தை |
| அஞ்சிடாதே | அஞ்சாமல் |
| இட | இடும்போது |
| அதற்கு | அதற்காகவே |
| பெரிய | பெரிதாய் வளர்ந்த |
| மாமேனி | பெரியவடிவானது |
| அண்டம் | அண்டத்தில் |
| ஊடுருவ | உள்ளே தைக்கும்படி |
| பெரும் திசை | பெரிய திக்குக்களும் |
| அடங்கிட | (தன்னிலே) அடங்கும்படியாக |
| நிமிர்ந்தோன் | வளர்ந்தவனான க்ருஷ்ணன், |

அரு.—ஏழாம்பாட்டு. (வானுளாரித்யாதி) ஆஸுரப்ரக்ருதிகளான ராஜலோகத்தை வென்றபடி அநுஸந்தித்தார்கீழ்; இவ்வளவேயோ? கைவிஞ்சி பெருமிடுக்கனாய், தலைபத்துப் படைத்தவனையும்வென்று லோகரக்ஷணம் பண்ணினானென்று ஏத்துகிறாரென்று ஸங்கதி.

வானுளாரையென்னாதே, "அவரை" என்று விசேஷிக்கையாலே பலிதத்தையருளுகிறார் ( குவாலாகவைத்த ) என்று; திக்பாலகதயாப்ரமாணப்ரஸித்தரென்று கருத்து. "பானு" என்று - பாநுவென்றாய், அதினர்த்தம் (ஆதித்யன்) என்று. ... ... ... ... ... ... ... (எ)

| | | | |
|---|---|---|---|
| வரையின் | ஸஹ்யபர்வதத்திலிருக்கிற | உதிர் | உதிர்த்தா நின்றுள்ள |
| மா | ஶ்ரேஷ்ட்டங்களான | முத்தும் | முத்துக்களையும், |
| மணியும் | ரத்நங்களையும், | திரை | அலைகளானவை |
| மரதகத்திரளும் | மரகதக் கூட்டங்களையும், | கொணர்ந்து | கொண்டுவந்து |
| வயிரமும் | வயிரங்களையும், | உந்தி | தள்ளி |
| வெதிர் | மூங்கில்கள் | வயல்தொறும் | கழனிகள்தோறும் |
| | | குவிக்கும் | குவிக்கும்படியான |
| | | | திருக்கண்ணங்குடியுள்நின்றானே. |

வ்யா.—எட்டாம்பாட்டு. (அரவுநீள் கொடியோன்) ஸர்ப்பத்த்வஜனென்னக்கடவதிறே துர்யோதநனை. அவன்றன் ஓலக்கத்தினுள்ளே ஆஸநத்தை "ஜகத்துக்கு வேர்ப்பற்றானவனை அழிக்கப்புகாநின்றோம்" என்று கூசாதேயிட, அதுவே ஹேதுவாகப் பெரியவடிவானது அண்டாவகாசத்தை ஊடுருவ திக்குக்கள் தன்பக்கலிலே அடங்கும்படியாக வளர்ந்தவன். (வரையித்யாதி) ஸஹ்யபர்வதத்திலிருக்கிற ரத்நங்கள், மரதகத்திரள், வயிரமென்கிற ரத்நவிசேஷங்கள், மூங்கிலுதிர்த்த முத்துக்கள், இவற்றை திரைகளானவை தன்னிலடங்காமையாலே கொடுவந்துதள்ளி வயல்களிலே குவியாநிற்கும்.

௯.—

பன்னியபாரம் பார்மகட்கொழியப் பாரதமாபெரும்போரில்
மன்னர்கள்மடிய மணிநெடுந்திண்டேர் மைத்துனர்க்குய்த்தமாமாயன்
துன்னுமாதவியும் சுரபுனைப்பொழிலும்சூழ்ந்தெழு செண்பகமலர்வாய்
தென்னவென்றளிகள் முரன்றிசைபாடும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பன்னிய | (பொறுக்கமாட்டாதென்று)சொல்லப்பட்ட | ஒழிய | போம்படி |
| பாரம் | பூபா(ரா)ரமானது | பாரதமாபெரும் போரில் | மஹாபாரதயுத்தத்திலே |
| பார்மகட்கு | ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு | மன்னர்கள் | ராஜாக்கள் |
| | | மடிய | முடியும்படியாக |

அரு.—எட்டாம்பாட்டு. (அரவித்யாதி) வானுளாரைநலிந்தவன்றன்னை வென்றபடி சொன்னார்கீழ். இதிலும் ஆஶ்சர்யாவஹமான ஸர்வேஶ்வரனை தன்னையும் வஞ்சிக்கத்தேடின துஸ்ஸபாமத்த்யத்திலே அவ்வஞ்சநத்திலகப்படாதே வளர்ந்தக்ருஷ்ணைபதாநத்தை ஸ்துதிக்கிறாரென்று ஸங்கதி.

"அவை" என்றதினர்த்தம் -(ஓலக்கம்) என்றது. ... ... (அ)

| | | | |
|---|---|---|---|
| மணி | மணிமயமாய் | சூழ்ந்து | சூழப்பட்டதாய், |
| நெடும் | நீண்டதாய் | எழு | வ்ருத்தியை யடையா நின்ற |
| திண் | த்ருடமான | செண்பகமலர் வாய் | செண்பகபுஷ்பத்திலே |
| தேர் | தேரை | தென்னவென்று | தென்னவென்று ஸ்வ ரத்தோடே |
| மைத்துனர்க்கு | அர்ஜுநனுக்காக | அளிகள் | வண்டுகள் |
| உய்த்த | நடத்தினவனாய் | முரன்று | வ்யக்தமாய் |
| மாமாயன் | ஆஶ்சர்யசேஷ்டித முடைய எம்பெருமான் | இசைபாடும் | கானம்பண்ணாநின்ற |
| துன்னு | நெருங்கின | திருக்கண்ணங்குடியுள் நின்றானே. | |
| மாதவியும் | மாதவியாலும், | | |
| சுரபுன்னை | ஸுரபுன்னையினுடைய | | |
| பொழிலும் | சோலைகளாலும் | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பன்னியவித்யாதி) எல்லாம்பொறுக்கத்தக்க பூமிதானே "என்னால் பொறுக்கப்போகாது" என்று கூப்பிடும்படி விஞ்சினபா(ஞ)ரமானது ஶ்ரீபூமிப்பிராட்டிக்கு வாராதபடி மஹாபாரதயுத்தத்திலே ராஜாக்களானவர்கள் முடியும்படியாக அர்ஜுநன்முன்னே நின்று தேரை நடத்தினவன். (மாமாயன்) ஆஶ்சர்யகுண சேஷ்டிதங்களையுடையவன்; நெருங்கினமாதவியும், சுரபுன்னைப்பொழிலும், சுற்றிலேஓங்கின செண்பகங்களையு முடைத்தாய், அவற்றிலே படிந்தவண்டுகளானவை முரன்று இசைபாடா நின்றுள்ள திருக்கண்ணங்குடியுள் நின்றானே. (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (பன்னியவித்யாதி) தூதுபோகையிலுண்டான ஆஶ்சர்யத்தை யருளிச்செய்தார்கீழ்; அதுக்கும் இசையாத மூர்க்கராகையாலே அவர்களைத் தேர்க்காலாலே அழித்த வாஶ்சர்யத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"பன்னிய" என்றது - சொல்லப்பட்ட என்றாய், தாத்பர்யம் (எல்லாமித்யாதி). செண்பகங்களில் வண்டுகள்படிந்தால் முடியுமென்று கவிஸமய ஸித்தமேயாகிலும், இங்கு திவ்யதேசத்திலிருக்கையாலேப்ராதிகூல்யமின்றிக்கே அநுகூலித்தமையுண்டாகையாலே அருளுகிறாரென்று திருவுள்ளம். (கூ)

மூ.— [அ

கலையுலாவல்குல்காரிகை திறத்துக்கடல் பெரும்படையொடும்சென்
சிலையினாலிலங்கை தீயெழச்செற்ற திருக்கண்ணங்குடியுள்நின்றானை
மலைகுலாமாடமங்கையர்தலைவன் மானவேல் கலியன்வாயொலிகள்
உலவுசொல்மாலை யொன்பதோடொன்றும் வல்லவர்க்கில்லை நல்குரவே.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| கலை | பரியட்டமானது |
| உலா | நடையாடுகிற |
| அல்குல் | நிதம்ப ப்ரதேசத்தையுடைய |
| காரிகைதிறத்து | அழகிய பிராட்டி நிமித்தமாக |
| கடல் | ஸமுத்ரத்திற் காட்டில் |
| பெரும் | பெரிதான |
| படையொடும் | ஸேனையோடு |
| சென்று | போய் |
| சிலையினால் | பாணத்தால் |
| இலங்கை | லங்கையை [யாக |
| தீஎழ | நெருப்புக்கிளரும்படி |
| செற்ற | அழித்த |
| திருக்கண்ணங்குடியுள்நின்றானை | திருக்கண்ணங்குடி என்னும் திவ்யதேசத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் விஷயமாய், |
| மலைகுலாமாடம் | மலைபோன்ற மாடங்களையுடைய |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார் |
| தலைவன் | ப்ரதாநராய், [க்கு |
| மானவேல் | அபிமாநஜநகமானவேலையுடைய |
| கலியன் | ஆழ்வார் |
| வாயொலிகள் | ஒலிகளையுடைத்தாகவருளிச்செய்தவையாய் |
| உலவு | ஸலக்ஷணங்களான, |
| சொல்மாலை | சப்தஸந்தர்ப்பமான பாசுரங்களுடைய |
| ஒன்பதோடொன்றும் | இப்பத்தையும் |
| வல்லவர்க்கு | அப்ய (ஸ்) ஸிக்கவல்லவர்களுக்கு [து |
| நல்குரவு | பகவத்தாரித்ர்யமான |
| இல்லை | கிடையாது (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கலையித்யாதி) பிராட்டியுடைய பரியட்டப்பண்பிலே தோற்றுப் பெரியபடைவெள்ளத்தோடே முதலிகளோடேசென்று ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கழியாத ஊரை வில்லாலே அக்நிகிளரும்படியாகச்செற்ற திருக்கண்ணங்குடியுள்நின்றானை. மலைபோலேயிருந்துள்ள மாடங்களையுடைத்தான திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநரானவர், பிடித்தார்க்குத் தம்அபிமாநத்தைப்பிறப்பிப்பதானவேலையுடைய ஆழ்வார் ஒலியையுடைத்தாக வருளிச்

அரு.—பத்தாம்பாட்டு. (கலையித்யாதி) (பண்பிலே) அழகிலே. கடலில் காட்டில் பெரியபடையென்று திருவுள்ளம்பற்றி (பெரியவித்யாதி). "படையோடும்" என்ற ச (ச) காரார்த்தம் ( முதலிகள் ) என்றது. உலாவுகை -

செய்தவையாய். (உலவுசொல்மாலை) லக்ஷணங்களில்குறையற்றிருந்துள்ள இப்பத்தையும் அப்யஸிக்கவல்லார்க்கு பக(ஞ்)வத்தாரித்ரயமில்லையென்கிறார். .... .... .... .... .... .... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி
# ஒன்பதாம்பத்து முதல்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

# ஒன்பதாம்பத்து இரண்டாந்திருமொழி
## பொன்னிவர் ப்ரவேசம்.

வ்யா.—"மன்னர்கள்மடிய மணிநெடுந்திண்டேர் மைத்துனர்க்குய்த்த மாமாயன்" என்று அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை யருளிச்செய்தார் கீழ்த்திருமொழியில்; இங்கே அவனோடே நினைத்த பரிமாற்றமெல்லாம் பரிமாறலாமென்று திருநாகையிலே போய்ப்புக்கார்; அங்குநிற்கிறவனுடைய பருவத்தையும் மேன்மையையும் வடிவழகையும் ஒப்பனையையும் கண்டார். அவன்பக்கலிலே கிட்டி எல்லாவடிமையும்செய்ய வேணுமென்னும்படியானஅபேக்ஷை பிறந்து, அபேக்ஷைக்கநுரூபமாக (க) "ஸ்ரேயோஹ்யபி மாம்வத - க்ரியதாமிதிமாம் வத" என்றொருவார்த்தை அருளிச்செய்யக் கண்டிலர். விஷயம் ஸந்நிஹிதமாயிருக்க நினைத்தபரிமாற்றம் பெறாமையாலே அவஸந்நராய், அவ்வழகுதான் உருவு வெளிப்பாடாகநலிய, அத்தாலே நலிவுபட்டு கலந்தவன் பேரநின்றவநந்தரம் "அவனழகு மறக்கவொண்ணாதபடி உருவு வெளிப்பாட்டாலே நலிய நோவுபடாநின்றேன்காண்" என்று தோழிக்குச் சொல்லுகிறாளொரு பிராட்டி பாசுரத்தாலே தாம் மநோரதித்த கைங்கர்யம் பெறாதேயிருந்து நோவுபடுகிறபடியைச் சொல்லுகிறாளாயிருக்கிறது. .... .... *

நாட்டில் நடையாடுகையாய், அத்தால்பலிதம்(லக்ஷணங்களிலித்யாதி)."நல்குரவு" என்றதினர்த்தம் (பகவத்தாரித்ர்யம்) என்றது. ... ... (க0)

ஜீயர்திருவடிகளே சரணம்.

அநு.—பொன்னிவர் மேனியின் ப்ரவேசம். (இங்கே) இவ்விபூதியிலே.

(க) ரா-ஆ-கடு-எ.

மூ.—

பொன்னிவர்மேனி மரதகத்தின்பொங்கிளம் சோதியகலத்தாரம்
மின்னிவர்வாயில்நல்வேதமோதும் வேதியர் வானவராவர்தோழீ
என்னையும்நோக்கியென்னல்குலும்நோக்கிஏந்திளங்கொங்கையும்நோக்குகின்
அன்னையென்நோக்குமென் றஞ்சுகின்றேனச்சோவொருவரழகியவா. [றார்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இவர் | இந்த எம்பெருமானுடைய | | (இவர்) |
| மேனி | திருமேனியானது | என்னையும் நோக்கி | என்னையும் குளிரப்பார்த்து |
| பொன் | பொன்போலிராநின்றது | என் | என்னுடைய |
| மரதகத்தின் | மரகதமணியினுடைய | அல்குலும் | நிதம்பப்ரதேசத்தையும் |
| பொங்கு | பரவாநின்ற | நோக்கி | பார்த்து |
| இளம்சோதி | இளகியதேஜஸ்ஸையுடைய | ஏந்து | உந்நதமாய் |
| அகலத்து | திருமார்விலிருக்கிற | இளம் | இளமையான |
| ஆரம் | ஹாரமானது | கொங்கையும் | ஸ்தநங்களையும் |
| மின் | மின்போலே இராநின்றது; | நோக்குகின்றார் | கடாக்ஷியா நின்றார். |
| தொழி | ஸகியே! | | (இது விஷயத்தில்) |
| இவர் | இவர், | அன்னை | மாதாவானவள் |
| வாயில் | வாயில் | என்நோக்கும் | என்னபார்க்கிறாளோ |
| நல்வேதம் | ஸாமவேதத்தை | என்று | என்று |
| ஓதும் | உச்சரிக்கிற | அஞ்சுகின்றேன் | பயப்படுகிறேன்; |
| வேதியர் | ப்ராஹ்மணரோ ? | ஒருவர் | இவர் ஒருவருடைய |
| வானவர்ஆவர் | தேவரா யிருப்பாரோ? | அழகியவா | அழகுஇருந்தபடி(காண்) |
| | | அச்சோ | ஆஸ்சர்யம். (க) |

வ்யா.—முதற்பாட்டு.(பொன்னித்யாதி)பொன்னிவரென்றுநிர்வஹிப்பர் பிள்ளையமுதனார், (க)“எண்ணும், பொன்னுருவாய்” என்னுமாபோலே ஸ்வரூபபரமாக்கி. அன்றிக்கே (பொன்னிவர்மேனி) இவருடைய வடிவைப்பார்த்தவாறே (உ) “சுட்டுரைத்தநன்பொன்னுன் திருமேனியொளியொவ்வாது” என்கிறபடியே நன்றான பொன்னென்னலாயிரா நின்றது. அத்தைநீக்கி உள்ளேபார்த்த

அரு.—முதற்பாட்டு. மேலுக்கவதாரிகை (அத்தையித்யாதி). (அத்தை) ஆபரணசோபை (ஙீ) யாலுண்டான ஸமுதாய சோபையை. “நல்” என்று

(க) திருநெ-க, (உ) தி-வாய்-ரு-க-உ.

வாறே தோற்றுகிறவடிவிருக்கிறபடி. (மரதகமித்யாதி) மரதகத்தினுடைய விஸ்த்ருதமாய் கண்ணாலே முகக்கலாம்படியான புகரையுடைத்தான திருமார்விலேசாத்தின ஆரம் மின்போலேயிராநின்றது. (இவர்வாயில் நல்வேதமோதும் வேதியர்) இவர்வாயிலுச்சரிக்கிறதும் ஸாமவேதமாயிராநின்றது. (வானவர்)(க)"ராஜர்ஷிதேவப்ரதிமௌ-ராஜர்ஷிதேவப்ரதிமௌ" என்னுமாபோலே வடிவழகைப் பார்த்தவாறே ராஜாக்களோடொக்கச் சொல்லலாயிராநின்றார். ஸமாசாரத்தைப் பார்த்தவாறே ப்ராஹ்மணரோடொக்கச் சொல்லலாயிராநின்றார். மேன்மையைப் பார்த்தவாறே தேவர்களோடொக்கச் சொல்லலாயிராநின்றார். விஷயம் குறைவற்றிருந்தது. நீ அப்போது நிற்கப்பெறாததுகாண் குறை.

இப்படி விலக்ஷணமாயிருப்பானொருவன் உன்னோடேவந்து கலந்தானாகில் பிறந்தபடிசொல்லிக்காணாய்; அவன்உன்பக்கல்செய்ததென்னென்ன; நீசெய்ததென்னென்ன; (என்னையுமித்யாதி) மர்மங்களிலே கடாக்ஷியாநின்றார். பார்த்தபார்வை ஒருகால் மாறவைக்கிறிலர். நீ பின்னைச்செய்ததென்னென்ன; (அன்னையென்னோக்குமென்றஞ்சுகின்றேன்) இப்பார்வைக்கு நானும் கூட்டென்று பார்க்கிறாளோ வென்றஞ்சுகின்றேன். (அச்சோ வொருவரழகியவா) அவன்பார்வையும் அவள் பார்வையும் ஆனதாகிறது; அப்போதை அழகிருந்தபடிகாண். .... .... .... .... .... (க)

---

விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (இவரித்யாதி). இவ்விபூதியிலே சேதநருடைய கிஞ்சித்காரத்தையும் பாரதந்த்ர்யத்தையும் ததநுகுணமான பக்திவிசேஷங்களையுமே பார்த்திருக்குமவனன்றிக்கே யிருக்கச்செய்தேயும், ஸம்பந்தஜ்ஞாநத்திலுறைப்பில்லாமையாலே அவற்றைக் காக்கமாட்டாதே உபாயாத்த்ய(ஸ்ய)வஸாயத்துக்கு அஞ்சிச் செய்ததெல்லாம் ஸ்வரூபவிருத்தமாய் விழுமோவென்னும் பீ(பீ)தியால் இருந்துவிட்டும், அவன் ஸௌந்தர்யத்திலே ஈடுபடும்படியை ஸ்வாபதேசமாகத் திருவுள்ளம்பற்றி அந்யாபதேசத்திலே "தோழி" என்றுஸம்போதிக்கைக்குக்கருத்து (விஷயமித்யாதி).

நோக்குகின்றாரென்று வர்த்தமாநார்த்தம் (பார்த்தவித்யாதி). "நானும் கூட்டு" என்றதால்-என்னிசைவும் ஸாதநமென்று சொல்லுவளோ என்றதாயிற்று. (ஆனதாகிறது) என்றது -இவ்விரண்டுக்குள்ளே எது கார்யகரமாகிறதோ? அது ஆகிறதென்று தோழிக்கு ஸங்கேதமாகச் சொன்னபடி. ... (க)

---

(க)

மூ.—

தோடவிழ்நீலமணம் கொடுக்கும்சூழ் புனல்சூழ்குடந்தைக்கிடந்த
சேடர்கொலென்று தெரிக்கமாட்டேன் செஞ்சுடராழியும்சங்குமேந்
பாடகமெல்லடியார் வணங்கப்பன்மணி முத்தொடிலங்குசோதி [தி
ஆடகம்பூண்டொரு நான்குதோளுமச்சோ வொருவரழகியவா.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தோடு | (இவர்) இதழ்கள் | ஏந்தி | தரித்துக்கொண்டு |
| அவிழ் | மலராநின்ற | பாடகம் | பாடகமுடையதாய் |
| நீலம் | நீலமானது | மெல்லடியார் | ஸுகுமாரமான அடி |
| மணம் | பரிமளத்தை [ய் | | களையுடையவர்கள் |
| கொடுக்கும் | புறப்படவிடாநிற்பதா | வணங்க | திருவடிகளில் விழும் |
| சூழ் | பரவியிருக்கிற | | படியாக [டும் |
| புனல் | ஜலத்தாலே | பன்மணி | பலவித ரத்நங்களோ |
| சூழ் | சூழப்பட்டதுமான | முத்தொடு | முத்துக்களோடும் |
| குடந்தை | திருக்குடந்தையிலே | இலங்கு | ப்ரகாசியாநின்ற |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற | சோதி | புகரையுடைய |
| சேடர்கொல் | யுவாக்கள் | ஆடகம் | பொன்னை திருவாபர ணங்களை |
| என்று | என்று | | |
| தெரிக்கமாட் டேன் | தெரிந்துகொள்ளமாட் டுகிறிலேன் (இவர்) | பூண்டு | தரித்துக்கொண்டும் |
| | | ஒரு | அத்விதீயமான |
| செம் | சிவந்த | நான்குதோ ளும் | நாலுதிருத்தோள்களை யுமுடையனு யிரா நின்றார். |
| சுடர் | தேஜஸ்ஸை யுடைய | | |
| ஆழியும் | திருவாழியையும் | | அச்சோ ஒருவர் அழகியவா. |
| சங்கும் | பாஞ்சஜந்யத்தையும் | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (தோடவிழித்யாதி) தோடலரா நின்றுள்ள நீலமானது பரிமளத்தைப் புறப்படவிடாநிற்பதாய் பரந்தபுனலாலே சூழப்பட்டிருந்துள்ள திருக்குடந்தையிலே கண்

---

அ௩.—இரண்டாம்பாட்டு. (தோடித்யாதி) தோழியானவள், "நீகண்ட போதே நீரராயிருந்தீர்; உம்மதெவ்வூர்"என்று கேட்டிலேயோவென்ன; அவ ரையாரென்று நான் கேட்கமாட்டிற்றிலேனுகிலும், அடையாளம் சொல்லுகி றேம்; ஆராவமுதாழ்வார் போலேயிருந்தது; அதுக்கடையாளமென்னென்ன; திருவாழி திருச்சங்குகளுண்டென்கிறுளென்று ஸங்கதி.

வளர்ந்தருளின யுவாக்களென்னலா யிராநின்றார். (செஞ்சுடராழி யும் சங்குமேந்தி) ஒப்பித்துக்கொண்டிராநின்றார். திருவாழியையும் பாஞ்சஜந்யத்தையும் கையிலேயுடையராயிராநின்றார்.

(பாடகமெல்லடியார்வணங்க) யுவாக்கள் தங்களொப்பனைகண்டு காலிலே விழும்படியிருக்குமவர்கள் காலிலேவிழும்படி யிராநின்றார். (பன்மணியித்யாதி) பலரத்நங்கள் முத்துக்கள்இவற்றோடேகூட மிக்கபுகரையுடைத்தான ஆபரணங்களாலே ஒப்பித்துமிராநின்றார். ஒப்பனைதான் வேண்டாதபடியா யிராநின்றது திருத்தோள்களைக் கண்டவாறே. (அச்சோவொருவரழகியவா) இவ்வழகு நம்மால் பேசப்போகாது. விஸ்மயப்பட்டு விடுமித்தனை. .... .... (உ)

மூ.—

வேயிருஞ்சோலை விலங்கல்சூழ்ந்த மெய்யமணாளரிவ்வையமெல்லாம்
தாயினநாயகராவர் தோழீ தாமரைக்கண்களிருந்தவாறு
சேயிருங்குன்றம்திகழ்ந்ததொப்பச் செவ்வியவாகி மலர்ந்தசோதி
ஆயிரந்தோளொடிலங்கு பூணு மச்சோவொருவரழகியவா (ந)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேய் | மூங்கிலினுடைய | தாமரைக்கண்கள் | தாமரைபோன்ற கண்கள் |
| இரும் | விஸ்த்ருதமான | இருந்தவாறு | இருந்தபடி (என்); |
| சோலை | சோலையையுடைத்[தான | சேய் | உயர்ந்ததுகளாய் |
| விலங்கல் | மலைகளாலே | இரும் | பரந்திருப்பதான |
| சூழ்ந்த | சூழப்பட்ட | குன்றம் | மலைகள் |
| மெய்யம் | திருமெய்யத்திற்கு | திகழ்ந்ததொப்ப | விளங்கினாற்போலே |
| மணாளர் | நிர்வாஹகராய் | செவ்வியவாகி | செவ்வையை யுடைத்[தாய் |
| இவ்வையமெல்லாம் | இந்தபூமிப் பரப்படங்கலும் | மலர்ந்த | பரவின |
| தாயின | அளந்துகொண்ட | சோதி | புகரையுடைத்தான |
| நாயகராவர்; | ஸ்வாமியாயிராநின்றார்; | | |
| தோழீ | ஸகியே | | |

(தோடலராநின்றுள்ள) தோடு - உயர்த்தியும், கிளர்த்தியும், இளமையுமாய், இங்கு இளமைசொல்லுகிற தென்றருளுகிறார் (யுவாக்கள்) என்று.

"பாடகமெல்லடியார்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (யுவாக்களித்யாதி). "ஆடகம்" என்றது - ஹாடகமென்றாய், பொன்னுனவாபரணங்களைச் சொல்லிற்றாக வருளுகிறார் (பலவித்யாதி). ... ... ... (உ)

| | | |
|---|---|---|
| ஆயிரம்தோளொடு | ஆயிரம் திருத்தோள்களோடு | தோள்வளையும் பூணும் (உடையராய் இரா நின்றார்); |
| இலங்கு | ப்ரகாசியாநின்ற | அச்சோ ஒருவர் அழகியவா. (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (வேயித்யாதி) மூங்கிலினுடைய பரந்தசோலையை யுடைத்தான மலைகளாலே சூழப்பட்ட திருமெய்யத்திலே வந்து சாய்ந்தருளின நிர்வாஹகரானவர். (இவ்வையமித்யாதி) பூமிப்பரப்பையடைய அநாயாஸேந அளந்துகொண்ட ஸ்வாமிகளென்னலாயிரா நின்றார் நீர்மைபார்த்தவாறே. (தாமரைக் கண்களிருந்தவாறு) புண்டரீகாக்ஷனாயிரா நின்றாரென்று சொல்லலாயிரா நின்றார்.

(வேயித்யாதி) ஓங்கியிருப்பதாய் பரந்திருப்பதான மலை விளங்கினாற்போலே செவ்வையையுடைத்தாய் மிக்கபுகரை யுடைத்தான ஆயிரம் தோளையுமுடையராய், அத்தோள்கள்தோறும் தோள்வந்தியை யுடையராயிரா நின்றார். கீழேநான்கு தோளுமென்னச் செய்தே ஆயிரந்தோளென்கிறது-ஆயிரம்தோளாலும் கண்டநுபவிக்கும் கரணங்கள் அநேகம் கொண்டநுபவிக்க வேண்டும்படி யிரா நின்றாரென்கை. (அச்சோவொருவரழகியவா) ஓரொப்பனைவேணுமோ? அவ்வடிவழகுதானே அமையாதோ? .... .... .... (௩)

மூ.—

வம்பவிழும்துழாய்மாலைதோள்மேல் கையனவாழியும் சங்குமேந்தி
நம்பர்நம்மில்லம் புகுந்துநின்றார் நாகரிகர்பெரிதுமிளையர்
செம்பவளமிவர்வாயின்வண்ணம் தேவரிவரதுருவம்சொல்லில்
அம்பவளத்திரளேயுமொப்ப ரச்சோ வொருவரழகியவா. (ச)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (வேயித்யாதி) நீரே அதுகண்டபோதே ஒருவரென்றறுதியிட வேண்டாவோ என்ன; ஆராவமுதாழ்வாரைப்போலே இரா நின்றாரென்கிறாள். "மெய்யாகச் சொல்லாய்" என்னவே மெய்யமனாளரை நினைத்து அவரே இவளுக்காக வேணுமென்று நிர்ணயித்தவளாகச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

நான் "மெய்யாகச்சொல்லாய்" என்ன; நீயும் மெய்யமனாளரென்கிறாய்; இதுவென்; நீ முகம் பார்த்திலையோவென்ன; நாணம்ஒட்டாமையாலே கடைக்கணித்துப் பார்த்தால் தாமரைக்கண்களாயிருந்த வர்ணத்தைக் கொண்டு அவராக வேணுமென்கிறேனென்னுமது தோன்றவருளுகிறார் (புண்டரீகேத்யாதி).

(தோள்வந்தி) தோள்வளைகள். (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வம்பு | பரிமளத்தை | இவர் | இவருடைய |
| அவிழும் | புறப்படவிடாநின்ற | வாயின் | திருவதரத்தினுடைய |
| துழாய்மாலை | திருத்துழாய்மாலையை | வண்ணம் | வர்ணமானது |
| தோள்மேல் | திருத்தோள்களில் (தரியாநின்றூர்); | செம்பவளம் | சிவந்த பவளம்போலிரா நின்றது; |
| கையன | திருக்கையில் | தேவர் | ஸகலருக்கும் ஸ்வாமியானவர்; |
| ஆழியும் | திருவாழியையும் | | |
| சங்கும் | பாஞ்சஜந்யத்தையும் | இவரது | இவருடைய |
| ஏந்தி | தரித்துக்கொண்டிரா நின்றூர்; | உருவம் | திருமேனியின் ஸ்வரூபத்தை |
| நம்பர் | விஸ்வஸநீயராய் | சொல்லில் | சொல்லுமளவில் |
| நம்மில்லம் | நம்முடைய இருப்பிடத்தில் | அம் | அழகிதான |
| புகுந்து | ப்ரவேசித்து | பவளத்திரளேயும் | பவழக்கூட்டத்தோடு |
| நின்றூர் | நிற்கின்றூர்; | | |
| நாகரிகர் | நாகரிகரான ரஸிகராகவும், | ஒப்பர் | ஸாம்யமுடையராயிரா நின்றூர் |
| பெரிதும் | மிகவும் | | |
| இளையர் | இளம்பருவமுடையராயிரா நின்றூர்; | | அச்சோ ஒருவர் அழகியவா. (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (வம்பவிழுமித்யாதி) திருமேனியில்ஸ்பர்ஶத்தாலே பரிமளத்தைப் புறப்படவிடா நின்றுள்ள திருத்துழாய் மாலையைத் தோளிலே யுடையராயிராநின்றூர்; ஐஶ்வர்யஸூசகமான மாலையிருந்தபடி. (கையனவாழியும் சங்குமேந்தி) ஈஶ்வரத்வஸூசகமான திவ்யாயுதங்களைத் தரித்துக் கொண்டிரா நின்றூர். (நம்பர்) ஒப்பனையழகைக்கண்டவாறே நமக்குப்பற்றப்படுமவரென்று தோற்றும்படி யிராநின்றூர். விஸ்வஸநீயரென்றபடி. (நம்மில்லம் புகுந்துநின்றூர்) "நற்சரக்கன்றூ" என்று தேட்டமாயிருக்கிறதில்லை. (நாகரிகர்) நாகரிகராய் பரமரஸிகராயிரா நின்றூர்.

---

அரு.—நாலாம்பாட்டு. (வம்பித்யாதி) தோழியும் தானுமாய் திருவாழியைப்பேச, அவளும் பா(வ)வநாப்ரகர்ஷத்தாலே முன்னிலையாய் தோற்றக் கண்டதெல்லாம் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

கேவலம் மாலையென்னுதே "துழாய்" என்றதுக்குக் கருத்து (ஐஶ்வர்யேத்யாதி). எல்லாம் புகுருகைக்கு ஹேது-நாகரிகத்வமென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் (பரமேத்யாதி).

(பெரிதுமிளையர்) நம்பருவத்தில் விஞ்சியிருப்பதுவுமில்லை. இவர்திருவதரமிருக்கும்படியைப் பார்த்தவாறே சிவந்தபவளமென்னலாம்படியிருந்தது. (தேவரிவர்) இதரவிஸஜாதீயருமாயிருந்தார்; மநிச்சரோடு கூட்டலாயிருக்கிறிலர். (உருவம்சொல்லில்) இவர் வடிவிருந்தபடியைச் சொல்லில் எங்குமொக்கஸ்ப்ருஹணீயமாயிராநின்றது. (அச்சோவொருவரழகியவா) உபமாநமில்லாத விஷயத்தில் உபமாநம்சொல்லவிருப்போமோ? .... .... .... (ச)

மூ.—

கோழியும்கூடலும் கோயில்கொண்ட கோவலரே யொப்பர்குன்றமன்ன
பாழியந்தோளுமோர் நான்குடையர் பண்டிவர்தம்மையும் கண்டறியோம்
வாழியரோவிவர் வண்ணமெண்ணில் மாகடல்போன்றுளர் கையில்வெய்ய
ஆழியொன்றேந்தியோர் சங்குபற்றி யச்சோ வொருவரழகியவா. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| கோழியும் | உறையூரையும் |
| கூடலும் | மதுரையையும் |
| கோயில்கொண்ட | வாஸஸ்தாநமாக வுடைய |
| கோவலரே | இடையர் (ராஜாக்கள்) |
| ஒப்பர் | என்றுசொல்லலாயிராநின்றார்; |
| குன்றமன்ன | பர்வதத்தோடொத்த |
| பாழி | வலிமையையுடைய |
| அம் | அழகிதாய் |
| ஓர் | அத்விதீயமான |
| நான்குதோளும் | நான்கு திருத்தோள்களையும் |
| உடையர் | உடையராயிருந்தார்; |
| பண்டு | இதுக்குமுன்பு |
| இவர்தம்மையும் | இவரை |
| கண்டறியோம் | நாம்பார்த்ததில்லை; |
| வாழியரோ | பல்லாண்டுசொல்லப்படுமவரோ? |
| இவர்வண்ணம் | இவர்வடிவின்படியை |
| எண்ணில் | சொல்லப்புக்கால் |
| மா | பெரிதான |
| கடல்போன்றுளர் | ஸமுத்ரம்போலேஇராநின்றார்; |
| கையில் | ஒரு திருக்கையிலே |
| வெய்ய | ஜ்வலியாநின்ற |
| ஆழிஒன்று | ஒருதிருவாழியை |
| ஏந்தி | தரித்துக்கொண்டு, |
| ஓர் | (ஒருதிருக்கையில்) அத்வீதீயமான |
| சங்கு | பாஞ்சஜந்யத்தையும் |
| பற்றி | தரித்துக் கொண்டிராநின்றார்; |

அச்சோஒருவர் அழகியவா. (ரு)

* மூலையோமுழுமுற்றும் போந்திலாதாப்போலே, மோவாயுமெழுந்ததில்லையென்று விவக்ஷித்துக்கருத்து (நம்மில்லமித்யாதி). (இருப்போம்) என்றநந்தரம் "இதுவென்ன ஆஶ்சர்யம்" என்று கூட்டுவது. ... ... (ச)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கோழியித்யாதி) உறையூரையும் மதுரையையும் வாஸஸ்தாநமாகவுடைய கோவலரென்று சொல்லவுமாயிராநின்றார். "கோழி" என்கிறது-உறையூரை. "கூடல்" என்கிறது-மதுரையை. இவற்றை வாஸஸ்தாநமாகவுடைய ராஜாக்களென்று சொல்லவுமாயிராநின்றா ரென்னவுமாம். முற்பட்ட யோஜநைக்கு அவ்விடங்களில் உகந்தருளி நிற்கிறவர்களைச் சொல்லிற்றாகிறது. (குன்றமித்யாதி)மலையோடொத்த திண்ணியதாயிருக்கிற திருத்தோள்கள் நாலையுமுடையராயிருந்தார். (பண்டிவர் தம்மையும் கண்டறியோம்) இதுக்குமுன்பு கண்டறியாதாராயிரா நின்றார்.

(வாழியரோ) பல்லாண்டு பல்லாண்டென்று சொல்லுவது: இவர்வடிவிருக்கும் படியைச் சொல்லப்புக்கால் கடல்போலே யிராநின்றது. ப்ரதிபக்ஷத்தைக் கனலெழக்காய்கிற திருவாழியை ஒரு கையிலே ஏந்தி, (ஓர்சங்குபற்றி) தமக்கடங்காத பாஞ்சஜந்யத்தை மற்றைக்கையிலே யுடையராயிருந்தார். (அச்சோ வொருவரழகியவா) இத்தைச்சொல்லி நம்மால்கரையிலே நிற்குமத்தனையல்லது நம்மால் உள்ளிழிந்து பேசப்போகாது. (ரு)

மூ.—

வெஞ்சினவேழவெண்மருப்பொசித்தவேந்தர் கொலேந்திழையார்மனத்தை
தஞ்சுடையாளர் கொல்யானறியேன் தாமரைக்கண்களிருந்தவாறு
கஞ்சனையஞ்சமுன்கால் விசைத்தகாளையராவர் கண்டார்வணங்கும்
அஞ்சநமாமலையேயு மொப்ப ரச்சோ வொருவரழகியவா. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெம் | (இவர்) க்ரூரமான | ஒசித்த | முறித்தவனை |
| சினம் | கோபத்தையுடைய | வேந்தர்கொல் | ராஜாவோ? |
| வேழம் | குவலயாபீடத்தினுடைய | ஏந்திழையார் | தரிக்கப்பட்ட ஆபரணங்களையுடைய ஸ்திரீகளுடைய |
| வெண் | வெண்மையான | | |
| மருப்பு | தந்தத்தை | | |

அரு.—அஞ்சாம்பாட்டு. (கோழியித்யாதி) இவர்நாகரிகரென்றுநின்றாய், இவருடைய நாகரிகத்வம் நீ கண்டபடி யென்னென்றால் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

கோபாலத்வவிவக்ஷயா அருளிச்செய்து, பூ(பூ)பாலத்வ விவக்ஷயாவருளுகிறார் (கோழியித்யாதி). ... ... ... ... ... ... (ரு)

| | | | |
|---|---|---|---|
| மனத்தை | ஹ்ருதயத்தை | அஞ்ச | நடுங்கும்படியாக |
| தஞ்சு | ஆதாரமாக | கால் | திருவடிகளாலே |
| உடையாளர் | உடையவரோ? | விசைத்த | உதைத்தவனை |
| கொல் | (என்னும்படியிரா நின்றார்;) | காளையராவர் | யுவாவாகஇராநின்றார்; |
| யான் அறியேன் | நான் அறிகிறிலேன்; | கண்டார் | கண்டவர்களெல்லாரும் |
| தாமரைக்கண்ங்கள் | தாமரைபோன்றதிருக்கண்கள் | வணங்கும் | வணங்கும்படியான |
| இருந்தவாறு | இருந்தபடி (என்;) | அஞ்சநமாமலையேயுமொப்பர் | அஞ்சநமலைபோலேயுமிராநின்றார்; |
| முன் | முன்பு | | |
| கஞ்சனை | கம்ஸனை | | |

அச்சோ ஒருவர் அழகியவா. (சு)

வ்யா.—ஆறும்பாட்டு. (வெஞ்சினமித்யாதி) வெவ்வியசினத்தையுடைத்தாயிருக்கிற குவலயாபீடத்தினுடைய கொம்பை முறித்து, அச்செயலாலே பெண்பிறந்தார்க்கு தநமான நெஞ்சுகளை எழுதிக்கொண்டராஜாக்களென்றுசொல்லலுமாயிராநின்றார். (எந்திழையாரித்யாதி) ஒப்பித்திருக்கிற பெண்களுடைய நெஞ்சைத் தமக்கு அபாஶ்ரயமாக வுடையவர்போலே யிராநின்றார். (யானறியேன்) என்னலொன்றும் சொல்லலாயிருக்கிறதில்லை, (தாமரைக்கண்களிருந்தவாறு) அதுதன்னை நோக்காலேதெரிவியாநின்றார்; நானும் என்னுடைமையும் நீ இட்டவழக்கன்றோ வென்றாப்போலே யிரா நின்றது, நோக்கைப்பார்த்தவாறே.

---

அரு.—ஆறும்பாட்டு. (வெஞ்சினமித்யாதி) கோவலரென்று க்ருஷ்ணன் நீழேப்ரஸ்துதனானவாறே, அவனுடைய ஆண்பிள்ளைத்தனத்தையும்சொல்லி ஈடுபடுகிறாளென்று ஸங்கதி.

(அபாஶ்ரயமாக) என்றது-பெண்களின்நினைவேதனக்கு நிர்வாஹகமென்று அவர்களுக்குத் தன்னை எழுதிக்கொடுத்தவனென்றபடி. "வேந்தர் கொல்" என்றும், "தஞ்சுடையாளர்கொல்" என்றும்சொன்னஸம்ஶயத்துக்குத் தாத்பர்யம்-பெண்களை ஸ்வாதீந மாக்கிக் கொண்டவனோ? அன்றிக்கே பெண்களுக்குத் தான் பரதந்த்ரனோ? என்று நிஶ்சயிக்கப் போகாமையாலே, அத்தாலே, "யானறியேன்" என்கிறாளென்று விவக்ஷித்து அருளுகிறார் (என்னலித்யாதி). இப்படி கோடித்வயத்தைச் சொல்லி ஸம்ஶயிக்கைக்கு வ்யாமகதர்மங்களென்னென்ன; நாயகபாவையும், பருவத்தில் துடிப்பும், வடிவுமென்கிறாரென்று விவக்ஷித்துத்தாத்பர்யம் (அதுதன்னையித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே). ... ... ... ... ... ... ... (சு)

(கஞ்சனை) ப்ரபலப்ரதிபந்தகங்களைப்போக்க வல்லரென்று தோற்றும்படியா யிராநின்றார், பருவத்தைப்பார்த்தவாறே. (கண்டாரித்யாதி) ஓர்அபி (ஷி) ஸந்தியின்றிக்கே யிருக்கச்செய்தே (க) "[illegible]- அவஶா: ப்ரதிபேதிரே" என்கிற படியே கண்டாரைத் தன்வசமாக்கித்தன்காலிலே விழவிட்டுக்கொள்ள அஞ்ஜநகிரிபோலேயுமிராநின்றார். (அச்சோவொருவரழகியவா) வாக்குக்குஅவிஷயமான விஷயத்திலே நான் எத்தைச்சொல்லுவது. .... (சு)

மூ.—

பிணியவிழ்தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளர் கொல்யானறியேன் [ம்
பணியுமென்நெஞ்சமிதென்கொல் தோழீபண்டிவர்தம்மையும் கண்டறியோ
அணிகெழுதாமரை யன்னகண்ணு மங்கையும் பங்கயமேனிவானத்து
அணிகெழுமாமுகிலேயு மொப்ப ரச்சோ வொருவரழகியவா. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| பிணி | முகுளீபாவமாகிற கட்டானது |
| அவிழ் | அவிழும்படி |
| தாமரைமொட்டு | தாமரை புஷ்பத்தை |
| அலர்த்தும் | விகஸிக்கப்பண்ணும் ஸூர்யனைப்போலே |
| பேரருளாளர் கொல் | பெரியக்ருபையுடையவரோ? |
| யான்அறியேன் | நான் அறிகிறிலேன்; (இவரை) |
| என்நெஞ்சம் | என்னுடைய மநஸ்ஸானது |
| பணியும் | வணங்காநின்றது; |
| தோழீ | ஸகியே |
| இதென்கொல் | இதென்னமோ? |
| பண்டு | இதற்குமுன்பு |
| இவர்தம்மையும் | இவரை |
| கண்டறியோம் | நாம்கண்டதில்லை; |
| கண்ணும் | (இவருடைய) திருக்கண்களும் |
| அணி | அழகிதாய் |
| கெழு | நெருங்கின |
| தாமரையன்ன | தாமரைபோலிராநின்றது; |
| அம் | அழகிதான |
| கையும் | திருக்கைகளும் |
| பங்கயம் | தாமரைபோலிராநின்றது; |
| மேனி | திருமேனி விஷயத்தில் |
| வானத்து | ஆகாசத்தில் |
| அணி | அழகாய் |
| கெழு | நெருங்கியிராநின்ற |
| மாமுகிலேயு மொப்பர் | நீலமேகம்போன்றவராயிராநின்றார். |
| | அச்சோஒருவர் அழகியவா. (எ) |

அநு.—எழாம்பாட்டு. (பிணியித்யாதி) தோழியானவள் நீ இப்படி கண்ணன் கண்ணிலும் சொல்லிலும் ஈடுபடாநின்றாய்; எனக்கு முன்னிலையாக

(க) பார-உத்யோ.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பிணியித்யாதி) ஆதித்யன தன்னுடைய உஷ்ணகிரணங்களாலே தாமரைகளிலுண்டான பூவை அலர்த்தக்கடவனுயிருக்குமிறே. அங்ஙனன்றிக்கேக்ஷீணபாபரானவர்களுடையஹ்ருதயகமலத்துக்கு விகாஸத்தைப்பண்ணிக்கொடுக்கும்பெரியகருணையை யுடையராயிராநின்றூர். (யானறியேன்) என்னூல்இவர்படி பரிச்சேதிக்கலாயிருக்கிறதில்லை. (பணியுமென்நெஞ்சம்) என் பக்கலொரு நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே என்நெஞ்சானது வணங்கி நில்லாநின்றது. (இதென்கொல்தோழி) உன்னையறியாமை வருவதொரு நன்மைஇல்லையிறே எனக்கு. நாம் இவரிடையாட்டம் நினைத்தறிவுதோமோ? (பண்டிவரித்யாதி) பழைமையாலே செய்கிறதொன்றும சொல்லவுமாயிருக்கிறதில்லை.

(அணியித்யாதி) திரளச் செறியப்பூத்த தாமரை யென்னலாயிருக்கிறது - திருக்கண்களும் அணைக்கக் கணிசிக்கிறகைகளும். (மேனியித்யாதி) வடிவைப் பார்த்தவாறே மேகசகலங்களன்றிக்கே எல்லா மொன்றுகத்திரண்டு வர்ஷிக்கையிலே ஒருப்பட்ட மேகம்போலே யிராநின்றது. (அச்சோவொருவரழகியவா) விஸஜாதீயத்துக்கு ஸஜாதீயங்களிலே சிலவற்றைச் சொன்னவிடம்; என் சொன்னேமானேம். .... .... .... .... .... (௭)

---

அவன்தோற்றிக்காணேன்; உனக்கிது பாவநாப்ரகர்ஷமாகவேணும்; இது உனக்கு வருகைக்குக் காரணமென்; சேர்க்குமவளான எனக்குத் தெரியாதபடி வந்தவழியென்னென்ன; அவர்தம்முடைய பரிபூர்ணக்ருபையாலே என் நெஞ்சை வசீகரித்தாராகவேணும், என்று பேரருளாளரென்றபடியைப்பேசி ஈடுபடுகிருளென்று ஸங்கதி.

"மொட்டலர்த்தும்" என்னவமைந்திருக்க "பிணியவிழ்" என்று விசேஷித்ததுக்கு - வ்யாதிபோனதாமரை; கேவலம் தாமரையன்று என்கிற வழியாலே தாத்பர்யம் (ஆதித்யனித்யாதி வாக்யத்வயத்தாலே). அன்றிக்கே "பிணி" என்று-கட்டாய், அது-அவிழும்படி மொட்டலர்த்தும் ஸூர்யஸத்ருசனை பேரருளாளனென்று அருளிச்செய்து, அர்த்தாந்தரம் (அங்ஙனன்றிக்கேயித்யாதி). என்னவுமாம்.

"அச்சோ" என்றது-விஷாதத்துக்கு ஸூசகமென்று விவக்ஷித்தருளுகிருர் (விஸஜாதீயத்துக்கித்யாதி). ... ... ... ... ... ... (௭)

மூ.—

மஞ்சுயர்மாமதி தீண்டநீண்டமாலிருஞ்சோலை மணாளர்வந்தென்
நெஞ்சுள்ளும்கண்ணுள்ளும்நின்றுநீங்கார்நீர்மலையார் கொல்நினைக்கமாட்டேன்
மஞ்சுயர்பொன்மலைமேலெழுந்த மாமுகில்போன்றுளர்வந்துகாணீர்
அஞ்சிறைப்புள்ளுமொன்றேறிவந்தா ரச்சோவொருவரழகியவா.

| பதம். | உரை. |
|---|---|
| மஞ்சு | மேகபதத்தளவும் |
| உயர் | உயர்ந்திருப்பதாய், |
| மாமதி | சந்த்ரன் |
| தீண்ட | ஸ்பர்சிக்கும்படி |
| நீண்ட | உந்நதமான |
| மாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலை மலையில் |
| மணாளர் | ஸம்ஸ்லேஷாநுபவம் பண்ணு [மவர் |
| வந்து | தாமேவந்து |
| என் | என்னுடைய |
| நெஞ்சுள்ளும் | ஹ்ருதயத்தினுள்ளும் |
| கண்ணுள்ளும் | கண்களிலும் |
| நின்று | நியதமாய்நின்று |
| நீங்கார் | க்ஷணமும் பிரிகிறிலர்; |
| நீர்மலையார் கொல் | திருநீர்மலையை வாஸமாக வுடையவர் போலே யிராநின்றார்; |
| நினைக்கமாட்டேன் | (இவரை) நான்பரிச்சேதிக்கமாட்டுகிறிலேன், |
| அம் | அழகான |
| சிறை | சிறகுகளையுடைய |
| புள்ஒன்று | பெரியதிருவடியின் |
| ஏறி | வீற்றிருந்து [மேலே |
| வந்தார் | எழுந்தருளுகிற இவர் |
| மஞ்சு | மேகபதத்தளவும் |
| உயர் | உந்நதமான |
| பொன்மலை | பொன்மலையிலே |
| எழுந்த | கிடந்த |
| மாமுகில்போன்றுளர் | பெரியமேகம்போலே இராநின்றார் |
| வந்துகாணீர் | (நீங்களும்) வந்துபாருங்கோள். |

அச்சோ ஒருவர் அழகியவா. (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (மஞ்சித்யாதி) தோழியும் தானுமாய் இப்படி பேரருளாளரின்படி சொல்லாநிற்கச்செய்தே, மற்றைத்தோழிமாரும் தாய்மார் அயலகத்தாரெல்லாரும் "இதுவென்னம்புதுமை" என்று விஸ்மயப்பட்டு இவளை நிஷேதிக்க ஒருப்படவே, எம்பெருமானும் திருவடி திருத்தோளிலேறி வருவதாகத்தோற்ற, அத்தைக்கண்டு "இவர் தெற்குத்திருமலையிலும் வந்தாரோ? நீர்மலையிலும் வந்தாரோ" என்று சொல்லாநிற்கச்செய்தே அணித்தாகக்கொண்டு பேரருளாளர்தானென்று, வந்து காணுங்களென்றுஎல்லாரையும் அழைக்கிறாளென்று ஸங்கதி.

வ்யா.— எட்டாம்பாட்டு. (மஞ்சித்யாதி) மேகபதத்தளவும் செல்ல ஓங்கி, சந்த்ரன் வந்து தீண்டும்படியான ஓக்கத்தையுடைத்தான திருமலையை வாஸஸ்த்தாநமாகக்கொண்டு அங்குத்தைக்கு போ(ஸ்ரீ)க்தாவானவர். (வந்தித்யாதி) அங்குத்தைக்குக் கடவராயிருக்கிறவர் தாமே வந்து என்னுடைய ஸர்வ கரணங்களையும் விரும்பி க்ஷணகாலமும் விடுமவரா யிருக்கிறிலர்; திருநீர் மலையை வாஸஸ்த்தாநமாக வுடையவர் போலே யிராநின்றார்; என்னால் பரிச்சேதிக்கலாயிருக்கிறிலர்.

(மஞ்சுயரித்யாதி) மேகபதத்தளவும் செல்ல ஓங்கி யிருப்பதொரு பொன்மலையிலே படிந்ததொரு மேகம்போலேயிராநின்றார். இங்கு பொன்மலையாயிருக்கிறார்தாம் ஆரென்னில்; அஞ்சிறைப் புள்ளுமொன்றேறி வந்தார் வந்து காணீர் - என்னை விலக்கப்பார்க்கிற நீங்களும் வந்து காணுங்கோள், உங்களாலே தான் விடலாமாகில். (அச்சோவொருவரழகியவா) திருவடி திருத்தோளிலேயிருந்தால் இருக்கு மழகுதான் இப்படியேயோ?

மூ.—

எண்டிசையு மெறிநீர்க்கடலு மேழுலகு முடனே விழுங்கி [ன்
மண்டியோராலிலைப்பள்ளிகொள்ளுமாயர்கொல் மாயமறியமாட்டே
கொண்டல்நன்மால்வரையேயுமொப்பர் கொங்கலர்தாமரைக்கண்ணும்வாயும்
அண்டத்தமரர்பணியநின்று ரச்சோவொருவரழகியவா. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எண்திசையும் | எட்டுத்திக்குக்களிலும் | ஓர் ஆலிலை | ஒரு ஆலந்தளிரிலே |
| எறி | பரவாநின்ற | பள்ளிகொள்ளும் | ஶயநித்துக்கொண்டிருக்கிற |
| நீர் | ஜலஸம்ருத்தியையுடைத்தான | ஆயர்கொல் | ஆஶ்சர்ய பூதரென்று தோற்றவிராநின்றார்; |
| கடலும் | ஸமுத்ரங்களையும் | மாயம் | (இவருடைய) மாயையை |
| ஏழுலகும் | ஸப்தலோகங்களையும் | அறியமாட்டேன் | அறிகிறிலேன்; |
| உடனே | ஒரேகாலத்தில் | | |
| விழுங்கி | விழுங்கி திருவயிற்றிலே வைத்து | | |
| மண்டி | (ஒருவராலும்) எழுப்பவொண்ணாதபடி | | |

"அச்சோ" என்றது - ஹர்ஷத்திலேயாக்கியருளுகிறார் (திருவடியித்யாதி).

| | | | |
|---|---|---|---|
| கொண்டல் | மேகத்தோடேயும் | கொங்கலர் | பரிமளப்ரசுரமான |
| கல் | அழகிய | தாமரை | தாமரைபோலே யிரா நின்றது; |
| மால் | பெரிதான | அண்டத்தமர ர் | நித்யஸூரிக ளெல்லாரும் |
| வரையேயும் | மலையோடேயும் | பணியநின்றார் | [நின்றார்; ஆஸ்ரயிக்கும்படியிரா |
| ஒப்பர் | ஸத்ருஸராயிராநின்றார்; | அச்சோ ஒருவர் அழகியவா. | (கூ) |
| கண்ணும் | (இவருடைய) திருக் கண்களும் | | |
| வாயும் | திருவதரமும் | | |

அவ.—ஒன்பதாம்பாட்டு. (எண்டிசையுமித்யாதி) முகத்திலே விழித்தவாறே ஆபத்ஸகரென்று தோற்றும்படி யிராநின்றார்.

வ்யா.-திக்குக்களெட்டிலும்வந்து அலையெறியாநின்றுள்ளகடலும், எல்லா லோகங்களையும் ஒருகாலே திருவயிற்றிலே வைத்து மௌக்த்யத்தாலே ஒருவராலெழுப்பவொண்ணாதபடி ஒருபவனை ஆலந்தளிரிலே பள்ளிகொள்ளுகிற ஆஸ்சர்யபூதனென்று தோற்றும்படி யிராநின்றார். கண்டவாறே இவருடைய அகடிதகடநா ஸாமர்த்யம் எனக்குத் தோற்றாநின்றது. ஆகிலும் ஆஸ்சர்யங்கள் எனக்குத் தெரிகிறதில்லை.

(கொண்டலித்யாதி) வடிவைப்பார்த்தவாறே மேகம்போலேயும் (க)"நின்றகுன்றத்தினைநோக்கி நெடுமாலேவா" என்கிறபடியே மலைபோலேயும் சொல்லலாயிராநின்றார். (கொங்கலரித்யாதி). பரிமளத்தைப் புறப்பட விடாநின்றுள்ள தாமரைபோலே யிராநின்றது திருக்கண்களும் திருவதரமும். (அண்டத்தமரர் பணிய நின்றார்) மேன்மையைப்பார்த்தவாறே நித்யஸூரிகளும் வந்து ஆஸ்ரயிக்கும்படி யிராநின்றார். (அச்சோவொருவரழகியவா) மேன்மையையுடையார் கிட்டுகிற விஷயமென்று நமக்குக்கைவாங்கலா யிருக்கிறதில்லை வடிவழகைப் பார்த்தவாறே. .... .... .... .... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (எண்டிசையுமித்யாதி) எல்லாருமொரு மிடறாய், இவளை அலைக்கப்பார்த்த ஆபத்திலே திருவடிமேலேறி வந்து தோற்றினவாறே ஆபத்ஸகனென்றுதோற்றி, இது இவனுக்கு ஆபால்யஸித்தமென்று நின்றாளென்னும் ஸங்கதியை ஸ்புரிப்பிக்கிறார் (முகத்திலேயித்யாதி).

"மண்டி" என்றதினர்த்தம் (எழுப்பவொண்ணாதபடி) என்றது.

---

(க) தி-வாய்-ச-ச-ச.

மூ.—

அன்னமுங்கேழலும் மீனுமாய வாதியை நாகையழகியாரைக்
கன்னிநன்மாமதிள் மங்கைவேந்தன்காமருசீர்க்கலிகன்றிகுன்று
இன்னிசையால் சொன்ன செஞ்சொல்மாலையேழுமிரண்டுமோரொன்றும் வல்
மன்னவராயுலகாண்டு மீண்டும்வானவராய்மகிழ்வெய்துவரே. [லார்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்னமும் | ஹம்ஸரூபியாயும் | இன் இசையால் | இனிய இசையாலே |
| கேழலும் | வாராஹரூபியாயும் | சொன்ன | அருளிச்செய்த |
| மீனும் | மத்ஸ்யரூபியுமாய் | ஏழும் | ஸ்வாநுபவரூபமான ஏழுபாட்டாயும் |
| ஆய | ஆகாநின்ற | இரண்டும் | பரோபதேசரூபமான இரண்டு பாட்டாயும் |
| ஆதியை | ஜகத்காரண பூதனை | ஓர் ஒன்றும் | பலஶ்ருதிரூபமான ஒருபாட்டாயுமுள்ள |
| நாகை | திருநாகையிலே | செஞ்சொல் மாலை | ஶப்த ஸந்தர்பரூபமான இப்பத்தையும் |
| அழகியாரை | அழகியானாய் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் விஷயமாக | வல்லார் | அப்யஸிக்க வல்லவர்கள் |
| கன்னி | (ஒருகாலும்) அழிவில்லாததாய் | மன்னவராய் | ராஜாக்களாய் |
| நல் | அழகியதாய் | உலகு | இவ்வுலகங்களையெல்லாம் |
| மா | பெரிதான | ஆண்டு | அநுபவித்து |
| மதிள் | மதிளையுடைய | மீண்டும் | பிறகு |
| மங்கை | திருமங்கைக்கு | வானவராய் | நித்யஸூரிகளாய் |
| வேந்தன் | நிர்வாஹகராய், | மகிழ் வெய்துவரே | ஆநந்தமடைவர்கள். |
| காமரு | எல்லாரும் ஆசைப்படும்படியான | | |
| சீர் | ஸ்ரீவைஷ்ண ஸ்ரீயையுடைய | | |
| கலிகன்றி | ஆழ்வார், | | |
| குன்று | ஒன்றாலும் குறைவில்லாமல் | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (அன்னமித்யாதி) இழந்த வேத சக்ஷுஸ்ஸை மீட்டுக்கொடுக்கைக்கீடான அன்னமாயும், ஶ்ரீவராஹ புராணத்தை யருளிச்செய்தும், மத்ஸ்யபுராணத்தை யருளிச்செய்தும், இப்படி தன்னைப்ராபிக்கைக்கு வழியிட்டுக் கொடுத்த ஜகத்

காரண பூதனானவன், திருநாகையிலே தன்னழகாலே விடவொண்ணாதபடி பண்ணிக்கொண்டு நின்றானாயிற்று. (கன்னியித்யாதி) அரணாகப்போரும்படியாய், தர்ஸநீயமாய், பரப்பையுடைத்தான மதிளையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநராய் எல்லார்க்கும் ஸ்ப்ருஹைபண்ணவேண்டும்படியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடைய ஆழ்வார், ஒன்றும் குறையாதபடி இனிய இசையாலே அருளிச்செய்த. (செஞ்சொல்மாலையேழு மிரண்டுமோரொன்றும்) தம்மால் அளவிடவொண்ணாமையால் பிறித்தநுபவிக்கிறார். இத்தை அப்ப்யஸிக்க வல்லவர்கள் இங்கும்கோலினப(ஃ)லங்களும் பெற்று. இது தன்னின் பலமான நித்யஸூரிகளோடொருகோவையாய் இனியராகப் பெறுவர்கள். .... .... .... .... .... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## ஒன்பதாம்பத்து இரண்டாந்திருமொழி முற்றிற்று.



## ஒன்பதாம்பத்து மூன்றாந்திருமொழி
### தன்னை ப்ரவேசம்.

வ்யா.—நாயகனோடே இயற்கையில்கலந்து பிரிந்து அந்தபிரிவோ

---

அரு.—பத்தாம்பாட்டு. (அன்னமித்யாதி) உயிர்த்தோழியும் தானுமாய் அநுபவித்தது ஏழுபாட்டும், எல்லாரையும் குறித்து இரண்டுபாட்டும், பலஸ்ருதி ஒருபாட்டுமாய், இந்த பாட்டின்படியை அநுஸந்தித்து அநுக(X)தமாகப் பத்தென்று சொல்லமாட்டாதே விப(ஃ)ஜித்தருளிச் செய்கிறாரென்கிறார் (தம்மாலித்யாதி). ... ... ... ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.



அரு.—தன்னைநைவிக்கிலேன் ப்ரவேசம்: திருநாகையழகியாரை உருவு வெளிப்பாட்டில்கண்டு தோழியும் தானுமாய், அழகிலே ஈடுபட்டிருக்கச் செய்தே, தோழி இவளை அந்யபரதையாலே ஆஸ்வாஸிப்பிக்கக் கோலி, புஷ்பாபசயத்தாலே உத்யாநங்களிலே ஸஞ்சரிப்பிக்க; திருப்புல்லாணி யெம்பெருமான்வந்து நிரவதிக ஸம்ஸ்லேஷத்தை யுண்டாக்கி, இது-ஸாத்மிக்க வேண்டிப் பிரிந்தானென்று ஸங்கதி.

டே அவன்வர அபேக்ஷிதமாயிருக்க, அவன் வரக்காணுமையாலே ஆற்றாமை கரைபுரண்டுநோவுபடுகிறுளொருபிராட்டி, இனிநாம் அவன்றான்வந்து மேல்விழுந்து கலக்கக்கடவனென்று முறைபார்த்திருந்துண்டது அமையும்; இனி ஸ்வலாபத்துக்குநாமேயாகிலும் ப்ரவ்ருத்திப்போமென்று கொண்டு, தன்னுடைய ஸ்த்ரீத்வப்ரயுக்தமான நாண், மடம், அச்சம் துடக்கமானவற்றைப் பொகட்டு, நம்ஸ்வரூபத்தையுமழித்து அவன்றனக்கும் ஸ்வரூபஹாநியைப் பண்ணியாகிலும் முகத்தேவிழிப்போமென்றுகொண்டு அவனிருந்த விடத்தேறபபோக ஒருப்பட்டவித்தைக் கண்டதோழியானவள் "இது உன் தலைமைக்குப்போராதுகாண்" என்று ஹிதம்சொல்ல; அவளையும் அவளுக்குமுன்னே பிற்காலிக்கிற நெஞ்சையும் பார்த்துப் பின்னையும் மீண்டுநின்று அங்கேபோகஒருப்பட்டபடியை நெஞ்சோடும், அந்த நெஞ்சுஉதவாதபோதும் உதவிக்கார்யம் செய்யும்தோழியோடுமொகக் கூட்டுகிறுள். இவள் தான் புறப்படுப் போகையாகிறது அதிஸாஹஸமிறே. ப்ராணரக்ஷணம் ஒருதலையாலும் மர்யாதைகளைப் பார்த்திருக்கலாம்படியாயிராதிறே. ஸ்வரூபம் நோக்குகைக்காக இங்கேயிருந்து நோவுபடுமதிற்காட்டில் அங்கே போமது ஸ்வரூபஹாநியேயாகிலும், பின்னையும் விழுக்காட்டில் ஸ்வரூபத்தோடேசேர்ந்து தலைக்கட்டும். ஆனபின்பு அங்கேபோய் அநுபவிப்

---

வித்த்யர்த்தம் கூட்டிக்கொண்டுபின்பு(நாயகனோடே)இத்யாதியை அநுஸந்திப்பித்து, (பிரிவோடே) என்றது-பிரிவாலே யென்கை. "பிரிவோடே இருந்து" என்று கூட்டவுமாம்; (தோழியானவள்) என்றது - "மங்கைநல்லாய்" "போதுமாதே" என்றவற்றைப்பற்ற. (கூட்டுகிறுள்) என்றது-தாளொருப்பட்டபடியை அறிவிக்கிறுளென்கை. தோழியானவள் விலக்குவானென் ? சேர்க்குமவளன்றேவென்ன வருளுகிறுர் (இவள் காணவித்யாதி) நாயகிதானெல்லாரும் காண இப்படி ஸாஹஸம்பண்ணலாமோ வென்ன; (ப்ராணரக்ஷணமித்யாதி). எந்தஅவஸ்த்தையிலும் மர்யாதை தப்புகை ஸ்வரூபஹாநியன்றேவென்ன; அத்தலையில் வைலக்ஷண்யமடியாக வந்ததாகையாலே ஸ்வரூபாநுகுணமா மென்கிறுர் (ஸ்வரூபமித்யாதி). இவளொருப்பட்டவளவிலே அவனேவருமென்று தாத்பர்யம். இவளொருப்பாட்டைஅவனறியுமோவென்ன; தன் வைலக்ஷண்யத்தைத் தானறிந்தவனாகில் அத்தாலே இவ

போமென்று அத்யவஸிக்கிறாள்; அவன்இத்தலையில் பருவமறிந்திலனாகிலும் தன்வைலக்ஷண்ய மறிந்திருக்குமே. .... .... *

மூ.—தன்னைநைவிக்கிலேன் வல்வினையேன் தொழுதுமெழு
பொன்னைநைவிக்கு மப்பூஞ்செருந்தி மணநீழல்வாய்
என்னைநைவித்தெழில் கொண்டகன்ற பெருமானிடம்
புன்னைமுத்தம் பொழில்சூழ்ந்தழகாய புல்லாணியே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வல்வினையேன் | கொடியபாபாத்தைப் பண்ணின நான் | நைவித்து | ஸம்ஶ்லேஷத்தால் சிதிலமாக்கி |
| தன்னை | என்னை | எழில்கொண்டு | வண்ணத்தை அபஹரித்துக்கொண்டு |
| நைவிக்கிலேன் | அழிக்கப் பண்ணுகிறிலேன்; | அகன்ற | பிரிந்த |
| பொன்னை | (ஓமநஸ்ஸே) பொன் ஸ்வரூபத்தையும் | பெருமான் | எம்பெருமானுக்கு |
| நைவிக்கும் | அழியப் பண்ணும்படியான, | இடம் | வாஸஸ்தாநமான |
| அப்பூம் செருந்தி | பரப்புமாறப்பூத்த செருந்தியினுடைய | முத்தம் | முத்துபோலிருக்கிற புஷ்பங்களையுடைய |
| மணம் | பரிமளிதமான | புன்னை | புன்னைமரங்களுடைய |
| நீழல்வாய் | நிழலிலே | பொழில் | சோலைகளாலே |
| என்னை | என்னை | சூழ்ந்து | சூழப்பட்டு |
| | | அழகாய | அழகிதான |
| | | புலலாணியே | திருப்புல்லாணி என்கிற திவ்ய தேசத்தை |
| | | தொழுதும் | தொழுது |
| | | எழு | உஜ்ஜீவிக்கப்பாராய். |

வ்யா.—முதற்பாட்டு. (தன்னை நைவிக்கிலேன்) நான் தானாக மாட்டேனே, தான்எல்லாமென்னை நைவித்தானாயிறே யிருக்கிறது. என்னை நைவித்து எழில் கொண்டமையுண்டிறே. (தன்னை நைவிக்கிலேன்) செயலுக்குச்செயல்செய்யத்தட்டில்லையிறே. நான்அதுமாட்டுகிறிலேன். தான்கலக்கைக்கும் ஸம்பாவனை யுண்டாம்படி பிரிந்து படுத்தின பாட்டை நான்முடிந்து தன்னை நிராஸஞம்படி பண்ண

ளொருப்பாட்டையறிந்து, இவள்தானே வரவிராதே தானேபற்றிவருமென்ன வருளுகிறார் (அவனித்யாதி). ... ... ... ... ...

அநு.—முதற்பாட்டு. (தன்னையித்யாதி) நெஞ்சே அவனை நைவிக்கிலேனென்னவேண்டியிருக்க, "தன்னை" என்றத்தாலே நிரங்குசஸ்வாதந்த்ர்யம் தோற்றுமென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் (நானித்யாதி). தாத்பர்யாங்

வல்லேனிறே, நான் அது செய்கிறிலேன். தான்கலந்து இத்தலையை அழித்தானாகில் நான்பிரிந்து தன்னை அழிக்கவல்லேனிறே. அதுவும் செய்யமாட்டுகிறிலேன். அதாகிறது - இவள் தன் ஜீவநத்திலே நசையறுகையிறே. (தன்னைநைவிக்கிலேன்) நான் ஜகதுபஸம்ஹாரம் பண்ணுகிறிலேன். என்னை நைவித்தானென்று தன்னை நைவித் தால் பின்பு ஆருண்டு; இவள் அவனை நைவிக்கையாகிறது - தான் முடிகையிறே. நீருக்குப்போக குடமுடைந்தாரைப்போலே அவர் வரக்கொள்ள, இத்தலை வெறுந்தரையாயிருக்குமன்று அவரைக் கிடையாதே.

(வல்வினையேன்) முடிந்து பிழைக்கவேண்டியிருக்க ஜீவித்திரு க்க வேண்டும்படியான மஹாபாபத்தைப் பண்ணினேன். துஃக்க ஹேது-பாபம்; ஸுகஹேது - புண்யம், இப்போது ஸுகமாவது - முடிகையிறே. முடிந்து ஸுகிக்க வொண்ணாதபடி பரார்த்தமாக ஜீவிக்கவேண்டும்படியான மஹாபாபத்தைப் பண்ணினேன். (வல் வினையேன்) என்றால் ஆற்ற வொண்ணாதபடியான பாபத்தைப்பண் ணினேன். அதாகிறது-தொட்டதெல்லாம் அத்தலையிலே சென்று தாக்கும்படியாயிராநின்றதே. ஏதேனுமொன்றையிட்டு என் ஆற் றாமையைப் பரிஹரிக்கவல்லேனிறே. அத்தலைக்கு ஸ்வரூபஹாநி யாய்த் தலைக்கட்டாதொழியப் பெற்றேனாகில், வஸ்து அவனுக்கு

---

தரம் (தான் கலந்தித்யாதி). (கலந்து) என்றவநந்தரம் "பிரிந்து" என்று கூட்டுவது. (பிரிந்து) என்றவநந்தரம் "கலந்து" என்று கூட்டுவது. தன் ஜீவநத்தில் நசையறுகையாவது - தனக்கு ஜீவநமாக அவன் முகத்தைப் பாராதிருக்கை. பிரிந்த வ்யஸநத்தாலே மேல்விழுந்து அவன் வரும்போது கிட்டநின்று முகம் மாறவைக்கில்அவன்நையச் சொல்லவேண்டாவிறே என்று கருத்து. நைவிக்கை-கலசிப்பிக்கையாய், அதுக்கு இரண்டு தாத்பர்யமருளிச் செய்து, நைவு-ஸ்வரூபநாசகமாகவிவக்ஷித்து பலிதார்த்தம் (நான்ஜகதித்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே) எத்தால் என்னை முடிக்கவேணுமென்று கலந்தா லும், முடியாதேயிருந்து அவனை நோக்கப் பார்ப்பதித்தனைபோக்கி, நான் முடியமாட்டேனென்றதாயிற்று.

சிலயத்நங்கள் பண்ணப்போகாத படியான பாபமென்றர்த்தாந்தரம் (என்னாலித்யாதி). முடியவும் யத்நிக்கவும் போகாதே யிருப்பானென்னெ ன்ன; (வஸ்துவித்யாதி). இப்போது பாரதந்த்ர்யத்தை துஃக்காதிக்யத்தாலே

இஷ்ட விநியோகார்ஹமாய் அற்றபின்பு இனிநம்மால் செய்யலாவ துண்டோ ? பாவியேன்; பாரதந்த்ர்யத்தோபாதி பொல்லாதில்லை கிடீர்; (க) "ధిగస్తు పరవశ్యతామ్- திகஸ்து பரவஶ்யதாம்" என்னக்கடவ திறே. இவள்தான் முன்பெல்லாம் ஸ்வாதந்த்ர்யம் புருஷார்த்த மென்றுபோலேகாணும் நினைத்திருப்பது. அது புருஷார்த்தமாவது ஒருவனுக்கே; இங்ஙனன்றாகில் ஸ்வரூபாந்யதாபாவம் - புருஷார் த்தமென்கிறதன்றே. இப்போது ஒரு ஹேதுவாலேயிறே இப்பார தந்த்ர்யம் பொல்லாதென்கிறது. ஸ்வதந்த்ரரான சக்ரவர்த்திபோல் வார்க்கன்றோ நினைத்தாப்போலே முடியலாவது.

(தொழுதுமெழு) முடிகை - ஸ்வதந்த்ர க்ருத்யமானால் ஜீவிக் குமது பாரதந்த்ர்ய க்ருத்யமாயிருக்குமிறே. முடிந்து பிழைக்கப் பெறாவிட்டால் அத்தை நோக்குவார்க்கொருதா(தா)ரகத்ரவ்யம் வே ணுமே. (உ) [నిత్యాఞ్జలిపుటాహృష్టాః-நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டாः] "உ ண்டுபசிகெட்டது" என்னுமாபோலே. [నమ ఇత్యేవవాదినః-நமஇத்யேவ வாதிநः] "நமோநமः" என்றதபோது தங்கள் மூச்சடங்கும்படியா

---

அதிகரிக்கையாலே பூர்வத்தில் நிலைதன்னை யருளுகிறார் (இவளித்யாதி). ஸ்வாதந்த்ர்யம் - புருஷார்த்தமன்றோவென்ன (அதுவித்யாதி). இப்போது இருவர்க்கும் ஸ்வாதந்த்ர்யமே புருஷார்த்தமாகலாகாதோ வென்ன (இங்ங னன்றாகிலித்யாதி). அவனுக்கு ஸ்வாதந்த்ர்யமும், இவளுக்குப் பாரதந்த்ர்ய மும்ஸ்வரூபமாகையாலே ததந்யதாபாவம் இருவர்க்கும் அபுருஷார்த்தமென்று கருத்து. ஆனால் அந்த ஸ்வரூபாநுரூபமான பாரதந்த்ர்யத்தைப் பொல்லா தென்பானென் னென்ன (இப்போதித்யாதி).(ஹேதுவாலே) என்றது-முடிய வும் யத்நம்பண்ணவு மொண்ணாமையாலே யென்கை. மேலுக்கவதாரிகை (ஸ்வதந்த்ரேத்யாதி). (முடியலாவது) என்றவநந்தரம் "ஆகையாலே நாம் தொழுவோம் வா என்கிறார்" என்று கூட்டுவது.

ஆனால் தொழுகையும் ஸ்வாதந்தர்யக்ருத்யமாகாதோவென்ன; (முடி கையித்யாதி). தொழுகை ஜீவந ஸாதநமோவென்ன (முடிந்தித்யாதி). தொ ழுகைதா(த)ரகமோவென்ன(நித்யேத்யாதி).வாசிகமான தொழுகையும்தாரக மாமோவென்ன; "నమ ఇత్యేవవాదినః- நமஇத்யேவ வாதிநः" என்னுமது - தா ச்சீல்யே ணிபிப்ரத்யயமாகையாலே. அதுக்குத்தாத்பர்யம்(நமோநமஇத்யாதி). நமோவென்கை தாரகமாகிலும் அம்ருதம்போலே ஸக்ருத்ஸேவ்யமா யிருக்க

---

(க) (உ) பார-சாந்தி-ஙுஙுஎ-சo.

யிருப்பார்கள். ஸாதநபுத்யாசொல்லிவிறே ஒருகால் அமைவது. அங்குஇதுதானே யாத்ரையாயிருக்குமே. (எழு)"இத்தனைஸாஹஸத்துக்கு நான்இசையேன்" என்றுஇருந்ததாயிற்று நெஞ்சு. "கெடுவாய் இதுஸாதநாம்ஶத்தில் அந்வயியாது; இது ஆற்றாமைக்கு உடலாம்காண், கடுகப்புறப்படு" என்கிறாள். அதாகிறது-தேஹயாத்ரையிலே அந்வயிக்கும்படி தொழுகிற தொழுகையன்றே? ஜீவிக்கைக்குத்தொழுகிற தொழுகையே. இனித் தன்ஜீவநத்துக்காகத்தான் தொழுகையும் விநாஶத்துக்கு உடலாகவென்றே நெஞ்சு நினைத்திருப்பது. அத்தை அநுஸந்தித்து நெஞ்சு தரைபட்டுக்கிடக்க, "இங்ஙனன்றுகாண் வா" என்று கையைப்பிடித்தெடுக்கிறாள்.

(பொன்னை நைவிக்குமப்பூம் செருந்தி மணநீழல்வாயென்னை நைவித்து) அந்நிலத்திலே கலந்து பிரியவல்லவனுக்கு இனி வரத்துண்டோ? நாம்போமித்தனை போக்கி. கெட்டேன்; அந்நிலத்திலேயும் கலப்பாருண்டோ? அவன்தான் பழிகொண்டானென்னலாம்படியாயிற்று, அந்த தேஶஸ்வபாவந்தானிருக்கும்படி. (பொன்னை

லாகாதோவென்ன (ஸாதநேத்யாதி).ஸர்வேஶ்வரனை ஸாதநமென்றெண்ணித்தொழும்போது ஸக்ருத்தாயிருக்குமத்தனைபோக்கி, ஆராவமுதமாக அவனை எண்ணித்தொழும்போது தொழுகை மாறாதிறேயென்று கருத்து. அவ்விபூதியிலே அப்படியே யாகிலும், நாம் இங்கே இருந்து தொழுதுவிட்டால் ஸாதநமாயேபர்யவஸிக்குமென்று நெஞ்சுக்குக்கருத்தாக "எழு" என்கிறாரென்று விவக்ஷித்தருளுகிறார் (இத்தனையித்யாதி).

என்னைக் கைப்பிடித்தெடுக்கிறதென் ? அவன் உன்னை கைப்பிடித்துக்கொடுபோகில் போகக்கடவோமென்று நெஞ்சு சொல்ல, "பொன்னையித்யாதி சொல்லுகிறாள்" என்று விவக்ஷித்து வர்ணித்ததுக்குத்தாத்பர்யம். அந்நிலத்திலே கலந்தவனே வராவிட்டால் நாமும் போகாதிருக்குமத்தனையன்றோ? நாம் போவானென்னென்னவருளுகிறார் (கெட்டேனித்யாதி). அவன் * ஓர் பெண்கொடியை வதை செய்தானாகில், நாமும் ஒரு * கிவாஸவ்ருக்ஷத்தை அடியறப்பணணலாமோ? நம்மைப்பிரிந்து வரவும் மாட்டாதே அடியற்றமரம் போலே தரைக்கிடை கிடக்கிறபடி பாராயென்று தாத்பர்யம். நிரதிசயபோக்யமான தேசத்திலே நீங்களிருவரும்கலந்தால்,அப்போது நீதானே அவனை நைவிக்கமாட்டாதே போவானென்னென்ன; அப்போது போகவல்ல விதக்த்

னைவிக்குமித்யாதி) ஒருகார்யபுத்திபண்ணியிருப்பார்க்கன்றோ ஆறியிருக்கலாவது. சுவடறிந்து பிரிந்தார்க்கும் தரிக்கப்போமோ? ஒரு ஸ்ரீஜநகராஜன் திருமகள்போல்வார்க்கன்றோ அவன்றானே வருமளவும் ஆறியிருக்கிறேனென்று தரிக்கலாவது. பழையார் பாடாற்றவல்லது - புதியார்க்கும் ஆற்றப்போமோ? (க) [ஆருயிர் பட்டதெனதுயிர் பட்டது] என்னக்கடவதிறே; "அஸாதாரணரான நித்யஸூரிகளில் ஒரு திருவடி திருவநந்தாழ்வான்போல்வார்தான் பட்டார்களோ? நான்பட்டபடி" என்கிறாரென்றாயிற்று. இதுக்கு ஜீயரருளிச்செய்யும்படி;-இதுதன்னை ஆழ்வார்பாடா நிற்க, எம்பெருமானார்- "அங்கு ஆருயிர்பட்டது, இங்கு எனதுயிர்பட்டது" என்றருளிச்செய்தார்."ஆழ்வார்களுடைய அநுபவத்தையாகில் ப்ராப்யமாகச் சொல்லுகிறதும், ஆசைப்படுகிறதும்; அதுக்கவ்வருகே, ஓரேற்றம் சொல்லுவாரைப்போலே சொல்லுவானென்" என்று நான் ஜீயரைக்கேட்க, நவோடையான ஸ்த்ரீக்கு பர்த்தாவினுடைய கரஸ்பர்ஶமுண்டானால் வேர்ப்பது விடுவதாமாபோலே, அநுபவத்தில் புதுமையாலே படுகிற அலமாப்புக்காணுமென்றருளிச் செய்தாராகப்பிள்ளை அருளிச்செய்வர்.

(பொன்னைநைவிக்கும்) நற்சரக்கை அழிக்கை அந்நிலத்துக்கு ஸ்வ

---

தையாயிருந்தேனன்றென்று அதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (ஒருவித்யாதி). (கார்யபுத்தி) நைவிக்கவேணுமென்கிற புத்தி.எனக்குஅது இல்லை அப்போதென்றுகருத்து. இருபத்தைந்து ஸம்வத்ஸரம் காட்டோடு நாட்டோடுவாசியறகலந்துசுவடறிந்தவள் (உ)"தத்ரஸ்யஸத்ருஶம்பவேத்-தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்னவில்லையோவென்ன வருளுகிறார் (ஒரு ஸ்ரீஜநகேத்யாதி). புதியார்க்கு ஆறியிருக்கப் போகாதபடி ஈடுபடுத்துமோ வென்ன (ஆருயிரித்யாதி). ஆரென்று ஸாமாந்யோக்தி, திருவடி முதலானாரைக் காட்டுமோவென்ன; (இதுக்கித்யாதி). *விண்ணுளாரிலும் சீரியரான முமுக்ஷுக்களுக்கும், நித்ய முக்தருக்கும் அநுபாவ்ய விஷய மொத்திருக்க,நித்யர்க்கு ஏற்றமுள்ளதாகக் கோலி, அதிலும் தமக்குப் பெருமையுள்ளதாகவே அதுக்குக் கருத்தென்று திருவுள்ளம்பற்றி சங்கிக்க, அதுபுதுமையின் கார்யமென்று பரிஹரித்தஐதிஹ்யத்தையருளுகிறார் (ஆழ்வார்களுடைய வித்யாதி).

"பொன்னை மாற்றழிவிக்கும் செருந்திப்பூ" என்று சப்தார்த்தமாய் தாத்பர்யம் (நல்லித்யாதி). ஒன்றைச்சொன்னது எல்லாவற்றுக்கு முபலக்ஷண

---

(க) தி-வாய்-க-கூ-க. (உ) ரா-ஸு-௩-கூ-௩O.

பாவங்காணும். தலைமையாகப் பேர்பெற்றவற்றை யெல்லாமழிக்கை அவ்வூரில் பதார்த்தங்களுக்கெல்லாம் பணி. அசேதநமான செருந்தி கேவலவர்ணஸாம்யமாத்ரத்தைக்கொண்டு பொன்னை யழித்தால்(க) "துல்யஶீலவயோவ்ருத்தாம்- துல்யஶீலவயோவ்ருத்தாம்" என்றுகொண்டுபெருவத்துக்குஅபிமாநித்திருப்பாரைப் பரமசேதநன் அழிக்கச் சொல்லவேணுமோ? ஸர்வதாஸாம்யமுடையாரைஅங்குள்ளாரழிப்பர்களாயிற்று. தான் புருஷோத்தமனானவிதுகொண்டு *நாரீணாமுத்தமையானஇவளை அழித்தானாயிற்று. செருந்தி பொன்னைஅழித்தது; இவன்இவளைஅழித்தான். நாயகன்றான்இவள்தன்னை "பொன்னே" என்றுபோலேகாணும் வ்யபதேசிப்பது. (உ) "உமிழ்பாலை கடந்தபொன்னே"என்னக்கடவதிறே. (அப்பூஞ்செருந்தி)(௩) "வ்ருக்ஷேவ்ருக்ஷே ச பஶ்யாமி-வ்ருக்ஷேவ்ருக்ஷேச பஶ்யாமி" என்னுமாபோலேகலந்தபோதை அங்குத்தை போக்ய(போ)தை - இப்போதுகூட நெஞ்சிலேவடிம்பிடுகிறபடி. அந்தபோக்யதைஇப்போதுங்கூடவந்து தோற்று நின்றதுகாணும். (பூம்செருந்திமணநீழல்வாய்) பரப்புமாறப் பூத்திருப்பது, பரிமளம் மிக்கிருப்பது, நிழல் செய்திருப்பதாயிருக்கிறபடி. நிறமும் மணமும் நிழலும் இவையெல்லா முண்டாயிருக்கிறபடி. ஓரிந்த்ரியங்கொண்டு ஒதுங்க நிழலில்லைகிடீர், ஸர்வேந்த்ரியாஉபஹாரக்ஷமமானதேசம். சக்ஷுரிந்த்ரியத்துக்கு நிறம், க்ரா(க்ரா)ணேந்த்ரியத்துக்கு-மணம், ஸ்பர்ஶேந்த்ரியத்துக்கு நிழல்.

(நீழல்வாயென்னை நைவித்து) ஒருவர்க்கொருவருண்டான ஏற்றங்கொண்டு கார்யமில்லை; நிழலே அழிக்கவற்று. நிழலிடத்

---

மென்கிறார் (தலைமையித்யாதி). மேலெழுந்து நீச்சத்தாலே அமுக்கும் செருந்தியை த்ருஷ்டாந்தமாகச் சொல்லப்போமோ வென்ன வருளுகிறார் (அசேதநேத்யாதி). அசேதநமானது அசேதநத்தையும், பரமசேதநன் பரமசேதநத்தையும்நைவிக்குமென்று அறிந்தமர்யாதை எது, அநியமேநநைவிக்கலாகாதோவென்ன (ஸர்வதேத்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே). நாட்டில் பொன்னுகக்கீழருளிச்செய்து, பொன்னானவளை நைவிக்கும் செருந்திநிழலிலேதானும் என்னை நைவித்தானென்கிறாளென்று யோஜநாந்தரம் விவக்ஷித்து, இவள் பொன்னாகைக்கு உபபத்தியருளுகிறார் (நாயகனித்யாதி). "அப்பூம்" என்றதுக்குத் தாத்பர்யம் (வ்ருக்ஷேயித்யாதி).

"என்னை" என்று தன்னைப்போரப்பொலியச் சொன்னதுக்குபா(பா)வம்

---

(க) ரா-ஸு-கக-ரு. (உ) திருவி-உ௬. (௩) ரா-ஆ-௩௬-கச.

தென்னை நைவித்து - "கடலைத்தரைகண்டேன்" என்னுமாபோலே என்னுடைய ஸ்த்ரீத்வாபிமாநத்தைப் போக்கித்தான் கிட்டினால், நான் தன்னைநினைத்திருந்ததெல்லாம் போய், அத்தலை இத்தலையாம் படிமாறுடப்பண்ணி, கலக்கைக்கு எதிர்த்தலையில்லாதபடி அழித்து. கலப்பார்க்கு எதிர்த்தலைதான் வேண்டாவோ? முன்பெல்லாம்இவள் கையிலே அவன்றான் அழிந்திறேபோந்தது. யுத்தத்திலே ஜயாஉப ஜயங்கள் வ்யவஸ்த்தித மல்லாதாப்போலேயாயிற்று ஸம்போகத்தி லும். (என்னைநைவித்து) ஒருமிதுநமாய் பரிமாறுநின்றால், அதில் இனிமை இரண்டுதலைக்கும் ஒத்திருக்க வேண்டியிருக்க, தாம்அதில் அந்வயியாதாராயிருந்தபடி. "நைவித்து" என்றதுதான் ஸம்ஶ்லே ஷத்துக்குப்பேர். (நைவித்தெழில் கொண்டு) கொன்று கிழிச்சீரை யறுத்துக்கொடுபோவாரைப்போலே விதி நிஷேதங்களுக்கு ஆஶ்ர யமில்லாதபடி அழித்தாயிற்றுக்கொண்டு போயிற்று. (அகன்ற) இனி அவஶ்யம் பிரிவு அபேக்ஷிதமிறே. உத்தேஶ்யம் கைபுகுந்தால் கடலோடத்தட்டில்லை. (பெருமானிடமித்யாதி) முத்தரும்பின புன்னைப் பொழிலாலே சூழ்ந்தழகிய புல்லாணி. .... .... (க)

மூ.—உருகிநெஞ்சே நினைந்திங்கிருந்தென் தொழுதுமெழு
முருகுவண்டுண்மலர்க் கைதையின்நீழலில்முன்னொருநாள்
பெருகுகாதன்மை யென்னுள்ளமெய்தப் பிரிந்தானிடம்
பொருதுமுந்நீர்க்கரைக்கே மணியுந்து புல்லாணியே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே | உருகினென் | உருகி என்னப்ரயோஜ [நம்; |
| இங்குஇருந்து | இங்கேஇருந்து | முருகு | தேனை |
| நினைந்து | நினைத்து | உண் | புஜியாநின்ற |

(கடலையித்யாதி). "மணநீழல்வாய் என்னெழில் கொண்ட" என்றத்தாலே ஸம் ஶ்லேஷம் ஸித்தமன்றோ? "நைவித்து" என்று சொல்லவேணுமோவென்ன (ஒருமிதுநமித்யாதி). இத்தால் போக(போக்ய)தசையில் ஸ்வபாரதந்த்ர்யத்தை அழித்து போக(போக்ய)த்தைஎனக்குரஸிப்பித்தானென்றதாயிற்று.(விதிநிஷே தங்களுக்கு)என்றது-அவனேவரக்கடவனென்று அத்யவஸித்திருக்கக்கடவ னென்றதுக்கும், ஸ்வப்ருவ்ருத்தி பண்ணக்கடவனல்ல னென்றதுக்கு மென் கை. (இனி) என்றவநந்தரம் "அவனுக்கு" என்றுசேஷம். (கடலோடு கை)சாடு(சாட்டு). பொன்னுண்டானால் கப்பல் வர்த்தகம் பண்ணுகையும், பொன்னான தன்னைப்பெற்றால் திருப்புல்லாணியிலேகிடக்கையுமென்கை.(க)

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளையுடைய | எய்த | அடையும்படி பண்ணி |
| மலர் | புஷ்பத்தையுடைத்தா[ன | பிரிந்தான் | பிரிந்தவனான எம்பெருமானுக்கு |
| கைதையின் | தாழையினுடைய | | |
| நீழலில் | நிழலிலே | இடம் | வாஸஸ்தாநமாய், |
| முன் | முன்பு | பொருது | பொருந்தியிருக்கிற |
| ஒருநாள் | ஒரு திநத்திலே | முந்நீர் | ஸமுத்ரமானது |
| என் | என்னுடைய | கரைக்கே | கரையின் அருகு |
| உள்ளம் | மநஸ்ஸானது | மணி | மணிகளை [துமான |
| பெருகு | பெருகாநின்ற | உந்து | தள்ளாநின்றிருந்துள்ள |
| காதன்மை | அபிநிவேசத்தை | புல்லாணியே தொழுதுமெழு. (௨) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (உருகியித்யாதி). நெஞ்சே இங்கேயிருந்துஉருகியென்? நெஞ்சேஇருந்துநினைத்தென், அவனை உருக்குதல், நாம் வலித்திருத்தல் செய்யலாமிடத்திலே யிருக்கவேண்டாவோ? (௧) "ஊர்த்த்வம்மாஸாந் நஜீவிஷ்யே" என்றிருப்பார்க்கு (௨) "நஜீவேயம் க்ஷணமபி" என்றிருப்பாரைக் கண்டவாறே தரிக்கலாமிறே. (நெஞ்சே இங்கேயிருந்துருகியென்)(இங்கிருந்தென்) இது ஆறியவிருந்து அழிகிறோம். (தொழுதுமெழு) உருகாமல்நினைக்கும்போதைக்குஇதுவேவேணும். (முருகுவண்டுண்மலர் கைதையின்நீழலில்) அங்குள்ள திர்யக்குக்களுமகப்பட அபிமதலாபத்தாலே செருக்கி வர்த்தியாநிற்குமா

அரு.—இரண்டாம்பாட்டு. (உருகியித்யாதி) கீழ்ப்பாட்டிலே "தொழுதுமெழு" என்று கையைப்பிடித்தெழுப்ப, நெஞ்சுதன்ஸ்வபாவத்தாலே (௩) "உருகுமால் நெஞ்சம்" என்கிறபடியே நினைந்துஉருகாநிற்க, இந்த உருக்கத்துக்கு ப்ரயோஜநமில்லை, போகக்கடவோம் வா" என்று தேற்றுகிறானென்று ஸங்கதி.

"இங்கு" என்றதுக்கு ப்ரதிகோடியான வர்த்தம் (அவனையித்யாதி). அங்கு போனால் வலித்திருக்கலாமோ வென்ன (ஊர்த்த்வமித்யாதி). அளவுபட்டப்ரேமமுடைய பிராட்டி விஷயத்தில் தானே அளவற்றப்ரேமமுடைய நாயகனை பெருகு காதலுடையனாய் கண்டிருந்தால், இனி நமக்கொருநாளும் பிரிவு வாராதென்று வலித்திருக்கலாமென்று தாத்பர்யம். (கண்டவாறே) என்றவாறே "நமக்கு" என்று சேஷம். தொழுதால் உருகாமலிருக்கலாமென்றறியலாம்படி யென்னென்ன வருளுகிறார் (முருகுஇத்யாதி). தாத்பர்யமருளி

(௧) ரா-ஸு-௩௮-௩௭. (௨) ரா-ஸு-௬௬-௧௦. (௩) தி-வாய்-௯-௬-௧.

(அன்னமாய் நூல்பயந்தாற்கு) பிரிக்கவல்லார்க்கு இழந்தவேத சக்ஷுஸ்ஸை ப்ரஹ்மாவுக்காக மீட்டுக்கொடுத்தபடியைச் சொல்லுகிறது. அதாகிறது - இங்கு இழந்த நிறம் பழையபடியே தரவல்லனென்கை. (அன்னமாய்) தூதுபோகிறஉங்களுக்கு அஞ்சவேண்டா; ஸஜாதீயராயிருப்பார். (ஆங்கிதனைச் செப்புமினே) ஒருத்தி நிறம் மீட்கைக்காக வந்திருக்கிற விடத்தே அறிவியுங்கள். ஒருத்திக்கே கார்யம் செய்யக்கடவோமென்னும் நியதியுண்டோ?. (இதனை) தன்தசைதன்னைப் பாசுரமிட்டுச்சொல்லவொண்ணாதுபோலே காணும். (செப்புமினே) செப்பிக் கொடுவரவேண்டா; அறிவித்துவிட அமையும். .... .... .... .... .... .... .... (௨)

மூ;—வவ்வித்துழாயதன்மேல் சென்றதனிநெஞ்சம்
செவ்வியறியாது நிற்குங்கொல் நித்திலங்கள்
பவ்வத்திரையுலவு புல்லாணி கைதொழுதேன்
தெய்வச்சிலையார்க்கென் சிந்தைநோய் செப்புமினே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துழாயதன்மேல் | திருத்துழாயின் (ஒரு பாகத்தை) | உலவு | ஸஞ்சரியாநின்ற |
| வவ்வி | பிடித்துக்கொண்டு | புல்லாணி | திருப்புல்லாணியை |
| தனி | தனியாயே | கைதொழுதேன் | அஞ்ஜலி பண்ணினேன்; |
| சென்ற | (அவன் பக்கல்) போன | என் | (அப்படிப்பட்ட) என்னுடைய |
| நெஞ்சம் | என் மநஸ்ஸானது | சிந்தைநோய் | மநோவ்யாதியை |
| செவ்வி | (என்னுடைய) அழகை | தெய்வச்சிலையார்க்கு | அழகிய தநுஸ்ஸையுடைய எம்பெருமானுக்கு |
| அறியாது | (அழியுமென்று) அறியாமல் | செப்புமினே | அறிவியுங்கள். (௩) |
| நிற்குங்கொல் | (அங்கேயே) நிற்குமோ? | | |
| நித்திலங்கள் | முத்துக்களை யுடைய | | |
| பவ்வத்திரை | ஸமுத்ரத்தின் அலைகள் | | |

அவ;—மூன்றும்பாட்டு. கீழ்என்னுடைய உடம்பில் நோவை அறிவியுங்களென்றாள். இங்கு என்னுடைய சிந்தாவ்யதை(தூ)யை அறிவியுங்களென்கிறாள்.

---

தாத்பர்யம் (பிரிக்கவித்யாதி). தாத்பர்யாந்தரம் (இழந்தவித்யாதி). (ஒருத்தி) பிராட்டி. இத்தால் "ஆங்கு" என்றதுக்குக் கருத்துச் சொல்லிற்று. ... (௨)

அந.—மூன்றும்பாட்டு. (வவ்வியித்யாதி). துழாயை இவர் புஜித்து, அவ்வழகை அநுபவித்து, அதின்மேல் சென்ற என்னை விட்டுத் தனியே

வ்யா;—(வவ்வித்துழாயதன்மேல் சென்ற தனிநெஞ்சம்) நாயகன் பிரிந்துபோகிறபோது தோளிலிட்டதொருமாலையிலே ஒரு தலையைப் பிடித்துக்கொடு போய்த்ததாயிற்று, நெஞ்சு அவன்பக்கல் அணுக்கத்தைக்கொண்டு இத்தலையை உதறிப்போனபடி. (செவ்வியறியாது நிற்குங்கொல்) நம்மாள் அங்கே நின்றதாகில் ஆசையற்று வந்தாலன்றோ நமக்கு முடியலாவது என்றிருக்கிறளென்றிருக்கிறதோ? (நிற்குங்கொல்) நிற்குமோ என்றபடி.

(நித்திலங்களித்யாதி). (க)"விரவிமுத்தம் நெடுவெண்மணல்மேல் கொண்டு வெண்டிரை புரவியென்னப்புதம் செய்துவந்துந்து புல்லாணியைத் தொழுதுமெழு" என்று அழகிதாக ஆசைப்பட்டேன். (தெய்வச்சிலையார்க்கென் சிந்தைநோய் செப்புமினே) ஒருத்தியுடைய சிந்தாவ்யதையைப் போக்கவென்றே விற்பிடித்தவர்க்கு என்னுடைய சிந்தாவ்யதையையு மறிவியுங்கள். (என் சிந்தைநோய்) அவளத்தனைக்ரமப்ராப்தி பொறுத்திருக்கு மவளன்றிறே இவள்.

மூ;—பரியவிரணியனதாக மணியுகிறால்

அரியுருவாய்க்கீண்டா னருள்தந்தவாநமக்குப்
பொருதிரைகள் போந்துலவுபுல்லாணி கைதொழுதேன்
அரிமலர்க்கண் ணீர்ததும்ப வந்துகிலும் நில்லாவே. (ச)

---

போன நெஞ்சமானது என்னுடைய செவ்விஅழியுமென்றறியாதே நிற்குமோ வென்றுசப்தார்த்தம் திருவுள்ளம்பற்றிபாவம்(நாயகனித்யாதி). (ஒருதலையை) என்றது-"மேல்" என்றத்தைப்பற்ற. பிரிந்துபோகும்போது தோளிலிட்ட மாலையைக்கண்டிருந்த படியாலே "பரவி நெஞ்சே தொழுதுமெழு" என்று சொன்னவுடனே, தான் என்னைவிட்டுத் தனியே புறப்பட்டுப்போகையாலே எனக்குக்கால்நடை தாராதேகிடந்து படுகிறேனென்கையாலே, இத்தையெல்லாம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் (அவன்பக்கலித்யாதி). (அணுக்கத்தை) அந்தரங்கதையை. நெஞ்சு உன்னுடைய படியறியாதே அங்கேதானே நிற்பானென்னென்ன; (நம்மாளித்யாதி).

நித்திலங்களை - முத்துக்களையுடைத்தான ஸமுத்ர தரங்கங்களென்று விசேஷித்ததுக்குக் கருத்து (விரவியித்யாதி). (அவளத்தனை) - பிராட்டியத்தனை. ... ... ... ... ... ... ... ... (ரு)

---

(க) க-ரு-அ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பரிய | (வரபலத்தால்)பருத்த | போந்து | வந்து |
| இரணியனது | ஹிரண்யனுடைய | உலவும் | ஸஞ்சரியாநின்ற |
| ஆகம் | மார்வை | புல்லாணி | திருப்புல்லாணியை |
| அரியுருவாய் | நரஸிஹ்மரூபியாய் | கைதொழுதேன் | அஞ்ஜலி பண்ணினேன்;(இப்படிப்பட்டஎன்னுடைய) |
| அணி | அழகான | அரி | வண்டுகள் (படிந்த) |
| உகிரால் | நகங்களாலே | மலர் | புஷ்பம்போன்ற |
| கீண்டான் | கிழித்த ஸ்வாமியான | கண் | கண்களில் |
| நமக்கு | நம் திறத்தில் | நீர் | ஜலமானது |
| அருள்தந்தவா | க்ருபைபண்ணினபடி,[வன் என்; | ததும்ப | தளும்பும்படியாகவும், |
| பொரும் | ஸ்பர்த்தை பண்ணிக்கொண்டு வருகிற | அம் | அழகிதான |
| திரைகள் | ஸமுத்திரத்தி னலைகளானவை | துகிலும் | வஸ்த்ரமும் |
| | | நில்லாவே | (அரையில்) தங்காதபடியாகவுமிராநின்றது. |

வ்யா.—நாலாம்பாட்டு. (பரியவிரணியனதாகம்) ஸ்வாமி ஒருவன் உண்டென்னும் ப்ரதிபத்தியுண்டாய், அவனைப் பெறவேணுமென்னும் மேன்மையும்தன்நெஞ்சிலே கிடந்துவளர்ந்த உடலன்றே. "எனக்கு மேற்பட்டானொருவனுளன்" என்றிராமையாலே அவனைப் பெறவேணுமென்றிருக்கு மதுவுமில்லையே. இனி தேஹாதிரிக்தமாயிருப்பதொரு வஸ்துஉண்டென்னும் ப்ரதிபத்தியுமில்லை. தேஹாத்மாபிமாநியாயிருப்பானொருவனுகையாலே கேவலம் சரீரத்தையே வளர்த்தானித்தனையாயிற்று. ஆக "சேஷிஒருவனுளன்" என்றும், "காண்கிற சரீரத்துக்கு அவ்வருகாயிருப்பதொரு வஸ்து உண்டு" என்றும் இராமையாலே வரப(஬)லத்தாலே தடிப்பித்தானுயிற்று. இதுவெல்லாங்கூடி திருவுகிரும்கூட்டியாய்த் தலைக்கட்டிற்று.

---

அரு.—நாலாம்பாட்டு. (பரியவித்யாதி) கீழிரண்டுபாட்டாலே தூதுவிட்டாள். இதில், முன்புஅவன்தன் படியைச் சிலர்க்குச் சொல்லுகிறுளென்று ஸங்கதி.

"பரிய" என்று விசேஷித்ததுக்குக்கருத்து (ஸ்வாமீத்யாதி-தடிப்பிற்றுயிற்றென்னுமளவும்). உட்கருத்தருளுகிருர் (இதுவித்யாதி).

(அணியுகிறால்) கண்டுகொண்டிருக்கத் தருமவற்றைக்கிடீர் இவனுக்கு உடலாக்கிற்று. நாய்ச்சிமாரோட்டை ஸம்போகத்திலும் வ்யாபரிக்கப் பொருந்தவற்றைக் கிடீர் முறட்டுடம்பிலே கொண்டு வ்யாபரித்தது. (அரியுருவாய்க் கீண்டான்) இவன் எவ்வடிவைச் சொல்லுமென்றறியாமையாலே, நரத்வஸிம்ஹத்வங்க ளிரண்டையும் சேர்த்துக்கொண்டு வந்து தோற்றினுயிற்று. நரஸிம்ஹத்தினுடைய சீற்றத்தைக் கண்டவாறே உடல்பதம் செய்தது; அநாயாஸேந கிழித்துப் பொகட்டான். (அருள்தந்தவா நமக்கு) ஒரு பாலனுக்குத் தமப்பன் பகையாக உதவிக்கார்யம் செய்தவன், அபலைக்குத் தன்னைப் பெருமையால் வந்தவ்யஸநத்துக்கு வாசிவைத்து உதவினபடிகாண்.

(பொருதிரைகள் போந்துலவு புல்லாணி கைதொழுதேன்) "பொருதுமுந்நீர்க் கரைக்கேமணியுந்துபுல்லாணி தொழுதுமெழு" என்று எல்லாம் செய்து சமைந்தோம். (அரிமலர்கண்ணீர் ததும்ப அந்துகிலும் நில்லாதே) கடல்திரைகள் வந்து ஸஞ்சரியா நிற்கக் கடலும் திரையும் கண்டுகூட அநுபவிக்க வேணுமென்று ஆசைப்பட்டோம்; இதுவாகில் இவளுக்குத் தேடிப்போக வேணுமோ? என்று என்னுடம்பிலே கண்ணநீரையுமுண்டாம்படி பண்ணினுன்.

மூ.—வில்லாலிலங்கை மலங்கச்சரந்துரந்த
வல்லாளன்பின்போன நெஞ்சம்வருமளவும்
எல்லாருமென்றன்னையேசிலும் பேசிடினும்
புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே. (௫)

---

"அணி" - அழகும், ஸௌகுமார்யமும். இவற்றை அடைவே அருளுகிருர் (கண்டித்யாதி வாக்யத்வயத்தாலே). (இவன் எவ்வடிவைச் சொல்லுமென்று அறியாமையாலே) என்றதுக்கு - ஹிரண்யன் வரங்களில் அகப்படாத வடிவாக வேண்டுகையாலே, நரனென்றும் சொல்லக்கூடாதே, ஹரியென்றும் சொல்லக்கூடாதே, இப்படிப்பட்டவடிவை ஒருகாலும் கண்டறியாமையாலே தனக்கென்றிருக்க வேணுமென்று கருத்து.

அரியானது - வண்டானது, படிந்தமலர்போன்றகண்ணீர், ததும்ப-தளும்ப; அம் - அழகிதானதுகிலும் நில்லாதென்று சப்தார்த்தம் திருவுள்ளம் பற்றி கண்ணீரைச் சொன்னதுக்குத் தாத்பர்யம் (கடலித்யாதி). ... (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வில்லால் | தநுஸ்ஸினல் | எல்லாரும் | ஸகலரும் |
| இலங்கை | லங்கையானது | என்றன்னை | என்னை |
| மலங்க | கலங்கும்படியாக | ஏசிலும் | பழித்தாலும், |
| சரம் | பாணங்களை | பேசிடினும் | பலவகையாகச்சொன்னாலும் (நான்) |
| துரந்த | ஏவினவனை | புல்லாணி | திருப்புல்லாணியில் எழுந்தருளி யிருக்கிற |
| வல்லாளன் | ப(ப)லஶாலியானஎம்பெருமானுடைய | | |
| பின் | பின்னே | | |
| போன | போயிருக்கிற | எம்பெருமான் | எம்பெருமானுடைய |
| நெஞ்சம் | (என்) மநஸ்ஸானது | பொய் | பொய் வார்த்தைகளை |
| வருமளவும் | திரும்பி வருகிற பர்யந்தம் | கேட்டு | கேட்டு [யே |
| | | இருந்தேனே | தரித்திருந்தேன். |

அவ;—அஞ்சாம்பாட்டு. இவளுடைய பந்துக்களுடையத் திரண்டு நாங்கள் சொன்னவார்த்தை கேளாதே அவன் வார்த்தை கேட்டாயிறே. நாங்கள் சொன்னதுவே மெய்யாய், அவன்சொன்ன வார்த்தை பொய்யானபடி கண்டாயே; இனிநாங்கள் சொன்னத்தைக் கேட்கவல்லையேஎன்ன; அப்படியே செய்கிறேம், அவன்பின் போன நெஞ்சை மீட்டாலென்கிறுள்.

வ்யா.—( வில்லாலிலங்கைமலங்க ) வரங்கொடுத்ததேவதைகளுடைய அஸ்த்ரத்துக்கு அழியாதவரை மநுஷ்யத்வத்துக்கு ஏகாந்தமான வில்லாலே அழித்தாயிற்று. மநுஷ்யரை அவமதிபண்ணியிருக்கையாலே இவர்களால் படாதொழிகைக்கு வரம் கொண்டிலனாயிற்று. கையில்வில்லாலே ஒருவர்கூறை எழுவருடுக்கப் பண்ணினபடி. ( சரந்துரந்த வல்லாளன் ) விடுகிறவன் ப(ப)லத்துக்குத்

---

அரு;—அஞ்சாம்பாட்டு. (வில்லாலித்யாதி) கீழ்ப்பாட்டிலே "அருள்தந்தவாநமக்கு" என்று வ்யங்க்யமாக நன்றாக வருளிச்செய்தானென்று வெறுக்க, அத்தைக்கேட்டவர்களெல்லாரும் இதுவே இவளை மீட்கைக்கு அவஸரமென்று பஹுஜநமாகத்தங்கள் வார்த்தையைக் கேட்கச் சொன்னார்களாக, அதுக்குத்தான்சொல்லுகிறதாகஸங்கதியருளுகிறர் (இவளுடைய வித்யாதி).

(படாதொழிகைக்கு) - நஶிபாதொழிகைக்கு. வல்லாளன்பின்போனது வாராது என்று நிஶ்சயித்தே இப்படி சொல்லுகிறுளென்று தாத்பர்யமருளு

தக்கபடியிறே அம்புதைப்பது. (வல்லாளன் பின்போனநெஞ்சம் வருமளவும்) இனிநான் உங்கள் வார்த்தை கேளேனென்கிறாள். அவன்வார்த்தை பொய்யென்றவர்களுக்கு ஒருவழியாலே மெய் யென்னுமிடத்தைக் காட்டுகிறாள். அவனுடைய வ்யாபாரங்கள் அநுஷ்ட்டாநபர்யந்தமாகக்கண்டுகொள்ளுங்கள்; நெஞ்சுபோயிற்றென் கிறாள். அவன்பின்போனஹ்ருதயம் வருமளவும்.

(எல்லாருமென்றன்னை யேசிலும் பேசிடினும் புல்லாணி யெம்பெருமான்பொய் கேட்டிருந்தேனே) தோழிமார் "இதுகார்ய மன்று" என்னவுமாம்; தாய்மார் "இதுகார்யமன்று" என்னவு மாம், இரண்டுக்கும் ப(ஃ)லமொன்றே; இவர்கள் வேண்டாவென்ன போதாக இவள்விடவேண்டுவதுமில்லை. இவர்கள் ப்ரவர்த்தித்த போதாக இவள்புகவேண்டுவதுமில்லை. (புல்லாணி யெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே) நாட்டில் பொய்மெய்கள்கொண்டு கார்ய முண்டோ? அவன்பொய்யாகையாலேயன்றோ எனக்கு ஆகர்ஷகமு மாயிருக்கிறது. ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவனுடைய பொய் யே. அவனுடைய பொய்யைக்கேட்டு அத்தாலே தரித்திருந்தேன்.

மூ.—சுழன்றிலங்கு வெங்கதிரோன் தேரோடும் போய்மறைந்தான்
அழன்றுகொடிதாகி யஞ்சுடரில் தானடுமால்
செழுந்தடம் பூஞ்சோலைசூழ் புல்லாணி கைதொழுதேன்
இழந்திருந்தே னென்ற னெழில்நிறமும் சங்குமே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சுழன்று | (மேருவைச்) சுழல வருகிறவனாய், | போய் | சென்று |
| இலங்கு | ப்ரகாசத்தைப்பண்ணு கிறவனை | மறைந்தான் | அஸ்தமித்தான்; |
| வெம்கதிரோன் | உஷ்ணகிரணனை ஸூர்யன் | அம்சுடர்இல் | அழகிய கிரணங்களை யுடைய சந்த்ரன் |
| தேரோடும் | (தன்) ரதத்தோடும் | அழன்று | வெப்பத்தையுடைய |
| | | கொடிதாகி | க்ரூரனாய் [னாய், |
| | | தான் | தான் |

கிறார் (இனியித்யாதி). கீழ்வாக்யவிவரணம் (அவனுடைய வித்யாதி). சப் தார்த்தம் (அவனித்யாதி). பேசிலுமென்றதுக்குத் தாத்பர்யம் (இவர்கள் ப்ரவர்த்திப்பிக்க வித்யாதி).

"புல்லாணி யெம்பெருமான்" என்றத்தைக் கடாக்ஷித் தருளுகிறார் (ரக்ஷணத்திலேயித்யாதி).(பொய்யே) பொய்யன்றோ இதுவென்கை. (௫)

| | | | |
|---|---|---|---|
| அடும் | பாதியாநின்முன்; | புல்லாணிகைதொழுதேன்; | |
| ஆல் | கஷ்டம்; | என்தன் | (அப்படிப்பட்ட) என்னுடைய |
| செழும் | செழுமையையுடைய | | |
| தடம் | தடாகங்களாலும் | எழில்நிறமும் | அழகிய நிறத்தையும் |
| பூம்சோலை | பூக்களையுடைய பொழில்களாலும் | சங்கும் | சங்குவளையையும் |
| சூழ் | சூழப்பட்ட | இழந்திருந்தேன் | இழந்துவிட்டேன். (சு) |

அவ;—ஆறும்பாட்டு. நமக்கு ஆஸ்வாஸத்தைப் பண்ணக்கடவனனவன் போய்க்கொடு நின்முன், நலிவார் பெருத்திரா நின்றது. அநுபவிக்கலான நிலத்தில் போய்ப் புகப்பெற்றிலோம்; இங்குள்ளவையும் நம்மை விட்டுப்போகா நின்றதென்கிமுள்.

வ்யா.—(சுழன்றிலங்கு வெங்கதிரோன் தேரோடும் போய் மறைந்தான்) மேருவைச் சுழலவருவானுய், ப்ரகாஶத்தைப் பண்ணக் கடவனுன வெவ்வியனுன ஆதித்யனுனவன் தன் ரதத்தோடே மறைந்தான். "சுழன்று" என்கிறது-ஜ்யோதிஶ்சக்ரத்தின் படியாலே என்னவுமாம். (க) "ஒளியவன் விசும்பியங்கும் தேரும்போயிற்று" என்னக் கடவதிறே; நாயகன் கலந்து பிரிந்து போம்போது பார்த்து நிற்குமாபோலே, ஆதித்யன் போகிறபோது பார்த்து நின்முள் போலே காணும். (அழன்று கொடிதாகி யஞ்சுடரில் தானடுமால்) அழகிய சுடரையுடையவனென்று சந்த்ரனைச்சொல்லுகிறதாயிற்று. அழற்றியையுடையனுய், தன்ஸ்வாபாவம் வேறுபட்டு சீத கிரணனுனவன் முடியாநின்றுனுயிற்று.

அநு.—ஆறும்பாட்டு. (சுழன்றித்யாதி) புல்லாணியெம்பெருமானுடைய பொய்யே உனக்கு தாரகமாகில், அத்தைக்கொண்டு ஆறியிருக்கவொண்ணுதோவென்ன; ஆறியிருக்கும்படி எங்ஙனே யென்கிமுளென்றும் ஸங்கதியையுட்கொண்டு பாட்டுக்குத் தொகுத்த பாவமருளுகிமுர் (நமக்கித்யாதி).

லோகத்ருஷ்ட்யா சுழலுகையை அருளிச்செய்து, சாஸ்த்ரத்ருஷ்ட்யா மேரு ப்ரதக்ஷிணத்தைச் சொன்னதாகத் தாத்பர்யம் (சுழன்றென்கிற வித்யாதி). மதுராநகரத்துக்குப் புறப்பட்டபோது க்ருஷ்ணனுடைய தேரைப் பார்த்திருந்த கோபிமாரைப்போலே,இவளும் நாயகன் பிரிகிறபோது தேரைப் பார்த்தாளாகத் திருவுள்ளம்பற்றி, அத்தாலே இங்கேயும் "தேரோடும் போய் மறைந்தான்" என்கிமுளென்றருளுகிமுர் (நாயகனித்யாதி).

(க) அ-டு-உ.

(செழுந்தடமித்யாதி) நானும் தானுமாய் நீர்விளையாடடாடவும்(க)"தவாங்கேஸமுபாவிஶம்" என்றுசொல்லுகிறபடியே, தன்மடியிலே சாயவும், பூம்பந்தெரிந்து விளையாடவும், அழகிதாகப் பாரித்தேன். (உ) "கள்ளவிழும் மலர்க்காவியும்" என்றுப்போலே நினைத்தவையெல்லாம் தலைக்கட்டினோமே? (இழந்திருந்தேனித்யாதி). தன்னோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே நிறமுமிரட்டித்துத் தன்பக்கலுள்ள ஆபரணங்களும் என்பக்கலிலே யாகவேணுமென் றாசைப்பட்டு, பரிசை யாசைப்பட்டு முதலை இழப்பாரைப்போலே முன்புள்ளவற்றையும் இழந்துவிட்டேன். (சு)

மூ;—கனையாரிடிகுரலின் கார்மணியின் நா வாடல்
தினையேனும் நில்லாது தீயில் கொடிதாலோ
புனையார் மணிமாடப் புல்லாணி கைதொழுதேன்
வினையேன்மேல் வேலையும் வெந்தழலே வீசுமே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கனைஆர் | (கர்க்கர) சப்தத்தால் நிறைந்ததாய், | கொடிது | கொடிதாய் பாதியா |
| இடிகுரல் | இடிபோன்றத்வநியையுடையதாய் | ஆல் | கஷ்டம். [நின்றது; |
| கார் | கறுத்திருக்குமதான | புனைஆர் | மிக்கவழகியதான |
| மணியின் | (ருஷபத்தின் கழுத்திலிருக்கும்) மணியினுடைய | மணிமாடம் | மணிமயமான மாடங்களையுடைய |
| நாஆடல் | நாக்கின் சலநமானது | புல்லாணி | கைதொழுதேன்; |
| தினையேனும் | ஒருதினையளவும் (கொஞ்சமும்) | வினையேன் மேல் | பாவியான என்மேலே |
| நில்லாது | நில்லாமல் (பின்வாங்காமல்) | வேலையும் | ஸமுத்ரத்தின் அலைகளும் |
| தீயில் | அக்நியைக்காட்டிலும் | வெம்தழலே | க்ரூரமான நெருப்பையே |
| | | வீசுமே | வீசாநின்றது. (எ) |

"என் என்றும்," "தன் என்றும்" சொன்ன இரண்டு பதத்தாலும், அவனுடைய எழில்நிறமும் சங்கமும்தான் ஆசைப்பட்டிருந்தவளாகையாலே, என்னுடையவும் தன்னுடையவும் எழில்நிறமும் சங்கமும் இழந்திருந்தேனென்று சப்தார்த்தமாய் தாத்பர்யம் (தன்னோட்டை யித்யாதி). ... (சு)

(க) ரா-ஸு-ங-அ-கச. (உ) கூ-ங-சு.

வ்யா.—எழாம்பாட்டு. (கனையாரித்யாதி) மிகவும் கர்க்கரமாய், இடிபோலே யிருந்துள்ள சப்தத்தையுடைய ருஷபத்தினுடைய கறுத்த மணியினுடைய நாவிலுண்டான ஸஞ்சாரமானது. அந்த நாகுகளை சேக்கள் தொடருகிறபோது அவை ஓடுகிறது, தலைமகன் மேல்விழுந்தான் இருய்க்கும்படிக்கு ஸ்மாரகமாய் நலியா நின்றதாயிற்று. (க) "புரஸ்க்ருத்ய ரதே ஸீதாம் ருஷபோ கோவதூமிவ" -புரஸ்க்ருத்ய ரதே ஸீதாம்ருஷபோகோவதூமிவ" என்னக் கடவதிறே. (தினையேனும் நில்லாது தீயில் கொடிதாலோ) ஒரு தினையளவும் பிற்காலியாதே அக்நியிற் காட்டில் கொடிதாகா நின்றது. அக்நி தண்ணீரென்னும் படியாயிற்று இதின் வெம்மை. அது உடம்பில் சுடுமத்தனையிறே, இது அகவாயிலே புக்கழிக்கவற்றிறே.

(புனையாரித்யாதி) ஸௌபரி ஐம்பது வடிவுகொண்டு புஜித்தாப்போலே, ரத்நங்களாலே பண்ணப்பட்ட மாடங்கள்தோறும் தானுமவனுமாய் அநுபவிக்கக்காணும் கோலிற்று. அதெல்லாம் செய்து சமைந்தேன். (வினையேன்மேல் வேலையும்) அப்ராப்யத்தை ஆசைப்படும்படியான பாபத்தைப்பண்ணின என்மேலே. (வேலையும் வெந்தழலே வீசுமே) இந்தத்வநிக்கு சேஷித்ததுண்டாகக்கொண்டு ப்ரமியாநின்று. இவள்தன் விரஹாக்நி தன்மேலே படாதபடி கடக்க நின்று வீசாநின்றதாயிற்று. .... .... .... .... (எ)

மூ.—தூம்புடைக்கைவேழம் வெருவமருப்பொசித்த
பாம்பினணையானருள் தந்தவா நமக்குப்
பூஞ்செருந்திப்பொன்சொரியும் புல்லாணிகைதொழுதேன்
தேம்பலிளம்பிறையு மென்றனக் கோர்வெந்தழலே. (அ)

---

அரு.—எழாம்பாட்டு. (கனையாரித்யாதி) சீதகிரணன் பாதியாநின்றுன்; என்றுய். நிலாமுற்றத்தைவிட்டுஉள்ளேவரலாகாதோவென்ன; செவிவழியே வ்ருஷபத்தின்மணியும், வேலையும் நெருப்பைச் சொரியாநின்றதென்கிறுளென்று ஸங்கதி.

மாடங்களையுடைய புல்லாணியென்று பன்மையை விவக்ஷித்து உட்கருத்து (ஸௌபரீத்யாதி). (செய்து சமைந்தேன்) - செய்து தலைக்கட்டினேனென்று; வ்யங்க்யம் என்கிருள் என்று சேஷம். (அப்ராப்யத்தை) என்றது-ப்ராப்துமசக்யத்தை யென்றபடி. ... ... ... ... ... (எ)

---

| பதம். | உரை. |
|---|---|
| தூம்புடை | தூம்புபோன்றதுளைகளையுடைத்தான |
| கை | துதிக்கையையுடைய |
| வேழம் | குவலயாபீடமானது |
| வெருவ | அச்சமுறும்படி |
| மருப்பு | தந்தங்களை |
| ஒசித்த | பிடுங்கினவனான |
| பாம்பினணையான் | திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன் |
| நமக்கு | நம்விஷயத்தில் |
| அருள்தந்தவா | க்ருபைசெய்தபடி [என்; |
| பூ | அழகிய |
| செருந்தி | செருந்திவ்ருக்ஷங்களானவை |

| பதம். | உரை. |
|---|---|
| பொன் | பொன்போன்ற புஷ்பங்களை |
| சொரியும் | உதிர்த்தாநின்றுள்ளதான |
| புல்லாணி கைதொழுதேன்; | |
| தேம்பல் | இளமையால் மிக்க கார்ஶ்யத்தையுடைய |
| இளம்பிறையும் | பாலசந்த்ரனும் |
| என்தனக்கு | என்விஷயத்தில் |
| ஓர் | அத்விதீயமான |
| வெம்தழல் | வெப்பத்தையுடைய நெருப்பு போலிராநின்றான். (அ) |

வ்யா;—எட்டாம்பாட்டு. (தூம்புடைக்கை வேழம்வெருவமருப்பொசித்த) தூம்புபோலே துளையையுடைத்தான கையையுடைய ஆனையானது வெருவும்படிக்கீடாக அதின்கொம்புகளைப் பறித்தானாயிற்று. (பாம்பினணையானருள் தந்தவாநமக்கு) ப்ரபல விரோதிகளை ஆற்றி, உகந்தார்க்குத் தன்னைக்கொடுக்கக் கடவனாக ஆசைப்பட்ட நமக்கு நம் விரோதிகளைமாற்றி நமக்கு தன்னைத் தந்தபடி காண். (பூஞ்செருந்தியித்யாதி) போக (ஸ்ரீ) யோக்யமான தேசத்தேறப்போய்ப்புக வரிதாகாநின்றது. அதுக்குமேலே விரோதிகளானவை வளர்ந்து செல்லாநின்றது. சந்த்ரனும் தன்குறையாற்றிக் கொள்ளமாட்டாதே என்னை நலியவல்லனாகாநின்றான். (அ)

---

அரு;—எட்டாம்பாட்டு. (தூம்பித்யாதி) வினையேனென்று நீ வெறுத்துக்கொள்ளுவானென்? தானே நம்விரோதிகளைப்போக்கி அருளுவனென்று தேறியிருக்க வொண்ணாதோவென்று சிலர்சொல்ல, நன்றாக வருள்செய்தானென்று பாலசந்த்ரனுக்கும் நோவுபடுகிறாளென்று ஸங்கதி.

(தந்தபடிகாண்)என்றவநந்தரம், "இப்படி நோவுபடுகிறது"என்றுசேஷம். (மாட்டாதே)என்றவநந்தரம்"இருந்தாலும்"என்று சேஷம்.இத்தால் "தேம்பல்" என்று-இளமையால் பலித்த கார்ஶ்யத்தால் வந்த அலேசச்சலேயுடையவனென்று விசேஷித்ததுக்குக் கருத்துச் சொல்லிற்றாயிற்று. ... (அ)

மூ;—வேதமும்வேள்வியும் விண்ணுமிருசுடரும்
ஆதியுமானு னருள்தந்தவா நமக்குப்
போதலரும்புன்னைசூழ் புல்லாணிகைதொழுதேன்
ஓதமும் நானு முறங்காதிருந்தேனே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேதமும் | வேதங்களையும், | அருள்தந்தவா | க்ருபைசெய்தபடி |
| வேள்வியும் | யாகாதிகளையும், | போது | புஷ்பங்கள் [என்? |
| விண்ணும் | (அதற்குப்பலபூமியான) ஸ்வர்க்காதிகளையும், | அலரும் | மலர்ந்திருக்கிற |
| | | புன்னை | புன்னைமரங்களால் |
| இருசுடரும் | லோகப்ரகாசகரானசந்த்ரஸூர்யர்களையும் (கார்யமாகவுடையனாய்) | சூழ் | சூழப்பட்ட |
| | | புல்லாணி | கைதொழுதேன்; |
| | | நானும் | (அப்படிப்பட்ட) நானும் |
| ஆதியும்ஆனான் | (அவ்வழியாலே)ஜகத்காரண பூதனுமான எம்பெருமான் | ஓதமும் | ஸமுத்ரத்தின் அலைகளோடும் |
| | | உறங்காதிருந்தேன் | கண்ணுறங்காமலிருக்கிறேன். |
| நமக்கு | நம்விஷயத்தில் | | (கூ) |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (வேதமித்யாதி) ஜகத்துக்குக்கண் காட்டியாக வேதத்தைஉண்டாக்கி, அத்தாலே ப்ரதிபாத்யனை தன்னைக் கிட்டுகைக்கு ஸாதநமாக யாகாத்யுபகரணங்களையுமுண்டாக்கி, அதுக்குப்ப(ஃ)லபூமியான ஸ்வர்க்கங்களையுண்டாக்கி, ஜகத்துக்குப்ரகாஶத்தைப் பண்ணக்கடவரானசந்த்ரஸூர்யர்களையுமுண்டாக்கி, அவ்வழியாலேஜகதாகாரணாயிருக்கிறவன். (அருள்தந்தவாநமக்கு) அபேக்ஷியாதிருக்க இவற்றையுண்டாக்கினவன் அபேக்ஷையுடைய நம்கார்யம் செய்தபடிகாண். ஸாமாந்யத்திலே பண்ணக்கடவது விசேஷத்திலின்றிக்கே யிருப்பதே? நாட்டுக்கு இட்ட அஃ

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வேதமித்யாதி). "அருள் தந்தவா நமக்கு" என்று அவனை வெறுக்கக்கூடுமோ? ஸகல ஜகதுபகாரகனன்றோ வென்ன; அது அங்ஙனேயாகிலும் எனக்கு உபகரித்தபடி இதுகாணென்று இரக்கமற்றமையைச்சொல்லுகிறாளென்றுஸங்கதி.

கீழ்வாக்யவிவரணம் (நாட்டுக்கித்யாதி). அஃகம்(விலக்ஷணமான தாந்யர்திகள்). ... ... ... ... ... ... ... ... (கூ)

கம் அந்தஃபுரத்துக்கு அரிதாவதே? (போதலரித்யாதி) போக (भोग) யோக்யமான தேசத்திலே தானும் நானுமாக விடிவிளக்கு வைத்து உறங்காதே அநுபவிக்கக் கோலினேன். இனி இவனுக்கு உறங்காதிருக்கவன்றோவேண்டுவதுஎன்று ஓதத்தை ஆளாகவிட்டுப் போனான். .... .... .... .... .... .... .... (௯)

மூ.—பொன்னலரும்புன்னைசூழ் புல்லாணியம்மானை
மின்னிடையார்வேட்கை நோய்கூரவிருந்ததனைக்
கன்னவிலும்திண்டோள் கலியனொலிவல்லார்
மன்னவராய்மண்ணாண்டு வானாளு முன்னுவரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொன் | பொன் போன்ற புஷ்பங்களை | கல் | கல்என்று |
| | | நவிலும் | ஸ்துதிக்கும்படியான |
| அலரும் | அலர்த்தாநின்ற | திண் | பலிஷ்டமான |
| புன்னை | புன்னைமரங்களால் | தோள் | திருத்தோள்களையுடைய |
| சூழ் | சூழப்பட்ட | | |
| புல்லாணியம்மானை | திருப்புல்லாணியிலெழுந்தருளியிருக்கும் எம்பெருமான் விஷயமாக | கலியன் | ஆழ்வார் (அருளிச்செய்த) |
| | | ஒலி | இத்திருமொழியை |
| | | வல்லார் | அப்யஸித்தவர்கள் |
| மின்னிடையார் | பெண்பிறந்தாருக்கு | மன்னவராய் | அரசர்களாகி |
| | | மண் | பூமியை |
| வேட்கை | ஆசையாகிற | ஆண்டு | அநுபவித்து |
| நோய் | மநோவ்யாதியானது | வான் | பரமபதத்தையும் |
| கூர இருந்ததனை | மிகும்படியிராநின்ற இருப்பை, | ஆளும் | ஆளும்படியாக |
| | | உன்னுவர் | பெறுவர்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (பொன்னலரும்புன்னைசூழ் புல்லாணியம்மானை) நித்ய வஸந்தமான திருப்புல்லாணியை வாஸஸ்தாநமாகவுடையவனை. (மின்னிடையார் வேட்கைநோய்கூர விருந்ததனை) பெண்பிறந்தார்க்கு நோய்மிகும்படியாய்த் தங்கி யிருக்கிற விருப்புத்தான். (கன்னவிலுமித்யாதி) வ்யஸநங்களுக்கெல்லாம்

அரு.—பத்தாம்பாட்டு.(பொன்னலருமித்யாதி) "அலரும்"என்றுவர்த்தமாநநிர் தேசத்துக்குத்தாத்பர்யம் (நித்யேத்யாதி). "கல்"என்று, நவிலும்படியான-ஸ்துதிக்கும்படியான, திண்ணியதோளென்று சப்தார்த்தமாய், தாத்பர்யம் (வ்யஸநங்களுக்கெல்லாமித்யாதி). யுத்தவ்யஸநங்களுக்கென்கை. (௧௦)

ஜீயர் திருவடிகளேசரணம.

ஆடல் கொடுக்கவல்ல தோள்மிடுக்கையுடையரான ஆழ்வாரருளிச் செய்த திருமொழியை அப்யஸிக்கவல்லார் இங்கும் குறைவற அநுபவித்து, அங்கும் குறைவற அநுபவிக்கப் பெறுவர்கள். .... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## ஒன்பதாம்பத்து நாலாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாம்பத்து அஞ்சாந்திருமொழி
### தவளப்ரவேசம்.

வ்யா.—(க)"அஹமஸ்ம்யபராதாநாமாலயஃ- அஹமஸ்ம்ய பராதாநாமாலயஃ" ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தாதிகள் நிரூபகமாயிருக்கை தவிர்ந்து, அபராதங்களையிட்டு நிரூபிக்கும்படியாயிற்றுத் துருப்பற்றிக்கிடந்தபடி. "ஜ்ஞாதாஹம், பகவச்சேஷதைக ரஸோஹம்-ஜ்ஞாதாஹம், பகவச்சேஷதைக ரஸோஹம்" என்றிறே ஸ்வரூபமிருப்பது. ஆகையிறே (உ) "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே - ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" என்று ஸ்வரூபாபத்தி மோக்ஷமாகச் சொல்லுகிறது. இத்தால் இவனுக்கு ப்ரக்ருதிஸம்பந்தம் வந்தேறி யென்னுமிடம் சொல்லுகிறது. ரத்நாதிகளைச்சாணையிலே ஏறிட்டவாறே புகர்பெறுகின்றது. வந்தேறியாகையிறே அழுக்குக்கழிகிறது. அஸித்ஸம்ஸர்க்க

அரு.—தவளவிளம்பிறையின் ப்ரவேசம்;—பாத (ஸ்ரீ) கபதார்த்தத்துக்கு அஞ்சி, திருக்குறுங்குடியிலே கொடுபோய்விடச் சொல்லுகிறது- ஆத்மஸமர்ப்பணமாகையாலே, அந்த ஆத்மஸமர்பணத்தின் ஸ்வரூபத்தை விஸ்தரேண ப்ரமாணோர்த்தோபந்யாஸ முகேநவருளுகிறார் (அஹமஸ்மீத்யாதி). ஆத்மஸ்வரூபம் ஜ்ஞாநாதிகளை இட்டு நிரூபிக்கவேண்டும்படியிருக்குமென்றதுக்கு ப்ரமாணோபபத்திகளை அருளுகிறார் (ஜ்ஞாதேத்யாதி வாக்யத்வயத்தாலே). "ஜ்ஞாநாதிகள்-ஸ்வபாவம்; ப்ரக்ருதிஸம்பந்தம்-வந்தேறி" என்னுமதுக்குஜ்ஞாபகமேதென்ன (ரத்நாதிகளையித்யாதி). ரத்நாதிகளுக்கு அழுக்குக் கழிந்தாலும், அநாதியான அசித்ஸம்பந்தம் கழலக்கூடுமோவென்ன ; (அசித்ஸம்ஸர்க்கமித்யாதி). அநாதியாகச்சொன்ன ப்ரமாணந்தானே அந்தவத்தாகச் சொல்லுகை

(க) அஹிர்பு-ருகூ-ரு-அ. (உ) சாந்தோ-அ-கஉ-உ.

கமஅநாதியாயிருக்கச்செய்தேஅந்தவத்தாகவும்குறைவற்றிருந்தது. (௧) [అకిఞ్చనః - அகிஞ்சநః] இப்படி அபராதங்களுக்கு கொள்கலமாகாநின்றேனென்கிற அநுதாபமின்றிக்கே இருக்கை. [అనన్యగతిః - அநந்யகதிః] இப்படி ஒரு கைம்முதலுமில்லாதபின்பு இவன் தயநீயனென்று இரங்கி கைக்கொள்ளுகைக்கு தேவரையொழியவேறொருவரில்லை. புகுவாசலற்றபடி.

(௨) [త్వమేవోపాయభూతో మే భవ - த்வமேவோபாயபூதோமேபவ] ஆராய்ந்துபார்த்தவிடத்து நானும் எனக்கின்றிக்கே இருந்து. பிறரும் எனக்கின்றிக்கே யிருந்தபின்பு, நீ ஒருவனுமே உபாயமாக வேணும். [ఇతి ప్రార్థనామతిః - இதிப்ராா்த்தநாமதிः] இது புருஷார்த்தமாய்த் தலைக்கட்டுகைக்கு இந்தபுத்தி விசேஷமே வேண்டுவது. ஆத்மஸத்தையோபாதியிறே ஸ்வீகாரமும். (௩) [మామ్-மாம்] என்னை-ஏகமென்றுப்போலேயிருக்கிறது. [శరణాగతిరిత్యుక్తా - ஶரணாகதிரித்யுக்தா] இது-சரணாகதியென்று சொல்லப்பட்டது. [సా - ஸா] அந்தஶரணாகதியானது. [దేవే౽స్మిన్ ప్రయుజ్యతామ్-தேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம்] சரண்யனான ஸர்வேஶ்வரன்பக்கலிலே இதுசெய்யப்படுப்பது. ஓரோவ்யக்திகளிலும் இதுதானே ஹாநஹேதுவாகாநின்றதிறே. நீர்மையாலே ரக்ஷிப்பாருமுண்டோ?

---

யாலே கழலக்குறையென்னென்று கருத்து. (அநுதாபமின்றிக்கே) என்ற ச(ஃ)காரத்தாலே, கர்மாத்யுபாயாந்தரங்களில்லை யென்னுமிடம் கிம்புநர் ந்யாயஸித்தமிறே யென்று ஸூசிதமாகிறது.

(நீஒருவனுமே)என்கிறஏவகாரத்தாலே ப்ரார்த்தநாமதியினுடைய உபாயத்வமும் தவிர்க்கப்படுகிறதென்றுவிவக்ஷித்தது.ஆனால் இப்ப்ரார்த்தனைதான் வேண்டுவானென்னென்னவருளுகிறார் (இதுவித்யாதிவாக்யத்வயத்தாலே). இப்படிஸ்வீகாரத்தில் உபாய பாவம்தவிர்த்தவிடமுண்டோவென்ன (மாமித்யாதி). ஶரண்யனை இவ்விஷயத்திலேதானே செய்யவேணுமோ? மற்றைய விஷயத்தில் பலியாதோவென்ன (ஓரோவித்யாதி). ப்ரபத்தி வ்யாஜமாத்ரமாய், ஶரண்யனுடைய குணமே ஹேதுவாகையாலே, ஶரண்யனுடைய தோஷமே ஹாநஹேதுவாய், இது அதுக்கும் வ்யாஜமாகக் காண்கையாலே பலித்ததில்லை யென்றுகருத்து. ஶரண்யனுடைய குணத்தாலே பலித்தவிடத்தை யருளுகிறார் (நீர்மையாலே யித்யாதி).

---

(௧)ஸ்தோ-ர-௨௨. (௨) அஹி-ஸம்ஹி-௩௬-௩௮. (௩) கீ-க௮-௬௬.

கீழே சில பக்ஷிகளைத் தூதுவிட்டு, நெஞ்சைத் தூதுவிட்டு அவை மீண்டு வருவதற்கு முன்னே பாதக (ஃ) க பதார்த்தங்கள் கையிலே நலிவுபட்டு, தாய்மார் தோழிமாரடைய ஹிதம்சொல்லி மீட்கப்பார்க்க, உங்களுடைய ஹிதவசநம் கேட்டுமீளாதபடி நெஞ்சு அவன் பின்னே போயிற்று; அதுவருமளவும் அவன்சொன்ன வார்த்தையை விஶ்வஸித்திருக்குமத்தனை யென்று துணிந்தவிடத்திலும், அவன்வரக்கண்டிலள். இவ்விடம் ஒருத்தியுடைய ஆற்றாமையைப் பரிஹரிக்கைக்காக வந்திருந்த விடமாகையாலே அங்கு ஆறியிருக்கவுமாம்; இது அங்ஙனன்றிக்கே நம்முடைய துஃக்க நிவ்ருத்திக்காக வந்திருக்கிற தேசமிறே. ஆனபின்பு திருக்குறுங்குடியிலே என்னைக் கொடுபோய்ப் பொகடுங்கள்; கால்நடைதருவாரென்கிறாள். .... .... .... .... .... .... .... *

---

அதாவது - இக்ஷ்வாகுவம்ஶத்து ராஜாவான சிபி சக்ரவர்த்தி யென்கிறவன் தப்பாமல் ஶரணாகதரக்ஷணம் பண்ணிக்கொடு வருகிறகாலத்திலே, இவனைச்சோதிக்கைக்காகதேவர்களும்யமனுமாகக்கூடி, யமன்பக்ஷியாக, தேவர்கள் அத்தைத் துரத்திக்கொடுவாரா நிற்கச்செய்தே, இந்த பக்ஷி சக்ரவர்த்தியை வந்து சரணமடைய, அப்போது தேவர்கள் எங்களுக்கு அந்த பக்ஷியைக் காட்டித் தரவேணுமென்ன; சரணம் புகுந்தத்தை நான் காட்டித்தாரே னென்ன; ஆனால் அந்தபக்ஷியத்தனை மாம்ஸம் உன்சரீரத்திலே அறுத்துத் தாவென்ன; அவனும் அதுக்கிசைந்து ஒருதராசிலே பக்ஷியைவைத்து மற்றைத் தராசிலே மாம்ஸத்தை அறுத்துவைக்க, பின்னையுமது தாழ்ந்து கொடுக்கையாலே சதையுள்ள வளவும் அறுத்தறுத்துவைக்க, அதுவும்போராமையாலே தானும் அந்தத்தட்டிலேஏற, அவ்வளவிலே ஸந்தோஷித்துப் புஷ்ப வர்ஷம் வர்ஷித்து வேண்டிய வரங்களும் கொடுத்துப் போனார்கள். அப்போது அவன் நீர்மையாலே ரக்ஷித்தானென்றபடி.

ஆயையாலே இதரரிடத்தில் பலித்ததும் பலியாததுமாயிருக்கும்; இவ்விஷயமே பலவ்யாப்தமென்று கருத்து. இவ்வாத்மஸமர்பணந்தானும் திருப்புல்லாணி யெம்பெருமான் விஷயத்திலாக வொண்ணாதோ? * ஏழையேதலனிலே பண்ணினதே அமையாதோ? என்னும்ஶங்கையிலே வருளுகிறார் (கீழேயித்யாதி). (இவ்விடம்) திருப்புல்லாணி. (ஆறியிருக்கவுமாம்) அவன் வாராதே யாறியிருக்கவுமா மென்றபடி. ... ... ... ... *

மூ.—

தவளவிளம்பிறை துள்ளுமுந்நீர்த் தண்மலர்த் தென்றலோடன்றி லொன்றித்
துவளவென்நெஞ்சகம் சோரவீரும் சூழ்பனிநாள் துயிலாதிருப்பேன் [னை
இவளுமோர் பெண்கொடியென்றிரங்கா ரென்னலமைந்து முன்கொண்டுபோ
குவளைமலர்நிறவண்ணணர் மன்னு குறுங்குடிக்கே என்னையுய்த்திடுமின். (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தவள | (மிக்க நிர்மலமான) | துயிலாது இருப்பேன் | கண்ணுறங்காம லிருப்பேன்; |
| இளம்பிறை | பால சந்த்ரனும், | இவளும் | "இவளும் |
| துள்ளும் | துள்ளா நின்றுள்ள அலைகளையுடைய | ஓர் | ஒரு |
| முந்நீர் | ஸமுத்ரமும், | பெண்கொடி | லதைபோன்ற அபலை |
| தண் | குளிர்ந்து ஸ்ரமஹரமான | என்று | என்று [யன்றோ?" |
| மலர் | புஷ்பங்களில் வ்யாபரித்த | இரங்கார் | க்ருபைபண்ணுகிறிலர்; |
| தென்றலோடு | தக்ஷிண மாருதத்தோடு | என் | என்னுடைய |
| அன்றில் | அன்றில் பக்ஷியும், | நலம்ஐந்தும் | (ஸ்ரோத்ராதிகளால் வரும்) ஐந்துஜ்ஞாந |
| ஒன்றி | ஒருகூட்டமாய்ச் சேர்ந் | முன் | முன்னமே [ங்களையும் |
| என் | என்னுடைய [து | கொண்டுபோன | அபஹரித்துப்போன |
| நெஞ்சகம் | ஹ்ருதயமானது | குவளைமலர் | குவலய புஷ்பத்தின் |
| துவள | துர்பலமாம்படியாகவும் | நிறம் | நிறம்போன்ற |
| சோர | வாடும்படியாகவும் | வண்ணர் | திருமேனிநிறத்தையுடையஎம்பெருமான் |
| ஈரும் | பாதியாநின்றதுகள்; | மன்னு | பொருந்திவர்த்திக்கிற |
| சூழ் | எங்கும் பரவிக்கிடக்கிற | குறுங்குடிக்கே | திருக்குறுங்குடி என்கிற திவ்யதேசத் |
| பனி | பனியையுடைய | என்னை | என்னை [தேற |
| நாள் | காலத்தில் | உய்த்திடுமின் | கொடுபோய்ச்சேர்த்து விடுங்கள். (௧) |

வ்யா.—முதற்பாட்டு. (தவளவித்யாதி) ஒருவிஷயத்தை ஆசைப்பட்டுப் பெறுதேயிருக்கிற நமக்கு நாட்டுப்பகையாய் விட்

---

அரு.—முதற்பாட்டு. (தவளமித்யாதி) கீழ்த்திருமொழியில் சொன்ன பாத (ஜூக்ஷ) க பதார்த்தங்களைச் சேரவநுஸந்தித்துத் தாத்பர்யம் (ஒருவிஷ

டது. (தவளவிளம்பிறை) அறநிர்மலமாய், தன்பருவம் நிரம்பாதே எல்லார்க்குமொக்க, வைத்த கண்வாங்காதே கண்டுகொண்டிருக்க வேண்டும்படியான தர்ஸநீயமான சந்த்ரன். (துள்ளுமூங்கீர்) அக்நி போலே. (க) "ஏஷைவாஶம்ஸதேலங்காம் - ஏஷைவாஸம்ஸதேலங்காம்" என்னுமாபோலே, நான், நானென்று முற்பட்டுக்கொண்டுவருகிற சிறுதிவலையை யுடைத்தானகடல். (தண்மலர்த்தென்றலொடு) ப்ரம ஹரமான மலரிலே போய்ப்புக்கு. (உ) "பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டஃ- பத்மகேஸர ஸம்ஸ்ருஷ்டஃ" என்கிறபடியே அதுதன்னிலும் ஆழவிழியில் வெக்கை தட்டுமென்று பார்த்துத்தாதையும் சுண்ணத்தையும் ஏறிட்டுக்கொண்டு பரிமளத்தைக் கொடுவந்து தோற்றின தென்றலோடே கூட. (அன்றில்) அவைபோலே ஒருவிசேஷணமிட்டு விசேஷிக்க வொண்ணாதே ஸத்ரீவதம்பண்ணவல்ல அன்றில். (ஒன்றி) அராஜகமான தேசத்தில் வன்னியரடையத் தங்களிலே கைசெய்து கீழோலைவிட்டு நாலுவாசலையும் வந்து பற்றுமாபோலே. இவை இப்படி எல்லாம் கூடித்திரண்டு ஒருமுகம்செய்து செய்கிறதுதானென்னென்னில்;

(துவளவித்யாதி) முன்பே விரஹத்தாலே தரைபற்றியிருக்கிற என்னுடைய ஹ்ருதயமானது துவளும்படியாகவும் சோரும்படியாகவும் ஈராநின்றது. ம்ருதுவாயிருப்பதொரு கொழுந்தைநெருப்பிலே இடுவாரைப்போலே ஈரும். எதிர்த்தலையில்எளிமை கண்டவிது தனக்கிடமாக நலியாநின்றதாயிற்று. (சூழித்யாதி) எனக்குத்தான் ஒருவர்தேட்டமாயோவிருக்கிறது. (ங)"ஒழுகுநுண்பனிக் கொடுங்கிய பேடையையடங்க வஞ்சிறை கோலித்தழுவுநள்ளிருள்" என்கிறபடியே அணைத்த நாயகனுடைய கைக்குள்ளே அடங்க வேண்டுங்காலத்திலே அவனைப் பிரிந்து பாத (ஸ்பர்ஶ) க பதார்த்தங்களின்கையிலே அகப்பட்டுக் கண்ணுறங்காதே விருக்கிற என்னை.

யாதி). "துள்" என்றதுக்குத் தாத்பர்யம் ( அக்நியித்யாதி ). அக்நிபோல "பாத (ஸ்பர்ஶ) கமாய்க்கொண்டு" என்ற சேஷம். (கைசெய்து) - வ்யூஹம் செய்து. (கீழோலை)-ரஹஸ்யமாக ஓலைஎழுதுகை. (நாலுவாசல்) என்றதுக்கு- சக்ஷுஸ் த்வக் க்ராண ஶ்ரோத்ரங்களைச் சொன்னபடி.

(தேட்டமாயோ) என்றது - பாத (ஸ்பர்ஶ) கரை வேறே தேடவேண்டி

(க) (உ)ரா-கி-க-எக. (ங) அ-ரு-அ.

(இவளுமோர் பெண்கொடி யென்றிரங்கார்) இவளொரு அபலையன்றோ? இதுக்கெல்லாம் இவள் ஆடல் கொடுக்கவல்லளோ? என்று நம்பக்கலிலே க்ருபை பண்ணுகிறிலன். அன்றிக்கே தம்மைப் பிரிந்து பத்துமாஸம் ஜீவித்திருந்தவளோபாதியாக நினைத்திராநின்றார். (என்நலமித்யாதி) "என்நலமைந்தும்" என்கிறவிது-ஸ்ரோத்ராதிகளால் வருமறிவையென்னுதல்; அன்றிக்கே,(க)"என்நலனும்-என்நிறைவும்" என்கிறத்தை என்றமுதினார். (குவளையித்யாதி) இவை கொடுபோகைக்கிட்ட மருந்தாயிற்றிது. வடிவைக்காட்டிக் கண்டதடையப் பகையாம்படிபண்ணிப்பொகட்டுப்போன இவ்விடம் போலன்றிக்கே இவைதான் அநுகூலமாம்படி அவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசத்திலே கொடுபோய்ப் பொகடுங்கள். .... (க)

மூ.—

தாதவிழ்மல்லிகை புல்லிவந்த தண் மதியி னிளவாடையின்னே
ஊதைதிரிதந்துழறியுண்ண வோரிரவு முறங்கே னுறங்கும்
பேதையர்பேதைமையாலிருந்துபேசிலும்பேசுகபெய்வளையார்[மின்
கோதைநறுமலர்மங்கைமார்பன் குறுங்குடிக்கே என்னையுய்த்திடு

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தாது | தாதுகளானவை | இளவாடை | இளமையானவாடையாகிற |
| அவிழ் | நெகிழாநின்றுள்ள | | |
| மல்லிகை | மல்லிகை புஷ்பங்களினுடைய | ஊதை | குளிர்காற்றானது |
| | | இன்னே | இப்படியே |
| புல்லி | புறவிதழ்களில் | திரிதந்து | அங்குமிங்கும் ஸஞ்சரித்து |
| வந்த | ஸம்பந்தித்த | | |
| தண்மதிஇன் | குளிர்ந்த சந்த்ரனுடன் (கலந்த) | உழறி | தொகைத்து |
| | | உண்ண | முடிக்க, |

யோவென்கை. 'இவளும்" என்றச(ஃ)காரத்தாலேலோகத்தில் பாலைகளோபாதிஎன்றும் ஸூசிதயாய்த்தாத்பர்யமருளிச்செய்து, இவளும்என்றத்தாலே அவளோபாதி இவளுமென்றூக்கி அர்த்தாந்தரமருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி). "நலம்" என்று பக்தியாய், அதுதானும் ஜ்ஞாநமேயாகையாலே வருளுகிறார் (ஸ்ரோத்ரேத்யாதி). "என்நலனுமென்நிறைவுமென் சிந்தையுமென்வளையுங் கொண்டென்னையாளுங்கொண்டு" என்கிறவிடத்தில் சொன்ன அவற்றை விவக்ஷித்தருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி). குறுங்குடிக்கே குடிபோந்தால் பிறை முதலானவை பாதியாதோவென்ன ( வடிவையித்யாதி ). ... (க)

(க) தி-நெ-உரு.

| | | | |
|---|---|---|---|
| ஓரிரவும் | ஒருராத்ரியிலும் கூட | பேசிலும் | பழிப்பாகச்சொல்லிலும் |
| உறங்கேன் | உறக்கமின்றிக்கே கிடக்கிறேன்; | பேசுக | சொல்லுகிறார்கள்; |
| | | நறு | பரிமளிதமான |
| பெய் | இடப்பட்ட | மலர் | புஷ்பத்தில் வாஸம் செய்கிற |
| வளையார் | வளையையுடையராய், | | |
| உறங்கும் | உறக்கத்தையே தேட்டமாக வுடைய | கோதை | மயிர்முடியையுடைய |
| | | மங்கை | பெரியபிராட்டியாரை |
| பேதையர் | அறிவுகேடர்கள் | மார்பன் | திருமார்பிலே யுடையரான எம்பெருமான் வர்த்திக்கிற |
| பேதைமையால் | (தங்கள்) அஜ்ஞாநத்தால் | | |
| இருந்து | (உறங்காதே) இருந்து | குறுங்குடிக்கே என்னைஉய்த்திடுமின். | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (தாதவிழ்த்யாதி) மல்லிகையானது - தாதவிழ்கிற வளவிலே போயணைந்தது; அது உஷ்ணிக்குமே; அந்த வெக்கையைச் சந்த்ரனோடே கலசி ஆறி அநுகூலமாய்க் கொண்டு மந்தமாக ஸஞ்சரிக்கிறவாடையாகிற. (ஊதை) "ஊதை" என்று - குளிர்காற்றுக்குப்பெயர். "ஊதையும், கூதையும்-குளிர் பனிக்காற்று" என்னக்கடவதிறே. வாடைநலிகிறபடி எங்ஙனே யென்னில்; (இன்னே) என்னுமித்தனை. வாடைநலிகிறபடியைச் சொல்லில் வாய் வேம். (திரிதந்துழறியுண்ண) ஆனைக்கண்டமத்தகஜம்போலே கால்வாங்கினபோதே அங்கே இங்கே ஸஞ்சரித்துத் துகைத்து முடிக்க; (ஓரிரவு முறங்கேன்) ஒருபோதுஉறக்கத்தோடு செலுத்தி, மற்றொருபோது கண்ணுறங்காதே நோவுபடுகையன்றிக்கே, காலமெல்லா முறக்கமின்றிக்கே நோவுபடுகிறேன்.

---

அ;—இரண்டாம்பாட்டு. (தாதித்யாதி) நீ "நாட்டைப் பகைத்து என்னைக் குறுங்குடிக்கே உய்த்திடுமின்" என்றாய்; உன்னைப்போலே அபிமதரைப் பிரிந்தாரில்லையோ? அவர்கள் இத்தனை நோவுபட்டு உறங்ார்களோ? நாங்கள் உன்னைக் கொடுபோனால் ஏசுவர்கள் என்றறியிருக்கலாகாதோ என்ன, அறியாதார் ஏசினால் நமக்கென்ன குறையென்று சொல்லுகிறாளென்று ஸங்கதி.

விசேஷித்துக் கேட்டதற்கு ஸாமாந்யமாக "இன்னே" என்பானென்னென்ன வருளுகிறார் (வாடையித்யாதி). "உழறி" என்றதினர்த்தம் (தொகைத்து) என்றது. கீழ்ப்பாட்டில் சூழ்பனிநாளென்றாள்; இதில் ஓரிரவுமென்றதுக்குக் கருத்து (ஒருபோதித்யாதி).

(உறங்கும்பேதையர்) அபிமதரைப் பிரிந்தால் வரும் க்லேசமறியாத அறிவுகேடரானவர்கள் காற்றுக்கு இறாயாதே, அது வரும் வெளிநிலம் தேடிப் படுக்கைபடுப்பர்களாயிற்று; அவர்கள் தந்தாமுடைய அறிவுகேட்டால் "இவள்-வாடைக்கிடையாநின்றாள், கண்ணுறங்குகிறிலள், அவன்றான் வருமளவும் ஆறியிருக்கிறிலள்" என்றவிது தன்னை குணஹாநியாக நினைத்துப்பழிசொல்லிலும் சொல்லுகிறார்கள். (பெய்வளையார்) கையில் வளை தொங்குவார் சொல்லும் வார்த்தைகொண்டு நமக்குக் கார்யமென்? (கோதையித்யாதி) நம்முடைய ப்ராவண்யத்தை குணஹாநியாக உபபாதிக்கையன்றிக்கே (௧) "ஸ்ரீஜ்ஞாநாத் உபராத்யதி - நகஸ்சிந்நாபராத்யதி" என்று பொறுப்பித்து அவன் திருவடிகளோடே சேர்க்குமவள் இருந்தவிடத்தே கொடுபோய்ப் போகடுங்கள். .... .... .... .... (உ)

மூ.—

காலையும்மாலை யொற்றுண்டுகங்குல் நாழிகையூழியில் நீண்டுலாவும்
போல்வதோர் தன்மைபுகுந்துநிற்கும்பொங்கழலேயொக்கும்வாடைசொல்லில்
மாலவன்மாமணிவண்ணன் மாயம்மற்றுமுள வவை வந்திடாமுன்
கோலமயில்பயிலும்புறவில் குறுங்குடிக்கே யென்னையுய்த்திடுமின் (௩)

---

உறங்குமென்றத்தாலே உரக்கமே தேட்டமானவர்களென்றுதோற்றுகையாலே அருளுகிறார் (அபிமதரையித்யாதி). "பெய்வளையரான பேதையர்-தங்கள் பேதைமையாலே உறங்காதேயிருந்துபேசினார்களாகிலும்" என்று சப்தார்த்தம் விவக்ஷித்து, அவர்கள் பேசுமவைதானும் "வாடையுண்ண" என்றும், "உறங்கேன்" என்றும், "இப்படிஎன்" என்றும், சொன்னபதங்களால் ஸித்தமாமவற்றை அருளுகிறார் (இதுதன்னையித்யாதி). பெய்கை-இடப்படுகையாய், இடப்பட்டவளையை யுடையவர்கள்" என்றத்தாலே நாயகவைலக்ஷண்ய ஜ்ஞாநம் ஸ்ப்புடீக்ருதமென்று விவக்ஷித்தருளுகிறார் (கையிலித்யாதி). கோதையாலே மயிர் முடியென்றும், அவற்றையுடைய மங்கையென்றும் சப்தார்த்தமாய், இப்படி விசேஷித்தத்தாலே தன்னுடைய போக்யதையால் அவனை வசீகரித்து நம்கார்யம் செய்யவல்லவளென்று பலிக்கையாலே இத்தையருளுகிறார் (நம்முடைய வித்யாதி). ... ... ... ... ... ... (உ)

அரு.—மூன்றாம்பாட்டு (காலையித்யாதி). "பேசிலும் பேசுக" என்று இத்தனைபதறுவானென்? போதுவிடியாதோ? அதுவே போதுபோக்கியிருக்கலாம்; இந்த ராத்ரியினுச்சியானவன்றோ இதுக்குப் பொறுத்திருக்கவடுக்கும்

---

(௧) ரா-யு-௧௧௬-௪௪.

| பதம். | உரை. |
|---|---|
| காலையும் | ப்ராத: காலமும் |
| மாலை | அந்திப்பொழுது போல் |
| ஒற்றுண்டு | பாதகமாய்க்கொண்டு |
| கங்குல் | ராத்ரியில் |
| நாழிகை | நாழிகையானது |
| ஊழியில் | கல்பத்திற் காட்டில் |
| நீண்டு | தீர்க்க (ஃ) மாகி |
| உலாவும்போல்வது | ஸஞ்சரிக்கிறுப்போலிருக்கிறது; |
| ஓர் | ஒருவிதமான |
| தன்மை | ஸ்வபாவத்தை |
| புகுந்தும் | புகுந்ததாகவும் |
| நிற்கும் | ஆகாநிற்கிறது; |
| வாடை | வாடைக்காற்றானது |
| சொல்லில் | (அதின் பாதகமானபடியைச்) சொல்லுமளவில் |
| பொங்கு | வ்ருத்தியை யடையாநின்ற |
| அழலேஒக்கும் | படபாமுகாக்நிபோலிராநின்றது; |

| பதம். | உரை. |
|---|---|
| அவன் | அந்த எம்பெருமான் |
| மால் | மிகவும் பெரியவனுகவும், |
| மாமணிவண்ணன் | ஶ்லாக்யமான மணி போன்ற வடிவுடையனுகவுமிராநின்றுன்; |
| மாயம் | (அவன் விபூதியில்) பாதகமான ஆஶ்சர்ய பதார்த்தங்களும் |
| மற்றும்உள | அநேகம் உண்டு; |
| அவை | அவைகள் |
| வந்திடாமுன் | (பாதிப்பதற்காக) வருவதற்கு முன் |
| கோல | தர்ஶநீயமானமே |
| மயில் | மயில்களானது |
| பயிலும் | நெருங்கி வர்த்திக்கிற |
| புறவில் | பர்யந்தங்களையுடைய |
| குறுங்குடிக்கே என்னைஉய்த்திடுமின். | |

வ்யா.—மூன்றும்பாட்டு; (காலையும் மாலையொற்றுண்டு) காலையிலும் மாலையில் போலேயிருக்க, பாதித்து முடியாநின்றது. காலையும் மாலைபோலே பாதக (ஃ)மாகாநின்றது. (க) "காலையரும்பி - மாலையரும்" என்கிறபடியேயாயிருக்கிறபடியே யிருக்கிறதில்லை. ஏக

என்ன; அது அங்ஙனல்லவென்று அவற்றின் படிகளைச்சொல்லுகிறுளென்று ஸங்கதி.

(காலையிலும்) என்றதுக்கு முன்பே "பாத(ஃ)கவர்க்கம்" என்று சேஷம். அர்த்தாந்தரம்(காலையுமித்யாதி). யுவதிகளுக்கு காமனை-காலையில் அல்பமாய், மாலையிலன்றே அதிகமாவது, ததநுகுணமாயிராதோ?பாதை(ஃ)யுமென்ன வருளுகிறுர் (காலையித்யாதி). "காலைபரும்பி" என்றதுக்கு யுவதிகளுடையஆற்றுமையை புஷ்பஸமாதியாலே தமிழர் இப்படி வ்யவஹரிப்பாரென்றுகருத்து. "கங்குல்நாழிகையானது-ஊழியில்நீண்டுலாவும்போல்வதோர்தன்மை தன்னி

(க)

ரூபமாய் நலியாநின்றது. ராத்ரியில் நாழிகையானது கல்பத்திற் காட்டிலும் நெடிதாய்க்கொண்டு ஸஞ்சரிக்கிறப்போலே யிருக்கிற ஸ்வபாவமானது கிட்டி நில்லாநின்றது. (பொங்கித்யாதி) வாடை பாதகமாகிறபடி தானே பேச்சுக்கு நிலமல்ல ; சொல்லில், படபாமுகாக்நிபோலே இராநின்றது.

(மாலவன்) அவனாகிறான் - சாலப்பெரியானொருவனிறே. அவனுக்கு இவற்றுக்கு இடையவேண்டாவே. (மாமணிவண்ணன்) பெரியவனென்று கைவாங்கவொண்ணுமோ? மேல்விழுந்து பெறவேண்டும்படியான வடிவைப்படைத்தவன். (மாயம்மற்றுமுள) அவன்விபூதியில் ஆஶ்சர்யமான பாத(ஜ)க பதார்த்தங்களுக்கு எண்ணில்லை. அன்றில், தென்றல், கடலோசை என்றாப்போலே சொல்லுகிறவற்றுக்கு ஓர் எண்ணில்லையிறே. (அவைவந்திடாமுன்) அவைநலிய அபக்ரமித்ததத்தனை. அவைவந்து நம்மைமுடித்துத் தலைக்கட்டுவதுக்குமுன்னே. (கோலவித்யாதி) நம்மினமுள்ளவூரிலே கொடுபோய்ப் பொகடப்பாருங்கள். தர்ஶநீயமான மயில் நெருங்கி வர்த்திக்கிற பர்யந்தத்தை யுடைத்தான திருக்குறுங்குடியிலே கொடுபோய்ப் பொகடப்பாருங்கள். .... .... .... (௩)

மூ.—

கருமணிபூண்டுவெண்ணாகணைந்து காரிமிலேற்றணர் தாழ்ந்துலாவும்
ஒருமணியோசை யென்னுள்ளந்தள்ள வோரிரவுமுறங்காதிருப்பேன்
பெருமணி வான வுருச்சிவைத்த பேரருளாளன்பெருமைபேசிக்
குருமணிநீர்க்கொழிக்கும் புறவில்குறுங்குடிக்கே யென்னையுய்த்திடுமின். (௪)

---

டத்திலே புகுந்ததாகாநிற்குமென்று சேஷம் திருவுள்ளம் பற்றியருளுகிறார் (ராத்ரியிலித்யாதி). (ஸ்வபாவமானது) என்றவநந்தரம் தன்னைஎன்றுசேஷம். தன்னை-நாழிகையை என்கை.

அவன்மால் என்றந்வயித்துப்பெருமையைச்சொன்னதுக்கு உட்கருத்து (அவனித்யாதி), அளகபாரத்தாலே மயிலென்றும், ஸ்த்ரீகளைச் சொல்லுகையாலே நம்மினமென்றது. ... ... ... ... ... ... (௩)

அரு. — நாலாம்பாட்டு. (கருமணியித்யாதி) திவாராத்ரவிபாகமற, காமனை-ஏகரூபமாய், அத்தாலே காலமும் நெடிதாகத் தோற்றி, பாதகபதார்தமும் நலியாநின்ற தென்றாய், எல்லாவற்றுக்கும் நெஞ்சிறே மூலம்; ஆகையாலே

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கரு | கறுத்த | உச்சி | தங்கள் முடிமேலே |
| மணி | மணிகளை | பெருமணி | ஶ்லாக்யமான மணியா |
| பூண்டு | தரியாநின்றும், [ளை | வைத்த | தரிக்கப்பட்ட [க |
| வெண்நாகு | வெளுத்தபசுங்கன்றுக | பேருளாளன் | பரமக்ருபாளுவான எம் பெருமானுடைய |
| அணைந்து | ஸம்ஶ்லேஷியாநின்றும், | | |
| கார் | கறுத்த | பெருமை | பெருமையை |
| இமில் | முசுப்பையுமுயுடைய | பேசி | பேசி |
| ஏறு | வ்ருஷபத்தினுடைய | ஓர் இரவும் | ஒருராத்ரியிலும் |
| அணர் | ஸாஸ்நையில் | உறங்காது இருப்பேன் | நித்ரையின்றிக்கே நோவுபடாநின்றேன். |
| தாழ்ந்து | தாழ்ந்து | | |
| உலர்வும் | ஸஞ்சரிக்கிற | குரு | பெருவிலையனை |
| ஒருமணி | ஒருமணியினுடைய | மணி | ரத்நங்களை |
| ஓசை | ஶப்தமானது | நீர் | ஜலமானது |
| என் | என்னுடைய | கொழிக்கும் | கொழித்தெறடாநிற்பதான |
| உள்ளம் | ஹ்ருதயத்தை | | |
| தள்ள | ஶிதிலமாக்க | புறவில் | பர்யந்தங்களை யுடைய |
| வானவர் | நித்ய ஸூரிகள் | குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். | |

வ்யா.—நாலாம்பாட்டு.(கருமணியித்யாதி) கருமணியினுடைய நிறமும் ஸ்ம்ருதிவிஷயமாய் பாத(ஞ்ஞு)கமாகாநின்றது.(வெண்ணாகணைந்து)படுபாடல்லதறியாத நாகுகளோடே அணைந்து,தான் தன்னுடைய ஸ்த்ரீத்வாதிகளாலே இருய்க்க, அவன் மேல்விழும்படிக்கு ஸ்மாரகமாகாநின்றது. கறுத்தகருத்தையுடைத்தாயிருக்கிற வ்ருஷபத்தினுடைய அணறிலே தாழஸஞ்சரிக்கிற ஒருமணியாய்த்து. மற்

நெஞ்சு பொறுக்கவேணுமென்ன ; அது செய்யப்போகிறதில்லை யென்கிறுளென்று ஸங்கதி.

(ஸம்ருதிவிஷயமாய்) என்றவநந்தரம் "அவனுடைய நிறத்தை நினைக்கப் பண்ண" என்றுசேஷம். "வெண்ணாகு" "என்றத்தாலே, வெளுப்பைச் சொல்லி, அத்தாலே சுத்தஸ்வபாவம் சொன்னதாய் மேலேதோற்றின தொழிய உள்ளில் கருத்தை அறியாதென்று சப்தார்த்தமாய்த் தாத்பர்யம் (படுபாடித்யாதி).† (படுபாடுமேலேபட்டது)மேலெழத்தோற்றின தென்றபடி.(அணறிலே)ஸாஸ்நையிலே. "ஒரு" என்று விசேஷித்ததுக்குக்கருத்து (மற்றுமித்

† வ்யாக்யாநநுகுணம்.

றுள்ள பாதகபதார்த்தங்களில் இதுக்குஒப்பதொன்றில்லையாயிற்று. அந்தமணியோசையாகிறது - அல்லாதவை போலன்றிக்கே செவி வழியே புகுந்து பாதகமாகாநின்றதிறே. இது வொழிந்ததடைய உறங்கிற்றிறே. தொட்டார்மேலே தோஷமாம்படியிருக்கிற ஹ்ருத யத்தைத்தள்ள, ராத்ரியாக நித்ரையின்றிக்கே நோவுபடாநின்றேன்.

(பெருடணியித்யாதி) "அயர்வறுமமரர்கள் தங்களுக்கு முடி மேலே மணியாகவைத்த-சிரோபூஷணமாக வைக்கப்பட்ட. (பேரரு ளாளன் பெருமைபேசி) அவனுடைய பெருமைபேசி ஒருமணி யோசை என்னுள்ளம்தள்ள ஓரிரவு முறங்காதிருப்பேனென்னுதல்; பேச என்றதாகில், "ஒருவனுடைய நீர்மை இருக்கும்படியே? ஒருவ னைப்பிரிந்து ஒருத்திபடும்பாடே" என்று இரண்டிடத்திலுள்ளாரும் நின்று சொல்லும்படியாக என்றுகிறது. (குருமணியித்யாதி) பெரு விலையனை ரத்நங்களை நீரானது கொழித்தெறடா நிற்பதான பர்யங் தத்தோடே கூடின திருக்குறுங்குடியிலே கொண்டுபோய்ப் பொக டுங்கள். .... .... .... .... .... .... .... (ச)

மூ.—

திண்டிமிலேற்றின் மணியுமாயன் தீங்குழலோசையும்தென்றலோடு
கொண்டதோர்மாலையுமந்தியீன்ற கோலவிளம்பிறையோடு கூடிப்
பண்டையவல்லவிவை நமக்குப்பாவியேனுவியை வாட்டம்செய்யும்
கொண்டல்மணி நிறவண்ணர் மன்னுகுறுங்குடிக்கே யென்னையுய்த்திடுமின்,

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திண் | திண்ணிதாயிருந்துள்ள | தென்றலோடு | தக்ஷிண மாருதத்தோடு |
| இமில் | கருத்தையுடைய | கொண்டதோர் | ஒருவித கோட்பாட்டை யுடையதாய் வருகிற |
| ஏற்றின் | வ்ருஷபத்தினுடைய | மாலையும் | மாலையும், |
| மணியும் | கழுத்து மணியும், | அந்தி | ஸந்த்யையானது |
| ஆயன் | இடையனை க்ருஷ்ணனுடைய | ஈன்ற | உத்பாதித்த |
| தீம்குழல்ஓசையும் | இனிதான குழலின் சப்தமும், | | |

யாதி). இதுக்கு வாசியேதென்ன (அந்த வித்யாதி). என்னுள்ளம்தள்ள நீ உறங்காதிருக்கைக்கு அந்தவ்ருஷபத்துக்கு உறக்கமில்லையோ வென்னவருளு கிறார் (இதித்யாதி).

| | |
|---|---|
| கோலஇளம்பிறையோடு | அழகிய பாலசந்த்ரனோடும், |
| கூடி | சேர்ந்து |
| பாவியேன் | மஹா பாபத்தைப்பண்ணின என்னுடைய |
| ஆவியை | ப்ராணனை |
| வாட்டம்செய்யும் | வாடப்பண்ணுகின்றது. |
| இவை | இதுகள் |
| நமக்கு | நம் திறத்தில் ( பாதிக்கும் விஷயத்தில்) |
| பண்டையவல்ல | முன்புள்ளவை போலன்று; |
| கொண்டல் | மேகத்தினுடையவும் |
| மணி | நீலமணியினுடையவும் |
| நிறம் | நிறம்போன்ற |
| வண்ணர் | வர்ணத்தை யுடையரான எம்பெருமான் |
| மன்னு | பொருந்தி வர்த்திக்கிற |
| குறுங்குடிக்கே என்னைஉய்த்திடுமின். | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (திண்டிமிலித்யாதி) முன்புசொன்னவை போலன்றிக்கே தனித்தனியே இவைமுடித்து விடுமோபோலே இரா நின்றது. "தண்மலர்த்தென்றலோடன்றி லொன்றி" என்னச்செய் தேபின்னையும் ஜீவித்திருந்தோமிறே. இவை நம்மை வைப்பனவன் றிக்கே இராநின்றன. திண்ணிதாயிருந்துள்ள இமிலுண்டு-கருத்து, அத்தையுடைத்தான வ்ருஷபத்தினுடைய கழுத்தில் மணியும், அவிழ்த்து விடுவாரில்லாமையாலே மணிதானும் திண்ணிதாகலா மிறே. (ஆயன்தீங்குழலோசையும்) ப்ராஹ்மணனுடைய குழலோ சைக்குக்கேளாள் காணுமிவள். இடையனுடைய இனிதான குழ லோசையும்; அதினுடைய ரஸ்யதை எவ்வளவுண்டு; அவ்வளவும் பாத(ஃ)கமாமிறே. (தென்றலித்யாதி) தென்றலோடேகூடபெரிய

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (திண்டிமிலித்யாதி) "ஒருமணியோசை என்னுள் ளம் தள்ள" என்றாய்; இதுக்கித்தனை படவேணுமோ? என்றேடே உசாவிக் கொண்டு அதில் நெஞ்சுவையாதே இருக்கவமைய மென்ன; அதொன்றுமே யோ? ஆயன் தீங்குழலோசைக்குச் சொன்னவையெல்லாம் முடியவேணுமெ ன்று வாராநிற்க, நான் எங்ஙனே பொறுக்கும்படி என்கிறுளென்று ஸங்கதி.

இவையாவன தீங்குழலோசையோடே கூடினபடியாலே பண்டையவல்ல; ஸத்தாஹாநியைப் பண்ணுமென்று கருத்து. முன்பு சொன்னவவை இத் தனை பாதிக்கவில்லையே என்கைக்கு நியாமக மென்னென்ன (திண்டிமிலித் யாதி). "திண்" என்றது-மணி என்றதுக்கு விசேஷணமாக விவக்ஷித்து அதன் திண்மையை இவளறிந்தபடி யென்னென்ன வருளுகிறார் (அவிழ்த்

கோட்பாட்டையுடைத்தாய் வருகிறமாலையும். (அந்தியித்யாதி). வழிப்பகையான சந்த்ரனுயிற்று. சத்ருவின்வயிற்றிலே பிறந்தசத்ருவாய், ஸந்த்யைதானே பாதகமாயிருக்கச்செய்தே அதிலே ஸந்த்யை தான் என்னுடைய சத்ருநிரஸநத்துக்கு ஒருபிள்ளை வேணுமென்று பெற்றுப்போலேயிருக்கை. ராவணன் இந்த்ரஜித்தைப் பெற்றுப்போலே.

(பண்டையவல்லவிவை நமக்கு) அவனேடு ஸம்ஶ்லேஷிப்பதற்கு முன்புதானே பாத(ஈ)கமென்னும் வ்யுத்பத்தியில்லை. ஸம்ஶ்லேஷத்தில்தானே அநுகூலமாயிருக்கும். முன்புத்தை பாதகபதார்த்தங்களின் அளவாயிருக்கிறதில்லையென்னுதல். (பாவியேன்) கலந்தபோதோடு பிரிந்தபோதோடு வாசியற ஆறியிருக்கலாம் விஷயமன்றிக்கே பிரிந்துஆற்றவொண்ணுதகுணுதிக விஷயத்தோடே கலக்கும்படியான மஹாபாபத்தைப் பண்ணினேன். (ஆவியை வாட்டம் செய்யும்) தொட்டார்மேலே தோஷமாயிருக்கிற ப்ராணனை முடிக்கப் பாராநின்றது. (கொண்டலித்யாதி). இவை பாதகமாம்படி அவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசத்தேறக் கொடுபோய்ப் பொகடுங்கோள். கொண்டல்போலேயும் நீலமணியினுடைய நிறம்போலேயுமிருக்கிற நிறத்தையுடையனவன் வர்த்திக்கிற தேசத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள். .... .... .... .... (ரு)

மூ,—

எல்லியும்நன்பகலு மிருந்தேயேசிலுமேசுக வேந்திழையார்
நல்லரவர்திறம்நாமறியோம் நாண்மடமச்சம் நமக்கிங்கில்லை
வல்லனசொல்லிமகிழ்வரேலும் மாமணிவண்ணரைநாம் மறவோம்
கொல்லைவளரிளமுல்லைபுல்கு குறுங்குடிக்கே யென்னையுய்த்திடுமின்.

---

தித்யாதி). "ஓர்" என்றதின் கருத்து. (கோட்பாட்டை)என்றது; கட்டளைப் பாடென்றபடி. (வழிப்பகை)-ஸந்தாநமாக வரும்பகை.

"பண்டைய" என்றதுக்கு முன்புள்ளவை என்று சப்தார்த்தம்; அதுதானும் ஸம்ஶ்லேஷகாலத்தில் அவையென்றும் விஶ்லேஷகாலத்திலே தானே பூர்வத்திலுள்ளவை என்றும்இரண்டு வகையாக வருளுகிருர் (அவனேடித்யாதி வாக்யத்ரயத்தாலே). குணுதிகவிஷயமென்றது-கொண்டல் மணிநிற வண்ணன் என்றத்தைப்பற்றி.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எல்லியும் | நல்லராத்ரியிலும் | இங்கு இல்லை | இவ்விடத்தில் இல்லை; (அவர்கள்) |
| நன்பகலும் | நல்லபகலிலும் | வல்லன | வாய்போருமளவும் |
| இருந்தே | (அவர்கள்) இருந்துகொ[ண்டு, | சொல்லி | சொல்லி |
| ஏசிலும்ஏசுக | பழிசொல்லிலும் சொல்லுகிறார்கள்; | மகிழ்வரேலும் | சிரித்தார்களாகிலும் |
| ஏந்திழையார் | ஆபரணங்களணிந்திருக்கிற அவர்கள் | நாம் | நாம் |
| நல்லர் | விலக்ஷணைகளன்றோ? | மாமணிவண்ணரை | ஶ்லாக்யமான மணி போன்ற வடிவையுடைய எம்பெருமா[னை |
| அவர்திறம் | அவர்களுடைய திறமையை | மறவோம் | மறக்கமாட்டோம் |
| நாம்அறியோம் | நாம் அறிகிறிலோம்; | கொல்லை | தோட்டங்களிலே |
| நமக்கு | நமக்கு [(ஆனால்) | வளர் | வளராநின்ற |
| நாண் | வெட்கமும் | இளமுல்லை | இளமையான முல்லை புஷ்பங்களால் |
| மடம் | அஜ்ஞதையும், | புல்கு | வ்யாப்தமான |
| அச்சம் | பயமும் | குறுங்குடிக்கே என்னைஉய்த்திடுமின். | |

வ்யா.—ஆறும்பாட்டு. (எல்லியும் நன்பகலுமிருந்து) நல்ல எல்லியும் நல்லபகலுமாயிற்று, அவனோட்டைக் கலவிக்கு உறுப்பான காலத்தோடு அவனைஸ்மரிக்கைக்கு உறுப்பான காலத்தோடு வாசியற இரண்டுபோதுமிருந்து. பழிசொல்லிலும் சொல்லுக, அணைத்துப் போக்குங்காலத்தோடு நினைத்துப் போக்குங்காலத்தோடு வாசியற இப்ப்ராவண்யந்தன்னையே பழியாக்கிச்சொல்லிலும் சொல்

---

அ.—ஆறும்பாட்டு. (எல்லியுமித்யாதி) "பாவியேனுவியை வாட்டம் செய்யும்" என்னாநின்றாய்; உன்னை அங்கே கொடுபோகையில் "இவளுக்கு ஸ்த்ரீத்வத்துக்கு ஏகாந்தமான தர்மங்கள் ஒன்றுமில்லை" என்றிப்படி ஏசினால், அவனும் இப்பழி கேட்டு முகம்மாறவைக்கில் செய்வதென்னென்னில்; அவர்கள் ஏச்சால் நமக்கென்? அவன் வர்த்திக்கிற தேசத்தில் போன நமக்கு ஸ்த்ரீத்வம் குறைவற்றிருக்குமென்று ஸங்கதி.

எல்லிக்கும் பகலுக்கும் நன்மை ஏதென்ன வருளுகிறார் (அவனோட்டையித்யாதி). பழிசொல்லிலும் சொல்லுகவென்னக் கூடுமோ? இதுக்குக் கருத்தென்னென்ன (அணைத்தித்யாதி), பிரிவுண்டாயிருக்க, நினைக்கைக்கு

ஞக. அல்லாதாரிழவை அநுஸந்தித்தவாறே ஸ்மரிக்கைக்கு உறுப்பானது தானே பேறுய்த் தோற்றுமே. பிரிந்தபோதுதானே (க) "கங்குலும் பகலும் கண்டுயிலறியாள்" என்று இழவுக்குடலாயிருக்குமிறே. (ஏந்திழையார் நல்லர்) அவர்கள் விலக்ஷணைகளன்றே? ஆபரணங்களைச் சுமந்துகொண்டிருக்க வல்லவர்கள் என்சொல்லாதார். (அவர் திறம் நாமறியோம்) நம் இடையாட்டம் அவர்கள்அறியுமன்றிறே, அவர்களிடையாட்டம்நாமறிவது. அறியாதொழிகிறதுக்குஹேதுவென்னென்னில்; (நாணித்யாதி). நம்முடைமை நம்கையதாகிலன்றேநமக்குஸ்மரிக்கலாவது; அவர்களுக்கு ஸ்த்ரீத்வாதிகள் குறியழியாதிருக்கையாலே சொல்லலாம்; நம்முடைய ஸ்த்ரீத்வாதிகள் நம்கையிலில்லை. (இங்கில்லை) அவைபோனவங்கே காணில் காணுமித்தனை.

(வல்லனசொல்லி மகிழ்வரேலும்) வாயால் போந்தத்தைச் சொல்லிச் சிரித்தார்களாகிலும், "ஸ்த்ரீத்வாதிகளைக் காற்கடைகொண்டாள்; அவனைமறந்திலள்" என்றுப்போலே சிலவற்றைச்சொல்லிச்சொல்லிச் சிரித்தார்களேயாகிலும். (மாமணிவண்ணரை நாம்மறவோம்) அவர்கள் நம்முடைய ஸ்ம்ருதிக்கு உத்போதகராணர்களாமித்தனை. மறப்பு நம்கையிலே கிடக்கும்படியோ? அவன் வடிவுபடைத்தது. (கொல்லையித்யாதி) மறவாமை தேட்டமாம்தேசத்தைவிட்டு அவனை

உறுப்பான மாத்ரத்தாலே நன்மை பகலுக்குச் சொல்லக்கூடுமோ வென்ன வருளுகிறுர் (அல்லாதாரித்யாதி). (அல்லாதார்) நாயகனைப் பிரிந்து அவனை நினையாதார். இப்படி நினைவு மாத்ரத்தைக் கொண்டு நன்மையை ஸாதிக்க வேணுமோ? பகல் ஆஶ்வாஸகரமாகையாலே நல்லதென்னலாமே என்ன; அங்ஙனே சொல்லவொண்ணுது; இப்பெண்பிள்ளையின் ப்ராவண்யம்மிக்குக் குறைதல் வருமென்று ஸம்வாதம் காட்டுகிறுர் (பிரிந்தவித்யாதி), (ஸ்மரிக்கலாவது) என்றது-நாயகனை ஸ்மரித்துக்கொண்டு தரித்திருக்கலாவதென்றபடி. இத்தால் அவர்கள் ஸ்மரித்துக்கொண்டு எப்படியிருக்கிறுர்களோ? தெரிந்ததில்லை என்கை. "நமக்கு" என்றதுக்கு வ்யாவர்த்த்யமருளுகிறுர் (அவர்களுக்கித்யாதி).

அவர் திறம் நாம் அறியாதாப்பொலே அவர்களும் நம்திறமறியார்களிறே. ஏசும்படி என்னென்னும் ப்ரஶ்நத்திலே வல்லன சொல்லி என்கிறுளென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் (வாயாலித்யாதி).

(க) தி-வாய்-ஏ-உ-க.

க் கண்கண்டு அநுபவிக்கலாம் தேசத்திலே கொடுபோய்ப் பொகடுங்கள். கொடிக்குத் தரைகிடைகிடக்க வேண்டாதே கொள்கொம்பிலே படரலாம் தேசத்திலே. .... .... .... .... (கூ)

மூ.—

செங்கணெடிய கரியமேனித்தேவரொருவரிங்கே புகுந்தென்
அங்கமெலியவளைகழலஆது கொலோவென்று சொன்னபின்னை
ஐங்கணைவில்லிதன் ஆண்மையென்னோடாடு மதனையறியமாட்டேன்
கொங்கலர்தண்பணைசூழ்புறவில் குறுங்குடிக்கே யென்னையுய்த்திடுமின்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெடிய | நீண்ட (விசாலமான) | சொன்னபின் | சொன்னபின்புனை |
| செம்கண் | சிவந்த திருக்கண்களை | ஐங்கணைவில்லி | ஐந்து பாணங்களையுடைய மந்மதன் |
| கரிய | கறுத்த [யுடையராய் | தன் ஆண்மை | தன்னுடைய ஸாமர்த்தியத்தை |
| மேனி | திருமேனியையுடையராய், | என்னோடு | என் திறத்தில் |
| தேவர் | ஸ்வாமியுமான | ஆடுமதனை | நடையாடுவிப்பதை |
| ஒருவர் | ஒரு எம்பெருமான் | அறியமாட்டேன் | அறிகிறிலேன்; |
| இங்கே | இவ்விடம் | கொங்கு | தேனை [ள |
| புகுந்து | ப்ரவேசித்து | அலர் | புறப்படவிடாநின்றுள் |
| என் | என்னுடைய | தண் | குளிர்ந்து ம்ரமஹரமா |
| அங்கம் | ஶரீரமானது | பணை | ஶாகைகளால் [ன |
| மெலிய | க்ருஶமாம்படியாகவும், | சூழ் | சூழப்பட்ட |
| வளை | வளைகள் | புறவில் | பர்யந்தங்களையுடைய |
| கழல | கழலும்படியாகவும் | குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின் | |
| ஆதுகொலோ என்று | அதுவன்றோ? (பிரியேன்) என்று | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (செங்கணெடியகரியமேனி) கண்ணேரு

---

அந.—ஏழாம்பாட்டு. (செங்கணித்யாதி) "மாயணிவண்ணரை நாம்மறவோம்" என்றுநின்றாய்; அவர் அப்படிவந்து கலந்தபடி எங்ஙனே; பிரிவுவந்த வழி என்; அத்தால் உனக்கு நலிவு வரப்ரஸக்தி யென்னென்ன அவற்றைச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"நெடிய செங்கண், நெடியகரியமேனி" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி முக்துறக்கண்ணைச் சொன்னத்தால் பலிதமருளுகிறார் (கண்ணித்யாதி).

தலையும் வடிவெல்லாம் ஒருதலையுமானால் பின்னையும் கண்ணழகே விஞ்சியிருக்குமாயிற்று. அகவாயில் வாத்ஸல்யம் தோற்றும்; பார்க்கிற பார்வைக்கு ஓரவதியில்லை. (கரியமேனி) அக்கண்ணில் குளிர்ச்சிக்குத் தப்பினாலும் தப்பவொண்ணாதாயிற்று வடிவில் குளிர்ச்சிக்கு. (தேவர்) கண்ணழகும் வடிவழகும் பேசித்தலைக்கட்டினாலும், மேன்மை பேச்சுக்கு நிலமல்லவாயிற்று. (ஒருவர்) தேவர் என்றால் ஜாதியில் போகாது, அவ்வ்யக்தியொன்றிலேயும் கிடக்குமத்தனை. (இங்கேபுகுந்து) வடிவழகும் மேன்மையும் கரைபுரண்டால் தாமிருந்த விடத்தே நாம் செல்லவிருக்கையிறே அடுப்பது. அவை தம்மதானவோபாதி தாழ்வுசெய்கையும் தம்மதாயிருக்குமாயிற்று. என்றும்அவ்வஸ்துவைப்பெறுவார் பெறுவது, தாம்தாம் ஓரடியிட்டன்றிக்கே அத்தலையாலே வரவாயிற்று. (என்னித்யாதி) வந்தபின்பு கலவியுண்டாக நினைத்திருக்கிறிலள். பிரிவுக்கு உறுப்பாகச்சொன்ன வார்த்தையே யாயிற்று இவள் நெஞ்சில் பட்டுக்கிடக்கிறது.

(அங்கமெலியவளைகழல) ஒன்று சொன்னாராயிற்று. பிரிவை ப்ரஸங்கித்தாராக இவை தன்னடையே போய்க்கொடுநின்றது. (ஆதுகொலோ) பிரியேனென்கிறபாசுரத்தாலே பிரிவைஉணர்த்தினாயிற்று, வ்யதிரேகத்தாலே அறிந்து கொள்ளுகிறாளென்று. இவர் "பிரியேன்" என்கிற பாசுரத்தாலேயாகிலும் சொன்னார்; அதுவும்

---

நெடுமை செம்மையிலும் கருமையிலும் அந்வயித்து, அத்தால் வாத்ஸல்யாதிசயமும், க்ருபாதிசயமும் தோற்றுகிறதென்று அர்த்தாந்தரம் (அகவாயித்யாதி வாக்யத்வயத்தாலே). "தேவர்" என்றத்தாலே நிருபாதிக தேவத்வம் அந்யத்ர இல்லை என்கிற தென்றருளுகிறார் (தேவரென்றாலித்யாதி).(ஒன்றிலேயும் கிடக்கும்) என்றது-ஒன்றிலேதானே கிடக்குமென்கை. அவன் தாழ்வு செய்யும்படி வருகைக்கு இத்தலையில் ஏதேனுமுண்டோ வென்ன வருளுகிறார் (என்று மித்யாதி). இப்படி குணதிகனானவனைப் புகுந்தது அங்கம் மெலிகைக்கும் வளைகழலுகைக்கும் ஹேதுவாமோவென்ன வருளுகிறார் (வந்தவித்யாதி).

குணதிகன் ஒன்று சொன்னால் அது தான் இவையாகப்போவா னென்னென்ன (பிரிவையித்யாதி). அவன் குணதிகனானாலும் பிரிவின் கொடுமை இப்படி பண்ணுமென்று கருத்து. "ஆதுகொலோ" என்றுபிரிவின் கொடுமையைப் பற்றச் சொன்னபடி. ... ... ... ... ... ... (எ)

வாய்கொண்டு சொல்லமாட்டாமை "ஆது கொலோ" என்கிறாளா யிற்று இவள். (ஐங்கணை) அவன் பிரிவை உணர்த்தினான்; காமன்சர வர்ஷமாக வர்ஷிக்கத் துடங்கினான். "வீரபத்நி" என்று பாரார்தே நலியாநின்றான். அவன் கைவிட்டமை அறிந்தானாகவேணும். (கொங்கலரித்யாதி) அவன்கையில் அம்புதானே தா(ஃ)ரகமான தேசத்திலே கொடுபோய்ப் பொகடப்பாருங்கோள். அவனோடேகூடினவாறே பூக்கொய்கையும் ஜலக்ரீடை பண்ணுவதுமாய் தா(ஃ)ரகமாயிறே. .... .... .... .... .... .... .... (எ)

மூ;—

கேவலமன்றுகடலினோசை கேண்மின்களாயன்கையாம்பல்வந்தென்
ஆவியளவுமணைந்துநிற்கு மன்றியுமைந்துகணை தெரிந்திட்டு
ஏவலங்காட்டி யிவனொருவ னிப்படியேபுகுந்தெய்திடாமுன் [மின்
கோவலர்கூத்தன் குறிப்பறிந்துகுறுங்குடிக்கே யென்னையுய்த்திடு

| பதம். | உரை. |
|---|---|
| கடலின் | ஸமுத்ரத்தினுடைய |
| ஓசை | இரைச்சலானது |
| கேவலமன்று | ஸாமாந்யமன்று; |
| கேண்மின்கள் | கேளுங்கோள்; |
| ஆயன் | க்ருஷ்ணனுடைய |
| கை | திருக்கையிலிருக்கிற |
| ஆம்பல் | குழலோசையானது |
| வந்து | இங்கே வந்து |
| என் | என்னுடைய [க |
| ஆவியளவும் | ப்ராணனளவும்(முடிக் |
| அணைந்துநிற்கும் | கிட்டிநில்லாநின்றது; |
| அன்றியும் | அதற்கு மேலும் |
| இவன் ஒருவன் | அத்விதீயனான இந்த மந்மதன் |

| பதம். | உரை. |
|---|---|
| ஐந்துகணை | ஐந்து பாணங்களை |
| தெரிந்துஇட்டு | (இவளைமுடிக்கும்என்று) தெரிந்துகொண்டு |
| ஏவலம் | எய்யவல்லஸாமர்த்யத் [தை |
| காட்டி | காண்பித்து |
| இப்படியே | இப்படிக்கே |
| புகுந்து | என்மேல் ப்ரவேசித்து |
| எய்திடாமுன் | அம்புகளை எறிவதற்கு முன்னமே |
| கோவலர் | கோபாலர்களை |
| கூத்தன் | சேஷ்டிதத்தால் வசீகரி [ந்த |
| குறிப்புஅறிந்து | திருவுள்ளத்தை அறி |
| குறுங்குடிக்கே | என்னை உய்த்திடுமின். |

அரு.—எட்டாம்பாட்டு. (கேவலமித்யாதி) பிரியேன் என்று சொல்லிப் பிரிந்து வாராதிருந்தால் அவனுக்கே அநுராகமில்லையாய் விட்டதே? அவனுக்கு அநுராகம் பிறந்தவனாகவருமளவும் ஆறியிருக்கவேணும்; அதில்லாவிடில் அங்கு போனாலும் ப்ரயோஜநமில்லையே என்னும் ப்ரஶ்நத்திலே சொல்லுகிறு

அவ;—எட்டாம்பாட்டு. (கேவலமித்யாதி) பந்துக்களை நோக்கிச் சொல்லுகிற வார்த்தையிறே. க்ரமப்ராப்தி பார்த்து ஆறியிருக்கலாம்படி அன்று-இங்கோடுகிறதசை; இனி அங்கேபோய்ப் புக்காலும் அவன்றன்னாலே பேறுமன்றுஎனக்குப்ரயோஜநமுள்ளது. அதில் அவன் கருத்தறிந்தபடியையு மறிந்து கார்யம் செய்யப் பாருங்கோள்; உனக்குக்ரமப்ராப்தி பார்த்து ஆறியிருக்கவொண்ணாமைக்கு இப்போது வந்ததென்னென்ன;

வ்யா;—(கேவலமன்று கடலிளைசை) இக்கடலோசைக்குஓரடியுண்டு. மஹாராஜர் பெருமாளை அண்டைகொண்டு வந்து அறைகூறினபோதுபோலே இராநின்றது. பெருமாள் கையும் வில்லுமாய்க் கொண்டு கடக்கநிற்க, அவரைப் பற்றிச் சென்று அறைகூறினாரிறே. (க) [ननाद सुमहानिर्जगाम - நநாதஸுமஹாநிர்ஜகாம] முன்பு பலகாலும் நம்வாசலிலேவந்து அறைகூறக்கண்டறிவோம்; இப்போது அங்ஙனன்றிக்கே இவன்மிடற்றோசையில் தசைபிறந்தபடியால் இதுக்கு ஓரடியுண்டாகவேணும். ப்ரபலனாயிருப்பானொருவனைப்பற்றி வந்தானாகவேணும். [निर्जगाम-நிர்ஜகாம] முன்புபோலே புறப்பட்டுத் தரையிலே கைமோதிப்போகாதே இவனும் இவனடியாக வந்தவனும் இலக்குப்போருமாகில் புறப்பட்டுப் போரப் பார்ப்போமென்று புறப்பட்டான். அடியுண்டென்றறிந்தானாகில், பின்னைப் புறப்படுவானென்னென்னில்; [हरीश्वरः-ஹரீஶ்வரः]எதிரிகள்ஜீவித்திருக்க உஜ்ஜீவித்திருந்தவனல்லாமையாலே. அன்றிக்கே, வெறுமிக் கடலோசையளவே அன்று. இன்னமும் பாதகவர்க்கத்துக்கு ஓரவதியில்லையென்னுதல்.(கேண்மின்கள்)பிரிவென்று

---

ளென்று ஸங்கதி திருவுள்ளம் பற்றியருளிச்செய்கிறார் (பந்துக்களையித்யாதி). (இறே) என்றவநந்தரம் இப்பாட்டென்றுசேஷம். (நோக்கி) என்றது-அநுவிதாநம்பண்ணியென்கை. (பாருங்கோள்) என்றவநந்தரம் "என்றுசொல்லி" என்று சேஷம்.

(ஓரடியுண்டு) என்றதுக்கு-நாயகன் வரவிட்டானென்று கருத்து. அவர் அப்படி அடியுண்டாய்அறைகூறுகையுண்டோவென்ன; (பெருமாளித்யாதி). "ஜகாம" என்னாதே "நிர்ஜகாம" என்றத்தாலே பலிதம் (முன்பித்யாதி). (தரையிலே கையைமோதி) என்றது - எதிரிலக்ஷ்யம் போராமையாலே யுத்தகண்டூதி தீரமோதி என்கை. கடலோசை அவர்களுக்கும் செவிப்படாதோ?

---

(க) ரா-பா-க-௬௮.

ஒன்றுண்டு என்றும் இவர்கள் நெஞ்சிலே பட்டுப்பிரிந்தால் பதார்த்தங்களுமெல்லாம் பாத(ஃ)கமாமென்று அறிவர்களென்றிருக்கிறாள். இடையன்கையில் குழலானது வந்து என்மர்மத்தளவும் கிட்டிநில்லா நின்றது.

(அன்றியுமித்யாதி) அதுக்குமேலே "இவள், குழலோசைக்கு முடிந்தாளாக வொண்ணாது; என்கையிலம்பாலே முடிந்தாளாக வேணும்" என்று பார்த்து "ஸ்த்ரீவதமன்றோ? பண்ணக்கடவதன்று" என்று பார்த்துப் பிற்காலிக்குமவையன்றிக்கே நிர்தயமாக முடிப்பன சிலவம்புகளைத் தெரிந்து. ராவணவதத்துக்குத் தெரிந்துவந்தன சிலவம்புகள் போலேயாயிற்று. (ஏவலங்காட்டி) தான்எய்யவல்ல மிடுக்கை என்னோடேகாட்டி. (இவனொருவன்) ஸ்த்ரீவதம் பண்ணுமிடத்தில் இவனை எண்ணினால் பின்னை எண்ணுகைக்கு ஆளில்லாதபடி யிருக்குமவனாயிற்று. (இப்படியே புகுந்தெய்திடாமுன்) இதுக்கு இட்டுச்சொல்லலாவது ஒருபாசுரமில்லை. புண்ணறைகளைக் காட்டுமித்தனை. (கோவலரித்யாதி) (க)"பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்கிறபடியே தன்னோடொத்த பருவத்துப்பிள்ளைகளை மனோஹாரி சேஷ்டிதத்தாலே எழுதிக்கொண்டிருக்குமவனாயிற்று. வன்னெஞ்சர்படுகிறபாடு இதுவானால் அபலைகளுக்குச் சொல்லவேண்டாவிறே. (குறிப்பறிந்து) அவன் திருவுள்ளக்கருத்தறிந்து என்னை அங்கே கொடுபோய்ப் பொகடப்பாருங்கோள்; அவன் வேணுமென்றிருந்தானாகில் அங்கே கொடுபோய்ப்பொகடுவது; வேண்டாவென்றிருந்தானாகில் இங்கே கிடந்து முடிந்துபோக. .... .... .... .... .... (அ)

மூ;— [கின்றுதாறும்

சோத்தெனநின்று தொழவிரங்கான் தொன்னலங்கொண்டெனக்
போர்ப்பதோர்பொற்படந்தந்துபோனான் போயினவூரறியேனென்கொங்கை
மூத்திடுகின்றன மற்றவன்றன் மொய்யகலமணையாதுவாளா [மின்
கூத்தனிமையவர்கோன் விரும்புங்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடு

"கேண்மின்கள்" என்பானேன்னென்ன வருளுகிறார் (பிரிவித்யாதி).

"கோவலர் கூத்தன்" என்று விசேஷித்ததுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (வன்னெஞ்சரித்யாதி). ... ... ... ... (அ)

(க) ரா-அ-ந-உக.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சோத்து என நின்று | "சோத்தம்"என்றுதாழ்ந்தார்சொல்வதைச் சொல்லி மாறாதே நின்று | அறியேன் | அறிகிறிலேன்; |
| | | மற்று | மேலும் |
| | | என் | என்னுடைய |
| | | கொங்கை | ஸ்தநங்கள் |
| தொழ | அஞ்சலிபண்ணினாலும் | அவன்றன் | அவனுடைய |
| இரங்கான் | இரங்குகிறிலன்; | மொய் | ஸ்ப்ருஹணீயமான |
| தொல்நலம் கொண்டு | பழைமையான ஸ்த்ரீத்வாதிகளைக் கைக்கொண்டு | அகலம் | திருமார்பை |
| | | அணையாது | ஆலிங்கநம் செய்யப்பெறாதே |
| எனக்கு | எனக்கு | வாளா | வீணாய் |
| இன்றுதாறும் | இன்றுவரையில் வர | மூத்துஇடுகின்றன | முதிர்ந்துவிடுகின்றன; |
| போர்ப்பது | போர்க்கைக்கு | | |
| ஓர்பொன்படம் | ஒருபொன்னின் வஸ்த்ரத்தை (தருவானைப்போல் வைவர்ண்யத்தை) | கூத்தன் | மநோஹாரி சேஷ்டிதமுடையனாய் |
| | | இமையவர்கோன் | நித்யஸூரிகளுக்குத் தலைவனான எம்பெருமான் |
| தந்துபோனான் | கொடுத்துப்போனான்; | | |
| போயின | அவன்போன | விரும்பும் | விரும்பிவர்த்திக்கிற |
| ஊர் | திவ்யதேசத்தையும் | குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். | |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (சோத்தெனநின்று தொழவிரங்கான்) அஞ்ஜலி பண்ணுமவர்கள் அதுக்கு அநுரூபமாகத் தாழச் சொல்லுவதொரு சப்தவிசேஷமாயிற்று. "சோத்தம்" என்று

---

அநு.—ஒன்பதாம் பாட்டு. (சோத்தெனவித்யாதி) கடலோசையானது நாயகனை அண்டைகொண்டு மிகவும் பாதியாநின்ற தென்றாநின்றாய்; அவனப்படி பாதிக்கிறானென்கைக்கு க்ருபையின்றிக்கே இருக்குமோவென்ன; மிகவும் அது அங்ஙனே என்றதுக்கு ஹேதுவைச் சொல்லுகிறாளென்று ஸங்கதி. ... ... ... ... ... ... ... ... ...

"சோத்தம்" என்று கடைக்குறைத்தலாய் "சோத்து" என்று கிடக்கிறதாய் அதுக்கர்த்தம் (அஞ்சலியித்யாதி). "என" - என்னவென்றாய், அதினர்

வாயாலே அநுகூலபாஷணத்தைப்பண்ணி மாறுதேநின்று அஞ்ஜலி பண்ணினால், அதுக்கு இரங்குகையாகிற ஸ்வபாவம் அவனுக்குவாஸனையோடேபோயிற்று. அதுஎங்ஙனேஅறிந்தபடியென்னில்; (தொன்னலமித்யாதி) பிறந்தவன்றுதுடங்கி உண்டான என்னுடைய ஸ்த்ரீத்வாதிகளைக்கொண்டு தன்னை நான் பிரிந்தவன்று தொடங்கி, இன்றளவும் வரப், போர்க்கைக்கு ஒருபொன்னின் பிடாத்தைத் தருவாரைப்போலே வைவர்ண்யத்தைத் தந்துபோனான். இத்தலையிலுள்ளதடைய ஸர்வஸ்வாபஹாரம்பண்ணி நமக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணுவாரைப்போலே வைவர்ண்யத்தைத் தந்துபோனான். போனானாகிலும் ஆறியிருக்கலாமிறேபோனவூரைச்சொல்லிப்போனானாகில்; அவன் சொல்லிப்போகாமையில்லை. இவள் குறிக்கொள்ளமாட்டாமை இழந்தாளித்தனையிறே. அறியாயாகில் மேல் இனிச்செய்ய நினைக்கிறதென்னென்ன; இங்கிருந்தநாள் அவன்வாய் வெருவும்படி அறிந்திருப்புதோமே, அத்தேசத்திலே என்னைக் கொடுபோய்ப் பொகடப்பாருங்கோள். இங்ஙன் ஆராய்ந்துகொண்டு அவ்விடம் தேடிப்போகவேண்டுகிறதென்? இங்கே தரித்திருந்தாலோவென்ன;

(கொங்கை மூத்திடுகின்றன) இங்கே இருக்கலாம்படியாயோ இவை இருக்கிறது. (கொங்கைமூத்திடுகின்றன) அவனும்வந்து அணையவும்பெற்றாலும், கழிந்தபருவத்தைமீட்கவொண்ணாதே? காணக்காணச் செவ்வியழியாநின்றதாயிற்று. (௧) "న మే దుఃఖం - நமே துஃக்கம், వయోఽస్యా హ్యతివర్తతే - வயோஸ்யாஹ்யதிவர்த்ததே" என்னுமாபோலே, அவனுடைய ஸ்ப்ருஹணீயமான மார்வோடே அணையப்பெறாதே வ்யர்த்தமேஇருந்துசெவ்வியழியாநின்றதாயிற்று. (௨) [முன்னிருந்து மூக்கின்று] என்னக்கடவதிறே. கண்ணுக்கு இலக்கா

த்தம் (வாயாலே இத்யாதி). "இன்று தாறும்" என்றதினர்த்தம் (இன்றளவும்வர) என்றது. ஓர் என்றத்தின் தாத்பர்யம் (இத்தலையித்யாதி). "போயின வூர் அறியேன்" என்னக்கூடுமோ (௩) "செருந்திப்பொழிலினூடே புனலரங்கமூரென்று போயினாரே" என்றாப்போலே சொல்லிப்போக ஸம்பாவனையுண்டே யென்ன (அவனித்யாதி). "விரும்பும் குறுங்குடி" என்றத்தையருளுகிறார் (இங்கித்யாதி).

எடுத்த ஸம்வாதத்துக்குத் தாத்பர்யம் (கண்ணுக்கித்யாதி). ... (௬)

(௧) ரா-யு-௫-௫. (௨) பெ-தி-ம-௯௨. (௩) திருநெ-௨௫.

யிருந்து காணக்காணச் செவ்வியழியாநின்றதாயிற்று. (கூத்தனித்யாதி) (க)"கோவலர்கூத்தன்" என்றபடியிறே. *இனவாயர் தலைவனானதுக்குமேலே, * இனத்தேவர் தலைவனானவன் விரும்பி வர்த்திக்கிறதேசத்தில் கொடுபோய்ப் பொகடப்பாருங்கள். தன்னுடைய மனோஹாரி சேஷ்டிதத்தாலே நித்யஸூரிகளைத் தோற்பித்துக் கொண்டிருக்கிறவன் விரும்பிவர்த்திக்கிற திருக்குறுங்குடியிலே.

மூ;—

செற்றவன்தென்னிலங்கைமலங்கத் தேவபிரான் திருமாமகளைப்
பெற்றுமென்நெஞ்சகம் கோயில்கொண்ட பேரருளாளன் பெருமை [பேச
கற்றவன்காமருசீர்க்கலியன் கண்ணகத்தும் மனத்துமகலாக்
கொற்றவன்முற்றுலகாளிநின்ற குறுங்குடிக்கே யென்னையுய்த்திடுமின். (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செற்றவன் | சத்ருவான ராவணனுடைய | சீர் | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயை யுடைய |
| தென் இலங்கை | தெற்கிலுள்ள லங்காநகரத்தை | கலியன் | ஆழ்வாருடைய |
| மலங்க | கலங்கப்பண்ணின | கண்ணகத்தும் | திருக்கண்களிலும் |
| தேவபிரான் | தேவாதிபனாய், | மனத்தும் | ஹ்ருதயத்திலும் |
| திருமாமகளை | பெரியபிராட்டியாரை | அகலா | பிரியாமல்நின்ற |
| பெற்றும் | அடைந்திருக்கச் செய்தேயும் | கொற்றவன் | ராஜாவான |
| என்நெஞ்சகம் | என்னுடையமநஸ்ஸை | முற்றுலகு ஆளி | உபயவிபூதிகளுக்கும் ஸ்வாமியானவன் |
| கோயில்கொண்ட | நித்யவாஸமாய்க் கொண்டருளிய | நின்ற | விரும்பி வர்த்திக்கிற |
| பேரருளாளன் | பரமக்ருபாளுவுமான எம்பெருமானு | குறுங்குடிக்கே | திருக்குறுங்குடி என்கிற திவ்யதேசத்தேற |
| பெருமை | மேன்மையை [டைய | என்னை | என்னை |
| பேசக்கற்றவன் | அருளிச்செய்ய வல்ல | உய்த்திடுமின் | சேர்த்துவிடுங்கள். (௧௦) |
| காமரு | ஸ்ப்ருஹணீயமான[வராய் | | |

வ்யா;—பத்தாம்பாட்டு. (செற்றவன் தென்னிலங்கைமலங்க)

---

அரு;—பத்தாம்பாட்டு. (செற்றவனித்யாதி). "தென்" என்றதால்

தேவதைகளுடைய வரங்களாலே அழிக்கவொண்ணாத ஊர், ஒருவர் கூறை எழுவருடுக்கும்படி மூலையடியே நடக்கும்படி பண்ணினவன். (திருமாமகளித்யாதி) ப்ரதாநமஹிஷியிருக்க, ஒருசண்டாள ஸ்த்ரீ கால்கடையிலே ஒதுங்கும் செருக்கனுயிருக்கும் ராஜபுத்ரனைப் போலே (க) "யஸ்யாஸாஜநகாத்மஜா - யஸ்யஸாஜநகாத்மஜா" என்கிறபடியே - தன்ஸம்பந்தமிட்டுச் சொல்லுவது மேன்மைக்கு உடலாம்படியான அவளிருக்க, என்னுடைய ஹ்ருதயத்தை விரும்பி ஒருகாலும் போவானுயிராநின்றான். (கோயில்கொண்ட) இனி இவள் பக்கல் போவானுயிருக்கிறிலன். அதுக்கடியென்னென்னில்; (பேரருளாளன்) நம்பக்கல்பண்ணின அருளுக்கு அவதியுண்டாகிலிறே மற்றோரிடத்தில்போவது.

(பெருமைபேசக்கற்றவன்) அவ்வருளுக்கு அவனையொழியக் குடியிருப்பில்லாதாப்போலேயாயிற்று, அவனைப் பேசுகையாகிற இதுவும்இவ்வாஸ்ரயத்திலேஒதுங்கினபடி. (௨) "இவள்வாயனகள்". (காமருசீரித்யாதி) கண்டார்க்கு ஸ்ப்ருஹைபண்ணவேண்டும்படியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயை யுடையரான ஆழ்வாருடைய ஸர்வேந்த்ரியங்களுக்கும் தானேவிஷயமாய், அரைக்ஷணமும் அவரை விட்டு அகலகில்லாமையாலே கோவிந்தாபிஷேகம் பண்ணினப் போலேயிருக்கிற மேன்மையுடையவன். (முற்றுலகாளி) காற்கடைகொள்ளுகைக்கு உபயவிபூதியோகம் என்று ஒன்றுண்டாயிற்று. அவன் வர்த்திக்கிற திருக்குறுங்குடியிலே என்னைக்கொடுபோய்ப் பொகடுங்கள். இதுக்கு வேறொருபலம் சொல்லாவிட்டது-உகந்தருளின தேசப்ராப்திதானே ப(ஃ)லமாயிருக்கையாலே. .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி
ஒன்பதாம்பத்து அஞ்சாந்திருமொழி முற்றிற்று.



---

வந்த ஸ்ரைஷ்ட்யம் (தேவதைகளித்யாதி). "மால்" என்றத்தால் வந்த மஹத்த்வம் (ப்ரதாநமஹிஷியித்யாதி).

பேசுகை இவரிடத்தில் ஒதுங்கினதுக்குஸம்வாதம் (இவளித்யாதி) (௧௦)

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

(க) ரா-ஆ-கூஎ-௧அ. (௨) தி-வாய்-கூ-௫எ.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# ஒன்பதாம்பத்து ஆறாந்திருமொழி

## அக்கும் ப்ரவேசம்.

வ்யா;—அக்கும்புலியின் ப்ரவேசம்.—கால்நடை தாராதேயிருக்கிற என்னைக் கால்நடைதருவார் அவனிருந்த தேசத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோளென்கிறார். "திருமாமகளைப்பெற்று மென்னெஞ்சகம் கோயில்கொண்ட பேரருளாளர்" என்று பிராட்டி ஸந்நிதியுண்டாகவு மநுஸந்தித்தார். "தமக்குப் புருஷகாரமாவார் அங்கே உண்டு" என்றநுஸந்தித்தவாறே தமக்கே கால்நடை தருமள வாய்வந்துவிழுந்தது. அத்தாலே அங்குநிற்கிறவன்றான் சாலசிலவானாய், நாம்தான் வருவது எப்போதோ? என்றுதான் முற்பாடனாய் நம் அவஸரம் பார்த்துநிற்பானொருவன்; அநுகூலராயிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களையும் போருங்கோளென்று கூட்டிக்கொண்டு தாமே போகப்பார்க்கிறார். .... .... .... .... .... .... *

மூ;—அக்கும் புலியினதளுமுடையா ரவரொருவர்
பக்கம்நிற்கநின்ற பண்பரூர்போலும்
தக்கமரத்தின் தாழ்சினையேறித் தாய்வாயில்
கொக்கின்பிள்ளை வெள்ளிறவுண்ணும் குறுங்குடியே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொக்கின்பிள்ளை | கொக்கினுடைய சிசுவானது | தாய்வாயில் | மாதாவின் வாயிலிருக்கிற |
| தக்க | (தனக்கு) ஏறத்தகுந்தான | வெள்ளிற | "வெள்ளிறு" என்னும் மத்ஸ்யத்தை |
| மரத்தின் | வ்ருக்ஷத்தினுடைய | உண்ணும் | புஜியாநின்றுள்ளதான |
| தாழ்சினை | தாழ்ந்த கிளையிலே | குறுங்குடியே | திருக்குறுங்குடி யென்கிற திவ்யதேசமானது, |
| ஏறி | ஏறி [கும் | | |

அரு.—அக்கும்புலியின் ப்ரவேசம். கீழில் திருமொழியிலே "என்னை உய்த்திடுமின்" என்று பிறர் தம்மைக் கொடுபோய் விடவேண்டும்படி தளர்ந்தவர் இத்திருமொழியிலே "பணிமினெழுமின் தொழுமின்தொண்டீர்காள்" என்று-பிறர்க்கும் அங்கு போகவேணுமென்று உபதேசித்து அவர்களோடே போக ஒருப்படக்கூடுமோ வென்ன (கால்நடை யித்யாதி). (சிலவானாய்) என்றது "பக்கம்நிற்க நின்றபண்பர்" என்றதைப்பற்ற. "வந்துகாண்மின் தொண்டீர்காள்" என்றதைப்பற்றி (அநுகூலராயித்யாதி). ... ... *

க்கும்.

| | | | |
|---|---|---|---|
| அக்கும் | எலும்பையும் | நின்ற | நின்று |
| புலியின் | புலியினுடைய | | டையஞ்சோல மு |
| அதளும் | தோலையும் | | ளியிருக்குமந்தரு |
| உடையார் | தரித்தவனான [வன் | பண்பர் | ஸ்ரீலாதிகுணமுடை |
| அவர்ஒருவர் | ஒராளொரு ருத்ரனான் | | னான எம்பெருமா |
| பக்கம் | பார்ஶ்வத்தில் | | னுடைய |
| நிற்க | நிற்கும்படியாக | ஊர்போலும் | திவ்யதேசமாயிரா நின் |
| | | | றது; (௩) |

வ்யா;—முதற்பாட்டு. (அக்குமித்யாதி) அவனுக்கு ஆகாதாரில்லை யென்கிறார். ஈஶ்வராபிமாநிகளாயிருப்பார்க்கு முகம்கொடுத்துக்கொண்டிருக்கிறவன் அநுகூலராய்ச்சென்று கிட்டுகிற நமக்கு முகம் தரச்சொல்லவேணுமோ? (க) "தொடையொத்த துளபமும் கூடையும் பொலிந்து" என்கிறபடியே அநுகூல ஸிந்ஹத்தோடே வருகையன்றிக்கே, அக்கும் - எலும்பும், புலித்தோலுமுடையராய், மற்றும் எருக்கம்பூ, சாம்பல்என்றுப்போலே நிஷித்த த்ரவ்யங்களுக்கு ஓரவதியில்லையிறே. (அவரொருவர்) அவன் தவிர வொண்ணாமையாலே முகம்கொடுத்தாலும், தமக்கு இதில்ஓர் ஆதரமில்லாமையாலே முகத்தை மாறவைத்துச் சொல்லுகிறார். (பக்கம்நிற்கநின்ற) அவன் ஓரருகே நிற்கநின்ற. அவ்வளவேயன்றியே இன்னமும் தண்ணியராய் வாருங்கோளென்று சீலத்தை யுடையவன் வர்த்திக்கிற ஊர்போலே.

(தக்கவித்யாதி) அங்குநிற்கிற அவன்படி அங்குத்தை ஸ்தாவர

அரு.—முதற்பாட்டு (அக்குமித்யாதி) கீழ்வாக்ய விவரணம்(ஈஶ்வராபிமாநிகளாயித்யாதி). "உடையார்" என்கிற பூஜ்யோக்தியாலே அவருடைய அபிமாநம் ஸூசிதமென்று திருவுள்ளம். அக்கு முதலானவற்றை நிரூபகமாக அருளிச்செய்ததற்குத்தாத்பர்யம்(தொடையொத்தவித்யாதி) "அதளும்" என்ற ச(உம்)காரத்துக்குக்கருத்து (மற்றுமித்யாதி). தேவதாந்தரத்தில் அநாதரத்தாலே (இதில்) என்றது. "பக்கம்" என்றத்தாலே முன்னேநிற்குமவர்களில் தாழ்ந்தவராக வரவேணுமென்று நின்றபடிதோற்றுகையாலே அருளுகிறார் (அவனோருகேயித்யாதி).

பண்பர்க்கு, தக்க - ஸத்ருஶமான என்று தாத்பர்யமருளுகிறார் (அங்கித்

(க) தி-பள்ளியெ-௧௦.

ங்களுக்குமுண்டாயிற்று. (தக்கமரத்தின்) "ஒருமுள்பற்றையாக்கே, பா(ஈ)லர்க்கும் தவிழ்ந்தேறலாம்படியிருக்கு மங்குத்தை வ்ருக்ஷங்களின்படி" என்று-பட்டரருளிச் செய்தாராக ப்ரஸித்தமிறே. அன்றிக்கே, மேலே "கொக்கின் பிள்ளை" என்கையாலே தன்னோடு நாமஸாம்யத்தையுடைத்தான மரத்திலே என்பாருமுண்டு; "கொக்கு" என்று - மாவுக்கும் பேர். (௧) "கொக்கின் பழம் வீழ் கூடலூரே" என்றுண்டாகையாலே; தக்கமரத்தினுடைய தாழ்ந்த பணை தன்னிலே ஏறி. (தாய்வாயித்யாதி) கொக்கின் பிள்ளை தாய்வாயில் வெள்ளிறுவை உண்ணாநிற்குமாயிற்று. "வெள்ளிறு" என்றொரு மத்ஸ்ய விசேஷம். அதின் வாய்க்கடங்குமது தேடிக்கொடுவந்து கொடுக்குமாயிற்று. முறைகெடாமல் புஜித்துப் போருமாயிற்று. தாய் கொடுவந்து கொடுக்க அதுஜீவித்துப் போருமாயிற்று, ஆக ரக்ஷ்யரக்ஷகபாவம் மாறாதே போரும் தேசமாயிற்று. சிலவானையிருக்கிறவன் வர்த்திக்கிற தேசம். அவ்வூரில் மரங்களுக்கும் அவன்படி உண்டென்கிறார். .... .... .... .... .... (௧)

மூ;—துங்காரரவத்திரை வந்துலவத் தொடுகடலுள்
பொங்காரரவில் துயிலும் புநிதரூர்போலும்
செங்காலன்னம்திகழ் தண்பணையில் பெடையோடும்
கொங்கார் கமலத்தலரில் சேரும் குறுங்குடியே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம் | சிவந்த | பெடையோடு | பத்நியுடன் |
| கால் | கால்களையுடைய | கொங்குஆர் | பரிமளம்நிறைந்த |
| அன்னம் | ஹம்ஸமானது | கமலத்து அலரில் | தாமரை புஷ்பத்தில் |
| திகழ் | அழகியதாய் | சேரும் | ஸம்ஶ்லேஷியாநின் |
| தண் | குளிர்ந்ததான | குறுங்குடியே, | [றுள்ள |
| பணையில் | நீர்நிலங்களிலே | | |

யாதி). ஏறத்தக்கமரம் என்றர்த்தாந்தரம் திருவுள்ளம்பற்றி ஸம்வாதமுகேந தாத்பர்யம் (ஒருவித்யாதி). அன்றிக்கே கீழ்ச்சொன்ன ஸாத்ருஶ்யத்துக்கே ஸம்வாதமென்று ஏகார்த்தமாகவுமாம். கொக்குக்குத்தக்க என்று மூன்றாமர்த்தம் (அன்றிக்கே யித்யாதி). முறை கெடாமையை உபபாதிக்கிறார் (தாயித்யாதி). ... ... ... ... ... ... ... (௧)

(௧) குறு-௨-௬.

| | | | |
|---|---|---|---|
| துங் | ஒக்கத்தையுடைத்தாய், | பொங்குஆர் | பெரியகிளர்த்தியை யுடையனுன |
| ரரவம் | பெரிய ஆரவாரத்தை யுடைத்தாயிருக் | அரவில் | திருவநந்தாழ்வான் மேலே [ற |
| திரை | அலைகளானவை [கிற | துயிலும் | கண்வளர்ந்தருளாநின் |
| வந்து | சிறுதிவலைகளுடன் . கிட்டி | புனிதர் | சுத்தஸ்வபாவனுனஎம் பெருமானுடைய |
| உலவு | ஸ்பர்ஶியாநின்றுள்ள | | |
| தொடுகடல் | ஆழமான ஸமுத்ரத்திலே | ஊர்போலும் | ஊராயிராநின்றது ; |

அவ;—இரண்டாம்பாட்டு. திருப்பாற்கடலிலே கண்வளர்ந் தருளுகிற அழகு எளியர்க்குக் கிட்டவொண்ணுமை யன்றிக்கே ப்ரஹ்மாதிகளுக்குமகப்பட இக்கரையிலே நின்று கூப்பிடவேண்டும் படி ஸர்வாதிகனுயிருக்கிறவன் எல்லார்க்கு மொக்க அநுபவிக்க லாம்படி வர்த்திக்கிற தேசம் திருக்குறுங்குடி யென்கிறுர்.

வ்யா.—(துங்காரரவத்திரை) ஒக்கத்தையுடைத்தாய், பெரிய ஆரவாரத்தை யுடைத்தாயிருக்கிற திரைகளானவை சிறுதிவலைக ளாலே திருவடிகளிலேவந்து துடைகுத்த, ஆழத்தையுடைத்தான கடலிலே பெரிய கிளர்த்தியையுடையனுய், கண்வளர்ந்தருளுகைக் கிடான பரப்பையுடையனுய், மென்மை, குளிர்த்தி முதலானவற் றை புடையனுன திருவநந்தாழ்வான் மேலே ஜகத்ரக்ஷணசிந்தை பண்ணிக்கண்வளர்ந்தருளுகிற. இதுதான் ஸ்வயம்ப்ரயோஜநார்த்த மாகவன்றிக்கே, ஆஶ்ரிதார்த்தமாகையாலே வந்த சுத்தியையுடைய வன் வர்த்திக்கிற ஊர்போலே. (செங்காலித்யாதி) சிவந்த காலை யுடைத்தான அன்னமானது அழகியதாய் குளிர்ந்த நீர்நிலங்களிலே பரிமளத்தைப் புறப்படவிடா நின்றுள்ள தாமரைப்பூவிலே தன் ஸஹசரத்தோடே நித்யஸம்ஶ்லேஷம்பண்ணி வர்த்தியா நின்றுள்ள திருக்குறுங்குடியே. .... .... .... .... .... (உ)

---

அரு:—இரண்டாம்பாட்டு. (துங்காரித்யாதி) கீழ்ப்பாட்டில் நின்றநம் பியை அநுபவிக்க அழைத்து, இதில் கிடந்த நம்பியை அநுபவிக்கப்போ வோம் வாருங்கோளென்கிருளென்று ஸங்கதி.

"தொடு" என்றதினர்த்தம் (ஆழத்தை) என்றது. "புநிதர்" என்றதின் பலிதம் ( ஜகத்ரக்ஷண சிந்தையித்யாதி ). ... ... ... (உ)

மூ;—வாழக்கண்டோம் வந்துகாண்மின் தொண்டீர்காள்
கேழல் செங்கண் மாமுகில்வண்ணர் மருவுமூர்
ஏழைச் செங்காலின் துணைநாரைக் கிரைதேடிக்
கூழைப்பார்வைக் கார்வயல்மேயும் குறுங்குடியே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| தொண்டீர்காள் | பாகவதர்களே! |
| வாழக்கண்டோம் | வாழுகைக்கு வழிபார்த்து வைத்தோம்; |
| வந்துகாண்மின் | வந்துபாருங்கோள்; |
| ஏழை | ம்ருதுவாய் |
| செம்கால் | சிவந்த காலையுடைத்தாய் |
| இன்துணை | இனியஸஹாய பூதமான |
| நாரைக்கு | சேவலுக்கு |
| இரை | ஆஹாரத்தை |
| தேடி | தேடிக்கொண்டு |
| கூழை | க்ருத்ரிமமான |
| பார்வை | வீக்ஷணத்தையுடைய நாரைப் பேடையானது |
| கார் | கறுத்த |
| வயல் | பயிர்களிலே |
| மேயும் | மேயாநிற்குமதான குறுங்குடியே, |
| கேழல் | வராஹரூபியாய் |
| செம்கண் | சிவந்த திருக்கண்களையுடையராய் |
| மாமுகில் | பெரியமேகம்போன்ற |
| வண்ணர் | திருமேனியையுடையருமான எம்பெருமான் |
| மருவும்ஊர் | விரும்பி வர்த்திக்கும் திவ்யதேசம். (௩) |

வ்யா;— மூன்றும்பாட்டு. (வாழக்கண்டோம்) க்லேசித்து நோவுபடவேண்டாதே நமக்கு வாழுகைக்கு வழிபார்த்து வைத்தோம். (வந்துகாண்மின் தொண்டீர்காள்) கைங்கர்ய ருசியுடைய நீங்கள் கடுகவாருங்கோள். (கேழலித்யாதி) ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்துக்கு ஏகாந்தமாகக்கைக்கொள்ளும் வடிவொழியத் தனக்கென்னஒருரூபமில்லையாயிற்று. (செங்கண்) (க)"మహావరాహస్స్ఫుట పద్మలోచనః- மஹாவராஹஸ்ஸ்புடபத்மலோசந:" என்கிறபடியே காணவே தாபமெல்லா மாறும்படியாய்க் குளிர்ந்து, முகில்போலேயிருக்கிற வடிவையுடையனாயிருக்கிறவன், அவதாரங்கள் போலே

அ௩;—மூன்றும்பாட்டு. (வாழவித்யாதி) கீழ்ப்பாட்டில் கிடந்த நம்பியுடைய அழகைக்கண்டவர் மங்களாஶாஸநபரராய், வாழும்படியைத் திருவுள்ளம்பற்றி, நாமும் அங்கேபோய்ப் பல்லாண்டு பாடுவோம் வாருங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

" மருவு மூர் " என்றதுக்கு பா(ஊ)வம் (அவதாரங்களித்யாதி).

(க) வாராஹ-[illegible]

திர்த்தம் ப்ரஸாதித்துப் போகாதே நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

(ஏழையித்யாதி) ம்ருதுவாய்ச் சிவந்த காலையுடைத்தாய், ஸம்ஶ்லேஷத்தாலே போதுபோக்க வேண்டும்படியிருக்கிற இனிய துணையான சேவலுக்கு ஆமிஷம் தேடி க்ருத்ரிமமான பார்வையையுடைத்தான நாரையானது கருவடைந்த பயிர்களிலே போய் மேயாநிற்குமாயிற்று. பேடையோடே நித்யஸம்ஶ்லேஷத்தாலே இட்டடி பேர்க்கமாட்டாதே கிடந்திடத்தே கிடக்க, பேடையானது கால் நடைதந்து அதுக்கு இரைதேடிப் போகாநிற்குமாயிற்று. அதினுடைய பும்ஸ்த்வம் இத்தலையிலேயாய், இதினுடைய ஸ்த்ரீத்வம்அத்தலையிலேயாய் மாறும்படியாக வாயிற்றுக்கலந்தது. இதுகால் நடைதந்து போனபடிஎங்ஙனே அதுகிடக்கவென்னில்; இதின் காலில் சிவப்பைநினைத்தால் அதுக்குக் கடலோடலாமிறே. தன்னைக் குறித்துத் தோற்றதோல்வியாகையாலே சேவலின் மிடுக்கும் இதின்மேலே வந்தேறுமிறே. .... .... .... .... (ந)

மூ;—சிரமுனைந்துமைந்தும் சிந்தச்சென்றரக்கன்
உரமும்கரமும் துணித்தவுரவோனூர்போலும்
இரவும்பகலுமீன்தேன் முரல மன்றெல்லாம்
குரவின்பூவேதான் மணநாறும்குறுங்குடியே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இரவும்பகலும் | ராத்ரியும்பகலும் | சிரமுன்ஐந்து மைந்தும் | தலைகள் பத்தும் |
| தேன் | வண்டானது | சிந்த | சிதறும்படியாக |
| ஈன் | இனிமையாய் | சென்று | லங்கையில்சென்று |
| முரல | (மதுபாநமத்தமாய்) பாடா நிற்பதாய், | அரக்கன் | ராவணனுடைய |
| மன்றஎல்லாம் | வெளிநிலயடைய | உரமும் | மார்வையும் |
| குரவின் | குரவு வ்ருக்ஷத்தின் | கரமும் | கைகளையும் |
| பூவேதான் | பூக்களுடையவே | துணித்த | சேதித்தவனை |
| மணம்நாறும் | பரிமளம்ப்ரசுரமாயிராநின்றதுமான | உரவோன் | பலிஷ்ட்டனை எம்பெருமானுடைய |
| | குறுங்குடியே, | ஊர்போலும் | ஊராயிராநின்றது. |

சொல்லுக்கிளைத்த நாம் சொல்லும் வழியென்னென்ன (பேடையோடித்யாதி). பேடை இரைதேடக்கூடுமோவென்ன (அதினுடைய வித்யாதி). பேடைக்கு அசக்திவரஹேது வென்னென்ன (தன்னையித்யாதி). (ந)உ

வ்யா.—நாலாம்பாட்டு. (சிரமித்யாதி) தலைகள்பத்தும் சிதறும்படியாகச்சென்று அடைமதிள்படுத்திராவணனுடைய நெஞ்சில்திண்மையையும் தோள்மிடுக்கையும்போக்கின ஆண்பிள்ளை வர்த்திக்கிற ஊர்போலே. திவாராத்ரவிபாகமின்றிக்கே எப்போதுமொக்க வண்டுகளானவை மதுபாநத்தைப்பண்ணி ஆளத்திவைக்க. (மன்றெல்லாமித்யாதி) வெளிநிலமடையக் குரவின்பூநாற்றமேயாய்க் கிடக்குமாயிற்று. ஸர்வேந்த்ரியங்களுக்கும் விஷயமுள்ளதேசமாயிற்று; (ஸ்ரீ) ண்டினுடைய த்வநியாலே செவிக்குவிஷயமுண்டாய், புஷ்பகந்தத்தாலேக்ராணேந்த்ரியத்துக்கு விஷயமுண்டாய், இதுதானும் உபலக்ஷண... யிருக்குமாயிற்று. .... .... .... .... (ச)

மூ;—கவ்வைக்களிற்று மன்னர்மாளக் கலிமாந்தேர்
ஐவர்க்காயன் றமரிலுய்த்தா னூர்போலும்
மைவைத்திலங்குகண்ணார் தங்கள் மொழியொப்பான்
கொவ்வைக்கனிவாய்க்கிள்ளை பேசுங்குறுங்குடியே. (ரு)

| உரை. | பதம். | பதம். | உரை. |
|---|---|---|---|
| மை வைத்து | அஞ்ஜநத்தாலலங்க்ருதமாய் | கவ்வை | பேரொலியை யுடைத்தான |
| இலங்கு | ப்ரகாசயாயிராநின்ற | களிற்று | ஆனைகளையுடையரான |
| கண்ணார்தங்கள் | கண்களையுடைய ஸ்த்ரீகளின் | மன்னர் | ராஜாக்கள் |
| | | மாள | முடியும்படியாக |
| மொழிஒப்பான் | வார்த்தைபோலே | ஐவர்க்காய் | பஞ்சபாண்டவர்களுக் [கா |
| கொவ்வைக்கனி | கோவைப்பழம்போலே சிவந்திருக்கிற | அன்று | அந்தக்காலத்தில் |
| | | அமரில் | யுத்தத்திலே |
| | | கலி | த்ருடமான |
| வாய் | அதரத்தை யுடைத் [தான | மாதேர் | பெரியதேரை |
| கிள்ளை | கிளிகள் | உய்த்தான் | நடத்தினவனான எம்பெருமானுடைய |
| பேசும் | பேசாநின்றுள்ள | | |
| குறுங்குடியே, | | | ஊர் போலும். (ரு) |

அநு;—நாலாம்பாட்டு. (சிரமித்யாதி). வாழக்கண்டோமென்றுநின்றீர்; (க) "பாசங்கள் விட்ட பின்னையன்றி யவனவை காண்கொடான்" என்கிறபடியே நம் விரோதி நிவ்ருத்தமாகிலிறே போகலாமென்ன; அவனே விரோதிகளைக் கழிக்கவல்லனென்கிறாரென்று ஸங்கதி.

"தேனுனது இனிதாக முரல" என்று சப்தார்த்தமாய், அத்தால் பலிதம் (மதுபாநத்தைப்பண்ணி ஆளத்திவைக்க) என்று. ... ... ... (ச)

(க) தி-வாய்-அ-உ-அ.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கவ்வை யித்யாதி) கவ்வையை யுடைத்தாய், பெரிய ஆரவாரத்தையுமுடையதாய், திரள் திரளான ஆனை அணிகளையுடைய ராஜாக்களானவர்கள் முடியும்படியாகப் பெருமிடுக்கை யுடைத்தாய், பாரதத்திலுள்ள தேரைப்பாண்டவர்களுக்காக யுத்தத்திலே நடத்தினவன் வர்த்திக்கிற ஊர்போலும். "முடிகுநிவார் ஆரோ?" என்றிருக்குமாயிற்றுத் தாழ்வுசெய்து திரிகைக்கு. (மையித்யாதி) அஞ்ஜநத்தால் அலங்க்ருதமாய், உஜ்ஜ்வலமாகாநின்றுள்ள கண்ணையுடையாரான ஸ்த்ரீகளுடைய பேச்சை புத்திபண்ணி அப்படியே நமக்கு வரவேணுமென்று கோவைப்பழம் போலே சிவந்த அதரத்தை யுடைத்தான கிளிகளானவை அவர்கள் பேச்சை அப்ப(ஸ்ய)ஸியாநின்றுள்ள திருக்குறுங்குடியே. .... (ரு)

மூ;—தீநீர்வண்ணமாமலர்கொண்டு விரையேந்தித்
தூநீர்பரவித்தொழுமின்னெழுமின் தொண்டர்காள்
மாநீர்வண்ணர் மருவியுறையுமிடம்வானில்
கூனீர்மதியைமாடம் தீண்டுங்குறுங்குடியே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டர்காள் | கைங்கர்ய ருசியை யுடையவர்களே? | விரை | பரிமள த்ரவ்யங்களை |
| தூ நீர் | தூய்மையை யுடைய நீங்கள், | ஏந்திகொண்டு | தரித்துக்கொண்டும் |
| தீ | (தூபத்துக்காக) அக்நியையும் | பரவி | (எம்பெருமானை) ஸ்துதித்து |
| நீர் | (அர்க்யத்துக்காக)தீர்த்தத்தையும் | தொழுமின் | அஞ்ஜலிபண்ணினவர்களாய், |
| வண்ணம் | நாநாவர்ணமுடைய | எழுமின் | உஜ்ஜீவிக்கபாருங்கோள்; |
| மாமலர் | ஸ்லாக்யமானபுஷ்பங்களையும் | வானில் | ஆகாசத்தில் |
| | | கூன் நீர் | வளைவை ஸ்வபாவமாக வுடைய |
| | | மதியை | சந்த்ரனை |
| | | தீண்டும் | ஸ்பர்ஸிக்கும்படியான |

அநு.—அஞ்சாம்பாட்டு. (கவ்வையித்யாதி) பிராட்டிக்காக ராவணனை நிரஸித் தானத்தனே; அத்தைக்கொண்டு நம் விரோதியைக் கழிப்பானென்னப்போமோ என்ன; தன்னை ஆச்ரிதர் இட்ட வழக்காகக் கீழே தொழில் செய்தபடி பாருங்கோளென்கிறுனென்று ஸங்கதி.

"கலி" என்றதினர்த்தம் (மிடுக்கை)என்றபடி. தான் * வண்டுவராவதிமன்னனுயிருந்து மன்னர்களுடைய நடுவே சில மன்னர்க்குத் தேர்ப்பாகனுகக் கூடுமோவென்ன; (முடியித்யாதி). ... ... ... ... (ரு)

| | | | |
|---|---|---|---|
| மாடம் | க்ருஹங்களையுடைய குறுங்குடியே, | வண்ணர் | வடிவையுடைய வெம் |
| | | மருவி | விரும்பி [பெருமான் |
| மாநீர் | கடல்போலே (ஶ்ரமஹரமான) | உறையும் | நித்யவாஸம்பண்ணுகிற |
| | | இடம் | தேசமாயிராநின்றது. |

வ்யா.—ஆறும்பாட்டு. (தூநீரித்யாதி) தூபதீபங்களுக்கு அக்நி, அர்க்க்யாதிகளுக்கு ஜலம், நாநாவிதமான புஷ்பம்இவற்றோடே கூட கந்த(க்ஷ)த்ரவ்யமானசந்தநம், இப்படி ஸமாராதநோபகரணங்களைத் தரித்துக்கொண்டு அதிகாரிகளான நீங்கள் அடைவுகெடஏத்தி அஞ்ஜலியைப்பண்ணி உஜ்ஜீவித்துப்போகப் பாருங்கோள். அதிகாரிகளாய் அநந்யப்ரயோஜநராய் கைங்கர்யருசியுடையநீங்கள். (மாநீர் வண்ணரித்யாதி) கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவன், அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம்பண்ணுகிறதேசம். ஸ்வர்க்கத்தில் வளைவைஸ்வபாவமாகவுடைய சந்த்ரன் இருக்க, அவன்மேலே விழுந்து தீண்டும்படியான ஓக்கத்தையுடைத்தாயிருக்குமாயிற்று அங்குத்தை மாடங்கள். .... .... (கூ)

மூ;—வல்லிச்சிறுநுண்ணிடையாரிடை நீர்வைக்கின்ற
அல்லல்சிந்தைதவிர அடைமினடியீர்காள்
சொல்லில் திருவேயனையார்கனிவா யெயிறொப்பான்
கொல்லைமுல்லை மெல்லரும்பீனும் குறுங்குடியே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அடியீர்காள் | அவனுக்கே தாஸபூதரானவர்களே! | நுண் | ஸூக்ஷ்மமான |
| வல்லி | கொடிபோல் | இடையார் | மத்ய ப்ரதேசத்தையு |
| சிறு | நேரிதாய் | இடை | டைய ஸ்த்ரீகள் பக் |
| | | நீர் | நீங்கள் [கல் |

அ.—ஆறும்பாட்டு. (தூநீரித்யாதி) நாங்கள் அங்கேவந்து செய்யுமதென்னென்ன வருளுகிறாரென்று ஸங்கதி.

"வண்ணமாமலர்" என்றதுக்கு நாநாவர்ணமான மலர் என்றருளுகிறார் (நாநாவித்யாதி). "தூநீர்"-தூய்மையையுடையநீங்கள் என்று சப்தார்த்தமருளுகிறார் (அதிகாரிகளான நீங்கள்) என்று. "தூநீர்" என்றத்தைக்கடாக்ஷித்து, "தொண்டீர்காள்" என்றதுக்குத்தாத்பாயம்(அதிகாரிகளித்யாதி). "கூன்" என்றத்தால் வளைவாய், அத்தாலே மண்டலாகாரத்தைச் சொல்லுமென்றருளுகிறார் (ஸ்வர்க்கத்திலித்யாதி). ... ... ... ... ... (கூ)

| | | | |
|---|---|---|---|
| வைக்கின்ற | வைக்கிற | வாய் | அதரத்தினருகே (ப்ரகாசியாநின்ற |
| அல்லல் | து꞉க்காவஹமான | எயிறு ஒப்பான் | தந்தபங்க்திகளோடு ஸத்ருஶமாக |
| சிந்தை | மநோரதத்தை | கொல்லை | கொல்லைகளிலிருக்கிற |
| தவிர | தவிர்த்து, | முல்லை | முல்லைக்கொடிகள் |
| சொல்லில் | (அங்குள்ள ஸ்த்ரீகளின் வடிவழகைச்) சொல்லப் பார்க்கில் | மெல் | ஸுகுமாரமான (ம்ருதுவான |
| திருவேயனையார் | ஸாக்ஷால் லக்ஷ்மியோடொப்பாரானஸ்த்ரீகளுடைய | அரும்பு | பூவரும்புகளை [வான |
| கனி | கோவப்பழம்போன்ற | ஈனும் | உண்டுபண்ணுகின்ற |
| | | குறுங்குடியே | திருக்குறுங்குடியையே |
| | | அடைமின் | சென்றடையுங்கள். |

வ்யா;—ஏழாம்பாட்டு. (வல்லியித்யாதி) கொடிபோலே நேர்தாய், நுண்ணிதான இடையையுடைய ஸ்த்ரீகள்பக்கல் நீங்கள்வைக்கிற து꞉க்காவஹமான மநோரதத்தைத்தவிர, முதலிலேகிடையாமையாய், அலாபத்தால்வரும் க்லேசம் பொறுக்கவொண்ணாதாய், அதுதான் அப்ராப்தமாய், மேல்நரகத்துக்கு உறுப்பாயிருக்க, சேஷித்தது ஜந்மாதிகளுக்கு ஹேதுவாயிருக்கிற விஷயங்களைப் பற்றியிருக்கிற மநோரதத்தைத் தவிர்த்து அவனுக்கே அடியோமென்றிருக்கிற நீங்கள் அவன்வர்த்திக்கிற ஊரைச்சென்றடையுங்கோள்.

(சொல்லில் திருவேயனையார்) இவ்வருகேயுள்ளாளொருத்தியை ப்ரதாநமஹிஷியோடொக்கச் சொல்லவொண்ணாதிறே. அத்தைப் பொறுத்து வடிவழகைக்கொண்டுசொல்லப்பார்க்கில் ஸாக்ஷால் லக்ஷ்மியோடொக்கச்சொல்லலாம்படி யிருப்பார்களாயிற்று. அவர்களுடைய சிவந்த அதரத்திலேயுண்டான எயிறுண்டு - தந்தபங்க்தி, அத்தோடொக்கவேணுமென்று பார்த்து. (கொல்லை முல்லை மெல்லரும்பீனும்) ஊரில் கொடியினுடைய தந்தபங்க்தியைக் கண்டு

---

அரு.—ஏழாம்பாட்டு. (வல்லியித்யாதி) நீர் எங்களை தூநீர் என்று விசேஷியாநின்றீர், எங்களுக்கு அத்தனை தூய்மையுண்டோவென்று அவர்கள் இருக்க, அதுக்கடி - விஷயப்ராவண்யமன்றோ அத்தை விடுங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

“சொல்லில்” என்கிற யதி (௬) பதத்துக்குத்தாத்பர்யம் (இவ்வருகேயித்யாதி). ... ... ... ... ... ... ... (எ)

வாறே கொல்லையில் கொடியும் அப்படியாக வேணுமென்று மெல்லரும்பை உண்டாக்குமாயிற்று. .... .... .... .... (எ)

மூ;—நாராரிண்டைநாண்மலர்கொண்டு நம்தமர்காள்
ஆராவன்போ டெம்பெருமானூ ரடை மின்கள்
தாராவாரும் வார்புனல்மேய்ந்து வயல்வாழும்
கூர்வாய்நாரைப் பேடையொடாடும் குறுங்குடியே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நம்தமர்காள் | நம்மோடு ஒருஸம்பந்தமுடையீர்களே (நீங்கள்) | வயல் | அந்தவயல்களிலே |
| | | வாழும் | வர்த்தியாநின்றுள்ள |
| நார் | நாரிலே | கூர் | கூரியதான |
| ஆர் | நெருங்கக்கோக்கப்பட்ட | வாய் | வாயலகையுடைத்தா |
| இண்டை | மாலைகளையும், | நாரை | நாரைப்பக்ஷியானது[ன |
| நாள்மலர் | புதுபுஷ்பங்களையும் | பேடையோடு | பத்நியுடன் (ஸம்ஶ்லேஷித்து, அந்த ஹர்ஷத்தால்) |
| கொண்டு | ஏந்திக்கொண்டு | | |
| ஆராஅன்போடு | பரபக்தியுக்தராய்க்கொண்டு, [கள் | ஆடும் | ஆடாநின்றுள்ளதாய், |
| தாரா | "தாரா" என்கிற பக்ஷி | எம்பெருமான் | நமக்கு ஸ்வாமியானவனுடைய |
| ஆரும் | நெருங்கியிருப்பதான | | |
| வார்புனல் | ஜலஸம்ருத்தியையுடையநிலங்களிலே | ஊர் | திவ்யதேசமான |
| | | குறுங்குடியே | திருக்குறுங்குடியை |
| மேய்ந்து | மேய்ந்து, | அடைமின்கள் | சென்றடையுங்கள். |

வ்யா;—எட்டாம்பாட்டு. (நாராரித்யாதி) நாரிலேசெறியத்தொடையுண்டமாலை. (நாண்மலர்) தொடையுண்ணுத செவ்விப்பூ; அன்றிக்கே மாலையான செவ்விப்பூஎன்னுதல்; (நந்தமர்) நம்மோடொரு ஸம்பந்தமுடையநீங்கள் பரபக்தியுக்தராய்க்கொண்டு வருத்தஸ்வாமியானவனிருக்கிற தேசத்தைச் சென்றடையுங்கோள்; (தாராவித்

---

அ௩;—எட்டாம்பாட்டு. (நாராரித்யாதி) விஷயப்ராவண்யங்களைவிட்டுக் கைங்கர்யங்களைப் பண்ணச்சொல்லாநின்றீர்; எங்களுக்குத் தத்பரதையுண்டாம்படி என்; அவன்றான் எங்களைக்கொண்டு ஸ்வீகரிக்கும்படிதானென்னென்ன; அந்த கைங்கர்யத்துக்கு உபயுக்தமான ப்ரீதியாலே பண்ணுங்கோள், தத்பரதை ஸித்திக்கும்; நம்முடைய ஸம்பந்தத்தால் அவனும் ஸ்வீகரிப்பனென்று ஸங்கதி.

யாதி) தாராக்கள் நெருங்கி ஜலஸம்ருத்தியை யுடைத்தான நிலங்களிலே மெய்ந்து அந்தவயலிலே வர்த்தியாநின்றுள்ள கூரியவாயலகை யுடைத்தான நாரையானது தன்பேடையோடே ஸம்ஶ்லேஷித்து அந்தஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஆடாநின்றுள்ள குறுங்குடியே. .... .... .... .... .... .... .... (அ)

மூ.—நின்றவினையும் துயரும்கெட மாமலரேந்திச்
சென்றுபணிமி னெழுமின் தொழுமின் தொண்டர்காள்
என்றுமிரவும் பகலும் வரிவண்டிசைபாடக்
குன்றின்முல்லை மன்றிடைநாறும் குறுங்குடியே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டர்காள் | கைங்கர்ய ருசியுடையீர்களே? (நீங்கள்) | குன்றின் | பர்வதங்களி லிருக்கிற |
| நின்றவினையும் | ஸஞ்சித பாபங்களும் | முல்லை | முல்லைபுஷ்பங்கள் |
| துயரும் | து:க்கஜநகமானப்ராரப்த பாபங்களும் | மன்றிடை | வெளிநிலமடைய |
| கெட | நஶிக்கும்படியாக | நாறும் | கமழாநிற்பதுமான |
| மாமலர் | அப்போதலர்ந்த ஶ்லாக்க்யமான புஷ்பங்க | | குறுங்குடியே |
| ஏந்தி | தரித்துக்கொண்டு[ளை | சென்று | கிட்டி (அந்த எம்பெருமானை) |
| என்றும் | எக்காலத்திலும், | பணிமின் | ப்ரணமம்பண்ணுங்கோள்; (அதனால்) |
| இரவும்பகலும் | ராத்ரியும்பகலும் | எழுமின் | உஜ்ஜீவிக்கப் பாருங்கோள்; |
| வரி | (மதுபானமத்தமாய்) அ | தொழுமின் | அஞ்ஜலியைப் பண்ணுங்கோள்; (கூ) |
| வண்டு | வண்டுகள் [ழகிய | | |
| இசைபாட | கானம்பண்ணாநிற்பதாய்; | | |

வ்யா.-ஒன்பதாம்பாட்டு. (நின்றவினையுமித்யாதி) ப்ரபலகர்மப்ரதிபத்தமாய்க்கொண்டு அது சமைந்தால் அநுபவத்திலே இழிகைக்கு

( தாராக்கள் ) பக்ஷி விசேஷங்கள். ... ... ... ... (அ)

அ:—ஒன்பதாம்பாட்டு. (நின்றவித்யாதி). உம்முடையஸம்பந்தத்தாலே ஆஶ்ரயணம் ஸ்வீகரிக்கும்; ப்ரீதிபூர்வகமாக கைங்கர்யங்களைப் பண்ணுங்கோளென்று சொல்லாநின்றீர்; ஸஞ்சிதங்களாயும்ப்ராரப்த(ங்க)ங்களாயுமிருக்கிற கர்மங்கள் கிடக்க, அது ஸித்திக்குமோவென்ன; (க)“ போயபிழையும் புகுதருவாநின்றனவும் தீயினில் தூசாகும்” என்கிறபடியே தன்னடையே நசித்துப்போமென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி.

(க) திருப்பாவை-டு.

அவஸரம்பார்த்து நிற்கிறபாபம். (துயரும்) அங்ஙனென்றால் ப்ரதிபத்தமன்றிக்கே அப்போது அநுபவிக்கிறபாபம். இவை நசிக்கும்படியாகச் செவ்விப் பூக்களைத் தரித்துக்கொண்டு சென்று தீர்க்கப்ரணாமத்தைப் பண்ணுங்கோள்; உஜ்ஜீவித்துப் போகப் பாருங்கோள்; அஞ்ஜலியைப் பண்ணுங்கோள்; * வழுவிலாவடிமைசெய்ய வேண்டுமென்றிருக்கும்நீங்கள். (என்றுமித்யாதி) இரவுபகலென்று வாசியின்றிக்கே என்றுமொக்க மதுபாநத்தைப் பண்ணிவந்த பௌஷ்கல்யம் வடிவிலேதோற்றவிருக்கிற வண்டானது உள்ளுபுக்கத்ரவ்யம் இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே இசைபாட. (குன்றின் முல்லை மன்றிடைநாறும்குறுங்குடியே) அதுதனக்கென்னத்தேடிப் போகவேண்டாதேஇருந்திடத்தேவந்துகந்தி(Xல)யாநிற்குமாயிற்று.

மூ;—சிலையாலிலங்கை செற்றான் மற்றோர்சினவேழம்
கொலையார்கொம்பு கொண்டான்மேய குறுங்குடிமேல்
கலையார்பனுவல்வல்லான் கலியனொலிமாலை
நிலையார்பாடல் பாடப் பாவம் நில்லாவே. (க0)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சிலையால் | அம்புகளாலே | மேய | நித்யவாஸம்பண்ணுகிற |
| இலங்கை | லங்கையை | குறுங்குடிமேல் | திருக்குறுங்குடிவிஷயமாய் |
| செற்றான் | அழித்தவனாய், | கலை | ஶாஸ்த்ரோக்த லக்ஷணங்களால் |
| மற்று | மேலும், | ஆர் | பூர்ணமான |
| கொலையார் | ஹிம்ஸித்துக்கொண்டு திரிகிறதாய் | பனுவல் | கவிகளை |
| சினம் | மிக்க கோபமுடையதான | வல்லான் | பாடவல்லரான |
| ஓர்வேழம் | ஒரு குவலயாபீடத்தினுடைய | கலியன் | ஆழ்வார் |
| கொம்புகொண்டான் | தந்தங்களை முறித்தவனுமான எம்பெருமான் | ஒலி | ஒலியை யுடைத்தாக அருளிச்செய்தவையாய், |
| | | மாலை | சப்தஸந்தர்பருமாய், |

துயர் - துஃக்கமாய், தத்தே(ஹே) துவானப்ராரப்தத்தைச் சொல்லுகிறதென்றருளுகிறார் (அங்ஙனித்யாதி). ... ... ... ... ... (க)

அரு;—பத்தாம்பாட்டு. (சிலையித்யாதி) "சிலையால்" என்று விசேஷித்தது

| | | | |
|---|---|---|---|
| நிலைஆர் | (யுக்த்யாபாஸங்களால் அழிக்கவொண்ணாத) நிலை பெற்றதுமான | பாட | அஹ்ருதயமாய்ப்பாட |
| | | பாவம் | (புத்திபூர்வகமாகப்பண்ணின) பாபங்களும் |
| பாடல் | இப்பத்துப்பாட்டையும் | நில்லாவே | இருக்கமாட்டா. |

வ்யா;—பத்தாம்பாட்டு. (சிலையித்யாதி) தேவதைகளுடைய வரபலத்தாலே அழியாதஊரை அம்பாலே அழியச்செய்தவன். அங்ஙன் ஓராயுதமுமின்றிக்கே,வெறுங்கையுடனேபோய்,மிக்கசினத்தையுடைத்தாய்க் கொன்றுகொடுதிரிகிற குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேநமுறித்து, அவ்விரண்டவதாரத்திலும் பிற்பட்டார்க்கும் இழக்கவேண்டாதபடி நித்யவாஸம்பண்ணுகிற திருக்குறுங்குடியின்மேலே. (கலையித்யாதி) ஸாஸ்த்ரோக்தமான லக்ஷணத்தில் ஒன்றும் குறையாதபடி கவிபாடவல்லரான ஆழ்வார் ஒலியை யுடைத்தாக அருளிச்செய்த. (நிலையார்பாடல்பாட) யுக்த்யாபாஸங்களால் அழிக்கவொண்ணாதபடியான திண்மையையுடைய இத்தை. (பாடப்பாவம் நில்லாவே) இத்தை அஹ்ருதயமாகச் சொல்ல புத்திபூர்வகமாகப்பண்ணின பாபங்கள்போம். .... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



## பெரியதிருமொழி
## ஒன்பதாம்பத்து ஆறாந்திருமொழி முற்றிற்று.



ஆழ்வார் திருவடிகளேசரணம்.



## ஒன்பதாம்பத்து ஏழாந்திருமொழி
### தந்தை தாய் ப்ரவேசம்

வ்யா.—"வல்லிச்சிறுநுண்ணிடையாரிடைநீர் வைக்கின்ற அல்க்குத் தாத்பர்யம் (தேவதைகளித்யாதி). ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.



அ;—தந்தை தாயின் ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே அநுகூலரையும் கூட்டிக்கொண்டு போகவல்லராயிருந்தவர், இத்திருமொழியில் ப்ராப்யாந்தரங்களில் தண்மையை அநுஸந்திக்க ஸங்கதியென்னென்னும் ப்ரஶ்நத்திலே ஸங்கதியருளுகிறார் (வல்லியித்யாதி). தம்மளவிலே கார்யகரமானமை

லல் சிந்தைதவிர அடைமின்" என்று பரோபதேசத்துக்கு உறுப்பாக இதரவிஷயங்களின் தண்மையை அநுஸந்தித்தார். அது தம்மளவிலேயாயிற்று. பிறர்க்கு உபதேசிக்கைக்கு நாம் தாம் இதில் நின்றநிலையென்னென்று தமமைப்பார்த்தார். இன்னமும் ஸம்ஸார வாஸநை கழிந்ததில்லை. இழக்கைக்கு ஹேதுவான சரீர ஸம்பந்தம் இன்னமும் அநுவர்த்தியாநின்றது. போக்ய(ஸ்ரீ)மான விஷயங்கள் ஸந்நிஹிதமாயிராநின்றது. ஆனபின்பு நாம்இன்னமும்இதில்நின்றும் அழகிதாகக் கால்வாங்கினமைபோராது. நாம் இதில் நின்றும் மீண்டவளவு பார்த்து, நம்பேற்றுக்குத் தாம் முற்பாடனாய்க் கொண்டு மஹாபலியுடைய யஜ்ஞ வாடத்திலே தன்னுடைமை பெறுகைக்கு அர்த்தித்வமெல்லாம் தோற்றி நின்றாப்போலே திருவல்லவாழிலே வந்து நின்றானாயிற்று. ஸம்ஸார வாஸநை கழிந்ததில்லை. தேஹம் அஸ்த்திரமாயிராநின்றது. விஷயங்கள்ஸந்நிஹிதமாயிராநின்றது. ஐஶ்வர்யாதிகள் நிலைநில்லாதாயிராநின்றது. இவை இத்தனையும்தப்பி அவ்வருகுபட்டால் பாஹ்யகுத்ருஷ்டிகளாகிற விலக்கடிகள் தப்புகை சாலப்பணியுண்டாயிராநின்றது. இவை இப்படி தண்ணியவென்று புத்திபண்ணி இருந்தாயாகில் அவன் நித்யவாஸம் பண்ணுகிற திருவல்லவாழை வாயாலே சொல்லுவதாக 'நெஞ்சாலே மருவப்பார்" என்று திருவுள்ளத்தோடே கூடுகிறார்.

மூ.—தந்தைதாய்மக்களே சுற்றமென்றுற்றவர் பற்றிநின்ற
பந்தமார்வாழ்க்கையை நொந்துநீபழியெனக் கருதினையேல்
அந்தமாயாதியா யாதிக்கு மாதியாயாயனாய
மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெஞ்சே | மநஸ்ஸே ! | பற்றி நின்ற | பற்றிக்கொடு நிற்கிற |
| தந்தை | "தமப்பன் | பந்தமார் | பந்தகமான |
| தாய் | மாதா | வாழ்க்கையை | யாத்ரையை(ஜீவித்திருத்தலை) |
| மக்கள் | புத்ரர்கள் | | |
| சுற்றமே | உறவு முறையார் | நொந்து | வெறுத்து, (ஈஶ்வரஶேஷமான வஸ்துவுக்கு இது) |
| உற்றவர் | ஸம்பந்திகள்" | | |
| என்று | என்று | | |

யை உபபாதிக்கிறார் (பிறர்க்கித்யாதி).   ...

| | | | |
|---|---|---|---|
| பிழையென | அவத்யாவஹமென்று | ஆயனாய | (கார்யமத்யத்தில்) க்ருஷ்ணனாயவதரித்தவனுமான |
| கருதினாயேல் | புத்திபண்ணினையாகில், | மைந்தனார் | மிடுக்கனான ஸ்வாமியினுடைய |
| அந்தமாய் | (ப்ரளயத்தில்) லயஸ்த்தாநமாயும், | வல்லவாழ் | திருவல்லவாழென்கிற திவ்யதேசத்தை |
| ஆதியாய் | (ஸ்ருஷ்டி காலத்தில்) உத்பத்தி ஸ்த்தாநமாயும், | சொல்லுமா | சொல்லும்படி |
| ஆதிக்கும் | காரணாவஸ்த்தமானசித சித்துக்களுக்கும் | வல்லையாய் | ஸமர்த்தமாய் |
| ஆதியாய் | நிர்வாஹகனாயும், | மருவும் | பொருந்தப்பாராய். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (தந்தையித்யாதி) தமப்பன் தாய்புத்ரர்கள் உறவுமுறையார் ஸம்பந்திகளென்று இங்ஙனே பற்றிக்கொடு நிற்கிற பந்தகமான யாத்ரையை. (நொந்துநீ பிழையெனக் கருதினாயேல்) (க)"மாதா பிதா ப்ராதா - மாதாபிதா ப்ராதா" என்கிறபடியே அவனொருவனுமே ஸர்வவித பந்துவுமாயிருக்க ஸோபாதிகபந்துக்களை நிருபாதிக பந்துக்களாக நினைத்துப்போருகிற பந்தகமானயாத்ரையை அநுஸந்தித்து வெறுத்து ஈஶ்வரசேஷமான ஆத்ம வஸ்துவுக்கு இது அவத்யாவஹமென்று புத்திபண்ணினையாகில். (அந்தமாயித்யாதி)ஸர்வமும் உபஸம்ஹ்ருதமானவன்று இவற்றுக்கு லயஸ்த்தாநமாய், ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே உத்பத்திஸ்த்தாநமாய், காரணாவஸ்த்தமானசித சித்துக்களுக்கும் நிர்வாஹகனாய், கார்யமத்யே க்ருஷ்ணனாய்வந்தவதரித்தவன் நித்யவாஸம்பண்ணுகிற திருவல்லவாழை வாயாலே சொல்லும்படியாக நெஞ்சாலே நினைக்கப் பண்ணப்பாராய் நெஞ்சே யென்கிறார். (க)

மூ.—மின்னுமாவல்லியும் வஞ்சியும்வென்ற நுண்ணிடைநுடங்கும்
அன்னமென்னடையினார் கலவியை யருவருத்தஞ்சினாயேல்
துன்னுமாமணிமுடிப் பஞ்சவர்க்காகி முன்தூதுசென்ற
மன்னனார்வல்வாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே.

---

அரு;—முதற்பாட்டு. (தந்தையித்யாதி) "உற்றவர்" என்றதினர்த்தம்- (ஸம்பந்திகள் )என்றது; நிருபாதிக ஸம்பந்திகளையென்கை. "மக்களே" என்றவிடத்திலே ஏவகாரத்தை சுற்றமே என்றவிடத்தில் கூட்டி, "சுற்றமே உற்றவர்" என்றத்தால் தோற்றின வ்யாவர்த்த்யத்தையும் காட்டாநின்றுகொண்டு விவரிக்கிறார் (மாதாவித்யாதி). ... ... ... ... ... (க)

---

(க) [illegible]

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மின்னும் | மின்னலையும் | அஞ்சினையேல் | அச்சமுற்றாயாகில், |
| ஆவல்லியும் | அழகிய கொடியையும் | துன்னு | நெருங்கின |
| வஞ்சியும் | வஞ்சிக்கொம்பையும் | மாமணி | ஶ்லாக்யமான மணிகளால் செய்யப்பட்ட |
| வென்ற | தோற்பிக்கும்படியான | முடி | கிரீடங்களையுடைய |
| நுண் இடை | ஸூக்ஷ்மமான மத்ய ப்ரதேசமானது | பஞ்சவர்க்காகி | பஞ்சபாண்டவர்களுக்காக |
| நுடங்கும் | துவளும்படி இருப்பா[ராய், | முன் | முன்காலத்தில் [ன |
| அன்னம் | ஹம்ஸம்போலே | தூதுசென்ற | தூதனைச் சென்றவனு |
| மெல் | ம்ருதுவான | மன்னனூர் | ஸ்வாமியான எம்பெருமான் வர்த்திக்கிற |
| நடையினார் | நடையழகை யுடையரானஸ்த்ரீகளுடைய | வல்லவாழ் | சொல்லுமாவல்லையாய் |
| கலவியை | ஸம்ஶ்லேஷத்தை | மருவு | நெஞ்சே. (உ) |
| அருவருத்து | வெறுத்து | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (மின்னுமித்யாதி) மின்னும் அழகிய கொடியும் வஞ்சிக்கொம்பும் இவற்றைத்தோற்பிக்கும்படியான நேரிய இடையானது துவளும்படி இருப்பாராய், அன்னம்போலே ம்ருதுவான நடையையுடையரானஸ்த்ரீகளோட்டை ஸம்ஶ்லேஷமாகிறது சாலப்பொல்லாது. அநந்தரம் ஸ்நாநோபகரணம் கொண்டுபுகப்படவேண்டியிருப்பதொன்று; அத்தை அருவருத்தஞ்சினையாகில். (துன்னுமாவித்யாதி) நெருங்கின மணிகளாலே செய்யப்பட்டமுடியையுடையரான பாண்டவர்களுக்காக பண்டுதன்னைத் தாழவிட்டுத் தூதுபோன மேன்மையையுடையவர். நம்மையாரோ ஏவிக்கார்யம் கொள்வாரென்று வந்துநிற்கிற திருவல்லவாழை. .... .... .... (உ)

---

அநு.—இரண்டாம்பாட்டு. (மின்னுமித்யாதி) கீழ்ப்பாட்டில் பாக்யவசாலங்களை விட்டு ஸர்வவித பந்துவிருக்கும் தேசத்தைப்பற்றச் சொன்னீர்; வடிவழகாலே வசீகரிக்கவல்ல ஸ்த்ரீகளைவிடப் போகாமையாலே இப்படி செய்யப்போகிறதில்லை யென்ன; அந்த விஷயங்களின் தோஷத்தைக் கண்டு அருவருத்தாயாகில் ஸர்வஸுலபனிருக்கும் தேசத்தைச் சொல்லிலென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி.

"ஆவல்லி"-ஆவல்லியென்றும், அழகியதென்கிறார். ... ... (உ)

மூ;—பூணுலாமென் முலைப்பாவைமார் பொய்யினைமெய்யிதென்று
பேணுவார் பேசுமப்பேச்சை நீபிழையெனக்கருதினையேல்
நீணிலாவெண்குடைவாணனார் வேள்வியில் மண்ணிரந்த
மாணியார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே.

| பதம். | உரை. |
|---|---|
| பூணுலா | முக்தாஹாரம் தொடக்கமான ஆபரணங்களை யுடையதாய் |
| மெல் | (விரஹம்தாளாத) ஸௌகுமார்யமான |
| முலை | ஸ்தநங்களை யுடையரான |
| பாவைமார் | ஸ்த்ரீகளுடைய |
| பொய்யினை | பொய் வார்த்தைகளை |
| மெய்இதென்று | மெய்யென்று கொண்டு |
| பேணுவார் | ஆதரித்துப்போருமவர்கள் |
| பேசும் அப்பேச்சை | சொல்லும் வார்த்தையை |

| உரை. | பதம். |
|---|---|
| பிழை என | தப்பென்று |
| கருதினையேல் | புத்திபண்ணினையாகில், |
| நீணிலா | பரந்தநிலாவைப்போன்ற |
| வெண்குடை | வெளுப்பான குடையையுடைய |
| வாணனார் | நிர்வாஹகனான மஹாபலியினுடைய |
| வேள்வியில் | யாகத்திலே |
| மண் | மூவடி மண்ணை |
| இரந்த | யாசித்த |
| மாணியார் | ப்ரஹ்மசாரியான வாமனன் வர்த்திக்கிற |

வல்லவாழ்சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே. (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பூணுலாவித்யாதி) முக்தாஹாரம் தொடக்கமான ஆபரணங்களையுடைத்தாய், விரஹஸஹமல்லாத முலையையுடையரான ஸ்த்ரீகளுடைய பொய்யுண்டு; அவர்கள் ஆபாதப்ரதீதியில் ஸ்நேஹித்தார்களாகப் பண்ணிக்காட்டு மவற்றை மெய்யாகக்கொண்டு என்றுமொக்க மெய்யாயிருக்கும் பகவத்விஷயத்தைப்போலே ஆதரித்துக்கொண்டு போருகிறவர்கள் சொல்லும் வார்த்தையை நீ தப்பென்று புத்திபண்ணினையாகில், (நீணிலாவித்யாதி) நிலாப்பரந்தாப்போலே இருக்கிற வெண்கொற்றைக் குடையை யுடையனான மஹாபலியுடைய யாகத்திலேசென்று, தன்னதல்லாததொன்றை அர்த்திப்பாரைப்போலே பூமியை அபேக்ஷிக்க,

---

அ;—மூன்றாம்பாட்டு. (பூணுலாவித்யாதி) ஸ்த்ரீகளுடைய போக்யதையிலே துவண்டவர் ரஸிகராயிருப்பார், அதிலே மூட்டினால் அருவருத்திருக்கக் கூடுமோவென்ன; அவர்கள் பேச்சுப் பொய்யென்றெண்ணினையாகில் அத்தைவிடலாமென்கிறாரென்று ஸங்கதி.

"வாணனார்" என்றது நிர்வாஹகரென்றாயருளுகிறார் (மஹாபலி)என்று. (௩)

இரப்பிலே தகணேறினவடிவை யுடையவர் தம்முடைய அர்த்தித்வம்தோற்றவந்து நிற்கிற திருவல்லவாழை. .... .... (௫)

மூ;—

பண்ணுலாமென்மொழிப்பாவைமார் பணைமுலையணைதுமென்று
எண்ணுவாரெண்ணமதொழித்து நீபிழைத்துய்யக் கருதிணேயேல்
விண்ணுளார்விண்ணின்மீதியன்றவேங்கடத்துளார்வளங்கொள்முந்
வண்ணனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே. [நீர்

| பதம். | உரை. |
|---|---|
| பண்ணுலா | சீர்மை மிக்கிருந்துள்ள |
| மெல் | ம்ருதுவான |
| மொழி | பேச்சையுடைய |
| பாவைமார் | ஸ்த்ரீகளுடைய |
| பணை | நெருங்கின |
| முலை | ஸ்தநங்களை |
| நாம் | நாம் |
| அணைதும்என்று | அணையக்கடவோமென்று |
| எண்ணுவார் | மநோரதிக்குமவர்களுடைய |
| எண்ணமது | எண்ணத்தை |
| ஒழித்து | தப்பி |
| பிழைத்துஉய்ய | உஜ்ஜீவித்துப்போக |

| பதம். | உரை. |
|---|---|
| கருதிணேயேல் | அபேக்ஷித்தாயாகில், |
| விண்ணுளார் | நித்யஸூரிகளுக்கு |
| விண்ணின்மீது | பரமபதத்திலே |
| இயன்ற | (காட்க்ஷி)கொடுத்துக்கொண்டிருப்பாராய்; |
| வேங்கடத்து | திருவேங்கடமாமலை |
| உளார் | வர்த்திக்கிறவராய் [யில் |
| வளம்கொள் | வளமையை யுடையதான (தர்மமீய |
| முந்நீர் | கடல்போன்ற [மான) |
| வண்ணனார் | வடிவையுடையரான எம்பெருமான் வர்த்திக்கிற |
| வல்லவாழ் | சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே. (௬) |

வ்யா.—நாலாம்பாட்டு. (பண்ணுலாவித்யாதி) பண்மிக்கிருந்துள்ள ம்ருதுவான பேச்சையுடையரான ஸ்த்ரீகளுடைய நெருங்கின முலைகளோடே அணையக்கடவோமென்று மநோரதிக்குமவர்

அரு;—நாலாம்பாட்டு. (பண்ணுலாவித்யாதி) பேணுவார் பேச்சைப் பிழை என்னும்படி எங்ஙனே; ஸ்த்ரீகளுடைய பேச்சின் மாதுர்யத்தாலே வசீக்ருதராயன்றோ அவர்கள் பேசுகிறதென்ன; அதென்? உக்திமாதுர்யமித்தனை போக்கி, ஹ்ருதயத்தில் ஈரமில்லாமையாலே அத்தை அறிந்தால் அவர்களுடைய பேச்சுப்பிழையென்னத்தட்டில்லையென்கிறதென்று ஸங்கதி.

களுடைய மனோரதத்தைத்தப்பி நீ உஜ்ஜீவித்துப்போகப் பார்த்தாயாகில். (விண்ணுளாரித்யாதி) நித்யஸூரிகளுக்குக் காட்சி கொடுத்துக்கொண்டு பரமபதத்திலே இருக்கிறவர், அத்தோடொரு போலியான ஒக்கத்தையுடைத்தான திருமலையிலே வர்த்திக்கிறவர், தர்ஸநீயமான கடல்போலே யிருக்கிற வடிவையுடையவர் வர்த்திக்கிற திருவல்லவாழை. அங்குள்ளுநிற்கிறவர் வடிவிருக்கிறபடி. .... (௪)

மூ;—

மஞ்சுதோய் வெண்குடைமன்னராய் வாரணம்சூழவாழ்ந்தார்
துஞ்சினுரென்பதோர்சொல்லை நீதுயரெனக் கருதினையேல்
நஞ்சுதோய்கொங்கைமே லங்கைவாய் வைத்தவள்நாளையுண்ட
மைந்தனுர்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சு | மேகபதத்தளவும் | நஞ்சு | விஷமானது |
| தோய் | வ்யாபரித்திருக்கிற | தோய் | நிறைந்திருந்துள்ள |
| வெண்குடை | வெண்கொற்றக்குடையை யுடையராய், | கொங்கைமேல் | (பூதனையின்) முலையின் மேலே |
| மன்னராய் | ராஜாக்களாய், | அம்கை | அழகிய கையையும் |
| வாரணம்சூழ | (த்வாரங்களில்) ஆனைகள் சூழும்படி | வாய் | வாயையும் |
| | | வைத்து | வைத்து |
| வாழ்ந்தார் | வாழ்ந்தவர்கள் | அவள் | அவளுடைய |
| துஞ்சினுர் என்பது | முடிந்தார்கள் என்கிற | நாளை | ஆயுஸ்ஸை |
| | | உண்ட | க்ரஸித்தவனுன |
| ஓர்சொல்லை | ஒருவார்த்தையை | மைந்தனுர் | சிறுவனுனக்ருஷ்ணன் வர்த்திக்கிற |
| நீ | நீ | | |
| துயரென | துக்கமென்று | வல்லவாழ்சொல்லுமா வல்லையாய் | |
| கருதினையேல் | புத்திபண்ணினையாகில், | மருவுநெஞ்சே. | (௫) |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (மஞ்சித்யாதி) மேகபதத்தளவும்

"பிழைத்துய்கை"-உஜ்ஜீவிக்கை. "வளம்" என்றதின்பலிதம் (தர்ஸநீய என்றது. ... ... ... ... ... ... ... ... (௪)

அரு;—அஞ்சாம்பாட்டு. (மஞ்சித்யாதி) கீழ் மூன்று பாட்டாலும் விஷயங்களின் தோஷத்தை அருளிச்செய்ய, ஐஶ்வர்யத்திலாசையுண்டாயிருக்க, திவ்யதேசத்தை மருவக்கூடுமோ வென்ன ; அதின் அஸ்த்தைர்யத்தை நினைத்தாயாகில் மருவலாமென்கிறுரென்று ஸங்கதி.

செல்ல ஓங்கின வெண்கொற்றக் குடையையுடையராய், திரள் திரளான ஆனையணியையுடையராய் வாழ்ந்த ராஜாக்கள் முடிந்தார்களென்று சொல்லிப்போருகிற வார்த்தையை நீகேட்கவென்று புத்தி பண்ணினையாகில். (நஞ்சித்யாதி) நஞ்சாலே நிறைந்திருந்துள்ள முலையின்மேலே அழகிய கையையும் வாயையும் வைத்து அவனுடைய ஆயுஸ்ஸைமுடித்த. (மைந்தனார்) விரோதிநிரஸநமே யாத்ரையாயிருக்கிறவர் வர்த்திக்கிற திருவல்லவாழை. .... .... (௫)

மூ;—

உருவினார்பிறவிசேரூன்பொதி நரம்புதோல் குரம்பையுள்புக்கு
அருவிநோய்செய்து நின்றைவர்தாம் வாழ்வதற்கஞ்சினாயேல்
திருவினார் வேதநான்கைந் துதி வேள்வியோடங்கமாறும்
மருவினார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| உருவின் | ஸூக்ஷ்ம ஶரீரத்திலே |
| ஆர் | பொருந்தின |
| பிறவி | ஜந்மத்திலே |
| சேர் | சேர்ந்ததுகளாய் |
| ஊன்பொதி | மாம்ஸத்தைப் பொதிந்து கொண்டுகிடக்கிற |
| நரம்புதோல் | நரம்புதோலாகிற |
| குரம்பையுள் | குடிசையுள் (ஸ்தூல ஶரீரத்தில்) |
| புக்கு | ப்ரவேசித்து, |
| அருவி | (எனக்குரித்தானவிஷயத்தைக் காட்டு என்று) பாதித்து |
| நோய்செய்து நின்ற | க்லேஶப்படுத்தா நின்றவைகளான |
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்கள் |
| தாம்வாழ்வதற்கு | தாங்களே வாழ்வதற்கு (அதன்பாதகத்துக்கு) |
| அஞ்சினாயேல் | பயப்பட்டாயாகில் |
| திருவின் ஆர் | நித்யநிர்தோஷத்வாதிகளாலே பூர்ணமான |
| வேதம்நான்கு | நாலுவேதங்களென்ன, |
| ஐந்துதீ | பஞ்சாக்நிகளென்ன, |
| வேள்வியோடு | பஞ்சமஹாயஜ்ஞங்களோடு |
| அங்கம்ஆறும் | ஆறங்கங்களென்ன இவைகளையே |
| மருவினார் | யாத்ரையாக வுடையராயிருப்பார் வர்த்திக்கிற |
| வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே. | (௬) |

"நாளே" என்றதினர்த்தம் (ஆயுஸ்ஸை) என்றது. ... ... (௫)

அ௬;—ஆறும்பாட்டு. (உருவினாரித்யாதி) கீழ்ப்பாட்டில் ஐஶ்வர்யத்தின் நிலை நில்லாமையைச் சொல்லா நின்றீர்; இந்த்ரியங்கள் தனக்கடைத்த

வ்யா;—ஆறும்பாட்டு. (உருவின்றித்யாதி) நித்யமான ஆத்ம வஸ்துவுக்கு ஜந்மமாகிறது ஸூக்ஷ்ம சரீரத்தோடேகூட ஸ்தூல சரீரத்திலே ப்ரவேசிக்கை. தேஹஸம்ச்லேஷ ரூபமான ஜந்மத்தோடே மாம்ஸத்தைப் பொதிந்து கொண்டிருக்கிற நரம்புதோலாகிற சரீரத்தை ப்ரவேசித்து "எனக்கடைத்த விஷயத்தைக்காட்டு" என்று. க்லேசிப்பிக்கிற ஶ்ரோத்ராதிகளுடைய குறும்புக்கஞ்சினையாகில். (திருவித்யாதி) ப்ராமாண்ய லக்ஷணங்களாலே குறைவற்றிருக்கிற நாலுவகைப்பட்டவேதம், பஞ்சாக்நிகள், பஞ்சமஹா யஜ்ஞங்கள், அங்கங்களாறு, இவற்றை யாத்ரையாக வுடையராயிருப்பார் வர்த்திக்கிற திருவல்லவாழ.

மூ.—நோயெலாம்பெய்ததோராக்கையைமெய்யெனக்கொண்டுவா
பேயர்தாம்பேசும்பேச்சை நீபிழையெனக்கருதிறேயேல் [ளா
தீயுலா வெங்கதிர்த் திங்களாய் மங்குல்வானாகி நின்ற
மாயனார் வல்லவாழ் சொல்லுமாவல்லையாய மருவுநெஞ்சே.

---

விஷயங்களைத் தரச் சொல்லாநிற்க, நாம் திவ்ய தேசத்தை மருவ வழியென்னென்ன; அவற்றின் பாதைக்கஞ்சினையாகிலும், திவ்ய தேசத்தையே மருவ அடுப்பதென்கிறாரென்று ஸங்கதி.

"உரு" என்று-சரீரத்தைச்சொல்லி, மேலே "நரம்பு தோல் குரம்பை" என்றத்தாலும்-சரீரத்தைச் சொன்னால், புநருக்தியன்றோவென்னவருளுகிறார் (நித்யமானவித்யாதி). இத்தால் உரு என்று ஸூக்ஷ்ம சரீரத்தையும், குரம்பை என்றத்தால் ஸ்த்தூல சரீரத்தையும் சொல்லிற்றாகையாலே புநருக்தியில்லையாயிற்று. இன்-சாரியையாய், உருவிலே, ஆர்ந்த-பொருந்தின பிறவியிலே சேர்ந்ததுகளாய், ஊன் பொதிநரம்பு தோலான குரம்பையுள்-குடிசையுள், ஸ்த்தூல சரீரத்தில் புக்கு, அருவிநோய் செய்து நின்றதுகளாய், ஐந்து வகையான இந்த்ரியங்கள் தாங்களேவாழ்வதற்கு என்று சப்தார்த்தம். "திரு" நித்யநிர்தோஷத்வாதிகள். (பஞ்சாக்நிகள்) என்றது-பஞ்ச ப்ராணன்களாகிற அக்நிகளில் பண்ணும் ஆஹுதிகளென்கை. ... ... ... (௬)

அந;—ஏழாம்பாட்டு. (நோயெலாமித்யாதி) இந்த்ரியங்களுக்கு அஞ்சினையாகிலும் திவ்யதேசத்தை மருவச்சொன்னீர். தேஹத்தில் ஸ்த்திர த்வ புத்தியும் போக்யதா புத்தியும் நடவாநிற்க, அப்படியே பஹுஜநங்களும் வ்யவஹரிக்க, எனக்கு அதுபோய் திவ்ய தேசத்தை மருவும்படி என்னென்ன;

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நோய்எலாம் | எல்லாநோயையும் | கருதினையேல் | புத்திபண்ணினையாகில்; |
| பெய்தது | இட்டுப்பண்ணின | தீஉலா | ஜ்வாலையுடன் கூடிய |
| ஓர் ஆக்கையை | ஒருவிதமான இந்தச்சரீரத்தை | வெம்கதிர் | உஷ்ணகிரணனை ஸூர்யனாகவும், |
| மெய்எனக்கொண்டு | மெய்யென்றே எண்ணிக்கொண்டு | திங்களாய் | சந்த்ரனாகவும், |
| வாளா | வ்யர்த்தமாய் | மங்குல் | மேகஸஞ்சாரத்தையுடைய |
| பேயர் | அந்யதாஜ்ஞாநமுடையப்ராந்தர்கள் | வானாகி | ஆகாசமாகவும் |
| தாம் | தாங்கள் | நின்ற | நிற்கிற |
| பேசும்அப்பேச்சை | சொல்லும் அந்த வார்த்தையை | மாயனார் | ஆஶ்சர்ய பூ (பூ) தரான வர்வர்த்திக்கிற |
| நீ | நீ | | வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் |
| பிழைஎன | அஸத்யமென்று | | மருவு நெஞ்சே. (எ) |

வ்யா;—ஏழாம்பாட்டு. (நோயெலாமித்யாதி) நோ எல்லாவற்றையும் இட்டுப்பண்ணின இந்தஅஸ்திரசரீரத்தை மெய்யெனக்கொண்டு ஈஶ்வரனடியாக வந்த இச்சையாலேயாதல், அன்றிக்கே ஈஶ்வரேச்சையாலேயாதல் வரக்கடவதான அப்ராக்ருத சரீரத்தோபாதியாகநினைத்து வ்யர்த்தமே அந்யதாஜ்ஞாநயுக்தராயிருக்கிறவர் சொல்லிக்கொடு திரிகிற வார்த்தையை நீ அஸத்யமென்று புத்திபண்ணினையாகில், (தியித்யாதி) தீர்க்கவிப்பை ஆறுக்கைக்கீடாகஉஷ்ண கிரணனை ஆதித்யனாய், அவனால் வந்த தாபத்தை ஆற்றுகைக்கீடான தண்ணளியையுடைத்தான சந்த்ரனாய், மேகஸஞ்சாரத்தை

---

அது பொய் வார்த்தையென்று எண்ணினையாகில் மருவலாமென்கிறாரென்று ஸங்கதி.

(ஈஶ்வரனடியாக வந்தஇச்சையாலே) என்றது-தத்தநுகுணமான முக்தருடையஇச்சையாலேஎன்கை; இத்தால்(க)''ఏకధా దశధా చైవ శతధా చ సహస్రధా । అనేకధా స్వసంకల్పాదాత్తకింకరవిగ్రహః - ஏகதா தசதாசைவ சததாச ஸஹஸ்ரதா। அநேகதா ஸ்வஸங்கல் பாதாத்த கிங்கர விக்ரஹ:'' என்கிற விக்ரஹங்களைச்சொல்லிற்றாயிற்று. (ஈஶ்வரேச்சையாலேயாதல்)என்றது-கேவலபகவதிச்சையாலேயென்கை இத்தால்(உ)''పఞ్చోపనిషదాకారం విగ్రహం సుమనోహరమ్ । ప్రాప్య - பஞ்சோபநிஷதாகாரம விக்ரஹம் ஸுமநோஹரம। ப்ராப்ய'' என்று ப்ராதமிக முக்தவிக்ரஹத்தைச் சொல்லிற்றாயிற்று. ... ... (எ)

யுடைத்தான ஆகாசமாய் நிற்கிற ஆஸ்சர்ய பூதரானவர் கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி வந்து நிற்கிற திருவல்லவாழை.

மூ;—மஞ்சுசேர்வானெரிநீர் நிலம்காலிவை மயங்கிநின்ற
அஞ்சுசேராக்கையை யரணமன்றென்றுய்யக்கருதிறையேல்
சந்துசேர் மென்முலைப்பொன்மலர்ப்பாவையும் தாமும்நாளும்
வந்துசேர்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சுசேர் | மேகங்கள் ஸஞ்சரியா நின்றுள்ள | சந்துசேர் | சந்தநத்தாலே அலங்க்ருதமான |
| வான் | ஆகாஶமென்ன, | மென்முலை | ம்ருதுவான திருமுலைத் தடங்களை யுடைய |
| எரி | அக்நிஎன்ன, | | |
| நீர் | ஜலமென்ன, | பொன்மலர் | பொற்றாமரையை இருப்பிடமாகவு |
| நிலம் | பூமிஎன்ன, | | டைய |
| கால் | வாயுவென்ன [டு | | |
| இவை | இவைகளாய்க் கொண் | பாவையும் | பெரியபிராட்டி யாரும் |
| மயங்கிநின்ற | பஞ்சீக்ருதமாய்க்கூடி நின்ற | | |
| | | தாமும் | (அவளுக்குத் தகுதி யான) தாமும் |
| அஞ்சுசேர் | பாஞ்ச பௌதிகமான | | |
| ஆக்கையை | ஶரீரத்தை | நாளும் | தினந்தோறும் |
| அரணம் அன் றென்று | (நமக்கு) ரக்ஷகமாக மாட்டாதென்று | வந்துசேர் | கிட்டி வந்து வர்த்திக் கிற |
| உய்யக் கருதி றையேல் | உஜ்ஜீவிக்கப் பார்த்தா த்தாயாகில், | வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே. (அ) | |

வ்யா;—எட்டாம்பாட்டு. (மஞ்சித்யாதி) மேகங்கள் ஸஞ்சரியா நின்றுள்ள ஆகாசம், தேஜஃபதார்த்தம், ஜலதத்வம், பூமி, காற்று இவையாய்க்கொண்டு பஞ்சீக்ருதமாய் நின்ற உபச(ங்)யாத்மகமான சரீரத்தை இது நமக்கு ரக்ஷகமன்றென்று புத்திபண்ணி, பலவாய்க் கூடி ஒன்றானது தன்னடையே பிரிந்துபோமென்று பார்த்து உஜ்

அரு;—எட்டாம்பாட்டு. (மஞ்சித்யாதி) அவர்கள் பேயரென்கைக்கு நியாமகமென்னென்ன வருளுகிறாரென்று ஸங்கதி.

"இவை-மயங்குகின்றஅஞ்சுசேராக்கை"-இவையாய், மயங்கிக்கூடிக்கொண்டு நின்றபடியால், அஞ்சுவர்த்தியாநிற்கும் சரீரமென்று சப்தார்த்தமாய் தாத்பர்யம் (மேகேத்யாதி). "பாவையும்" என்ற ச(ஸ)காரத்தாலே ஸூசித

ஜீவிக்கப்பார்த்தாயாகில்; (சந்துசேர் மென்முலைப்பொன்மலர்ப் பாவையும்) போக்ய([illegible])தைகவேஷையாய், சந்தநத்தாலே அலங்க்ருதமாய், ம்ருதுஸ்வபாவமான திருமுலைத்தடங்களையுடையளாய், பொற்றாமரையை இருப்பிடமாகவுடையளான பெரியபிராட்டியாரும், அவனுக்குத்தகுதியானதாமும். (க) "[illegible]-ராகவோர்ஹதி வைதேஹீம்" என்னுமாபோலே. (நாருமித்யாதி) அவன்வரக்கடவ வழியெல்லாம் வந்து நின்றான்; வந்ததே யென்றொரு வார்த்தை சொல்லுமித்தனை நீ செய்யவேண்டுவது.

மூ;—வெள்ளியார் பிண்டியார் போதியா ரென்றிவரோதுகின்ற
கள்ளநூல் தன்னையும் கருமமன்றென் றுய்யக் கருதினையேல்
தெள்ளியார் கைதொழும் தேவனார் மாமுநீரமுது தந்த
வள்ளலார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெள்ளியார் | வெள்ளிமலையை இருப்பிடமாக வுடைய ருத்ரமத ப்ரவர்த்தகரானபாசுபதர், | கருதினையேல் | அபேக்ஷித்தாயாகில், |
| பிண்டியார் | ஆர்ஹதர், | தெள்ளியார் | ஸாராஸார விவேகஜ்ஞானவர்களாலே |
| போதியார் | பௌத்தர் | கைதொழும் | அஞ்ஜலி பண்ணப்படுமவரான |
| என்றிவர் | என்று சொல்லப்பட்ட இவர்கள் | தேவனார் | ஸ்வாமியாய், |
| ஓதுகின்ற | சொல்லிக் கொண்டு திரிகிற | மாமுநீர் | பெரிய கடலில் உண்டான |
| கள்ளநூல்தன்னையும் | கபடசாஸ்த்ரங்களையும் | அமுது | அம்ருதத்தை |
| கருமம்அன்றென்று | இதுநமக்கு கர்த்தவ்யமன்று என்று(எண்ணி) | தந்த | கொடுத்த |
| உய்ய | உஜ்ஜீவிக்க | வள்ளலார் | உதாரஸ்வபாவனுமான எம்பெருமான் வர்த்திக்கிற |

வல்லவாழ் சொல்லுமாவல்லையாய் மருவுநெஞ்சே. (கூ)

---

மானஅர்த்தம் (போக்யதைகவேஷையாய்) என்றது. "தாமும்" என்ற ச(உம்)காரத்தாலே லப்யார்த்தத்தை புத்திபண்ணும்ப்ரகாரத்தை விவரிக்கிறார் (அவனுக்கித்யாதி). ... ... ... ... ... ... ... (அ)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வெள்ளியாரித்யாதி) நீர் சரீரத்திலே அஸ்த்திரத்வாதிகளாலே போக்யதாபுத்தியைத் தவிர்ந்து திவ்ய தேசத்தை மரு

---

(க) ரா-ஸு-கசு-சு.

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (வெள்ளியாரித்யாதி) சுக்ரனைச் சொல்லுதல்; அன்றிக்கே வெள்ளிமலையை வாஸஸ்தாநமாகையு டைய ருத்ரனென்னுதல். அசோக வ்ருக்ஷத்தின் கீழே இருக்கக் கடவ ஆர்ஹதர், அரசின் கீழே இருக்கக்கடவ பௌத்தரென்று சொல்லப்படுகிற இவர்கள் கதறிக்கொடு திரிகிற. (கள்ளநூல் தன்னையும்)(க)"யதா ஹி சோரஸ் ஸ ததா ஹி புத்த:-யதா ஹி சோரஸ்ஸ ததா ஹி புத்த:" என்னக்கடவதிறே. இது நமக்குக் கர்த்தவ்யமன்றென்று உஜ்ஜீவிக்க விரகு பார்த்தாயாகில்.

(தெள்ளியாரித்யாதி) ஸாராஸாரவிவேக ஜ்ஞராயிருக்குமவர்கள் ஆஶ்ரயிக்க, அவர்களுக்கு ஆஶ்ரயணீயராயிருக்கிறவர். (உ) [ஸாராஸாரவிவேகஜ்ஞா:-ஸாராஸாரவிவேகஜ்ஞா:]ஸாராஸாரவிவேகஜ்ஞராகிறார்-நல்லத்தையும் தீயத்தையும் விவேகித்து, நல்லத்தைக்கைக் கொண்டு, தீயத்தைவிட்டிருக்குமவர்கள். [கரீயாம்ஸ:-கரீயாம்ஸ:]நல்லத்தைக் கைக்கொள்ளுந்தனை சீர்மையுடையவர்கள். [விமத்ஸரா:-விமத்ஸரா:] நன்மைகண்டால் பொறாமைகொண்டாடாதே யிருக்குமவர்கள். [ப்ரமாணதந்த்ரா: - ப்ரமாணதந்த்ரா:] கேவலதர்க்கங்கொண்டு அர்த்தநிர்ணயம் பண்ணுகையன்றிக்கே ப்ரமாணம்கொண்டு அர்த்த நிஶ்சயம்பண்ணுமவர்கள். (மாமுநீர முதுதந்தவள்ளலார்) தன்னையொழியவேறே ஒன்றை போக்யமாக நினைந்திருப்பார்க்கும் அத்தைச்கொடுக்கும் மஹோதாரன். (வல்லவாழித்யாதி) இவ்வம்ருதம் எனக்குவேண்டா வென்னுமைகிடாய்வேண்டுவது. .... (கூ)

---

வச்சொன்னீர்; கண்டவிடமெங்கும் பாஹ்யமத நிஷ்டரிருந்து ஸ்வஸித்தாந்தங்களை ப்ரவர்த்திப்பித்துக் கொண்டிருக்கையாலே நீர் சொன்னபடி திவ்ய தேசத்தையே மருவக்கூடுமோ வென்ன; அதென், ஸாராஸார விவேக ஜ்ஞாநமுண்டாகையாலே உனக்கு மருவக்கூடுமென்கிறாரென்று ஸங்கதி.

லோகாயதிகரைத்திருவுள்ளம்பற்றி தந்மதப்ரவர்த்தகரைச் சொல்லலாமென்கிறார் (சுக்ரனையித்யாதி). பாசுபதரை உட்கொண்டருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி).

"அமுதம் தந்தவள்ளலார்" என்று பதஸமபி வ்யாஹாரத்தைத் திருவுள்ளம்பற்றி மருவுதல்ஸாதாரணமென்றருளுகிறார் (இவ்வம்ருதமித்யாதி). (கூ)

---

(க) ரா-அ-கoக-எகூ. (உ)

மூ;—மறைவலார்குறைவிலாருறையுமூர் வல்லவாழடிகள்தம்மைச்
சிறைகுலாவண்டறைச்சோலைசூழ்கோலநீளாலிநாடன்
கறையுலாவேல்வல்ல கலியன் வாயொலியிவைகற்றுவல்லார்
இறைவராயிருநிலம்காவல்பூண்டின்பநன்கெய்துவாரே. (க0)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மறைவலார் | வேதார்த்தம் அறிந்தவராய் | ஆலி | திருவாலியை |
| குறைவுஇலார் | ஒருவிதகுறைவற்றிருக்கிற ப்ராஹ்மணர்கள் | நாடன் | நாடாகவுடையராய், |
| உறையும்ஊர் | வர்த்திக்கிற திவ்ய தேசமான | கறைஉலா | சத்ருக்களின் ரக்தக்கறையையுடைய |
| வல்லவாழ் | திருவல்லவாழிலெழுந்தருளியிருக்கிற[ய], | வேல் | வேலாயுதத்தை |
| அடிகள்தம்மை | ஸ்வாமிகள்விஷயமா | வல்ல | (நடத்துமதில்) வைகவந்தவரான |
| சிறை | சிறகுகளையுடைய | கலியன் | ஆழ்வார், |
| வண்டு | வண்டுகள் | வாய்ஒலி | ஒலியையுடையதாய் திருவாய்மலர்ந்தருளிய |
| குலா | குலாவாநிற்பதாய், | இவை | இப்பத்துப் பாட்டை |
| அறை | மற்றும் சொல்லுக் குறுப்பான நன்மையையுடைய | கற்றுவல்லார் | அப்யஸித்து வல்லவர்கள் |
| சோலை | பொழில்களாலே | இறைவராய் | பூமியில்நிர்வாஹகராய் ஆகி (பிறகு) |
| சூழ் | சூழப்பட்ட | இருநிலம் | நித்ய விபூதியையும் |
| கோல | அழகிய | காவல்பூண்டு | ஆண்டுகொண்டு |
| நீள் | நெடியதான | நன்கு இன்பம் | பரமாநந்தத்தை |
| | | எய்துவாரே | அடைவர்கள். (க0) |

வ்யா;—பத்தாம்பாட்டு. (மறையித்யாதி) வேததாத்பர்யம் கைப்பட்டிருப்பாராய்,மற்றும்அத்ருஷ்ட பரிகரங்களால் குறைவற்ருக்கிற ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருவல்லவாழில்நிற்கிறஸ்வாமிகளைக்கலிபாடிற்று.(சிறையித்யாதி)சிறகையுடைத்தாயிருக்கிறவண்டு

ஸ்ரீ.—பத்தாம்பாட்டு (மறையித்யாதி) சிறைவண்டுகுலாவா நிற்பதாய், அறை-மாற்ற முற்ற நிறைவையுடைத்தான சோலையென்று சப்தார்தமாக்கியருளுகிறார் (சிறகையித்யாதி). ... ... ... ... ... ... ... ... (க0)

ஜீயர்திருவடிகளே சரணம்.



களினுடைய கொண்டாட்டத்தையுடைத்தாயிருப்பதாய் மற்றும் சொல்லுக்கு உறுப்பான நன்மைகளெல்லாவற்றிலும் குறைவற்றிருக்கிற சோலைகளாலே சூழப்பட்டு தர்ஶநீயமாயிருக்கிற திருவாலிநாட்டையுடையராய், ப்ரதிபக்ஷநிரஸநத்வரையாலே கறைகழற்ற அவஸரமின்றிக்கே யிருக்கிற வேலைக் கையிலேயுடைய ஆழ்வார், ஒலியையுடைத்தாம்படி அருளிச்செய்த இத்தைக் கற்றுவல்லார், பூமிப்பரப்புக்கடைய தாங்களே நிர்வாஹகராய் தேஹஸமநந்தரம் நித்யவிபூதியிலே புக்கு (க) "ஏஷ ஹ்யேவாநந்தயாதி - ஏஷஹ்யேவாநந்தயாதி" என்கிறபடியே நிரதிசயாநந்த யுக்தராவர். .... .... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## ஒன்பதாம்பத்து ஏழாந்திருமொழி முற்றிற்று.

## ஒன்பதாம்பத்து எட்டாந்திருமொழி
### முந்துறப்ரவேசம்.

வ்யா.—திருவல்லவாழைச் சேரப்பாராய் என்றார் தம்திருவுள்ளத்தைப்பார்த்து; அது தம்முடைய த்வரைக்கீடாக ப்ரவர்த்தித்ததில்லை. "ஸர்வரக்ஷகனாய், அர்த்திதாருடைய ஸர்வப(ஃ)லங்களையும் கொடுக்கக் கடவனாய், ஸர்வாதிகனாய், விரோதி நிரஸந சீலனாய், பாஹ்யகுத்ருஷ்டிகளால் சலிப்பிக்க வொண்ணாத ஸ்வபாவத்தையுடையனாய், ஸர்வஸமாஶ்ரயணீயனாய்க்கொண்டு திருமலையிலேவந்து நின்றான்; நாம்அங்கேபோய்அநுபவிப்போம்; அதிலேஒருப்படு" என்று பிதாவானவன் முந்துற நமஸ்கரித்துக் காட்டிப் பின்னை ப்ரஜையை நமஸ்கரிக்கச் சொல்லுமாபோலே காட்சியிலே முற்பட்டு தம்திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். .... .... .... .... *

அரு:—முந்துறவின் ப்ரவேசம். கீழில் திருமொழியிலே "மருவு நெஞ்சே" என்று பலகாலுமருளிச்செய்தவர் இத்திருமொழியிலும் "வணங்கும் [illegible] நெஞ்சே" என்று உபதேசிக்கைக் கடியென்னென்னும் ப்ரஶ்நத்தில் [illegible] (திருவல்லவாழையித்யாதி). * முந்துற்ற நெஞ்சாயிருக்கச் செய்தேயும் அதின் த்வரையும் கூடப்போராத படியான அதித்வரையாலே [illegible] கருத்து. *

(க) தை-ஆ-எ-க.

மூ;—

முந்துறவுரைக்கேன் விரைக்குழல் மடவார்கலவியை விடு தடுமாறல்
அந்தரமேழுமலைகடலேழுமாய வெம்மடிகள் தங்கோயில்
சந்தொடுமணியுமணிமயில்தழையும் தழுவிவந்தருவிகள் நிரந்து
வந்திழிசாரல்மாலிருஞ்சோலை வணங்குதும் வாமடநெஞ்சே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| மடநெஞ்சே | பவ்யமான மனமே! |
| முந்துற | முன்னமே |
| உரைக்கேன் | ( ஒன்று ) (சொல்லுகிறேன் (கேள்); |
| விரை | பரிமளத்தை யுடையதான |
| குழல் | கேசபாரத்தை யுடையரான |
| மடவார் | ஸ்த்ரீகளுடன் |
| கலவி | ஸம்ஶ்லேஷமாகிற |
| தடுமாறலை | தடுமாற்றத்தை |
| விடு | விட்டுவிடு ; |
| அந்தரம்எழும் | ஸப்தத் வீபங்களையும் |
| அலைகடல் எழும் | ஸப்தஸமுத்ரங்களையும் |
| ஆய | (சரீரமாகவுடையரான |
| எம்அடிகள்தம் | நம்ஸ்வாமியினுடைய |

| பதம். | உரை. |
|---|---|
| கோயில் | திவ்யதேசமாய், |
| அருவிகள் | மலையருவிகளானவை |
| சந்தொடு | சந்தந மரங்களோடு |
| மணியும் | நல்ல ரத்நங்களையும், |
| அணி | அழகிதான |
| மயில்தழையும் | மயில்தோகைகளையும் |
| தழுவிவந்து | உருட்டிக்கொண்டு |
| நிரந்து | நெருங்கி |
| வந்துஇழி | வந்திழியா நின்றுள்ள |
| சாரல் | பர்யந்தத்தை யுடைத்தான |
| மாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையை |
| வணங்குதும் | வணங்குவோம் |
| வா | வா. (க) |

அவ.—முதற்பாட்டு; ப்ராப்தவிஷயத்தை வணங்கிலும் வணங்குகிறாய், தவிர்லும் தவிருகிறாய், இதரவிஷயங்களைமுந்துற முன்னம் விட்டுக்கொடுநிற்கப் பாராய் என்கிறார்.

வ்யா.—( முந்துறவித்யாதி ) உனக்குச் செய்யவேண்டுமதில் நான் முந்துறச் சொல்லுகிறது, பரிமளத்தையுடைத்தான குழலையுடையரான ஸ்த்ரீகளோட்டை ஸம்ஶ்லேஷத்தை நன்றென்று அதுகுவாலாக நினைத்திருக்குமத்தைவிட்டு. ( தடுமாறல் ) அலாபத்தாலே வரும் வ்யஸநம் பொறுக்கவொண்ணாதென்று அத்தை விடு. தடுமாற்றத்தைப் பண்ணுவது ஒன்றென்னுதல்; அன்றிக்கே கலவி

---

அரு;—முதற்பாட்டு. (முந்துறவித்யாதி) (தடுமாற்றத்தையித்யாதி) கலவி அர்த்தார்ஜந ஹேதுவாகையாலே க்லேசாவஹமென்று கருத்து. "கலவியாகிற தடுமாற்றத்தை விடு" என்று ஏகவாக்யதயா மூன்றுமர்த்தமருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி), நரகாவஹமாகையாலே க்லேசரூபமென்று தாத்பர்யம்.

யாகிற தடமாற்றமென்னுதல்; (அந்தரமித்யாதி) ஸப்த த்வீபங்களும், ஸப்த ஸமுத்ரங்களுமாய் நிற்கிற ஸர்வஸ்வாமி வர்த்திக்கிற தேசம்.

(சந்தித்யாதி) நல்லசந்தநத்தோடே கூடப் பெருவிலையனான ரத்நங்களையும், அந்தச்சந்தநமரங்களையும் வேரோடே பறித்து விழவிட்டுப் பெரிய ரத்நங்களையும் கூடக்கொண்டு தர்ஸநீயமான மயில் தழையையும் உருட்டிக்கொண்டு அருவிகளானவை நெருங்கி வந்திழியாநின்றுள்ள பர்யந்தத்தை யுடைத்தான திருமலையை வணங்குவோம் வா என்னோடே ஒருமிடறான நெஞ்சே. .... .... (௧)

மூ;— [யோர்
இண்டையும்புனலும் கொண்டிடையின்றி யெழுமினேதொழுதுமென்றிமை
அண்டரும்பரவவரவணைத்துயின்ற சுடர்முடிக் கடவுள்தம்கோயில்
விண்டலர்தூளி வேய்வளர்புறவில் விரைமலர்க் குறிஞ்சியின்நறும்தேன்
வண்டமர்சாரல் மாவிருஞ்சோலை வணங்குதும் வாமடநெஞ்சே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | மடநெஞ்சே! | சுடர் | (ஆதிராஜ்ய ஸூசகமாய்) ப்ரகாசியாநின்ற |
| இண்டையும் | நல்ல பூமாலையையும் | முடி | திருவபிஷேகத்தை யுடையரான |
| புனலும் | தீர்த்தத்தையும் | கடவுள் தம் | ஸர்வேஸ்வரனுக்கு |
| கொண்டு | கையில்தரித்துக்கொண்டு | கோயில் | வாஸஸ்தாநமாய், |
| இடையின்றி | க்ஷணகாலமும் இடைவிடாமல் | விண்டு அலர் | விட்டலரா நிற்பதாய், |
| எழுமினோ | உஜ்ஜீவிக்க ஒருப்படுங்கோள்; | தூளி | தூள்களை யுடையது |
| தொழுதும் | (நாம்) "ஆஸ்ரயிப்போம்" | வேய் | மூங்கில்கள் [மாய், |
| என்று | என்று சொல்லிக்கொண்டு | வளர் | வளராநின்றுள்ள |
| இமையோர் | நித்யஸூரிகளும் | புறவில் | பர்யந்தத்தில் |
| அண்டர் | அண்டாந்தர் வர்த்திகளானவர்களும் | விரை | பரிமளப்ரசுரமான |
| பரவ | ஆஸ்ரயிக்க | குறிஞ்சிமலரின் | குறிஞ்சிப் பூவினுடைய |
| அரவணை | திருவநந்தாழ்வானாகிற படுக்கையில் | நறும்தேன் | செவ்வியதானதேனில் |
| துயின்ற | திருக்கண் வளர்ந்தருளுகிறவனாய், | அமர் | அமர்ந்த |
| | | வண்டு | வண்டுகளையுடைய |
| | | சாரல்மாவிருஞ்சோலை வணங்குதும் வா. (௨) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (இன்னடையித்யாதி) நல்லபூமாலையும், ஸமாராதநத்துக்குப்ரதாநோபகரணமான ஜலமும், இவற்றைத் தரித்துக்கொண்டு இடைவிடாதே ஒருப்பட்டுக்கோள்; நாம் ஆஶ்ரயிக்கும்படியாகவென்று, நித்யஸூரிகளும் அண்டாந்தர்வர்த்திகளானவர்களும் ஆஶ்ரயிக்கத் திருவநந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டு, ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தையுடைய ப்ரதாநர்வர்த்திக்கிறதேசம்.

(விண்டலரித்யாதி) விட்டலராநிற்பதாய், தூளியுண்டு - சுண்ணம், அத்தையுடைத்தாய், மூங்கில் வளராநின்றுள்ள பர்யந்தத்தில் பரிமளப்ரசுரமான குறிஞ்சியினுடைய செவ்வித்தேனை வண்டுகளானவை பாநம்பண்ணாநின்றுள்ள பர்யந்தத்தையுடைய. (௨)

மூ.—

பிணிவளராக்கைநீங்க நின்றேத்தப் பெருநிலமருளில் முன்னருளி
அணிவளர்குறளாயகலிடமுழுதுமளந்த வெம்மடிகள்தம்கோயில்
கணிவளர்வேங்கை நெடுநிலமதனில் குறவர்தம் கவணிடைத்துரந்த
மணிவளர்சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வாமடநெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | மடநெஞ்சே. | அருளி | தந்தருளி, |
| பிணி | துக்கத்தை | அணிவளர் | அழகுமிக்கிருந்துள்ள |
| வளர் | வளர்த்தாநின்றுள்ள | குறளாய் | ஸ்ரீவாமநவேஷமுடையனாய் |
| ஆக்கை | ஶரீரமானது | அகலிடம்முழுதும் | பூமிப் பரப்பையடைய |
| நீங்க | கழிக்கைக்கு உறுப்பாக | அளந்த | (திருவடிகளால்) அளந்தருளின |
| நின்று ஏத்த | ஒருப்பட்டு நின்றுஸ்துதிப்பதற்கு | | |
| பெருநிலம் | பரந்தபூமியை | | |
| அருளில் | க்ருபையாலே | | |
| முன் | முன்னே | | |

அ௩;—இரண்டாம்பாட்டு. (இன்னடையித்யாதி கீழ்ப்பாட்டில் ஸர்வாத்மகதயா ஸர்வரக்ஷகத்வத்தை அநுஸந்தித்தார்; இதில் ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்தை அநுஸந்தித்து வணங்கச் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

இரண்டையும்சேரவெடுக்கையாலே ஸமுச்சயஸித்தமாகையாலே, ச(ஃ)காரங்களுக்கு ப்ரயோஜநமில்லையே என்ன; அதுக்கு அடுத்து ப்ராதாந்யத்தை ஸூசிப்பிக்கிறதென்கிறார் (நல்லவித்யாதி). (குறிஞ்சியுடைய) குறிஞ்சிப்பூவினுடைய. ... ... ... ... ... ... ... ... (௨)

| | | | |
|---|---|---|---|
| எம்அடிகள்தம் | நமக்கு ஸ்வாமியானவனுக்கு | நிலம்அதனுள் | வெளிநிலங்களிலே வர்த்திக்கிற |
| கோயில் | வாஸஸ்தானமாய், | குறவர் | குறவர்கள் |
| கணி | க(X)ணகாபரனான ஜ்யௌதிஷிகனாய்க் கொண்டு | தம் | தங்களுடைய |
| | | கவணிடை | கல்லெறிகயிற்றில் வைத்து |
| | | துரந்த | எறிந்த |
| | | மணி | மணிகளுடைய ப்ரகாசமானது |
| வளர் | வளராநின்றுள்ள | வளர் | பரம்பாநின்றுள்ள |
| வேங்கை | வேங்கை மரங்களை யுடைய | சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும் வா. (௩) | |
| நெடு | விஸாலமான | | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பிணியித்யாதி) துக்கத்தை வளரா நின்றுள்ள சரீரத்தைக் கழிக்கவேணுமென்று ஆஸ்ரயிக்க, அதுக்காகப் பரந்த பூமியை நிர்ஹேதுக க்ருபையாலே தந்தருளி, அழகு மிக்கிருந்துள்ள ஸ்ரீவாமந வேஷத்தைப்பரிக்ரஹித்து அதிஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு பூமிப்பரப்பையடைய அளந்து கொண்டு, அந்தச்செயலாலே என்னை எழுதிக்கொண்ட ஸ்வாமியானவன் பிற்பட்டார்க்கு இழக்கவேண்டாதபடி நிற்கிறதேசம்.

(கணியித்யாதி) அங்குத்தைக்கு வெறுநாள் சொல்லுவாரில்லாமையாலே க(X)ணியாகக் கொண்டு வளராநின்றுள்ள வேங்கையையுடைத்தாய், பரப்பையுடைத்தானபூமியிலே ஆட்டைக்கொருகால் இது பூக்கக்கடவதாய், அத்தையிட்டு ஆண்டென்று அறியுமத்தனையாயிற்று. இந்தவேங்கையை யுடைத்தான வெளிநிலத்திலே அங்கு

---

அரு;—மூன்றாம்பாட்டு. (பிணியித்யாதி), கீழ்ப்பாட்டில் ஸர்வஸமாஸ்ரயணீயத்வத்தை அநுஸந்தித்தார்; இதில் அந்த ஆஸ்ரயணத்துக்குப் பலமானவற்றைக் கொடுக்க வல்லவனென்று ஸர்வ பலப்ரதத்வத்தை யருளுகிறாரென்று ஸங்கதி.

(வளராநின்றுள்ள) வளர்த்தா நின்றுள்ள; (தந்தருளி) என்றவநந்தரம் "முன்னருளி" என்றதுக்கர்த்தமாக, "முன்னே நின்றவிடத்தில் க்ருபை பண்ணி" என்று கூட்டுவது.

(கணியாகக்கொண்டு) கணகாபரனை ஜோஸ்யனாகக் கொண்டு. அவன் ஸம்வத்ஸரம் சொல்லுமாபோலே பூவாலே தானுமறிவிப்பிக்கும் குறவருக்கென்று கருத்து. ... ... ... ... ... ... ... (௩)

ள்ள குறவரானவர்கள் தந்தாமுடைய எறிகவணிலே வைத்து எறி ந்த மணியினுடைய ஒளி எங்குமொக்கப் பரம்பாநின்றுள்ள பர்யந் தத்தையுடைய. .... .... .... .... .... ....(௩)

மூ.—

சூர்மையிலாய பேய்முலைசுவைத்துச் சுடுசரமடுசிலைத்துரந்து
நீர்மையிலாததாடகைமாள நினைந்தவர் மனங்கொண்டகோயில்
கார்மலிவேங்கைகோங்கலர்புறவில்கடிமலர்க்குறிஞ்சியின்நறுந்தேன்
வார்புனல்சூழ்தண்மாலிருஞ்சோலை வணங்குதும் வாமடநெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மடநெஞ்சே. | (௪) | கோயில் | திவ்யதேசமாய், |
| சூர்மையிலாய | க்ரூரஸ்வபாவையான | கார்மலி | மேகபதத்தளவும் உந் நதங்களான |
| பேய் | பூதனையினுடைய | வேங்கை | வேங்கைமரங்களும் |
| முலை | ஸ்தநத்தை | கோங்கு | கோங்குமரங்களும் |
| சுவைத்து | (அவளுயிர்மாள) க்ர ஸித்தவனாய், | அலர் | அலராநின்றுள்ள |
| சுடு | (சத்ருக்களின் மேலே) நெருப்பையுமிழா [நின்ற | புறவில் | பர்யந்தத்திலே |
| சரம் | அம்புகளை | கடி | பரிமளப்ரசுரமான |
| அடு | முடிப்பதில் ஸமர்த்த [மான | குறிஞ்சிமலரின் | குறிஞ்சிப்பூவினுடைய |
| சிலை | தநுஸ்ஸிலே | நறும்தேன் | செவ்வியதான மகரந் தத்தினுடைய |
| துரந்து | தொடுத்துவிட்டு | வார்புனல் | ப்ரவாஹத்தாலே |
| நீர்மை இலாத | ஸ்த்ரீத்வப்ரயுக்தமான மென்மை யில்லாத | சூழ் | சூழப்பட்டதாய், |
| தாடகை | தாடகையானவள் | தண் | குளிர்ந்து ப்ரமஹரமான |
| மாள | முடியும்படியாக | மாலிருஞ்சோலை வணங்குதும்வா. (௪) | |
| நினைந்தவர் | திருவுள்ளத்திலேகொண்ட எம்பெருமான் | | |
| மனம்கொண்ட | விரும்பிவர்த்திக்கிற | | |

அந;—நாலாம்பாட்டு. (சூர்மையித்யாதி), கீழ் இஷ்டப்ராபகத்வத்தை அருளிச்செய்தார். அநிஷ்டநிவ்ருத்யுபயுக்தமாக விரோதிநிரஸநத்தை யரு ளுகிறாரென்று ஸங்கதி.

வ்யா.—நாலாம்பாட்டு. (க்ரூர்மையித்யாதி) க்ரௌர்யத்தை வடிவாகவுடைய பூதனைமுலையைச்சுவைத்திட்டு; இவன்முகத்திலே விழித்துவைத்துப் பின்னையும் இரங்காதபடியிறே க்ரௌர்யம்; எதிரிகள்மேலே நெருப்பைத்தூவிக்கொண்டுசென்று விழுகிறஅம்புகளை முடிக்க வற்றான வில்லிலே தொடுத்துவிட்டு ஸ்த்ரீத்வப்ரயுக்தமான மென்மையில்லாத தாடகை முடியும்படியாக, ஒருருஷிவாக்யத்தையேகொண்டு ஸ்த்ரீவதமென்று பிற்காலியாதே "ரக்ஷகரான நமக்கு ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்துக்கேகாந்தமானது செய்யவேண்டாவோ" என்று அவள் முடியும்படி திருவுள்ளத்திலேகொண்டவன்; பின்னையும் பிற்பாடருடைய ரக்ஷணத்துக்குப்பாங்கான நிலமென்று விரும்பிவர்த்திக்கிற கோயில்.

(காரித்யாதி) மேகபதத்தளவும் செல்ல ஓங்கின வேங்கையென்னுதல்; நீலவேங்கைகளென்னுதல்; கோங்காகிற வ்ருக்ஷம். இவை அலராநின்றுள்ள பர்யந்தத்திலே பரிமளப்ரசுரமான குறிஞ்சியினுடைய செவ்வித்தேனானது வெள்ளமிடாநின்றுள்ள ஶ்ரமஹரமான திருமலையை. .... .... .... .... .... .... (௪)

மூ;—

வணங்கலிலரக்கன் செருக்களத்தவிய மணிமுடியொருபதும்புரள
அணங்கெழுந்தவன்றன்கவந்தம்நின்றாட வமர்செய்தவடிகள்தம்கோயில்
பிணங்கலில்நெடுவேய்நுதிமுகம் கிழிப்பப் பிரசம்வந்திழிதரப்பெருந்தேன்
மணங்கமழ்சாரல்மாலிருஞ் சோலை வணங்குதும் வாமடநெஞ்சே. (ரு)

| பதம். | உரை. |
| --- | --- |
| | மடநெஞ்சே. |
| வணங்கல்இல் | "நநமேயம்" என்று வணக்கமில்லாத |
| அரக்கன் | ராவணனானவன் |
| செருக்களத்து | யுத்த பூமியிலே |
| அவிய | முடியும்படியாகவும், (அவனுடைய) [ய் |
| ஒரு | வரபலத்தால் த்ருடமா |
| மணி | ரத்நத்தாலலங்க்ருதமான |
| முடி பதும் | பத்துத்தலைகளும் |
| புரள | (கீழேகிடந்து) துடிக்கும்படியாகவும், |
| அவன் தன் | அவனுடைய |
| கவந்தம் | கபந்த (ப்ஸ) மானது |
| அணங்கெழுந்து | தேவதாவிஷ்டம் போல் |
| நின்றுஆட | நின்று நர்த்தநம் பண்ணும்படியாகவும் |
| அமர் செய்த | யுத்தத்தை நடத்தினவனை |

க்ரௌர்யத்தை வடிவாக வுடைத்தானமையைக் காட்டுகிறார் (இவனித்யாதி). நினைவின் ப்ரகாரந்தன்னை யருளுகிறார் (ஒருவித்யாதி). ... ... (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அடிகள்தம் கோயில் | ஸ்வாமியினுடைய இருப்பிடமாய், | கிழிப்ப | கிழிக்க (அதிலுள்ள) |
| பிணங்கலில் | ஒன்றோடொன்று நெருங்கிக் கொண்டிருப்பதாய் | பிரசம் | தேனீக்களானவைகள் |
| நெடு | மிகவும் உந்நதமான | வந்து இழிதர | வந்திழிய |
| வேய் | மூங்கிலானது | பெரும்தேன் | அதிகமான தேனினுடைய |
| நுதி | தன்னுடைய நுனியாலே | மணம் | பரிமளமானது |
| முகம் | (மலையுச்சியி லிருக்கிற தேன் கூட்டின்) வாயை | கமழ் | (எங்குமொக்கப்) பரம்பா நின்றுள்ள |
| | | சாரல் | பர்யந்தங்களை யுடைய |
| | | மாலிருஞ்சோலைவணங்குதும்வா. (ரு) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வணங்கலிலித்யாதி) (க) "த்விதா ப⁴ஜ்யேயமப்யேவம் ந நமேயம் - த்விதாபஜ்யே யமப்யேவம் நநமேயம்" என்கிறபடியே "இரண்டாகப் பிளக்கிலும் வணங்கேன்" என்றிருந்த ராவணன் யுத்தபூமியில் மடிய, தேவதைகளுடைய வரத்தாலே திண்ணியதாய், ரத்நமயமான முடிபத்தும் புற்று மறிந்தாப்போலே கிடந்து துடிக்க, தைவாவிஷ்டம்போலே யிருக்க அவனுடைய சரீரமானது நின்றாட, ஸங்கல்பத்தாலன்றிக்கே பத்தும் பத்தாக வீரவாசிதோற்றப் பூசல் பொருதஸ்வாமிகள் வர்த்திக்கிற தேசம் ஒன்றோடொன்று பிணைந்து பெரிய ஒக்கத்தை யுடைத்தான மூங்கிலானது-மலைமுழஞ்சிலே வைத்ததேன் கூட்டளவும் வரவளர்ந்து தன்னுடைய நுனியாலே அதினுடைய வாயைக்கிழிக்க, தேன் வைத்த நாலுவகைப்பட்ட ஈக்களும் வந்திழியத் தேனினுடைய கந்த (ஐந்து)மானது எங்குமொக்கப் பரம்பாநின்றுள்ள. .... .... .... (ரு)

அரு;—அஞ்சாம்பாட்டு. (வணங்கலிலித்யாதி) கீழ்ப்பாட்டில் பெண்கவான விரோதிகள் போக்கினமையை அருளிச்செய்தார். ஆண்பிள்ளையாய்த் தலைப்பத்துப் படைத்தானையும்வென்ற வீரவாசியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"ஒருமணி முடிபதும் புரள" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி, ஒருவென்று அத்விதீய பதத்தால் பலித்த வர்த்தத்தையருளுகிறார் (தேவதைகளித்யாதி). "பிரசம்" என்று தேனாய், அத்தால் தேன் கூட்டும் ஈகளைச் சொல்லுகிறதென்றருளுகிறார் (தேன்வைத்த வித்யாதி). ... ... ... (ரு).

மூ;—

விடங்கலந்தமர்ந்த வரவணைத்துயின்று விளங்கனிக்கிளங்கன்றுவிசிறிக்
குடங்கலந்தாடிக் குரவைமுன்கோத்தகூத்த வெம்மடிகள்தம்கோயில்
தடங்கடல்முகந்து விசும்பிடைப் பிளிறத்தடவரைக்களிறென்று முனிந்து
மடங்கல்நின்றதிரும் மாலிருஞ்சோலை வணங்குதும் வாமடநெஞ்சே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| | மட நெஞ்சே? |
| விடம்கலந்து | (உகவாதார் மேலே) விஷத்தை உமிழாநிற்பானாய், |
| அமர்ந்த | (எம்பெருமான் திருமேனிக் கநுருபமான) குணங்கள் பொருந்தின |
| அரவணை | திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே |
| துயின்று | கண்வளர்ந்தருளி, (அங்கு நின்றும் வந்து அவதரித்து) |
| விளங்கனிக்கு | விளாம்பழத்துக்காக |
| இளம் கன்று | ஒரு சிறுக் கன்றை |
| விசிறி | (மரத்தின்மேலே) வீசி, |
| குடம் கலந்து | (கையிலே) குடங்களைக்கொண்டு |
| ஆடி | குடக்கூத்தாடி |
| முன் | முன்னே |
| குரவை | (பெண்களுடைய) குரவைக்கூத்திலே |

| பதம். | உரை. |
|---|---|
| கோத்த | தன்னைசேர்த்தவனாய், |
| கூத்த | ஆஸ்சர்ய சேஷ்டிதத்தையுடையனான |
| எம்மடிகள்தம் | நம்ஸ்வாமியினுடைய |
| கோயில் | இருப்பிடமாய், |
| தடம்கடல் | ஆழமானஸமுத்ரத்தில் |
| முகந்து | (ஜலத்தை) க்ரஸித்து (மேகங்களானவை) |
| விசும்பு இடை | ஆகாசத்திலே ஏறி |
| பிளிற | சப்திக்க (அந்தத்வநியைக் கேட்டு) |
| மடங்கல் | ஸிம்ஹமானது |
| தடவரை | மலைப்ராந்தங்களிலிருக்கிற [ணி |
| களிறு என்று | யானையாக புத்திபண் |
| முனிந்து | சீறி |
| நின்று அதிரும் | அதிராநின்றுள்ள |
| | மாலிருஞ்சோலை வணங்குதும் வா. |

வ்யா.—ஆறும்பாட்டு. (விடமித்யாதி) மதுகைடபர்கள் துடக்

அரு;—ஆறும்பாட்டு. (விடமித்யாதி) கீழே பேய் முலைசுவைத்து என்று ப்ரஸ்துதமான க்ருஷ்ணாவதாரத்தில் அபதானங்களை அடியே பிடித்தநுஸந்திக்கிறரென்று ஸங்கதி.

அரவான போதே விடம் கலந்திருக்குமே, விசேஷித்ததுக்குக் கருத்தென்னென்ன வருளுகிறர் (மதுவித்யாதி).

கமான உகவாதார்மேலே விஷத்தை உமிழாநிற்பானாய், அவனுக்கு எப்போதும் விடாதே மருவவேண்டும்படி திருமேனிக்கநுரூபமான ஸௌகுமார்யத்தை யுடையனான திருவநந்தாழ்வான்மேலே கண் வளர்ந்தருளி, அங்குநின்றும் போந்து அவதரித்து விளாம்பழத்துக்காக ஒருசிறுகன்றைவீசி, கையிலே குடங்களைக்கொண்டு கூத்தாடி, பெண்களுடைய குரவைக்கூத்திலே தன்னைக் கொடுவந்து கோத்து மநோஹாரியான சேஷ்டிதத்தையுடைய ஸ்வாமி வர்த்திக்கிற தேசம்.

கடல் மணலே சேஷிக்கும்படி ஜலாம்ஶத்தை முகந்து மேகங்கள்போய் ஆகாசத்தே ஏறி, உள்ளுப்புக்க த்ரவ்யத்தின்கனத்தாலே அங்கேநின்று பிளிற, அதினுடைய த்வநியைக்கேட்டு, மடங்கலுண்டு-ஸிம்ஹம், அது மலையிலே வர்த்திக்கிற ஆனையாக புத்திபண்ணி நாம் "வர்த்திக்கிறதேசத்திலே வேறேயுமொன்று வர்த்திக்கையாவதென்?" என்று சீறி அதிராநின்றுள்ள. .... .... .... (கூ)

மூ;—

தேநுகனாவிபோயுகவங்கோர் செழுந்திரள்பனங்கனியுதிரத் [கோயில்
தானுகந்தெறிந்ததடங்கடல் வண்ணரெண்ணி முனிடங்கொண்ட
வானகச்சோலை மரதகச்சாயல் மாமணிக்கல்லதர்நிறைந்து
மானுகர்சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | மட நெஞ்சே ! | தடம் கடல் | கம்பீரமான ஸமுத்ரம் போன்ற |
| தேநுகன் | தேநுகாஸுரனுடைய | வண்ணர் | வடிவையுடையரான எம்பெருமான் |
| ஆவி | ப்ராணனானது | முன் | முன்பு [எண்ணி |
| போய்உக | முடியும்படியாக | எண்ணி | பாங்கானதேசமென்று |
| அங்கு | அவ்விடத்தில் | இடம்கொண்ட | ஸ்வீகரிக்கப்பட்ட |
| ஓர் | அத்விதீயமாய், | கோயில் | ப்ரதேசமாய், |
| செழும் | தர்ஶநீயமாய், | மான் | மான்களானவை |
| திரள் | திரண்டிருந்த | மாகதச்சாயல் | மரகதமணியினுடைய ஒளியையுடைத்தான |
| பனம்கனி | பனம்பழங்கள் | | |
| உதிர | உதிரும்படி (அவனை) | | |
| தான் | தாம் (ஆஶ்ரிதவிரோதி | | |
| உகந்து | ப்ரீதனாய், [நிரஸநத்தில்) | | |
| எறிந்த | (பனையின்மேலே) எறிந்த | | |

(மேகங்கள்) என்றது-விசேஷண பலத்தாலே அர்த்த ஸித்தம். ... (கூ)

| | | | |
|---|---|---|---|
| வானகம்சோலை | ஆகாசமளவும் ஓங்கின சோலைகளிலிருக்கிற | நுகர் | (அங்குள்ள தேனை) புஜியாநின்றுள்ள |
| மாமணிக்கல் | நீலப்பாறைகளிலுண்டான | சாரல் | பர்யந்தங்களை யுடை |
| அதர் | வழியில் | மாலிருஞ்சோலை வணங்குதும் வா | |
| நிறைந்து | ப்ரவேசித்து நிறைந்து | | |

வ்யா;—ஏழாம்பாட்டு. (தேனுகனித்யாதி) தேனுகனுடை ப்ராணனானது முடிய, அங்கே அடியேபிடித்துத் தலையளவும்செல்ல தர்சநீயமாம்படி பழுத்தூக்கிடக்கிறபனம்பழங்கள் உதிரும்படி, ஆஸ்ரித விரோதிகளைப் போக்குகையிலுண்டான ப்ரீதியாலே உகந்தெறிந்த ஸ்ரமஹரமானவடிவை யுடையவன், ஆஸ்ரித விரோதிகளைப் போக்குகைக்குப் பாங்கான தேசமென்று திருவுள்ளத்தாலே ஆதரித்து வர்த்திக்கிறகோயில். (வானகமித்யாதி) மரதகத்தினுடைய ஒளியை யுடைத்தாய்க்கொண்டு ஆகாஸாவகாசமடையும்படி ஓங்கியிருந்துள்ள சோலையிலுள்ளில், நீலப்பாறைகளிலுண்டான வழியே போய்ப்புக்கு, மான்களானவை அங்குள்ள தேனைப்பருகாநின்றுள்ள பர்யந்தத்தையுடைய. .... .... .... .... .... (எ)

மூ;—

புதமிகுவிசும்பில் புணரிசென்றணவப்பொருகடலரவணைத்துயின்று
பதமிகுபரியின்மிகுசினம்தவிர்த்த பனிமுகில் வண்ணர் தம்கோயில்
கதமிகுசினத்தகட தடக்களிற்றின் கவுள்வழிகளிவண்டுபருக
மதமிகு சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும் வாமட நெஞ்சே.

---

அந;—ஏழாம்பாட்டு. (தேனுகனித்யாதி) கீழ்ப்பாட்டில் விளங்கனிக்கு இளங்கன்று வீசினமையை அநுஸந்தித்தார். இதில் பனங்கனிக்காக பலராமனும் கராஸுரவதம் செய்தமிடுக்கை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(அடியேபிடித்துத்தலையளவும் செல்ல) என்றதுக்கு நெருஞ்சியைப்புல்லாக்கின க்ருஷ்ணஸஞ்சாரமுள்ள காட்டில் மரங்களெல்லாம் பலாவைப்போலே பழுக்குமென்று கருத்து. "மா" என்று கறுப்பாய், அருளுகிறார் (நீலப்பாறைகளில்) என்றது. (தேனை)என்றது-சோலையைச் சொன்னத்தாலே அர்த்தாத் ஸித்தம். ... ... ... ... ... ... ... (எ

அந;—எட்டாம்பாட்டு. (புதமித்யாதி) கீழ்ப்பாட்டில் கழுதையான தேநுகனை நிரஸித்தமையை யருளினார். இதில் குதிரையான கேசிநிரஸநந்தன்னையருளுகிறாரென்று ஸங்கதி.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | மடநெஞ்சே. | வண்ணர்தம் | வடிவையுடையனான எம்பெருமானுக்கு |
| புதம் | மேகங்களாலே | கோயில் | இருப்பிடமாய், |
| மிகு | வ்யாப்தமான | கதம்மிகு | அதிக கோபத்தை யுடைத்தாய், |
| விசும்பில் | ஆகாசத்தில் | சினத்த | (அதுக்கடியான) த்வேஷத்தையுடைய |
| புணரி | அலைகளானவை | கடாம் | மதமுதிதமாய், [தாய், |
| சென்று | கிட்டி | தடம் | பெரியவடிவை யுடைத்தாயிருந்துள்ள |
| அணவ | ஸ்பர்ஶிக்கும்படி | களிற்றின் | ஆனையினுடைய |
| பொரு | தன்னில்தான் பொரா நின்றுள்ள | கவுள்வழி | கபோலத்தின்வழியே பெருகாநின்ற |
| கடல் | திருப்பாற்கடலிலே | களி | மதஜலத்தை |
| அரவணை | திருவநந்தாழ்வான்மேலே | வண்டு | வண்டுகளானவை |
| துயின்று | கண்வளர்ந்தருளி, (அங்கு நின்றும் போந்தவதரித்து) | பருக | பானம் பண்ணா நிற்கச்செய்தே (பின்னையும்) |
| பத மிகு | பதத்தாலே அடிமேலடி யிட்டுக்கொண்டு வருகிற | மதம்மிகு | மதஜலம்பாய்ந்து வெள்ளமிடா நின்றுள்ள |
| பரியின் | குதிரையினுடைய | சாரல் | பர்யந்தங்களை யுடைய |
| மிகு | அதிகமான | | மாலிருஞ்சோலை வணங்குதும் வா. |
| சினம் | சீற்றத்தை | | |
| தவிர்த்த | போக்கினவனாய், | | |
| பனிமுகில் | ஶ்ரமஹரமான மேகம் போன்ற | | |

வ்யா;—எட்டாம்பாட்டு. (புதமித்யாதி) அம்புதத்தைக் குறைத்துப்"புதம்" என்று கிடக்கிறது. மேகங்களாலே நெருங்கின ஆகாசத்திலே கிளர்ந்ததிரைகள் சென்று ஸ்பர்ஶிக்க, தன்னில்தான் பொராநின்றுள்ள திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளி, அங்கு நின்றும் போந்தவதரித்து, †பதத்தாலே அடிமேலடியாக விட்டுக்கொடுவருகிற குதிரையினுடைய மிக்க சீற்றத்தைப் போக்கின ஶ்ரமஹரமான வடிவையுடையவன் வர்த்திக்கிறகோயில்.

---

† (பா) பதற்றத்தாலே.

(கதமித்யாதி) மிக்ககோபத்தையுடைத்தாய், அதுக்கடியான அகவாயில் த்வேஷத்தை யுடைத்தாய், மதமுதிதமாய், பெரியவடிவை யுடைத்தாயிருந்துள்ள ஆனையினுடைய கபோலத்தின்வழியே அந்த மதஜலத்தை வண்டுகளானவை பாநம்பண்ண; கொசுகு ஒரு மூலையிலே இருந்தழித்ததென்னக் கடவதன்றிறே. பின்னையும் மதம்பாய்ந்து வெள்ளமிடா நின்றுள்ள பர்யந்தத்தையுடைய. (அ)

மூ;—

புந்தியில்சமணர்புத்தரென்றிவர்க ளொத்தனபேசவு முகந்திட்டு
எந்தைபெம்மானிமையவர்தலைவ னெண்ணி முனிடங்கொண்ட
சந்தநப்பொழிலின் தாழ்சினைநீழல்தாழ் வரைமகளிர்கள்நாளும் [கோயில்
மந்திரத்திறைஞ்சும் மாலிருஞ்சோலை வணங்குதும் வாமடநெஞ்சே.

| பதம். | உரை. |
|---|---|
| | மட நெஞ்சே! |
| புந்திஇல் | ஜ்ஞாநஹீநரான |
| சமணர் | ஶ்ரமணரென்றும் |
| புத்தர்என்று | பௌத்தரென்றும் சொல்லப்படுகிற |
| இவர்கள் | இந்தமதஸ்தர் |
| ஒத்தன | தங்கள் ஸித்தாந்தத்துக்கு ஏகாந்தமானவற்றை |
| பேசவும் | சொல்லச் செய்தேயும் |
| உகந்திட்டு | (உகந்தார்க்கு உதவப்பெற்றோமென்று) ஸந்துஷ்டராய், |
| எந்தை | என்தந்தை முதலானோர்க்கும் |
| பெம்மானர் | நாதனும், |
| இமையவர் | நித்யஸூரிகளுக்கு |
| தலைவர் | அதிபதியான எம்பெருமான் |
| முன் | முன்பு |
| எண்ணி | (வாஸயோக்யமான தேசமென்று) திருவுள்ளம்பற்றி |

| பதம். | உரை. |
|---|---|
| இடம்கொண்ட | உகந்து வர்த்திக்கிற |
| கோயில் | திவ்யதேசமாய், |
| சந்தனப்பொழிலின் | சந்தநச் சோலையிலுள்ள |
| தாழ்சினை | தாழ்ந்த கிளைகளினுடைய |
| நிழல்தாழ் | நிழலின் கீழே தாழ்ந்து (வர்த்தியாநின்ற) |
| வரைமகளிர்கள் | மலைப்பெண்களானவர்கள் |
| நாளும் | நாள்தோறும் |
| மந்திரத்து | (வரலாபத்துக்கீடான) மந்த்ரத்தைக் கொண்டு |
| இறைஞ்சும் | ஆஶ்ரயியா நின்றுள்ள |
| மாலிருஞ்சோலை வணங்குதும் வா. | |

“கடம்” என்றதினர்த்தம் (மதமுதிதமாய்) என்றது. “தடம்” என்றதினர்த்தம் (பெரியவித்யாதி). †மதுவென்றது-மதுவைப்போலே என்கை. (அ)

†இது வ்யாக்யாநத்துக்குச் சேரவில்லை.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (புந்தியில்சமணர்) வேதத்துக்கு அப்ராமாண்யம் சொல்லும்படி ஜ்ஞாநஹீநராயிருக்கிற சமணர், அப்படியேயிருக்கிற பௌத்தரென்று சொல்லப்படுகிற இவர்கள், தாங்கள் அதிகரித்த ஸித்தாந்தங்களுக்கு ஏகாந்தமானவற்றைச் சொல்லச்செய்தேயும், இவர்கள் நம்மை அறிந்திலர்களே; இவர்களுக்கு நாம் வேண்டாவாகில், நாம் என்றால் உகந்திருக்கும் ஆஸ்ரிதருக்கு உதவப்பெற்றோமென்று அத்தாலே ஹ்ருஷ்டராய், என்குலநாதனாய், அப்படி *அயர்வறு மமரர்களதிபதியாயிருக்கிறவர் நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்குமொக்க முகங்கொடுக்கலாம் தேசமென்று திருவுள்ளம்பற்றி வர்த்திக்கிற தேசம். சந்தநச் சோலையிலுண்டானதாழ்ந்தபணைகளிலுண்டான நிழலின் கீழேபோய், வரைமகளிர்களானவர்கள் நாடோறும் தங்கள் வரலாபத்துக்கீடான மந்த்ரத்தைக்கொண்டு ஆஸ்ரயியா நின்றுள்ள. .... .... (கூ)

மூ,—

வண்டமர்சாரல் மாலிருஞ்சோலை மாமணிவண்ணரை வணங்கும்
தொண்டரைப்பரவும் சுடரொளிநெடுவேல் சூழ்வயலாலி நன்னாடன்
கண்டல்நல்வேலிமங்கையர்தலைவன் கலியன் வாயொலிசெய்தபனுவல்
கொண்டிவை பாடும்தவமுடையார்க ளாள்வரிக்குரை கடலுலகே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

அந;—ஒன்பதாமபாட்டு. (புந்தியிலித்யாதி) கீழே பஹுமுகமாக விரோதிநிரஸநமருளிச்செய்தாராய், தத்வஜ்ஞாந விரோதியான துர்மதஸ்த்தரால் வரும் நலிவு வாராதபடி ரக்ஷித்து நின்றாரென்று அவிசால்யத்வத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"புந்தி" என்றது-மெல்லொத்தாய்க் கிடக்கிறதென்று திருவுள்ளம்பற்றியருளுகிறார் (வேதத்துக்கித்யாதி). அவர்கள் தங்கள் ஸித்தாந்தத்துக்கு ஒத்தவற்றைப்பேசினார்களாகில், இவன் உகக்கக் கூடுமோவென்னவருளுகிறார்(இவர்கள் நம்மையித்யாதி). "எந்தை" என்றது-உபலக்ஷணமாய், "தந்தை தந்தை முதலானவர்க்கும் பெம்மானார்" என்றாக்கியருளுகிறார் (என் குலநாதனாய்) என்று. "நிழல் தாழ்" என்றதினர்த்தம் (நிழலின்கீழேபோய்) என்று. (வரைமகளிர்கள்) மலைப்பெண்கள். ... ... ... ... ... (கூ)

| பதம். | உரை. |
| --- | --- |
| வண்டு | வண்டுகள் |
| அமர் | (மதுபானத்துக்கு) படிந்திராநின்றுள்ள |
| சாரல் | பர்யந்தங்களையுடைய |
| மாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலை மலையிலே (எழுந்தருளி யிருக்கிற) |
| மாமணிவண்ணரை | ஶ்லாக்யமானநீலமணி போல் ஶ்ரமஹரமான வடிவையுடைய அழகரை |
| வணங்கும் | ஆஶ்ரயியாநின்ற |
| தொண்டரை | ஸ்ரீ வைஷ்ணவர்களை |
| பரவும் | ஸ்துதிக்கும் ஸ்வபாவராய், |
| சுடர்ஒளி | மிக்க தேஜஸ்ஸை யுடையதாய் |
| நெடு | நெடிதான [யராய், |
| வேல் | வேலாயுதத்தையுடை |
| வயல்சூழ் | வயலாலே சூழப்பட்ட |

| பதம். | உரை. |
| --- | --- |
| நல் | விலக்ஷணமான |
| ஆலிநாடன் | திருவாலி நாட்டையுடையராய், |
| கண்டல் | தாழைகளை [த்தான |
| நல்வேலி | நல்லவேலியாக உடை |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார் |
| தலைவன் | நிர்வாஹகரான [க்கு |
| கலியன் | ஆழ்வார் |
| வாய்ஒலிசெய் | ஒலியை உடைத்தாக திருவாய் மலர்ந்தருளிய |
| பனுவல்இவை | இந்த ஶ்ரீஸூக்தியை |
| கொண்டு | அநுஸந்தித்துக்கொ |
| பாடும் | பாடும்படியான [ண்டு |
| தவமுடையார்கள் | பாக்யவான்கள் |
| இக்குரைகடல் | கோஷியாநின்ற இந்த ஸமுத்ரத்தால் சூழ |
| உலகு | பூமியை [ப்பட்ட |
| ஆள்வர் | நிர்வஹிக்கப் பெறுவர். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (வண்டமரித்யாதி) பரிமளம் படிந்தாப்போலே வண்டுகள் மதுபானம் பண்ணாநின்றுள்ள பர்யந்தத்தையுடைத்தான திருமலையிலே ஶ்ரமஹரமான வடிவை யுடையராய்க் கொண்டு எழுந்தருளியிருக்கிற அழகரை, அவ்வடிவழகில் துவக்குண்டு ஆஶ்ரயிக்கும் ஶ்ரீவைஷ்ணவர்களை அடைவுகெட ஏத்தும் ஸ்வபாவராய், அதிலெல்லையிலேநின்றாப்போலே சத்ருநிரஸநத்தால் வந்தகறைகழுவவும் அவஸரமில்லாத சுடரொளி நெடுவேலைக்

அரு;—பத்தாம்பாட்டு (வண்டமரித்யாதி) (நின்றாப்போலே)என்றதுக்கு (வேலைக்கையிலே யுடையராய்) என்றத்தோடே அந்வயம். அதாவது-சத்ருநிரஸநத்திலும் எல்லையிலே நின்றவர் இதுக்குஇவரைப்போலே இல்லைஎன்றபடி.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

கையிலே யுடையராய், சூழ்வயலையுடைத்தான திருவாலிநாட்டை யுடையராய், தாமரைகளை வேலியாக வுடைத்தாயிருந்துள்ள திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வார் ஒலியை யுடைத்தாக வருளிச்செய்த பனுவலை ஸ்வஹ்ருதயத்திலே அநுஸந்தித்துக் கொண்டு பாடுகைக்கிடான பாக்ய (ஜ்ஜ்)முடையவர்கள் இக்கடல் சூழ்ந்த பூமிக்கு நிர்வாஹகராகப் பெறுவர். .... .... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



## பெரியதிருமொழி
## ஒன்பதாம்பத்து எட்டாந்திருமொழி முற்றிற்று.



ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## ஒன்பதாம்பத்து ஒன்பதாந்திருமொழி
### மூவரில் ப்ரவேசம்.

வ்யா.—மூவரில்ப்ரவேசம்.— இவ்விருப்பைத் தவிர்த்துப் பரமபதத்தைத் தரவேணுமென்றபேக்ஷித்தார்; அப்போதே அது பெறுமையாலே இத்தைத்தவிர்த்து அத்தைத் தருகைக்காகவந்துநிற்கிற இங்கேஆஶ்ரயித்துநம் அபேக்ஷிதம்பெறுதொழிவோமேயென்று அவஸந்நராய், அந்த அவஸாததிசயத்தாலே தாமான தன்மைஅழிந்து எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டி தசையை ப்ராப்தராய், அப்பிராட்டிதான் தம்தசையைத்தான் பேசமாட்டாதே கிடக்க, அவள்படியைப் பேசுகிற திருத்தாயார்தசையை ப்ராப்தராய், அவள் தன்மகள் தசையை அநுஸந்தித்து "இவளாற்றாமை இருந்தபடியால் அவனோடே அணைந்தல்லது தரிக்கமாட்டாள்போலேயிருந்தது; அணைத்துவிடவல்லளே; அன்றிக்கேஇங்ஙனே நோவுபடுமித்தனையோ" என்று பின்னையும்தானே அவனைக்கிட்டியே விடுமென்று அறுதியிட்டுத் தரிக்கிறாளாயிருக்கிறது.

---

அரு;—மூவரில் ப்ரவேசம்;—தந்தை தாயிலே ஸம்ஸாரத்திலே அருசி தோற்றச் சொல்லுகையாலே பரமபதத்தை அபேக்ஷித்ததாய், அதுக்குக்கீழ்த் திருமொழியிலே ததர்த்தமாக ஆஶ்ரயித்தாராயிருக்கச்செய்தேயும் பெறாமையாலே அந்யாபதேசத்தாலே தமக்குப் பிறந்ததசையைப் பேசுகிறாரென்று ஸங்கதியருளுகிறார் (இவ்விருப்பையித்யாதி). ... ... ... ... *

மூ;—மூவரில்முன்முதல்வன் முழங்கார்கடலுள்கிடந்து
பூவளருந்திதன்னுள் புவனம் படைத்துண்டுமிழ்ந்த
தேவர்கள்நாயகனைத் திருமாலிருஞ்சோலைநின்ற
கோவலர்கோவிந்தனைக் கொடியேரிடை கூடுங்கொலோ. (க)

| பதம். | உரை. |
|---|---|
| மூவரில் | த்ரிமூர்த்திகளில் வைத்துக்கொண்டு |
| முன்முதல்வன் | ப்ரதாநனாய், |
| முழங்குஆர் | (திரைக்கிளப்பத்தாலே) பெரிய கோஷத்தை யுடைய |
| கடலுள் | திருப்பாற்கடலிலே |
| கிடந்து | கண்வளர்ந்தருளி, |
| உந்தி | திருநாபியில் |
| வளர் | வளராநின்ற |
| பூ தன்னுள் | தாமரைமலரிலே |
| புவனம் | ஜகத்தை |
| படைத்து | ஸ்ருஷ்டித்து, |
| உண்டு | (ப்ரளயம் வந்தவாறே) வயிற்றிலே எடுத்து வைத்து, |
| உமிழ்ந்த | (பிறகு வெளிநாடுகாண) உமிழ்ந்து (இப்படிரக்ஷிக்கிற) |
| தேவர்கள்நாயகனை | நித்யஸூரிநாதனாய், |
| திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலைமலையிலே |
| நின்ற | ஸந்நிஹிதனாய் நின்றவனுமாய், |
| கோவலர்கோவிந்தனை | இடைக்குலத்திலே வந்துபிறந்துகோவிந்தாபிஷேகம் பண்ணப் பெற்றஎம்பெருமானை |
| கொடிஏர் இடை | வஞ்சிக்கொடிபோன்ற இடையை யுடைய என்மகள் |
| கூடும்கொல் ஓ! | அணைந்தேவிட வல்லளேயோ?. (க) |

வ்யா.—முதற்பாட்டு. (மூவரில்முன்முதல்வன்) இந்த்ரனையும் கூட்டி மூவர்க்கு ப்ரதாநனென்னுதல். அன்றிக்கே மூவரில் வைத்துக்கொண்டு தான் ப்ரதாநனென்னுதல்; (முழங்காரித்யாதி) திரைக்கிளப்பத்தாலே பெரியகோஷத்தை யுடைத்தான திருப்பாற்கடலிலே ப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்கும்படிவந்து கண்வளர்ந்தருளி, விலக்ஷணமான திருநாபிகமலத்திலே ஜகத்தைஸ்ருஷ்டித்து,

---

அரு.—முதற்பாட்டு. (மூவரித்யாதி) "மூவரில்" என்றத்தை பஞ்சம்யந்தமாக்கி ஒருதாத்பர்யமருளிச்செய்து, நிர்த்தாரணே ஸப்தம்யந்தமாக்கி அர்த்தாந்தரம் (அன்றிக்கே யித்யாதி). "உந்திதன்னுள் வளரும்பூவில் புவநம் படைத்து" என்றதை விவக்ஷித்து, உந்தியின் தானான தன்மையை வெளியிட்டருளுகிறார் (விலக்ஷணேத்யாதி). ... ... ... ... (க)

பின்னைப்ப்ரளயம் வந்தவாறே வயிற்றிலே எடுத்துவைத்து, உள்ளே கிடந்து நெருக்குப்பட வொண்ணாதென்று வெளிநாடுகாண உமிழ்ந்து இப்படி நோக்குகிற * அயர்வறுமமரர்களதிபதியை.

(திருமாலிருஞ்சோலையித்யாதி) இப்படி உபய விபூதியுக்தனுயிருந்துவைத்து க்ருஷ்ணனாய் வந்தவதரித்துப் பசுக்களுக்கும் இடையருக்கும் வந்தக்லேசத்தைப்பரிஹரித்து, கோவிந்தாபிஷேகம் பண்ணினவன் பிற்பாடராய் இடக்கையும் வலக்கையுமறியாத ஸம்ஸாரிகளுக்கு முகம் கொடுக்கைக்காக திருமலையிலே வந்து ஸந்நிஹிதனானன்; அவனோடே அணைக்கைக்கீடான அழகுடையவள் அணைந்தேவிடவல்லளேயோ?. .... .... .... .... .... (க)

மூ.—புனைவளர்பூம்பொழிலார் பொன்னிசூழரங்கநகருள்
முனைவனைமூவுலகும்படைத்த முதல் மூர்த்திதன்னைச்
சினைவளர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்றான்
கனைகழல் காணுங்கொலோ கயற்கண்ணியெங்காரிகையே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புனை | புன்னைமரங்கள் | பூ | அழகியவான |
| வளர் | வளராநிற்பதாய், | பொழில் | சோலைகளாலே |
| பூ | பூத்துக்கிடக்கிற | சூழ் | சூழப்பட்ட |
| பொழில்ஆர் | பொழிலையுடைத்தாய், | திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலையிலே |
| பொன்னி | திருக்காவேரியாலே | நின்றான் | எழுந்தருளியிராநின்ற எம்பெருமானுடைய |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற | கனை | (ரக்ஷணத்துக்கிட்ட வீரக்கழல்) த்வநியாநின்றுள்ள |
| அரங்கநகருள் | கோயிலாகிற மஹாநகரத்திலே (கண் வளர்ந்தருளுகிற) | கழல் | திருவடிகளை |
| முனைவனை | ப்ரதாநபூதனாய், | கயல் | கயல்போன்ற |
| மூ உலகும் | மூன்று லோகங்களை | கண்ணி | கண்களையுடையளாய் |
| படைத்த | ஸ்ருஷ்டித்த [யும் | எம்காரிகை | என் மகளானவிவள் |
| முதல்மூர்த்தி தன்னை | ப்ரதாந மூர்த்தியாய், | காணுங்கொலோ | கண்டேவிடவல்லளேயோ?. (உ) |
| சினை | பணைகளானவை | | |
| வளர் | வளரா நிற்பனவாய் | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு (புனையித்யாதி) புன்னைகள் வளரா நிற்பதாய், பூத்தபொழிலை யுடைத்தாய், காவிரியாலே சூழப்பட்டிருக்கிற கோயிலாகிற மஹாநகரத்திலே கண்வளர்ந்தருளுகிற ப்ரதானனை, மூவுலகையும் படைத்த ப்ரதானமூர்த்திதன்னை. பனைகள் மிக்கபூம்பொழில். ரக்ஷணத்துக் கிட்டவீரக்கழல் த்வநியாநின்றுள்ள திருவடிகளை. அவற்றைக் காண்கைக்குக் கண்படைத்தவிவள் கண்டேவிட வல்லளோ யோ? .... .... .... .... (௨)

மூ;—உண்டுலகேழினையு மொருபாலகனாலிலைமேல்
கண்டுயில் கொண்டுகந்த கருமாணிக்கமாமலையைத்
திண்டிறல்மாகரிசேர் திருமாலிருஞ்சோலைநின்ற
அண்டர்தம்கோவினை யின்றணுகுங்கொலென்னாயிழையே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உலகுஏழினையும் | ஸப்தலோகங்களையும் | திண்திறல் | மிக்கவலிவை யுடையனவாய் |
| உண்டு | எடுத்து வயிற்றிலே வைத்து, | மா | பெரிய |
| ஒருபாலகன் | ஒரு சிறுகுழவியாய் | கரி | ஆனைகள் |
| ஆலிலைமேல் | ஓர் ஆலந்தளிரிலே | சேர் | சேராநின்றுள்ள |
| கண்துயில் கொண்டு | திருக்கண்வளர்ந்தருளி | திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலை மலையில் |
| உகந்த | (ஆபத்ஸகரை நோக்கப் பொற்றோமென்று) உகந்தருளுமவனாய் | நின்ற | நின்றருளுமவனாய், |
| மா | பெரிதான | அண்டர்தம் | அண்டாந்தர்வர்த்திகளான தேவர்களுக்கு |
| கருமாணிக்கமலையை | கருமாணிக்கமலைபோல் ப்ரமஹாமான வடிவையுடையனாய், | கோவினை | நிர்வாஹகனான எம்பெருமானை |

அரு.—இரண்டாம்பாட்டு. (புனையித்யாதி) "கோவலர் கோவிந்தன்" என்று வெண்ணெயுண்டவாயன் ப்ரஸ்துதனானமையாலே, வெண்ணெயுண்ட வாயனான அழகனைக் + (க) "கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்னும்படியான இவள் கண்களாலே காணுமோவென்று மநோரதிக்கிறுளென்று ஸங்கதி,

"புனைகள் கண்வளாநிற்கிற" என்று பாடமானபோது (காணப்பெறுகிற்கிற) என்றர்த்தம். "புன்னைகள்" என்ற பாடத்தில் அர்த்தம் ஸ்பஷ்டம். (௨)

| | | |
|---|---|---|
| என் ஆய்இழை | ஆராய்ந்தணியப்பட்ட ஆபரணங்களை யுடைய என் மகள் | |
| இன்று | இற்றைக்கு | |
| அணுகும்கொல் | சென்றணுகவல்லளே யோ. | (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உண்டித்யாதி) ஸகலலோகங்களை யுமெடுத்து வயிற்றிலேவைத்து ஒருபாலனாய், ஒருபவனான ஆலந் தளிரிலே கண்வளர்ந்த நளிரக்ஷ்யவர்க்கத்தினுடையரக்ஷணத்தைப் பண்ணப்பெறுகையாலே ப்ரமஹரமான வடிவை யுடையனாயிருக் கிறவனே. (திண்டிறலித்யாதி) ஸிம்ஹங்களுக் கஞ்சாத திண்மை யையுடைத்தான ஆனைகள் சேராநின்றுள்ள திருமலையிலே நின்றரு ளின அண்டாந்தர்வர்த்திகளுக்கு நிர்வாஹகனானவனே. அவனுக் கிடாக ஒப்பித்திருக்கிற இவள் அவ்வொப்பனையோடே சென்றணுக வல்லளேயோ?. .... .... .... .... .... .... (௩)

மூ;—சிங்கமதாயவுணன்திறலாகம் முன்கீண்டுகந்த
பங்கயமாமலர்க்கண்பரனையெம்பரஞ்சுடரைத்
திங்கள்நன்மாமுகில்சேர் திருமாலிருஞ்சோலைநின்ற
நங்கள்பிரானையின்று நணுகுங்கொலென்நன்னுதலே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன் | ப்ரஹ்லாதன் வருந்தின காலத்திலே | உகந்த | (சிறுக்கன் விரோதியைப் போக்கப் பெற்றோமே) என்று) உகந்தருளினவனாய், |
| சிங்கம்அதுஆய் | நரஸிம்ஹவேஷத்தை யுடையனாய்க் கொண்டு | | |
| அவுணன் | ஹிரண்யனுடைய | மா | மிகப்பெரிதான |
| திறல் | (வரப (ப) லத்தாலே) திண்ணிதான | பங்கயமலர் | தாமரை மலர்போன்ற |
| ஆகம் | மார்வை | கண் | திருக்கண்களையுடைய |
| கீண்டு | எளிதாகக் கிழித்து | பரனை | ஸர்வாதிகனாய், |

அரு.—மூன்றாம்பாட்டு. (உண்டித்யாதி) கீழ்ப்பாட்டிலே அரங்கத்தில் பள்ளிகொண்டவன் தான் * ஆலமாமரத்தினிலைமேலொரு பாலகனாகையா லே அவன் படியையுமநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(திண்மையாலும்) திறலாலும். "மா-பெருமையையுடைத்தான கரி" என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, எத்தைக்காட்டிலும் பெருமை என்னவரு ளுகிறார் (ஸிம்ஹங்களித்யாதி). ...(௩)

| | | | |
|---|---|---|---|
| எம் | எமக்கு ஸ்வாமியாய், | திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையிலே |
| பரம்சுடரை | "பரம்ஜ்யோதி:" என்று ஸ்ருதியில் ஓதப்படுமவனாய், | நின்ற | வந்து ஸந்நிஹிதனாய், |
| | | நங்கள்பிரானை | நமக்கு எளியனான எம்பெருமானை |
| திங்கள் | சந்த்ரபதத்தளவும் | என் | என்னுடைய |
| மாமுகில் | மேக(ங்)பதத்தளவும் | நன்னுதல் | அழகான நெற்றியையுடையளான இவள் |
| சேர் | ஓங்கின சிகரத்தையுடைத்தாய் | இன்று | இற்றைக்கு |
| | | நறுந்தும்கொல் | சென்று கிட்ட வல்லளேயோ. (௪) |
| நல் | விலக்ஷணமான | | |

வ்யா.—நாலாம்பாட்டு, (சிங்கமித்யாதி) ஸிம்ஹவேஷத்தையுடையனாய் ஹிரண்யனுடைய வரபலத்தாலே திண்ணிதான மார்வை அநாயாஸேந கிழித்துச் "சிறுக்கன் விரோதியைப்போக்கப் பெற்றோமே" என்று அத்தாலே உகந்தவுகப்புத்திருக்கண்ணிலே தோற்றும்படி யிருக்கிற ஸர்வாதிகனை. "ஜ்வலந்தம்" என்கிறபடியே திருமேனியிலே பிறந்த புகரைச் சொல்லுகிறது. (திங்களித்யாதி) சந்த்ரபதத்தளவுமோங்கின சிகரத்தை யுடைத்தான திருமலையிலேவந்து ஸந்நிஹிதனாய் நமக்கெளியனானவனை. அவ்வெளிமைக்குத் தோற்றிருக்கிற இவள் கிட்டவல்லளேயோ?.

மூ;—தானவன்வேள்விதன்னில் தனியேகுறளாய் நிமிர்ந்து
வானமுமண்ணகமு மளந்த திருவிக்கிரமன்
தேனமர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற
வானவர்கோனையின்று வணங்கித்தொழ வல்லள்கொலோ.

அரு,—நாலாம்பாட்டு. (சிங்கமித்யாதி) * ஆலமாமரத்தினிலைமேலொரு பாலகனாய்த்தானே * பரிபவந்தவனுடல் கீண்டுகந்தவனைத் தோற்றி, அவ்வபதாநத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"பரனை" என்று - பரத்வம் சொல்லியிருக்க; "பரஞ்சுடரை" என்று- மீளவும் பரத்வம் சொல்லுவானென்னென்ன; ததநுபவத்தில் சொல்லுகிற திருமேனிப்புகர் விவக்ஷிதமென்றருளுகிறார் ( ஜ்வலந்தமித்யாதி ). "நங்கள் பிரானை" என்று - தான் ஈடுபட்டவனாகையாலே "என்னன்னுதலே" என்றதுக்குத் தன்னைப்போலே ஈடுபட்டவளென்று தாத்பர்ய மருளுகிறார் (அவ்வெளிமையித்யாதி).
... (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தானவன் | மஹாபலியினுடைய | தேன் அமர் | தேன் மிக்கு |
| வேள்விதன்னில் | யாகத்திலே | பூ | பூத்திருந்துள்ள |
| தனியே | தனியே | பொழில் | சோலையாலே |
| குறளாய் | வாமநவேஷத்தைக் கொண்டுபோய்ப்புக்கு | சூழ் | சூழப்பட்ட |
| நிமிர்ந்து | (மூன்றடியிரந்துபெற்று) வளர்ந்து | திரு மாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலையிலே |
| வானமும் | அந்தரிக்ஷாதி லோகங்களையும் | நின்ற | வந்துநின்றவனாய், |
| மண் அகமும் | பூ (பூ) ம்யாதிலோகங்களையும் | வானவர் | நித்யஸூரிகளுக்கு |
| அளந்த | அளந்து கொண்ட | கோனை | நிர்வாஹகனான ஸர்வேஶ்வரனை (என்மகளான இவள்) |
| திரிவிக்கிரமன் | த்ரிவிக்ரமனாய், | இன்று | இற்றைக்கு |
| | | வணங்கித்தொழவல்லள்கொலோ (ரு) | |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (தானவனித்யாதி) மஹாபலியுடைய யாகத்திலே ஆஸுரப்ரக்ருதிகள் நடுவே தனியேவாமநவேஷத்தைக் கொண்டுபோய்ப் புக்கு வளர்ந்து, பூம்யந்தரிக்ஷாதிகள் மூன்றடியாலே அடங்கும்படி அளந்தவன். தேன்மிக்குப் பூத்திருந்துள்ள சோலையாலேசூழப்பட்ட திருமலையில்வந்து நின்ற *அயர்வறுமமரர்களதிபதியை அவர்களோடொத்த ருசியுடைய இவள் வணங்கித் தொழவல்லள்கொலோ?. .... .... .... .... .... (ரு)

மூ;—நேசமிலாதவர்க்கும் நினையாதவர்க்குமரியான்
வாசமலர்ப்பொழில்சூழ் வடமாமதுரைப்பிறந்தான்
தேசமெல்லாம்வணங்கும் திருமாலிருஞ்சோலைநின்ற
கேசவனம்பிதன்னைக்கெண்டையொண்கண்ணிகாணுங்கொலோ.

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (தானவனித்யாதி) * பரியனாகி வந்தவவுணனுடல் கீண்டுகந்தவன் படியைக் கீழநுஸந்தித்தாராய், * உவந்தவுள்ளத்தனாயுலகமளந்தவன்அவனேயாகையால் அவன்படி தன்னையநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

"வானவர்கோனை" என்கையால் (க)"நமஇத்யேவவாதிநஃ- நம இத்யேவவாதிநஃ" என்பார்படி இவளுக்குண்டென்னுமது தோற்ற "வணங்கித்தொழ"என்னுக்குத் தாத்பர்யமருளுகிறுர் (அவர்களோடித்யாதி). ... ... ... (ரு)

---

(க) பார-சாந்தி-௩௩௭-௩௫.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நேசம் | பரபக்தியானது | தேசம்எல்லாம் | எல்லாச்சேதநர்களாலு ம் [னாய், |
| இலாதவர்க்கும் | இல்லாதவர்களுக்கும் | வணங்கும் | ஆஶ்ரயிக்கப் படுமவ |
| நினையாதவர்க்கும் | (ஈஶ்வர னில்லையெ ன் கைக்காகிலும்) தத்விஷய ஸ்ம்ருதி யில்லாதவர்களுக்கும் | திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலை யிலே |
| | | நின்ற | வந்து ஸந்நிஹிதனாய், |
| அரியான் | கிட்டக்கூடாதவனா ய்,(பரபக்தியையும், அத்வேஷத்தையும் பிறப்பிக்கைக்காக) | கேசவநம்பிதன்னை | ப்ரஶஸ்தகேஶனாயி ருக்கிற எம்பெருமா னை, |
| | | கெண்டை | கெண்டைமத்ஸ்யம் போலே |
| வாசம் | பரிமளப்ரசுரமான | ஒண் | ஒளிபொருந்திய |
| மலர் | புஷ்பங்களையுடைய | கண்ணி | கண்களையுடையளான விவள் |
| பொழில் | சோலைகளாலே | காணுங்கொல்ஓ | கண்டுவிட வல்லளோ? (௬) |
| சூழ் | சூழப்பட்ட | | |
| வடமாமதுரை | திருவடமதுரையிலே | | |
| பிறந்தான் | வந்தவதரித்தவனாய், | | |

வ்யா;—ஆறும்பாட்டு. (நேசமிலாதவர்க்கும் நினையாதவர்க்குமரியான்) பரப (ॐ)க்தியில்லாதார்க்கும், ஈஶ்வரனில்லையென்கைக்காகிலும், நினையாதவர்க்குமரியான். "சதுர்விம்ஶதிதத்வாத்மிகையாயிருக்கும் ப்ரக்ருதி, பஞ்சவிம்ஶகன் ஆத்மா, ஷட்விம்ஶகன் ஈஶ்

---

அந;—ஆறும்பாட்டு. (நேசமித்யாதி) * உவந்த வுள்ளத்தனாயுலக மளந்தவன் * கோவலனாய் வெண்ணெயுண்டவனை அதிமாநுஷசேஷ்டிதங்களாலே ஸ்மரிப்பிக்கையாலே முதற்பாட்டிலே ப்ரஸ்துதனான கோவலர் கோவிந்தனுடைய திவ்யசேஷ்டிதங்களை மூன்று பாட்டாலே அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

"நேசம்-அதிஸ்நேஹமாய், அதில்லாதவர்" என்றபோதே, நினையாமை ஸித்தமன்றோ? "நினையாதவருக்கும்" என்று சொல்லுவானென்னென்ன; இதுக்கு இரண்டுவிதமாக அருளுகிறார் (ஈஶ்வரனித்யாதி வாக்யத்வயத்தாலே). இத்தால் ஈஶ்வரன் விஷயத்திலும் நிஷேதார்த்த ஸ்ம்ருதியில்லையென்றும், தத்வபரிகணநம் தானுமில்லையென்னவும் ப்ரஸக்தியில்லாதபடிபரிகணநமில்லாதவரென்றும் தாத்பர்யத்வயம் சொல்லிற்றாயிற்று. அன்றிக்கே கீழ்வாக்ய விவரணம் "சதுர்விம்ஶதித்யாதி" என்று-ஏகார்த்தமாகவுமாம். நேசமில்

வரன்'' என்று பரிகணித்ததில்லை என்று மதுவுமின்றிக்கே யிருக்கை. இத்தால் சொல்லிற்றாயிற்று. பரபக்திக்கும் அத்வேஷத்துக்கும் வாசி வையாதே தன்னைக் கொடுப்பானொருவனென்கை. (வாசமித்யாதி) பரபக்தியையும் அத்வேஷத்தையும் பிறப்பிக்கைக்காக வந்தவதரித்தவன். (தேசமித்யாதி) அந்த அவதாரபலமிருக்கிறபடி. (கேசவ நம்பிதன்னை) ப்ரஶஸ்த கேஶனாயிருக்கிறவனை. (கெண்டையித்யாதி) அக்குழலுக்குத் தகுதியான அவயவசோபையையுடையவள் கிட்டவல்லளேயோ? .... .... .... .... .... (௬)

மூ;—புள்ளினைவாய்பிளந்து பொருமாகரி கொம்பொசித்து
கள்ளச்சகடுதைத்த கருமாணிக்க மாமலையை
தெள்ளருவிகொழிக்கும் திருமாலிருஞ்சோலை நின்ற
வள்ளலைவாணுதலாள் வணங்கித்தொழ வல்லள்கொலோ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புள்ளினை | ப(ब)காஸுரனுடைய | கருமாணிக்க மாமலையை | கருத்துப் பெறுத்திருப்பதொரு மாணிக்க மலைபோலே ஶ்ரமஹரமான வடிவையுடைய, |
| வாய் | வாயை | தெள் | தெளிந்த |
| பிளந்து | கிழித்து, | அருவி | அருவிகளானவை |
| பொரு | யுத்தோந்முகமாய் | கொழிக்கும் | கொழித்தெறடாநின்றுள்ள |
| மா | பெரிய வடிவையுடையதான | திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலையிலே |
| கரி | குவலயா பீடத்தினுடைய | நின்ற | வந்து நின்றருளின |
| கொம்பு | கொம்பை | வள்ளலை | பரமோதாரனாயிருந்துள்ள ஸர்வேஶ்வரனை |
| ஒசித்து | முறித்தெறிந்திட்டு, | வாள் | ஒளிபொருந்திய |
| கள்ளம் | க்ருத்ரிமமே வடிவான | நுதலாள் | நெற்றியை யுடையளான விவள் |
| சகடு | சகடாஸுரனை | வணங்கித் தொழ வல்லள் கொலோ. | |
| உதைத்த | திருவடிகளால் துகளாய்ப் போம்படி பண்ணியருளிய, | | |

லாதவருக்கு அரியன் என்னலாம்; த்வேஷாதிக்யத்தாலே. நிஷேதார்த்தமும் நினையாதவர்க்கு அரியன் என்னவேணுமோவென்ன, பலித்தவர்த்தத்தை அருளுகிறார் (இத்தாலித்யாதி). (அத்வேஷத்துக்கும்) என்றது - அந்யார்த்தமாகிலும் நினைத்ததுக்குமென்கை. இத்தால் கண்டாகர்ணாதிகளுக்கும் மோக்ஷத்தைக் கொடுத்த சீர்மையினதிசயம் சொல்லிற்றாயிற்று.

வ்யா;—ஏழாம்பாட்டு. (புள்ளித்யாதி) பகாஸுரன் வாயைக் கிழித்து, யுத்தோந்முகமாய்ப் பெரியவடிவையுடைத்தாய்க்கொண்டு வந்த குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேநப்போக்கி, க்ருத்ரிமசகடமானது-மூலைவரவு தாழ்த்துச் சீறி நிமிர்த்த திருவடிகளுக்கிலக்காய்த்துகளாய்ப் போம்படிபண்ணி, விரோதிநிரஸநத்தாலே வளர்ந்து புகர் பெற்று நின்றநிலை. (தெள்ளருவியித்யாதி) விரோதிநிரஸநத்தால் வந்த ஶ்ரமமடைய ஆற்றலாம்படியான தேசமாயிற்று. தெளிந்த அருவிகளானவை கொழித்தெறடா நின்றுள்ள திருமலையிலே தன்னை ஸர்வஸ்வதாநம்பண்ணிக் கொடுநிற்கிறவனை; அந்த ஔதார்யத்துக்கு நாம் இலக்காக வேணுமென்றிருக்கிற இவளுடைய மநோரதம் ஒருபடித்தலைக்கட்டவற்றேயோ?. (எ)

மூ;—பார்த்தனுக் கன்றருளிப் பாரதத்தொருதேர் முன்நின்று
காத்தவன்றன்னை விண்ணோர்கருமாணிக்கமாமலையை
தீர்த்தனைப்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ் சோலைநின்ற
மூர்த்தியைக்கைதொழவும்முடியுங்கொலென் மொய்குழற்கே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | ஶத்ருபக்ஷமான துர்யோதநாதிகள் மிகைத்தவன்று | தீர்த்தனை | பரமபவித்ரனாய், |
| பார்த்தனுக்கு | அர்ஜுநன்பக்கலிலே | பூ | தர்ஶநீயமான |
| அருளி | க்ருபை பண்ணி | பொழில் | சோலைகளாலே |
| பாரதத்து | பாரதயுத்தத்திலே | சூழ் | சூழப்பட்ட |
| ஒரு | அத்விதீயமான | திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலையிலே |
| தேர் முன்நின்று | ரதத்தின் முன்னே நின்று | நின்ற | வந்து ஸந்நிஹிதனான |
| காத்தவன்தன்னை | (அந்த அர்ஜுநனை) நோக்கினவனாய், | மூர்த்தியை | ஸர்வேஶ்வரனை |
| விண்ணோர் | நித்யஸூரிகளுக்கு | என் | என்வயிற்றில் பிறந்த |
| கருமாணிக்க மாமலையை | நீலபர்வதம்போல் அநுபாவ்யமான வடிவையுடையனாய், | மொய்குழற்கு | அடர்ந்த கூந்தலையுடைய இவளுக்கு |
| | | கைதொழவும் | அவனைத்தொழுதலும் |
| | | முடியுங்கொல் | தலைக்கட்டுமோ?.(அ) |

அரு;—ஏழாம்பாட்டு. (புள்ளித்யாதி) தாத்பர்யமருளிச்செய்து சப்தார்த்தமருளுகிறார் (தெளிந்தவித்யாதி). "வணங்கித்தொழ" என்கையாலேமநோரதம் இவளுக்கிதுவேயென்றருளுகிறார் (அந்தவித்யாதி). ... ... (எ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (பார்த்தனுக்கன்றருளி) சத்ருபக்ஷமான துர்யோதநாதிகள் மிகைத்தவன்று, க்ருஷ்ணன் அர்ஜுநன் பக்கலிலே க்ருபையைப்பண்ணி பாரதஸமரத்திலே சத்ரு நிரஸநத்துக்குப் பரிகரமான தேரிலே ரதியைச் சிறுமவனுக்குத் தானிலக்காய்க்கொண்டு உடம்புக்கிடடாதே வெறுங்கையோடேநின்று, அவனை நோக்கினவனை. ஒருவிபூதிக்காக முன்னின்றபடி சொல்லுகிறது. இப்படி சத்ருக்கள் முன்னே தன்னை அழிவுக்கிட்டவனை. இப்படி நோக்கினவன்றானென்னில்; (விண்ணோரித்யாதி) நித்யஸூரிகள் பரிந்து நோக்க, அவர்களுக்கு அநுபாவ்யமாய், ஶ்ரமஹரமாய், ஸ்ப்ருஹணீயமான வடிவை யுடையனாயிருக்கிறவனை.

(தீர்த்தனை) அவர்களுக்கு அவ்வடிவை அநுபவிக்கைக்குக் கொடுத்துக் கொண்டிருக்கிற விருப்பு - தன்பேறாகையால் வந்த சுத்தியையுடையவனை. (பூம்பொழிலித்யாதி) அவர்களநுபவித்த வடிவழகை இங்குள்ளார் இழவாதபடி தனக்கு வாஸஸ்தாநமாகப் போரும்படி தர்ஶநீயமான பொழிலாலே சூழப்பட்ட திருமலையிலே நிற்கிற ஸர்வேஶ்வரனை. (கைதொழவித்யாதி) தன்மயிர்முடியாலே இவனைத்துவக்கவல்ல இவள் அவனைத் தொழுதாளாய்த் தலைக்கட்ட வல்லளேயோ?. .... .... .... .... .... (அ)

மூ;—வலம்புரியாழியனை வரையார்திரடோளன்றன்னைப்
புலம்புரிநூலவனைப்பொழில் வேங்கடவேதியனைச்
சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலைநின்ற
நலந்திகழ்நாரணனை நணுகுங்கொலென்னன்னுதலே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வலம்புரி | வலம்புரிச்சங்கையும் | புலம்புரி | கண்டாரிந்த்ரியங்கள் தன் பக்கல்துவக்கும்படியான |
| ஆழியனை | திருவாழியையுமுடையனாய், | நூலவனை | திருயஜ்ஞோபவீதத்தை யுடையனாய், |
| வரைஆர் | மலைபோலே | | |
| திரள் | திரண்டிருந்துள்ள | | |
| தோளன் தன்னை | திருத்தோள்களை யுடையனாய், | | |

அ.—எட்டாம்பாட்டு. (பார்த்தனுக்கித்யாதி) பார்த்தன்தேரூர்ந்தது ஒருபார்த்தனுக்காகவோ? ஶ்ரீபூமிப்பிராட்டிக்காகவும், தேவர்களுக்காகவுமன்றோவென்ன; அது உபலக்ஷணமென்கிறார் (ஒருவித்யாதி). ... ... (அ)

| | | | |
|---|---|---|---|
| பொழில் | சோலைசூழ்ந்த | நின்ற | வந்து ஸந்நிஹிதனாய், எழுந்தருளிய, |
| வேங்கடம் | திருவேங்கட மலையிலே நின்றருளுமவனாய், | நலம்திகழ் | நன்மைவிளங்காநின் ள்ள |
| | | நாரணனை | ஸ்ரீமந்நாராயணனை |
| வேதியனை | வேதைக ஸமதிகம்யனாய், | என் | என்வயிற்றில் பிறந் வளாய் |
| சிலம்பு இயல் ஆறுஉடைய | நூபுர ஸ்வபாவமயுடைத்தான | நல்நுதல் | விலக்ஷணயான நெ றியையுடையளா விவள் |
| திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலையிலே | நணுகும்கொல் | (அவனைக்) கிட்டவி வல்லளேயோ. ( |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (வலம்புரியித்யாதி) ஆஸ்ரித ரக ணத்துக்கிடான பரிகரத்தை யுடையவனை. அப்பரிகரத்தை யொழி யவும் ரக்ஷிக்கைக்கிடான கொள்மிடுக்கை யுடையவனை. ரக்ஷித்தில னேயாகிலும் விடவொண்ணாதபடி கண்டாரிந்த்ரியங்கள் தன் பக்க லிலே துவக்கைக்கிடான திருயஜ்ஞோபவீதத்தை யுடையவனை ரக்ஷிக்கைக்குப் பாங்காக ரக்ஷ்யவர்க்கமுள்ள விடந்தேடி, வேதைக ஸமதிகம்யனாய்வைத்துக் கண்ணுக்கிலக்காம்படி திருமலையிலே நின் வனை. அது தன்னைப் பரத்வத்தோடொக்கச் சொல்லலாம்படி எத்தனையேனும் சாலத்தண்ணியர்க்கும் முகம் கொடுத்துக்கொ இத்திருமலையிலே நிற்கிற நீர்மையில்ஏற்றத்தையுடையவனை. நித்ய ஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்கும் ஒக்கமுகம் கொடுத்துக்கொண் ருக்கிற விடமிறே இவ்விடம். ஸ்வர்க்கத்தில் அப்ஸரஸ்ஸூக்கள் வ தாஸ்ரயிக்க, அவர்களுடைய சிலம்பினுடைய ஸ்வபாவத்தை யுடை

---

அரு;—ஒன்பதாம்பாட்டு. (வலம்புரியித்யாதி) கோவலனானவன் * மந் பாய் வடவேங்கடவனானையாலே, வடமாமலையப்பனை அநுபவித்துக்கொண் தென்திருமாலிருஞ்சோலை மலையில் அழகரையும் சேர்த்து அநுஸந்திக்கி றென்று ஸங்கதி.

''புலன்களையடையத்தன் பக்கலிலே, புரியும்படியான-திரும்பும்படியான' என்று சப்தார்த்தமாய் தாத்பர்யம் (ரக்ஷித்திலனித்யாதி). ''அப்ஸரஸ்ஸூ கள் ஆஸ்ரயிப்பார்கள்'' என்று சேஷம்பூரித்து, வாக்யத்வயமாக யோஜிப்பது (ஸ்வபாவத்தை) - சப்திக்கையை. ... ... ... ... ... (

;தான ஆற்றையுடைய திருமலையிலேவந்து நிற்கிறகல்யாணகுணங்
ளாலும் உஜ்ஜ்வலிதனாகாநின்றுள்ள ஸர்வாதிகனான ஸர்வேஶ்வர
னக் கிட்டுகைக்கு யோக்யமான அழகையுடைய இவள் அவனைக்
ட்டிவிட வல்லளேயோ?. .... .... .... .... (க)

மூ;—தேடற்கரியவனைத் திருமாலிருஞ்சோலை நின்ற
ஆடல்பறவையனை யணியாயிழை காணுமென்று
மாடக்கொடிமதிள்சூழ் மங்கையார் கலிகன்றிசொன்ன
பாடல்பனுவல்பத்தும் பயில்வார்க்கில்லை பாவங்களே.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம். (க0)



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேடற்கு | (ஸ்வயத்நத்தாலே) தேடுகைக்கு | கொடி | கொடிகளோடு கூடின |
| அரியவனை | அஶக்யனாய், | மதிள் | திருமதிள்களாலே |
| திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலையிலே | சூழ் | சூழப்பட்ட |
| நின்ற | வந்து ஸந்நிஹிதனாய், | மங்கையார் | திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநரான |
| ஆடல்பறவையனை | பெரிய திருவடியை வாஹநமாகவுடையனை ஸர்வேஶ்வரனை | கலிகன்றி | கலியன் |
| அணிஆய் | தரிக்கப்பட்டனவான | சொன்ன | அருளிச்செய்த |
| இழை | ஆபரணங்களையுடையளான இவள் | பாடல் | பாடலான |
| காணும் என்று | காணுமென்று, | பனுவல்பத்தும் | பாசுரங்களின்பத்தையும் |
| மாடம் | மாடங்களில் நாட்டின | பயில்வார்க்கு | அப்யஸிப்பார்க்கு |
| | | பாவங்கள் | ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான பாபங்கள் |
| | | இல்லை | கழியப்பெறும். (க0) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (தேடற்கரியவனை) தானே தன்னைக் கொடுவந்து காட்டில் காட்டுமத்தனையல்லது, ஸ்வயத்நத்தால் ஒருவராலும் ப்ராபிக்க அரிதானவனை. (திருமாலித்யாதி) திருவடி திருத்தோளிலே ஏறித்திருமலையிலே வந்து தன்னைத்தானே கொடுவந்து காட்டினவனை. அவனைக்காண்கைக்கிடாகத் தன்னை அலங்கரித்துக்

அரு.—பத்தாம்பாட்டு. (தேடற்கித்யாதி) "அணி-தரிக்கப்பட்ட, ஆய்-ஆன, இழைகளையுடையவள்" என்றாய் தாத்பர்யம் (அவனையித்யாதி). "காணு

கொண்டிருக்கிற இவள் சாறுமென்று, மாடக்கொடிகளோடுகூடின மதிள்சள் இவற்றாலே சூழ்ந்திருக்கிற திருமங்கையிலுள்ளார்க்கு ப்ர தாநரான ஆழ்வாரருளிச்செய்த பாடலான பனுவல்பத்தையும் அப்யஸிப்பார்க்கு ப்ராப்திப்ரதிபந்தகங்களடங்கலும்போம். காணுங் கொலோ என்கிற ஸம்சயம் இவர்தம்மோபேடயாய், இவருடைய ப்ர பந்தத்தை அப்யஸிப்பார்க்கு ப்ராப்தியில் ஒருகண்ணழிவில்லை.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி

ஒன்பதாம்பத்து ஒன்பதாம்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாம்பத்து பத்தாந்திருமொழி

### எங்களெம்மிறை ப்ரவேசம்.

வ்யா.—எங்களெம்மிறையின் ப்ரவேசம்:—ஸர்வாபேக்ஷித ப்ரத ஞய்க்கொண்டு திருமலையிலே வந்து நிற்கிற நிலையை அநுஸந்தித் தார்கீழ். அத்தனைபொதுவான நிலைதவிர்ந்து ஆஶ்ரிதர்க்கே ஸ்வம் மாய்க்கொண்டு திருக்கோட்டியூரிலே எழுந்தருளி நிற்கிற நிலையை அநுஸந்திக்கிறுர். அவன் பண்டு, பெற்ற தமப்பன் பகையாக

ம்" என்றது - காணுங்கொலோ என்று ஸம்ஶயித்து நிஶ்சயித்த நிஶ்சய மென்று திருவுள்ளம்பற்றி யருளுகிறுர் (காணுங்கொலென்கிறவித்யாதி). ஸம்ஶயபூர்வகமாக நிஶ்சயிக்கவேண்டாதே, முதலடியிலேதானே நிஶ்சித மென்கை. ... ... ... ... ... ... ... ... (க0)

ஜீயர்திருவடிகளே சரணம்.

அநு;—எங்களெம்மிறையின் ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே "மூவரில் முதல்வன்" இத்யாதியாலே பொதுவாக ஸகலருக்கும் உபகரித்தபடிகளை அநுஸந்தித்தவர்-இத்திருமொழியிலே "எங்களெம்மிறை" என்றுஉபக்ரமித்த படியைத்திருவுள்ளம்பற்றி-ஸங்கதியருளுகிறுர் (ஸர்வேத்யாதி).(ஸர்வாபேக்ஷி தப்ரதனுய்) என்றது -ஸர்வருக்கும் அபேக்ஷிதங்களைக்கொடுப்பானுய் என்கை. அநாத(ஶ்ரி)ர்க்கேஸ்வம்மானபடியை உபபாதித்துக்கொண்டு நிகமிக்கிறுர் (அவ

ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குதவி, அவன் விரோதியைப்போக்கி *அதிருங்கழல் பொருதோளிரணியனாகம் பிளந்தரியாய், உதிரமளைந்த கையோடே நிற்கிற தேசமென்றும், அவன் தான் அநேகமவதாரங்கள்பண்ணி ஆஶ்ரிதர்க்கு உதவினவனென்றும் நினைத்து, அத்தனை பொதுவான நிலைதவிர்ந்து ஆஶ்ரிதர்க்கே ஸ்வம்மாய்க்கொண்டு திருக்கோட்டியூரிலே எழுந்தருளி நிற்கிறவனுடைய ஸௌலப்யத்தை அநுஸந்தித்துப்ரீதராய்அநுபவிக்கிறார். ப்ரஹ்லாதாதிகளுக்கு (௧)"మత్ స్సర్వ మహం సర్వమ్-மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" என்னலாம்படி ஹ்ருதயத்தை விடாதேயிருந்து ப்ரஸாதத்தைப்பண்ணுமவன் திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானனென்கிறார். .... ....

மூ;—

எக்களெம்மிறையெம்பிரா னிமையோர்க்கு நாயகனேத்தடியவர்
தங்கள்தம்மனத்துப் பிரியாதருள்புரிவான்
பொங்குதண்ணருவிப்புதம்செய்யப் பொன்களேசிதறவிலங்கொளி
செங்கமலமலரும் திருக்கோட்டியூரானே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எங்கள் எம் இறை | எங்களுக்கு அஸாதாரண ஸ்வாமியாய், | அருள்புரிவான் | (அவர்களுக்கு)ப்ரஸாதத்தைப் பண்ணுமவனானஎம்பெருமான், |
| எம்பிரான் | எங்களுக்கு அஸாதாரணோபகாரகனாய், | பொங்கு | கிளர்த்தியையுடையதாய் |
| இமையோர்க்கு | நித்யஸூரிகளுக்கு | தண் | குளிர்ந்திருந்துள்ள |
| நாயகன் | நிர்வாஹகனாயும், | அருவிசெய்ய | அருவிகளோடொத்த (அருவிகள் நீர்மாறாதே ஒழுகுமாபோலே) |
| ஏத்து | ஸ்தோத்ரம் பண்ணாநின்றுள்ள | புதம் | மேகங்களானவை |
| அடியவர்தங்கள் தம் | அடியார்களுடைய | பொன்களே | பொன்களையே |
| மனத்து | நெஞ்சிலே | சிதற | சிந்த |
| பிரியாது | பிரியாதேயிருந்து | | |

னித்யாதி). முதற்பாட்டில்ப்ரமேயத்தையருளுகிறார் (ப்ரஹ்லாதேத்யாதி). ப்ரஹ்லாதன்நிமித்தமாக ருஷிகள் கோஷ்ட்டிபண்ண; அதுக்காகப்ரத்யக்ஷமாகையாலேதிருக்கோட்டியூரென்றுபேராகையாலே (ப்ரஹ்லாதாதிகளுக்கு) என்று.

(௧) வி-பு-௧-௧௯-அரு.

| | | | |
|---|---|---|---|
| | (அத்தாலே) | அலரும் | (மாறாதே) அலராநின்றுள்ள |
| இலங்குஒளி | மிக்க ஒளியையுடைத்தாய், | திருக்கோட்டியூரானே | திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானவன். (௧) |
| செம்கமலம் | செந்தாமரைமலர்களானவை | | |

வ்யா.—முதற்பாட்டு. (எங்களித்யாதி) எங்களிலே விரிந்த சொல்லு "எம்" என்று; எங்கள் ஸ்வாமிஎன்றபடி. (எம்பிரான்) உபகாரகன். (இமையோர்க்குநாயகன்) * அயர்வறுமமரர்களதிபதி. அயர்வறுமமரர்களதிபதியாயிருந்து ஆஸ்ரிதரான எங்களுக்கு ஸ்வாமியாய், உபகாரகனுமாய். (ஏத்தடியவர்தங்கள்தம்மனத்து) "அடியவர்தங்கள்" என்றது - அடியவர்க்கென்றபடி. தம்திருநாமத்தைச் சொல்லி ஏத்தும்படியாக நெஞ்சைப்பிரியாதேயிருந்து அவர்களுக்கு ப்ரஸாதத்தைப் பண்ணுமவன். பொங்கென்று - மேலுக்கு. புதம்-அம்புதம்;- ஆகிறது-மேகம்.

(பொங்குதண்ணருவிப்புதம்செய்ய) கிளர்ந்து ப்ரமஹரமான அருவிகள் நீர்மாறாதே ஒழுகுமாபோலே. (புதம்பொன்களேசிதற) மேகம் பொன்களையே சிந்த. அத்தாலேமிக்க ஒளியையுடைத்தாய், செந்தாமரைகள் மாறாதே அலர்ந்ததிருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானவன். .... .... .... .... .... .... .... (௧)

---

அ௫;-முதற்பாட்டு.(எங்களித்யாதி). "எங்கள்"என்றும், "எம்"என்றும் புநருக்தமன்றோவென்ன (எங்களிலேயித்யாதி). "எங்கள்" என்றபதத்தில்அர்த்தத்தைத்தானேவிவரிக்கிறசொல்லென்றபடி. இரண்டுபதம்சொன்னதுக்குப்ரயோஜநம் (எம்மென்றித்யாதி). அஸாதாரண்யம்தொற்ற "எம்மிறை" என்று விசேஷித்தாரென்றுகருத்து. "எம்பிரான்"என்றவிடத்திலும், "எம்" என்றது அஸாதாரண்யத்யோதகமென்று விவக்ஷித்தருளுகிறார். (உபகாரகன்) என்று. "தங்கள்" என்றும், "தம்" என்றும் இரண்டிருக்கையாலே, இதுவும் விரிந்த சொல்லாகை உசிதமென்று விவக்ஷித்து, அடியவரானதங்களுக்கே, அஸாதாரணமான-பவ்யமானவென்று விவக்ஷித்தருளுகிறார் (அடியவரித்யாதி).

(பொங்கென்று)என்றது-"பொங்குதண்ணருவி" என்றதென்றபடி.(மேலுக்கு) என்றது-புதமென்கிறபதத்துக்கு மேலேயிருக்கிற செய்யவென்கிற பதத்துக்கென்றபடி. இப்படி அந்வயித்தக்ரமத்திலே அர்த்தமருளுகிறார் (கிளர்ந்தித்யாதி). "செய்ய" என்றது-ஒத்தவென்றாய், (ஒழுகுமாபோலே) என்றது. (௧.

மூ;—எவ்வநோய்தவிர்ப்பானெமக்கிறையின்னகைத்துவர்வாய்நிலமகள்
செவ்விதோயவல்லான் திருமாமகட்கினியான் [தம்
மௌவல்மாலைவண்டாடும் மல்லிகைமாலையோடு மணைந்தமாரு
தெய்வநாறவரும் திருக்கோட்டியூரானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எமக்கு | எனக்கு | இனியான் | போக்யபூதனான எம்பெருமான், |
| இறை | வகுத்த ஸ்வாமியாய், | வண்டு | வண்டுகளானவை |
| எவ்வம் | துக்காவஹமான | ஆடும் | (மதுபாநார்த்தமாக) ஆடாநின்றுள்ள |
| நோய் | வியாதிகளை | மௌவல்மாலை | ஜாதிமல்லிகைப் பூமாலையோடும் |
| தவிர்ப்பான் | போக்குகைக்காக, | மல்லிகைமாலை யோடும் | மல்லிகைப்பூமாலை யோடும் |
| இன்நகை | புன்சிரிப்பையும் | அணைந்த | கூடியணைந்த |
| துவர்வாய் | சிவந்த அதரத்தையுமுடைய | மாருதம் | காற்றானது |
| நிலமகள் | ஸ்ரீ பூமிப்பிராட்டியினுடைய | தெய்வம் நாற வரும் | அப்ராக்ருதமான பரிமளத்தை கந்தி(ஃஜி)க்கவந்துலாவா நிற்கிற |
| செவ்வி | செவ்வியை | | திருக்கோட்டியூரான். (உ) |
| தோயவல்லான் | அநுபவிக்கவல்லனாய், (அத்தாலே) [கு | | |
| திருமாமகட்கு | பெரியபிராட்டியாருக் | | |

அவ.—இரண்டாம்பாட்டு. நம்முடைய துக்கங்களை யெல்லாம் போக்குகைக்காகப் பிராட்டிமாரோடேகூடத் திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானனென்கிறார்.

வ்யா;— (எவ்வநோயித்யாதி) எனக்கு வகுத்த ஸ்வாமியாகை

---

அரு;—இரண்டாம்பாட்டு. (எவ்வநோயித்யாதி). கீழ் தமக்குஅஸாதாரணஸ்வாமியாய் அருள்புரிவானென்றருளிச் செய்தார். இதில் புருஷகாரஸம்பத்தி குறைவற்றிருக்கையாலே நம் துக்கங்களெல்லாம் போக்குமென்று அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதியை உட்கொண்டு அவதாரிகையருளுகிறார் (நம்முடையவித்யாதி).

"எமக்கிறை - எவ்வநோய் தவிர்ப்பான்" என்றந்வயித்து, எவ்வம் - துக்கமாய்த்தாத்பர்யம் (எனக்கித்யாதி). வண்டோடு-மௌவல் இத்யாதிக்கந்வ

யாலே நம்முடைய துக்காவஹமான வ்யாதியைப்போக்கும் ஸ்வபாவனாய். (இன்னகைத்துவர்வாய்) இனியநகையையும் சிவந்த அதரத்தையுமுடைய ஸ்ரீபூமிப்பிராட்டியுடைய செவ்வியை அநுபவிக்க வல்லனாய், அத்தாலே பெரியபிராட்டியாருக்குஇனியன். (௧) "[illegible]- நகஸ்சிந்நாபராத்யதி" என்றுகுற்றம்பொறுப்பிப்பாளொருத்தியும், பொறைக்கு உவாத்தாயிருப்பாளொருத்தியுமாகக் கூடி இனியனாயிருக்கிறவன். (மௌவலித்யாதி) மௌவல் மாலையோடும் மல்லிகைமாலையோடும் மதுபானம்பண்ணின வண்டுகள் ஆடாநின்றன. இவற்றோடேகூடி அணைந்தமாருதமுண்டு-காற்று, அது அப்ராக்ருதமான பரிமளத்தை கந்தி ([illegible]) க்கவந்து உலாவாநிற்கும் திருக்கோட்டியூரானே. .... .... .... .... .... (௨)

மூ;—வெள்ளியான்கரியான்மணிநிறவண்ணன்விண்ணவர்தமக்கிறையெமக்
கொள்ளியானுயர்ந்தா னுலகேழுமுண்டுமிழ்ந்தான் [தசை
துள்ளுநீர்மொண்டுகொண்டு சாமரைக்கற்றை சந்தனமுந்திவந்
தெள்ளுநீர்புறவில் திருக்கோட்டியூரானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெள்ளியான் | (க்ருதயுகத்திலே) வெளுத்த நிறத்தையுடையனாய், | எமக்கு | எனக்கு |
| கரியான் | (கலியுகத்திலே) கறுத்த நிறத்தையுடையனாய், | ஒள்ளியான் | தன்னழகைக் காட்டித்தந்தவனாய், (ப்ரளயகாலத்திலே) |
| மணிநிறவண்ணன் | (த்வாபரயுகத்திலே) பாசியின் பசும்புறம் போன்றநிறத்தையுடையனாய், | உலகு ஏழும் | ஸப்தலோகங்களையும் |
| விண்ணவர் தமக்கு | நித்ய ஸூரிகளுக்கு | உண்டு | திருவயிற்றிலேவைத்து நோக்கி |
| இறை | நிர்வாஹகனாய், | உமிழ்ந்தான் | (பிறகு) வெளிநாடு காண உமிழ்ந்தஸர்வேஶ்வரன், |
| உயர்ந்தான் | ஸர்வஸ்மாத்பரனாய், (இப்படியிருந்தும்) | துள்ளும் | குறுந்திவலைகளையுடைய |
| | | நீர் | நீரானது |
| | | சாமரைக்கற்றை | சாமரத்திரளையும் |
| | | சந்தனம் | சந்தநத்தையும் |

யம் திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (மௌவலித்யாதி). ... ... (௨)

(௧) ரா-யு-௧௧௬-௨௨.

| | |
|---|---|
| மொண்டுகொ இழுத்துக்கொண்டு ண்டுவந்து வந்து உந்தி அசை தள்ளி அலையாநிற்ப தாய் | தெள்ளும்நீர் கொழிக்கும்ஸ்வபாவத் தையுடைய புறவில் பர்யந்தத்தையுடைத் தான திருக்கோட்டியூரான். (௩) |

அவ;—மூன்றும்பாட்டு. அவ்வோயுகங்கள் தோறும் ஆஶ்ரயிப்பார் உகந்த திருநிறத்தைத்தானும் உகந்துகொண்டு ப்ரளயாத்யாபத்துக்களிலும் உதவும்ஸ்வபாவனவன் திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனை னென்கிறார்.

வ்யா;—(வெள்ளியானித்யாதி). க்ருதயுகத்திலே வெளுத்த நிறத்தையுடையனாய், கலிகாலத்தில் ஏதேனும் வடிவுகொண்டாலும் விரும்புவாரில்லாமையாலே கறுத்ததிருநிறத்தையுடையனாய், த்வாபரத்திலே நீலநிறத்தை யுடையனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், ஸர்வாதிகனாய்வைத்து, எனக்குவைத்தகண்வாங்கவொண்ணாதபடி தன்னழகைக்காட்டி, ப்ரளயாபத்தில்ஜகத்தைஉண்டு ஆபத்ஸகனாய் உமிழ்ந்தவன்.

“ துள்ளுநீர் ” என்று - மேலுக்கு. குறுந்திவலைகளையுடைய திரைகளாலே நீரானது சாமரத்திரளையும் சந்தநத்தையும் இழுத்துக்கொடுவந்து தள்ளி அலையாநிற்பதாய்; (தெள்ளுநீர் புறவில்) கொழிக்கும் ஸ்வபாவத்தையுடைய பர்யந்தத்தோடேகூடின திருக்

அரு;-மூன்றும்பாட்டு. (வெள்ளியானித்யாதி) பிராட்டிமார் அருகேயிருக்கையாலே நம்முடைய துக்கங்களைத் தீர்ப்பானென்றார் கீழ் ; அதுக்கடியான ஆபத்ஸகத்வத்தை அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி திருவுள்ளம் பற்றி அவதாரிகை யருளுகிறார். (அவ்வோவித்யாதி).

(கறுத்த திருநிறத்தை) என்றது - * முழுதும் நிலைநின்ற கொண்டல் வண்ணமான ஸ்வாபாவிகவர்ணத்தைச் சொன்னபடி. (நீலநிறத்தை) என்றது - * பாசியின் பசும் புறம் போன்ற நிறமென்கை. “உயர்ந்தான் - எமக்கொள்ளியான் ” என்றநவயித்தருளுகிறார் (ஸர்வேத்யாதி).

(மேலுக்கு) என்றது- “அசை ” என்கிற பதத்துக்குச் சேஷமென்றபடி. “ சாமரைக் கற்றை சந்தனம் மொண்டுகொண்டுவந்து துள்ளு நீராய், - துளி துளியான நீராய், அசைந்து துள்ளுகை ஸ்வபாவ மாகவுடைத்தான புறவில் ” என்று அந்வயம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யம் (குறுந் திவலை யென்று தொடங்கி, ஊரானே என்னுமளவும்). அந்வயம் முன்புபோலே தானே

கோட்டியூரானே. (தெள்ளுநீர்) தெளிந்த நீரையுடைய பர்யந்தமென்னுமாம்; (துள்ளுநீர்) தெழித்துவருகிற நீரானது. .... (௩)

மூ;—

ஏறுமேறியிலங்குமொண்மழுப்பற்று மீசற்கிசைந்துடம்பிலோர்
கூறுதான்கொடுத்தான் குலமாமகட்கினியான்
நாறுசெண்பகமல்லிகைமலர் புல்கி யின்னிளவண்டுநன்னறும்
தேறல்வாய்மடுக்கும் திருக்கோட்டியூரானே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏறு ஏறி | வ்ருஷபத்திலேயேறி | இனியான் | இனியனாயிருந்துள்ள ஸர்வேஶ்வரன், |
| இலங்கும் | உஜ்ஜ்வலமாய் | இன் | தர்ஶநீயமாய் |
| ஒண் | அழகிதான | இள | பால்யாவஸ்த்தமான |
| மழு | 'மழு' என்னும் ஆயுதத்தை | வண்டு | வண்டானது |
| பற்றும் | கையிலேந்திக்கொண்டிராநின்ற | நாறு | பரிமளத்தையுடைய |
| ஈசற்கு | ருத்ரனுக்கு | செண்பகம் | செண்பகப்பூவையும் |
| இசைந்து | திருவுள்ளமொருப்பட்டு | மல்லிகைமலர் | மல்லிகைப்பூவையும் |
| உடம்பில் | தன்திருமேனியில் | புல்கி | தழுவி |
| ஓர்கூறு | ஒருபாகத்தை | நன்னறும் | மிகவும்விலக்ஷணமான |
| கொடுத்தான் | கொடுத்தருளினவனாய், | தேறல் | தேனிலே |
| குலமாமகட்கு | பெரியபிராட்டியார்க்கு | வாய் | வாயைவைத்து |
| | | மடுக்கும் | உட்கொள்ளாநின்றுள்ள, |
| | | | திருக்கோட்டியூரான். (௪) |

அவ;— நாலாம்பாட்டு. பிராட்டியோடொக்க ருத்ரனுக்கும்திருமேனியிலே இடங்கொடுத்த சீலவான் திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானானென்கிறார்.

---

திருவுள்ளம்பற்றி "துள்ளுநீர்" என்றதுக்கும், "தெள்ளுநீர்" என்றதுக்கும் அர்த்தாந்தரமருளுகிறார் (தெளிந்தவித்யாதி). ... ... ... (௩)

அரு;— நாலாம்பாட்டு. (ஏறுமித்யாதி) கீழ்ப்பாட்டில் ஆபத்ஸகத்வாதி குணங்களைச் சொன்னார். தாழ்ந்தார்க்கு முகம் கொடுத்து ஆபத்தைப் போக்குமோவென்ன; ஸுசீலனென்கிறாரென்று திருவுள்ளம்பற்றி அவதாரிகையருளுகிறார் (பிராட்டியித்யாதி).

வ்யா;—(ஏறுமித்யாதி) வ்ருஷபத்திலேயும்ஏறி, உஜ்ஜ்வலமான அழகிய மழுவைப்பற்றும் ருத்ரனுக்கு; ஸர்வேஶ்வரன் திருவடியை வாஹநமாகவுடையனாயிருக்குமாகில் ஓர் எருத்தை ஏறி, அவன் திருவாழியைப்பிடிக்குமாகில் ஒருமழுவைப்பிடித்து இப்படி துர்மாநியான ருத்ரனுக்கு துர்மாநம்பார்த்து உபேக்ஷியாதே இசைந்து திருமேனியிலே ஒருகூறுகொடுத்தவன். (குலமித்யாதி) பெரியபிராட்டியாருக்கு (க) "பித்தர்பனிமலர்மேல் பாவைக்கு" என்கிறபடியே அவளோடொக்க இவனுக்கும் திருமேனியிலே இடம் கொடுத்தவன். "நாறுசெண்பகம்" என்றுமேலுக்கு, பரிமளத்தையுடைத்தான செண்பகப்பூ, மல்லிகை இவற்றைத்தழுவி, இவற்றால்வந்த உஷ்ணமாற்றுகைக்கு தர்ஶநீயமாய் பால்யாவஸ்த்தமானவண்டு அறவிலக்ஷணமான தேனிலே வாயை மடாநிற்கும் திருக்கோட்டியூரானே. .... .... .... .... .... .... .... (௪)

மூ;—

வங்கமாகடல்வண்ணன் மாமணிவண்ணன் விண்ணவர்கோன்மது
தொங்கல்நீண்முடியான் நெடியான்படி கடந்தான் [மலர்
மங்குல்தோய் மணிமாடவெண்கொடிமாகமீதுயர்ந்தேறிவானுயர்
திங்கள்தானணவும் திருக்கோட்டியூரானே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வங்கம் | மரக்கலங்களையுடைய | விண்ணவர் | நித்ய ஸூரிகளுக்கு |
| மாகடல் | மஹார்ணவம்போன்ற | கோன் | ஸ்வாமியாய், |
| வண்ணன் | திருநிறத்தையுடைய | மது | தேனையுடைத்தான |
| மா | ஶ்லாக்க்யமான [வனாய், | மலர்த்தொங்கல் | பூமாலையோடுகூடிய |
| மணி | நீலமணிபோன்ற | நீள் | ஆதி(ஆ)ராஜ்யஸூசகமான |
| வண்ணன் | திருநிறத்தையுடையனாய், | | |

"இசைந்து" என்றுவிசேஷித்த துக்குக்கருத்தென்னென்னவருளுகிறார் (ஸர்வேஶ்வரனித்யாதி). (மேலுக்கு) என்றது - நாறு செண்பக மலர் புல்கி என்ற வளவை உட்கொண்டு, வண்டென்றபதத் துக்கு மேலே அந்வயித்துக் கொள்வதென்கை. இதுக்கநுகுணமாக தர்ஶநீயமாய், (பால்யாவஸ்த்தமான வண்டு) என்று வாக்யத்தைமுந்துற அந்வயித்து, பரிமளேத்யாதியை அநுஸந்திப்பது. பருகும் என்னாதே, "மடுக்கும்" என்றதுக்குத் தாத்பர்யம் (இவற்றாலித்யாதி). ... ... ... ... ... ... (௪)

(க) திருநெ-௧௮.

| | | | |
|---|---|---|---|
| முடியான் | திருவபிஷேகத்தை யுடையனாய், | வெண் | வெளுத்த |
| நெடியான் | ஸர்வாதிகனாய், | கொடி | த்வ (த்ஸ) ஜ படங்க ளானவை |
| படி | பூமிப்பரப்படங்க | மாகம்மீது | ஆகாசத்தின்மேலே |
| கடந்தான் | தன் திருவடிகளால் அளந்து கொண்ட ஸர்வேஶ்வரன், | உயர்ந்து ஏறி | உயரப்பரந்து |
| | | வான் உயர் | ஸ்வர்க்கத்திலே வர்த்திக்கிற |
| மங்குல் | மேகங்கள் | திங்கள்தான் | சந்த்ரனை |
| தோய் | தவழப்பெற்ற, | அணவும் | சென்று ஸ்பர்ஶியாநிற்கிற |
| மணி | ரத்நமயமான | | |
| மாடம் | மாடத்திலே கட்டின | | திருக்கோட்டியூரான். (௫) |

அவ;—அஞ்சாம்பாட்டு. பண்டு பூமியை அளந்துகொண்டவன் இப்போது திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானனென்கிறார்.

வ்யா;—(வங்கமித்யாதி) மரக்கலங்களையுடைய மஹார்ணவம் போலேயுமாய், ஶ்லாக்யமான நீலமணிபோலேயிருக்கும் திரு நிறத்தை யுடையனாய்; (விண்ணவர் கோன்) இவ்வடிவை நித்யஸூரிகளுக்கு போக்யமாகக்கொடுத்த அயர்வறுமமரர்களதிபதியாய். (மது மலரித்யாதி) தேனையுடைத்தான பூமாலையோடேகூடின ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தை யுடையனாய், ஸர்வாதிகனாய், பூமியெல்லாம் தன்கால்கீழே இட்டுக்கொண்டவன். "மங்குல்" என்று மேலுக்கு. மேகத்தில் சென்று கிட்டி மணிமயமான மாடத்திலே கட்டின வெள்ளைக்கொடி ஆகாசத்தின்மேலே உயரப்பரந்து ஸ்வர்க்கத்திலே வர்த்திக்கிற சந்த்ரனைச் சென்று ஸ்பர்ஶியாநிற்கும். (வானுயர்திங்கள்) மிகவுமுயராநின்ற சந்த்ரனை அணையாநின்றதிருக்கோட்டியூரானே!. .... .... .... .... .... .... (௫)

---

அரு;—அஞ்சாம்பாட்டு (வங்கமித்யாதி) கீழ்ச்சொன்ன ஸௌஶீல்யத்தை பரத்வமென்னும்படி, ஊர்த்ஷ்ட்ட சண்டாள விபாக(ஸ்ரீ)மறவந்த நிரவதிக ஸௌசீல்யத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"மாகமீதுயர்" என்று விசேஷிக்கையாலே இதுக் குறுப்பாக "மங்குல் தோய்" என்றது கொடிபதத்துக்கு விசேஷணமாக அநுஸந்திப்ப தென்று விவக்ஷித்து அந்வயம் காட்டுகிறார் (மங்குலென்று மேலுக்கு என்று). வான் பதத்துக்கு அர்த்தாந்தரம் (மிகவுமித்யாதி). ... ... ... (௫)

மூ;—காவலனிலங்கைக்கிறைகலங்கச் சரம் செலவுய்த்துமற்றவன்
ஏவலம்தவிர்த்தானென்னை யாளுடையெம்பிரான்
நாவலம்புவிமன்னர் வந்துவணங்க மாலுறைகின்றதிங்கெனத்
தேவர்வந்திறைஞ்சும் திருக்கோட்டியூரானே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காவலன் | ஜகத்துக்குரக்ஷகன் தானே யென்றிருக்கு | எம்பிரான் | அஸாதாரணோபகாரகனான ஸர்வேஶ்வர |
| இலங்கைக்கு | லங்கைக்கு [மவனாய் | மால் | "எம்பெருமான் [ன், |
| இறை | நிர்வாஹகனான ராவணன் | உறைகின்றது | வந்து ஸந்நிதி பண்ணு |
| | | இங்கு என | இவ்விடத்திலே" [வது என்று |
| கலங்க | முடியும்படிக்கீடாக | | |
| சரம் | பாணங்களை | நாவலம்புவி | ஜம்பூத்வீபத்திலுள்ள |
| செலவுய்த்து | செல்லநடத்தி | மன்னர் | ராஜாக்கள் |
| மற்று | மேல் | வந்து | வந்து |
| அவன் | அந்த ராவணனுடைய | வணங்க | ஆஶ்ரயிக்க, |
| ஏவலம் | எய்யவல்ல மிடுக்கை | | (அத்தைக்கண்டு) |
| தவிர்த்தான் | கழித்தருளினவனாய் (அச்செயலாலே) | தேவர் | ப்ரஹ்மாதி தேவர்களு |
| | | வந்து | வந்து [ம் |
| என்னை | அடியேனை | இறைஞ்சும் | ஆஶ்ரயியாநிற்கிற |
| ஆளுடை | அடிமைகொண்ட | | திருக்கோட்டியூரான். (கூ) |

அவ;—ஆறும்பாட்டு. ராவணன் மிடுக்கையழித்த தசரதாத்மஜன் இப்போது திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானானென்கிறார்.

வ்யா;—(காவலனித்யாதி) ஈஶ்வரனோடொக்க நானும் காவலனென்று திக்பாலகர்களைத் தவிர்த்து ஜகத்துக்கு ரக்ஷகன் தானேயாய், லங்கைக்கு நிர்வாஹகனானவன் மலங்கும்படிசரங்களைச்செல்லநடத்தி ராவணனுடைய "எய்யவல்லார் என்னோடொப்பாரில்லை" என்னும்மிடுக்கைத் தவிர்த்து, அச்செயலாலே என்னை அடிமை

---

அநு;—ஆறும்பாட்டு. (காவலனித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸௌசீல்யத்தை அநுஸந்தித்தவர், இப்பாட்டால் விரோதியை நிரஸிப்பானென்று அவனுடைய சக்தியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

கொண்டிருக்கும் உபகாரகனானவன். "நாவலம்" என்றுமேலுக்கு. ஜம்பூத்வீபத்தில் ராஜாக்கள்வந்து ஆஸ்ரயிக்க, "ஸர்வேஸ்வரன்வந்து ஸந்நிதிபண்ணுகிறதிங்கே" என்று ப்ரஹ்மாதிகள்வந்து ஆஸ்ரயிக்கும் திருக்கோட்டியூரானே. .... .... .... .... .... (கூ)

மூ;—

கன்றுகொண்டுவிளங்கனி யெறிந்தானிரைக் கழிவென்றுமாமழை
நின்றுகாத்துகந்தான் நிலமாமகட்கினியான்
குன்றின்முல்லையின்வாசமும் குளிர்மல்லிகை மணமுமளைந்திளம்
தென்றல்வந்துலவும் திருக்கோட்டியூரானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கன்றுகொண்டு | வத்ஸாஸுரனைக் கொண்டு | இனியான் | (பூபாரத்தைப்போக்குகையாலே) இனியனான ஸர்வேஸ்வரன் |
| விளங்கனி | விளாவின் கனியாய் நின்ற அஸுரனை | இளம் | இளமைதங்கிய |
| எறிந்து | உதிரவெறிந்து, | தென்றல் | தென்றல் காற்றானது |
| ஆநிரைக்கு | பசுக்களின் திரளுக்கு | குன்றில் | மலையிலுண்டான |
| அழிவு என்று | தீங்கு வருமென்று | முல்லையின் | முல்லைப்பூவின் |
| மாமழை | மஹாவர்ஷத்தை | வாசமும் | பரிமளத்தையும் |
| நின்று | (மலையையெடுத்து) ஒருபடிப்பட நின்று | குளிர் | குளிர்ந்த |
| | | மல்லிகை | கொடிமல்லிகையின் |
| காத்து | (பசுக்களை) ரக்ஷித்து | மணமும் | பரிமளத்தையும் |
| உகந்தான் | (ஆஸ்ரித விரோதி போக்கப் பெற்றோமென்று) திருவுள்ள முகந்தவனாய் | அளைந்து | தழுவி முழுசிக்கொண்டு |
| | | வந்து | நாற்புறமும் வந்து |
| | | உலவும் | உலாவாநின்றுள்ள |
| | | திருக்கோட்டியூரான். | (எ) |
| நிலமாமகட்கு | பூமிப்பிராட்டிக்கு | | |

அவ;—ஏழாம்பாட்டு. கன்றாயும் விளாவாயும் வந்த அஸுரர்களால் வரும் நலிவைப்போக்கி, கோவர்த்தநோத்தரணம்பண்ணின

(மேலுக்கு) என்றதுக்கு - "நாவலம் புவிமன்னர் வணங்க" என்றத்தை "இங்கென" என்றதுக்குமேலே அந்வயிப்பதென்று கருத்து. "மாலுறைகின்றது இங்கென, நாவலம்புவி மன்னர்வணங்க, அத்தைக்கண்டு தேவரும் வந்திறைஞ்சும் திருகோட்டியூர்" என்றந்வயம் திருவுள்ளம் பற்றி பலிதமான தாத்பர்யமருளுகிறார் (ஜம்பூவித்யாதி) ... ... ... ... (கூ)

மஹாபதாநத்தையுடையவன், இப்போது திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானனென்கிறார்.

வ்யா;—( கன்றித்யாதி ) கன்றைக்கொண்டு விளாவை உதிரவெறிந்து, க்ரித்ரிமத்தால்வந்த இரண்டஸுரர்களையும் ஒன்றையிட்டொன்றை முடித்தவன். பசுக்களுக்கழிவு வருமன்று மஹாவர்ஷத்தை மலையை எடுத்துக்கொண்டு நின்று காத்து "இவற்றுக்குறுப்பாகப்பெற்றோம்" என்று உகந்தவன். (நிலமாமகட்கினியான்) பசுக்களையும் இடையரையும் காத்தால் உகப்பாள் - ஶ்ரீபூமிப்பிராட்டியிறே. பூபாரத்தைப் போக்குகையாலே ஶ்ரீபூமிப்பிராட்டிக்கு இனி[illegible]ஞைவன். "குன்றின்" என்று மேலுக்கு. (குளிர்குன்றின் முல்லை) குளிர்ந்தமலையிலுண்டான முல்லையின்பரிமளமும். மல்லிகையின்பரிமளமும் அன்றிக்கே, குளிர்ந்த மல்லிகையின் பரிமளமும் அளைந்து ம்ருதுவான தென்றல் வந்து ஸஞ்சரியாநிற்கும் திருக்கோட்டியூரானே. .... .... .... .... .... (எ)

மூ;— [ந்து

பூங்குருந்தொசித்தானை காய்ந்தரிமாச்செகுத்தடியேனையாளுக
ஈங்கென்னுள் புகுந்தானிமையோர்கள் தம்பெருமான்
தூங்குதண்பலவின் கனித்தொகுவாழையின் கனியொடுமாங்கனி
தேங்குதண்புனல் சூழ்த்திருக்கோட்டியூரானே. (அ)

---

அநு;—ஏழாம்பாட்டு. (கன்றித்யாதி) கீழ்ச்சொன்ன சக்திமத்த்வம் அகடித கடநாரூபேண விருக்குமென்றத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

விளங்கனி எறிந்ததும், மழைகாத்ததும் நிலமா மகளுக்கு இனியனாகைக்கு ஹேதுக்களென்று வ்யுத்க்ரமேண உபபாதிக்கிறார் (பசுக்களையு மித்யாதி வாக்யத்வயத்தாலே). (குன்றின் என்றது மேலுக்கு) என்றதுக்கு - அளைந்து என்றும்) அளவையும் "இளம் தென்றல்" என்றபதத்துக்கு மேலே அந்வயிப்பதென்கை. மல்லிகைக்குக் குளிர்ச்சிகூடாமையாலே, குளிர்பதத்தை-குன்றின் பதத்திலே அந்வயித்தருளிச்செய்து, கொடிமல்லிகைதான் குளிர்ச்சியுடைத்தாயிருக்கு மென்று அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி). ... (எ)

அநு;—எட்டாம்பாட்டு. (பூமித்யாதி) கீழ், "விளங்கனி எறிந்து" என்று சொன்னது-ஒன்றுமேயோ, அநேக விரோதிகளெல்லாம் நிரஸித்துத் தம்திருவுள்ளத்திலிருந்தானென் றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூ | பூத்துக்கிடந்த | புகுந்தான் | ப்ரவேசித் தருளின ஸர்வேச்வரன், |
| குருந்து | குருந்தை | மாங்கனி | மாம்பழமானது |
| நுசித்து | (எளிதாக) முறித்து, | தூங்கு | ( பழுத்துத் ) தொங்கா நின்றும் |
| ஆனை | குவலயாபீடத்தை | தண் | அழகிதாயுமிருந்துள்ள |
| காய்ந்து | சீறி (முடித்து), | பலவின்கனி | பலாப்பழங்களோடும் |
| அரி | வேகத்தை யுடைய | தொகு | திரட்சியை யுடைய |
| மா | குதிரைவடிவங் கொண்ட கேசியை | வாழையின் கனியோடும் | வாழைப்பழங்களோடும் கூட |
| செகுத்து | கொன்று, | தேங்கு | (வந்துவிழுந்து) தேங்கா நிற்பதாய் |
| அடியேனை | அடியேனை | தண் | ஶ்ரமஹரமான |
| ஆளுகந்து | அடிமைகொள்ள விரும்பி | புனல் | ஆறுகளாலே |
| இமையோர்கள் தம் | நித்யஸூரிகளுக்கு | சூழ் | சூழப்பட்டிருந்துள்ள |
| பெருமான் | நிர்வாஹகனான (மேன்மையைப் பாராதே) | திருக்கோட்டியூரான். (அ) | |
| ஈங்கு | இந்த ஸம்ஸாரத்திலே | | |
| என்னுள் | என்னுள்ளே | | |

அவ;—எட்டாம்பாட்டு. குருந்து துடக்கமான விரோதிவர்க்கத்தைப் போக்கின க்ருஷ்ணன் இப்போது திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனானானென்கிறார்.

வ்யா.—( பூங்குருந்தித்யாதி ) பூத்தகுருந்தை அநாயாஸேந முறித்து குவலயாபீடத்தை முடித்து. (அரிமா) வேகத்தையுடைத்தான கேசியைக்கொன்று. பச்சைக்குதிரை என்னவுமாம். (அடியேனையித்யாதி) என்னை அடிமைகொள்ளவிரும்பி * அயர்வறு மமரர்களதிபதியான மேன்மைபாராதே ஸம்ஸாரத்திலே என்னுள்ளே புகுந்தான். "தூங்கு" என்று மேலுக்கு. இற்றுவிழப் புகுகிறதோ என்னும்படி, பழுத்துத்தூங்கா நின்று அழகிதான பலாப்பழம், திரட்சியையுடைத்தான வாழைப்பழம், இவற்றோடேகூட மாம்பழம் வந்து விழுந்துதேங்கி ஶ்ரமஹரமான புனல்சூழ்ந்த திருக்கோட்டியூரானே!

---

∴ (தூங்கென்றுமேலுக்கு) என்றதுக்கு "ஒடு" என்றவளவும்-மாங்கனி என்ற பதத்துக்குமேலே கூட்டுகவென்று கருத்து. .... ... ... (அ)

மூ;—

கோவையின்தமிழ்பாடுவார் குடமாடுவார் தடமாமலர்மிசை
மேவுநான்முகனில் விளங்குபுரிநூலர்
மேவுநான்மறைவாணரை வகைவேள்வியாறங்கம் வலலவர்தொழும்
தேவதேவபிரான் திருக்கோட்டியூரானே! (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோவை | கோர்வையை யுடைத்[தாய் | நான்மறை | நாலுவகைப்பட்ட வேதங்களுக்கும் |
| இன் | இனிய | வாணர் | வ்யாஸபதம் செலுத்த வல்லர்களாய் |
| தமிழ் | தமிழாலான இத்திரு மொழியை | ஐவகைவேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்களும் |
| பாடுவார் | பாடுமவர்களாய் | ஆறுஅங்கம் | ஆறுவகைப்பட்ட வேதாங்கங்களும் |
| குடமாடுவார் | குடக்கூத்தைஆடுமவர்[களாய் | வல்லவர் | கைவந்திருக்கும் ப்ராஹ்மணர்கள் |
| தடம் | விசாலமாய் | தொழும் | ஆஶ்ரயிக்கிற |
| மா | பெரிதான | தேவதேவபிரான் | ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயரான நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரன், |
| மலர்மிசை | திருநாபீகமலத்திலே | | திருக்கோட்டியூரான். (௯ |
| மேவு | பிறந்த | | |
| நான்முகனில் | சதுர்முகனிற்காட்டில் | | |
| விளங்கு | உஜ்ஜ்வலமான | | |
| புரிநூலர் | யஜ்ஞோபவீதத்தை யுடையராய் | | |
| மேவும் | தன்னையுள்ளபடி பேசவல்ல | | |

அவ;—ஒன்பதாம்பாட்டு. தான் தன்னை ஸர்வப்ரகாரத்தா லும் அநுபவிக்கைக்கிடான பக்தியை யுடையராய், ப்ரஹ்மாவோடு ஸமாநரான ப்ராஹ்மணருக்கு ஆஶ்ரயணீயனாய்த் திருக்கோட்டியூர் லே வந்து ஸந்நிஹிதனானானென்கிறார்.

---

அ௩;—ஒன்பதாம்பாட்டு. (கோவையித்யாதி) விரோதி நிரஸநஶீலன் தம் திருவுள்ளத்திலிருந்தானென்றுமநுஸந்தித்தார். இப்படி என்னுள் புகுந் தது திருக்கோட்டியூரிலே பக்தர் ஆஶ்ரயிப்பாரில்லாதவனாயல்ல; பலரும் தொழுவார் இருக்க, தம்முடைய திருவுள்ளத்தில் புகுந்தானென்று மஹோபகாரத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

வ்யா.—(கோவையித்யாதி) கோவையை யுடைத்தாய், இனிய தமிழான இத்திருமொழியைப் பாடுவார், செருக்காலே திருவாய்ப் பாடியில் படியாகக் குடக்கூத்தையாடுவாராய், திருநாபி கமலத்திலே பிறந்த சதுர்முகனிற்காட்டில் உஜ்ஜ்வலிதமான யஜ்ஞோபவீதத்தை யுடையரான ப்ராஹ்மணர். (மேவுநான்மறையித்யாதி) தன்னை உள்ளபடிபேசவல்ல வேதங்களுக்கு வ்யாஸபதம் செலுத்துவாராய், பஞ்சமஹாயஜ்ஞும், அங்கங்களாறும் கைவந்திருக்கிறவர்கள் ஆஶ்ரயிக்கிற. (தேவதேவபிரான்) ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயரான அயர்வறு மமரர்களுக்கு ஸ்வாமியானவன் இங்கேவந்துவர்த்திக்கிறவன். .... .... .... .... .... .... (௯)

மூ;—ஆலுமாவலவன் கலிகன்றிமங்கையர் தலைவனணிபொழில்
சேல்கள்பாய் கழனித்திருக்கோட்டியூரானை
நீலமாமுகில்வண்ணனை நெடுமாலையின்தமிழால் நினைந்தவிந்
நாலுமாறும் வல்லார்க்கிடமாகும் வானுலகே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆலும் | ஸரஸ ஸஞ்சாரத்தை யுடைத்தான | கழனி | வயலையுமுடைத்தான |
| மா | குதிரையை | திருக்கோட்டியூரானை | திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனாய், |
| வலவன் | நடத்தவல்லராய், | நீலம் | நீலமாய் |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு | மா | ஶ்லாக்யமான |
| தலைவன் | நிர்வாஹகரான | முகில் | மேகம்போன்ற |
| கலிகன்றி | ஆழ்வார் | வண்ணனை | திருநிறத்தை யுடையனாய், |
| அணி | அழகிய | நெடுமாலை | வ்யாமுக்த(✻)னை ஸர்வேஶ்வரனை |
| பொழில் | சோலைகளையும் | | |
| சேல்கள் | மத்ஸ்யங்களானவை | | |
| பாய் | பாயாநின்றுள்ள | இன் | இனிய |

(தான்) என்றது - தேவதேவபிரானென்றபடி. (கோவை) - ஒருகோர்வையாயிருக்கை. (இத்திருமொழி) என்றதுக்குத் திருக்கோட்டியூர் விஷயமானதாகையாலே, அங்குள்ளார் பக்தியாலே இத்தைக்கேட்டால் விடாதே பாடுவாரென்னும் கருத்தாலேயாகலாமென்று கருத்து. ... ... (௯)

| | | | |
|---|---|---|---|
| தமிழால் | தமிழைக்கொண்டு | வல்லார்க்கு | கற்கவல்லவர்களுக்கு |
| நினைந்த | நினைந்த | வானுலகு | பரமபதமானது |
| இந்நாலுமாறும் | இப்பத்துப் பாட்டுக்களையும் | இடம்ஆகும் | இருப்பிடமாகும். (க0) |

அவ;—பத்தாம்பாட்டு. ஆழ்வாரருளிச்செய்த இப்பத்தும் வல்லார்களுக்குப் பரமபதமே வாஸஸ்த்தாநமென்கிறார்.

வ்யா.—(ஆலுமாவித்யாதி) ஸரஸஞ்சாரத்தை யுடைத்தான குதிரையை நடத்தவல்ல ஆழ்வார். ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணா நின்ற குதிரையை நடத்தவல்ல ஆழ்வார்; திருமங்கைக்கு நிர்வாஹகரானவர், ஸம்ஸாரத்துக்கு ஆபரணமாம்படி அழகிய பொழிலையும் சேல்கள் பாயாநின்றுள்ள வயலையுமுடைய திருக்கோட்டியூரையுடையனாய், நீலமாய் ஶ்லாக்யமான முகில்போலே யிருக்கும்திருநிறத்தையுடையனை ஸர்வேஶ்வரனை இனியதமிழைக்கொண்டு ஸம்ஸாரதாபம் தீரும்படியாக நினைத்த. (நீலமாமுகில்வண்ணனை) ஶ்ரமஹரமான வடிவையுடையவனை. அத்தாலே என்னை முறைஅறிவித்தவனை. வ்யாமுக்த(ஜ)னைவனை. (நினைந்தவிந்நாலுமாறும் வல்லார்) தமக்கினிதானவாறே பிரித்தநுபவிக்கிறார். இது கற்றவர்களுக்கு இடமாவது பரமபதம். .... .... .... .... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி
## ஒன்பதாம்பத்து பத்தாந்திருமொழி
## முற்றிற்று.

---

அரு.—பத்தாம்பாட்டு. (ஆலுமாவலவனித்யாதி) ஆலும்படி நடத்தவல்லவனென்னுதல்; ஆலாநிற்கிற குதிரையென்னுதல்; இவற்றையருளுகிறார் ஸரஸேத்யாதி வாக்யத்வயத்தாலே). "வண்ணம்" என்றது நிறமென்றாய், முகில்த்ருஷ்டாந்தம் நிறத்தாலே என்றருளிச்செய்து, வண்ணபதம் திருமேனிக்குவாசகமாய் அர்த்தாந்தரமருளுகிறார் (ஶ்ரமேத்யாதி). "மால்" என்றதுக் அர்த்தாந்தரம் (வ்யாமுக்தனனவனை) என்றது. ... ... ... (க0)



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி

## பத்தாம்பத்து முதல்திருமொழி

### ஒருநல்சுற்றம் ப்ரவேசம்.

வ்யா;—தன்னை உகந்தார்க்குத்தான்ஆஶ்ரயணீயனாய் திருக்கோட்டியூரிலே ஸுலபனானபடியை அநுஸந்தித்துத்தமக்கு நித்யகைங்கர்யம் பண்ணவேணுமென்னு மபேக்ஷையிலே கண்ணழிவில்லாமையாலும், அவன் தன்னைஉகந்தாரைப் பரமபதத்திலே கொடுபோய், நித்ய கைங்கர்யம்பண்ணுவித்துக்கொள்ளும் நிருபாதிகபந்துவாகையாலும், திருப்பதிகளை அநுபவித்த ஆழ்வார் பரமபதத்துக்கும் போக்கணித்தென்று அத்யவஸித்து, நவோடையானபெண்-பிறந்தகத்தினின்றும் புக்ககத்துக்குப்போம்போது ஜந்மபூமியிலுள்ள உறவுமுறையாருள்ளிடமெங்கும் புக்கு முகம் காட்டுமாபோலே குணாநுபவம் பரமபதத்துக்கு மொக்குமே; ஆகையாலே சில திருப்பதிகளிலேபுக்கு, இங்குபுக்கோம்; இனி, இன்னதிருப்பதியிலே புகவேணுமென்று இப்படியே உகந்தருளின தேசங்களெங்கும் முகங்காட்டப்பார்க்கிறார்.

நமக்கு ப்ராப்யபூமியைத் தருவானாய், தானே ப்ராப்யனானவனைத் திருநீர்மலையிலே கண்டோம். இனி, திருக்கண்ணமங்கையிலே காணக்கடவோமென்கிறார். .... .... .... .... .... *

மூ;—ஒருநல்சுற்றமெனக் குயிரொண்பொருள்
வருநல்தொல்கதியாகிய மைந்தனை
நெருநல்கண்டது நீர்மலை யின்றுபோய்
கருநெல்சூழ்கண்ணமங்கையுள் காண்டுமே.

---

அரு;—ஒருநல்ப்ரவேசம்;—"வாடினேன்" என்று துடங்கி இவ்வளவும் வரத் திருப்பதிகளை அநுபவித்தவர், மீளவும் திருப்பதிகளைத்திரள அநுபவிப்பானென்னென்ன; அருளுகிறார் (தன்னையித்யாதி). (எங்கும்புக்கு). என்றவநந்தரம் "குணாநுபவம் பண்ண" என்று சேஷம். இத்தால் சொல்லிப் போகைக்காகவும் குணாநுபவத்துக்காகவும் மீளவும் அநுபவிக்கிறாரென்று ஸங்கதித்வயம் சொல்லிற்றாயிற்று. ... ... ... ... ... ... *

அரு;—முதற்பாட்டு. (ஒருநல்சுற்றமித்யாதி) முதற்பாட்டுக்குத் தாத்பர்யம் ( நமக்கித்யாதி ). இப்பதத்துக்குத் தொகுத்த பாவம் ( தானேயித்யாதி ).

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நல் | (தானே ஆபத்துக்கு வந்து உதவும்) நன்மையையுடைய | கதி | ப்ராப்யபூமியைத் தருவானாய், |
| ஒருசுற்றம் | அத்விதீயமான பந்து | ஆகியமைந்தனை | நவயௌவநயுக்தமான விக்ரஹத்தை யுடையனான எம்பெருமானை |
| எனக்கு | அடியேனுக்கு [வாய், | நெருநல் | நேற்று |
| உயிர் | ஆத்மாவாய், | கண்டது | ஸேவித்தது |
| ஒண் | மேன்மையான (ஸத்தையைவிளைக்குமதான) | நீர்மலை | திருநீர்மலையிலே; |
| பொருள் | புருஷார்த்தத்தைத் தருமவனாய் | கருநெல் | கருவடைந்தபயிர்களாலே |
| வரு | (சரீரவியோகத்துக்குப் பிறகு) வரக்கவ | சூழ் | சூழப்பட்ட |
| நல் | விலக்ஷணமாய் [தாய் | கண்ணமங்கையுள் | திருக்கண்ணமங்கையிலே |
| தொல் | நித்யாநுபாவ்யயான | இன்றுபோய் | இன்றைக்குப்போய் |
| | | காண்டும் | ஸேவிப்போம். (௧) |

வ்யா;—முதற்பாட்டு. (ஒருநல்சுற்றம்) தானே ஆபத்துக்கு வந்துதவும் ஸர்வவித பந்துவுமான ஸ்வபாவனுமாய். (சுற்றம், நல்சுற்றம், ஒருநல்சுற்றம்) குடல்துடக்கு, தன்னையழியமாறியும் ரக்ஷிக்கும் சுற்றம், சுற்றமென்றால் வேறொரிடத்தில் போகாதசுற்றம். (சுற்றம்) சுற்றமல்லாதாரை வ்யாவர்த்திக்கிறது. (நல்சுற்றம்) ஸ்வப்ரயோஜநபரரை வ்யாவர்த்திக்கிறது. (ஒரு நல்சுற்றம்) ஓரோப்ராப்தியேயன்றிக்கே எல்லாப்ராப்தியும் ஏகாஶ்ரயத்திலேயாயிருக்கிறபடி. மாத்ருத்வம் பிதாவுக்கில்லை. பித்ருத்வம் மாதாவுக்கில்லையிறே. (எனக்குயிர்) எத்தனையேனும் பந்துக்கள் எல்லாரும்கூட உண்டானாலும் தான் தனக்கானபடியாக மாட்டார்களிறே. ஸுகதுக்கங்கள் தனக்கே அநுபவிக்கவேணுமிறே. எனக்கு ஆத்மாவுமாய்; (ஒண்பொருள்) இது ஸத்தையை யுண்டாக்கு

---

பிறித்தெடுத்தக்ரமத்திலேஅர்த்தமருளுகிறார் (குடலித்யாதிவாக்யத்ரயத்தாலே). கீழ்ச்சொன்ன வர்த்தத்தை வ்யாவர்த்த்யப்ரதர்ஶநமுகேந விவரிக்கிறார் (சுற்றமல்லாதாரை யித்யாதி வாக்யச்துஷ்டயத்தாலே). ஒண்மைக்கர்த்தமருளிச்செய்கிறார்(இதுவித்யாதி). லௌகிகார்த்தத்தைவ்யாவர்த்திக்கிற

மர்த்தம். தான்மரிக்குமிறே அர்த்தநிமித்தமாக. புருஷார்த்தோப யோகியான அர்த்தமுமாய்;

(வருநல்தொல்கதி) இதுக்குமுன்பு ஸம்ஸாரத்திலிருக்கும்படி. இனி, பரமபதப்ராப்தியிருக்கும்படி சொல்லுகிறது. இங்கே அர்த்த புருஷார்த்தம் தந்துவிடுகையன்றிக்கே, சரீரஸமநந்தரம் வரக்கடவ தாய், அறநன்றானதொல்கதி - ஆத்மாநுபவமாத்ரமன்றிக்கே இவ் வாத்மாவினுடைய ஸ்வரூபத்துக் கநுரூபமான ப்ராப்ய பூமியைத் தருவானாய், தானேப்ராப்யமாய்; (தொல்கதி)ஸ்வாபாவிகமாயிருந் துள்ள ஸ்வரூபாவிர்ப்பாவம். (ஆகிய மைந்தனை) நவயௌவநயுக்த விக்ரஹத்தை யுடையவனை. (ஆகிய மைந்தனை) ஸர்வசக்தி பதார்த் தங்களிலும் விஸஜாதீயமான மிடுக்கை யுடையனாய், உபாயமான வனை யென்னுதல்; எல்லாப்புருஷார்த்தங்களும் தானே தரவல்ல மிடுக்கன். ஸர்வ சக்தியாகையிறே, உபாயபாவம் தானே நிர்வஹிக் கக் கடவனாயிருக்கிறது.

"நெருநல்" என்று மேலுக்கு. நேற்றுத்திருநீர்மலையிலே கண் டோம். இன்று போய், கருவடைந்த நெற்பயிரோடு கூடின வய லையுடைய திருக்கண்ணமங்கையிலே காணக்கடவோம். இன்று

---

படியைக் காட்டுகிறார் (தானித்யாதி). உயிர்பத ஸமபிவ்யாஹாரலப்யார்த்த த்தை அருளிச்செய்து, "எனக்கு" பதத்தைக் கடாக்ஷித்து ஒண்மைக்கர்த் தாந்தரம் (புருஷார்த்தேத்யாதி). (அர்த்தமும்) என்றத்தாலே அந்தவர்த் தத்துக்கு நிர்வாஹகனாய், அத்தால் தத்ப்ரத(ஃ)னென்று கருத்து.

ஸங்கதியைக்காட்டித் தாத்பர்யமருளுகிறார் (இங்கேயித்யாதி). அற நன்றானமையை உபபாதிக்கிறார் (ஆத்மாநுபவேத்யாதி). (தருவானாய்) என் றத்தாலே கதிபதத்துக்கு ப்ராபகத்வமருளிச்செய்து, அர்த்தாந்தரம் (ப்ராப்ய மாய்) என்றது. தொல்பதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்துகொண்டு, கதி பதத்துக்கு மூன்றாம் யோஜநையருளுகிறார் (ஸ்வாபாவிகேத்யாதி). (ஸ்வ ரூபாவிர்ப்பாவம்) குணேஷ்டக ஸ்வரூபாவிர்ப்பாவ நிர்வாஹகனென்றபடி. (ஸர்வசக்தி பதார்த்தங்களிலும்) என்றது-ஸர்வங்களாய், சக்திமத்துக்களான பதார்த்தங்களிலு மென்றபடி.

(மேலுக்கு என்றதுக்கு) "இன்றுபோய்க் கண்ணமங்கையுள் காண்டுமே" என்று காலதேசம் காண்கை அடைவுபடவிருக்குமாபோலே, இங்கும் அந் வயிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, "கண்டது" என்றபதத்துக்கு மே லேயிருக்கிற "நீர்மலை" என்கிற பதத்துக்கு முன்னே கூட்டுவதென்றுகருத்து.

அதுகாண்பதும் காணக்கடவதும் இவ்வோவிடங்களேயாயிருக்கை. (கருநெல்சூழ் கண்ணமங்கை) நித்யரும் முக்தரும் என்றும் பஞ்ச விம்ஶதி வார்ஷிகராயிருக்குமாபோலே, இங்குத்தை வயலும் நித்யமாகக் கருவடைந்தபயிராயிருக்கை. அங்குள்ளதெல்லாம் இவருக்கு ப்ராப்யமாயிருக்கிறபடி. அநுபூதமாய் ஸ்ம்ருதி விஷயமாயிருப்பதும், அநுபாவ்யமாயிருப்பதும் இவருக்கு உகந்தருளினநிலம். (௧)

மூ;—பொன்னைமாமணியை யணியார்ந்ததோர்
மின்னைவேங்கடத் துச்சியில் கண்டுபோய்
என்னையாளுடையீசனை யெம்பிரான்
றன்னையாம்சென்றுகாண்டும் தண்காவிலே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொன்னை | பொன்போலே ஸ்ப்ருஹணீயனாய், | கண்டு | (முன்பு) ஸேவித்து, (இன்றைக்கு) |
| மா | பெருவிலையனான | போய் | போய் |
| மணியை | மணிபோலே ஶ்லாக்யனாய் | என்னை | அடியேனை |
| அணிஆர்ந்தது | அழகுமிக்கிருப்பதாய் | ஆளுடை | அடிமையாகவுடையனாய் |
| ஓர் | ஏகரூபமான | ஈசனை | நியாமகனாய், |
| மின்னை | மின்னல்கொடிபோலே உஜ்ஜ்வலனான ஸர்வேஶ்வரனை | எம்பிரான் தன்னை | எனக்கு உபகாரகனுமான ஸர்வேஶ்வரனை |
| வேங்கடத்துச்சியில் | திருமலையின் உச்சியிலே | யாம் | நாம் |
| | | தண்காவிலே | திருத்தண்காவிலே |
| | | சென்று | அருகேசென்று |
| | | காண்டும் | ஸேவிக்கக் கடவோம். |

அவ;—இரண்டாம்பாட்டு. ஸர்வைஸ்ஸ்ப்ருஹணீயனானவனைத் திருமலையிலே கண்டோம்; இனித்திருத்தண்காவிலே சென்று காணக்கடவோமென்கிறார்.

வ்யா;—(பொன்னையித்யாதி) பொன்போலே ஸ்ப்ருஹணீயனாய், பெருவிலையனாய், ஶ்ரமஹரமான மணிபோலே ஶ்லாக்யமா

(என்றது)என்கிறது-என்றதாவதென்றபடி.பலிதமேதென்றுகருத்து. "காண்டும்" என்ற வாக்யத்தை விவரிக்கிறார் (அநுபூதமாயித்யாதி). ... ... (௧)

அரு;—இரண்டாம்பாட்டு. (பொன்னையித்யாதி) கீழ்ப்பாட்டிலே ஸர்வவித பந்துத்வம் அநுஸந்தித்தார்; இதில் திருமேனியொளியை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

னவனாய், அழகுமிக்கு ஏகரூபமான மின்போலே உஜ்ஜ்வலனானவ னைத் திருமலையினுச்சியிலே கண்டு. "போய்" என்றுமேலுக்கு. இன் று போய் என்னை அடிமையாகவுடையவனாய், என்க்குநியந்தாவாய், எனக்கு உபகாரகனுமானவனை நாம் சென்று திருத்தண்காவிலே காணக் கடவோம். .... .... .... .... .... .... (௨)

மூ;—வேலையாலிலைப் பள்ளிவிரும்பிய
பாலையாரமுதத்தினைப் பைந்துழாய்
மாலையாலியில்கண்டு மகிழ்ந்துபோய்
ஞாலமுன்னியைக் காண்டும்நாங்கூரிலே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேலை | ப்ரளயார்ணவத்திலே | ஆலியில் | திருவாலியிலே |
| ஆலிலை | ஆலந்தளிரிலே | கண்டு | (முன்பு) ஸேவித்து |
| பள்ளி | திருக்கண்வளர்ந்தருளுகையை | மகிழ்ந்து | உகந்து, |
| | | | (இன்றைக்கு) |
| விரும்பிய | விரும்பினவனாய், | ஞாலம் | ஜகத்துக்கு |
| பாலை | பால்போலே இனியனாய் | உன்னியை | த்யே (த்யே) யனான ஸர்வேஶ்வரனை |
| ஆர்அமுதத்தினை | அபரிச்சேத்யமான அம்ருதம்போலே ரஸ்யனாய், | நாங்கூரிலே | திருநாங்கூரிலே |
| பைந்துழாய் | அழகிய திருத்துழாய் | போய் | சென்று |
| மாலை | மாலையணியுமவனான ஸர்வேஶ்வரனை, | காண்டும் | ஸேவிக்கக்கடவோம். |

அவ.—மூன்றாம்பாட்டு. வடதளசாயியானவனைத் திருவாலி யிலே கண்டோம்; இனித்திருநாங்கூரிலேசென்று காணக்கடவோ மென்கிறார்.

வ்யா;—( வேலையித்யாதி ) கடலிலே ஒருபவனாயிருப்பதொரு ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகையை விரும்பின ஸர்வவிதபோக்

"ஓர்" என்றதினர்த்தம்-(ஏகரூபமான) என்றது. ( மேலுக்கு என்றது க்கு )-"போய்" என்றபதத்தை "சென்று" என்ற பதத்தோடு கூட்டுவதெ ன்று கருத்து.

அ௩;—மூன்றாம்பாட்டு. (வேலையித்யாதி) நின்றநிலையில் போக்யதை யை அநுபவித்து, ஆலந்தளிரில் கிடையழகை அநுபவித்து இனியராகிறு ரென்று ஸங்கதி.

(கடலிலே) ப்ரளயார்ணவத்திலே. "பைந்துழாய்" பசுமையையுடைய

யனானவனை. கண்வளர்ந்தருளுகை தமக்குப்பால்போலவும் அம்ருதம்போலவும் ரஸித்தபடி. (பைந்துழாயித்யாதி) அந்தரஸ்யதையிலுண்டான எத்தம்போலே ஐஶ்வர்யஸூசகமாய், அழகிதான திருத்துழாயையுடைய ஸர்வேஶ்வரனை. "ஆலியில்" என்று-மேலுக்கு. திருவாலியிலேகண்டுகொண்டுபோய், ஜகத்துக்குத்யே(ஹ்ரீ)யனானவனை. (ஞாலமுன்னியையித்யாதி) வரையாதே இன்னாரென்னாமல் ஆஶ்ரயிக்கும்படி யிருக்கிறவனைத் திருநாங்கூரிலே காணக்கடவோம்.

மூ;—துளக்கமில்சுடரைஅவுணனுடல்
பிளக்கும்மைந்தனைப் பேரில்வணங்கிப்போய்
அளப்பிலாரமுதை யமரர்க்கருள்
விளக்கினைச்சென்று வெள்ளறைக்காண்டுமே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துளக்கம்இல் | விச்சேதமில்லாத | ஆரமுதை | அபரிச்சேத்யமான போக்யதையையுடையனாய் |
| சுடரை | ஒளியையுடையனாய், | அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| அவுணன் | ஹிரண்யனுடைய | விளக்கு | ப்ரகாசகமாய் |
| உடல் | சரீரத்தை | அளப்புஇல் | அபரிச்சேத்யமான |
| பிளக்கும் | பிளக்கவல்ல | அருளினை | அருளாயிருக்கிறவனை |
| மைந்தனை | மிடுக்கையுடையனான ஸர்வேஶ்வரனை | வெள்ளறை | திருவெள்ளறையிலே |
| பேரில் | திருப்பேர் நகரிலே | சென்று | போய் |
| வணங்கிப்போய் | (முன்பு) வணங்கி, (இன்றைக்கு) | காண்டும் | ஸேவிக்கக்கடவோம். |

அவ;—நாலாம்பாட்டு. ஶ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு விரோதியான ஹிரண்யனைப் போக்கினவனைத் திருப்பேரிலே கண்டோம்; இனிப்போய் திருவெள்ளறையிலே காணக்கடவோமென்கிறார்.

---

திருத்துழாயென்றாய், இதுமாலாகைக்கு ஹேதுவென்று தாத்பர்யம் (அந்தவித்யாதி).

(மேலுக்கு என்றதுக்கு)-"போய்" என்னுமளவும் - "ஞாலமுன்னியை" என்றபதத்துக்கு மேலில் கூட்டுவதென்றுகருத்து. ... ... ... (௫)

அரு;—நாலாம்பாட்டு. (துளக்கமித்யாதி) நிரதிசயபோக்யதையைக் கீழே அநுபவித்தார்; அதுக்குவரும் விரோதியைப் போக்குவானும் தானே என்கிறாரென்றுஸங்கதியைஉட்கொண்டருளுகிறார் (ஶ்ரீப்ரஹ்லாதேத்யாதி).

வ்யா;—(துளக்கமித்யாதி) காற்ருல், மற்றென்றால் விச்சேதிக்கப்போகாதே "ஜ்வலந்தம்" என்கிறபடியே ஏகரூபமான ஒளியையுடையனாய், ஹிரண்யனுடைய உடலைப்பிளக்கவல்லஸர்வசக்தியைத் திருப்பேர்லே வணங்கிப்போய். "அளப்பில்" என்று - மேலுக்கு. அபரிச்சேத்யமான போக்யதையையுடையனாய், அத்தை அயர்வறுமமரர்களுக்கு அநுபவிக்கக்கொடுத்து அத்தாலேஉஜ்ஜ்வலனானவனை. (அமரர்க்கருள் விளக்கினை) நித்யஸூரிகளுக்கு ப்ரகாசகமாயிருப்பதோரருளாயிருக்கிறவனைத் திருவெள்ளறையிலே காணக்கடவோம். .... .... .... .... .... .... (௪)

மூ;—சுடலையில்சுடுநீறனமர்ந்ததோர்
நடலைதீர்த்தவனை நறையூர்க்கண்டென்
உடலையுள்புகுந் துள்ளமுருக்கியுண்
விடலையைச்சென்றுகாண்டும் மெய்யத்துள்ளே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சுடலையில் | ஶ்மஶாநபூமியிலே | என் | என்னுடைய |
| சுடுநீறன் | சுட்டசாம்பலைப் பூசியிருக்கிற ருத்ரன் | உடலையுள் | சரீரத்துக்குள்ளே |
| அமர்ந்தது | அநுபவித்த | புகுந்து | ப்ரவேசித்து |
| ஓர் | அத்விதீயமான | உள்ளம் | நெஞ்சை |
| நடலை | க்லேஶத்தை | உருக்கி உண் | உருக்கிஉண்கிற |
| தீர்த்தவனை | தவிர்த்தருளின ஸர்வேஶ்வரனை | விடலையை | விதக்த (ஃ) னை ஸர்வேஶ்வரனை |
| நறையூர் | திருநறையூரிலே | மெய்யத்துள் | திருமெய்யத்தில் |
| கண்டு | (முன்பு) ஸேவித்து, (இன்றைக்கு), | சென்று | போய் |
| | | காண்டும் | ஸேவிக்கக்கடவோம் |

---

(மேலுக்கு) என்றது - "ஆர்" என்று அபரிச்சேத்யதையைச் சொல்லியிருக்கையாலே "அளப்பில்" என்கிறவிசேஷணம் அருள்பதத்தோடே கூட்டுவதென்றுகருத்து. "மைந்தனை, ஆரமுதை, அமரர்க்குஅளப்பிலருள்விளக்கினைப் பேரில் வணங்கிப்போய்ச்சென்று வெள்ளறைக் காண்டும்" என்றந்வயத்திலே திருவுள்ளம். தன்னை அநுபவிக்கக் கொடுக்குமதுக்கு மேற்பட அருளுக்கு அளப்பில்லாமை - வேறில்லாமையால், அத்தை அருளுகிறார் (அத்தையித்யாதி). "அருளாகிற விளக்கு" என்று ஒருயோஜனை அருளிச்செய்து, "விளக்கான அளப்பிலருள்" என்று யோஜநாந்தரம் (நித்யேத்யாதி). (ஒரு) என்று அளப்பில்லாமையாலே பலிதம். ... ... ... ... ... (௪)

அவ;—அஞ்சாம்பாட்டு. ருத்ரனுடைய சாபத்தைப்போக்கின வனைத்திருநறையூரிலே கண்டோம். இனிப்போய்த் திருமெய்யத்திலே காணக்கடவோமென்கிறார்.

வ்யா;—(சுடலையித்யாதி) ஶ்மசாநபூமியில் பஸ்மோத்தூளிதனாயாகிறது - சுடலையில் சுட்டசாம்பலைப் பூசியிருக்கிறவனென்றபடி; அவன், (அமர்ந்ததோர்நடலை) அவனநுபவித்த க்லேசத்தைத் தவிர்த்தவனைத் திருநறையூரிலேகண்டு. "என்னுடலை" என்று - மேலுக்கு. என் சரீரத்துக்குள்ளே புகுந்து நெஞ்சையுருக்கி உண்கிற வித்தத்த (ஐ) னைத் திருமெய்யத்திலே காணக்கடவோம். (விடலை) என்று பாலைநிலத்தில் தலைமகனைச்சொல்லுகிறது. இப்பாலையான பூமியைத் தனக்கிருப்பிடமாக்கினபடியாலே பாலைநிலமான ஸம்ஸாரத்துக்குத் தலைவனானவனைத் தம்முடைய ஹ்ருதயத்திற் காட்டில் பாலைநிலமில்லை யென்றிருக்கிறார். .... .... .... (௫)

மூ;—வானையா ரமுதந்தவள்ளலைத்
தேனை நீள்வயல்சேறையில் கண்டுபோய்
ஆனைவாட்டியருளு மமரர்தம்
கோனை யாம்குடந்தைச்சென்று காண்டுமே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வானையார் | தேவலோகத்திலுள்ளார்க்கு | கண்டுபோய் | (முன்பு) ஸேவித்து, |
| அமுதம் | அம்ருதத்தை | ஆனை | குவலயாபீடத்தை |
| தந்த | கொடுத்தருளின | வாட்டி | கொன்று |
| வள்ளலை | உதாரனாய், | அருளும் | (ப்ரஹ்மாதிகளுக்குக்குடியிருப்பைக்) கொடுத்தருளினவனாய், |
| தேனை | தேன்போலே ரஸ்யனான ஸர்வேஶ்வரனை | | |
| நீள் | நீண்ட | அமரர்தம் | நித்யஸூரிகளுக்கு |
| வயல் | வயலையுடைய | கோனை | நியந்தாவான ஸர்வேஶ்வரனை |
| சேறையில் | திருச்சேறையிலே | | |

அரு;—அஞ்சாம்பாட்டு. (சுடலையித்யாதி) தன்னுடைய நிரதிசய போக்யமானவடிவை அயர்வறு மமரர்களுக்கு முற்றூட்டாக அருளுவானென்றார்கீழ்; ஹேயனானவனுக்கும் ஆட்த்துக்கு உதவுகையாலே ஸௌஶீலனானவன்றானே என்னுடைமையை அநுபவிக்கிறானென்று ஸங்கதி.

"ஜ்ஞாநியை விக்ரஹத்தோடே ஆதரிக்கும்" என்னக்கடவதிறே. (மேலுக்குஎன்றதுக்கு) "உடலை" என்றத்விதீயாந்தபதம் "உருக்கி" என்றபதத்தோடு ஸம்பந்திக்குமென்றுகருத்து. (என்சரீரத்தினுள்ளே) என்றது-பலிதார்த்தம்.

| | | | |
|---|---|---|---|
| யாம் | நாம் | சென்று | போய் |
| குடந்தை | திருக்குடந்தையிலே | காண்டும் | ஸேவிக்கக் கடவோம். |

அவ;—ஆரும்பாட்டு. ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அபேக்ஷிதம் செய்யும் பரமோதாரனைத் திருச்சேறையிலே கண்டோம். இனித் திருக்குடந்தையிலே காணக்கடவோமென்கிறார்.

வ்யா;—(வானையாரித்யாதி) தேவலோகம் க்ருதக்ருத்யமாம் படி அம்ருதத்தைத்தந்த உதாரனாய், தன்னை உகந்தார்க்குத் தானே போக்யனானவனை. (வானையித்யாதி) நித்யஸூரிகளுக்குத் தன்னைக் கொடுக்குமாபோலே எனக்குத் தன்னைத்தந்தஉபகாரகனை. தேன்போலே ரஸ்யனானவனை. நீண்டவயலையுடைய திருச்சேறையிலேகண்டு. "ஆனை" என்று - மேலுக்கு. குவலயாபீடத்தைக் கொன்று ப்ரஹ்மாதிகளுக்குக் குடியிருப்புக்கொடுத்து அவர்களுக்குத்தானே சேஷியென்னுமிடத்தை ப்ரகாசிப்பித்தவனை யான்குடந்தைச்சென்றுகாண்டுமே. .... .... .... .... .... (௬)

மூ;—கூந்தலார்மகிழ்கோவலனாய் வெண்ணெய்
மாந்தழுந்தையில்கண்டு மகிழ்ந்துபோய்
பாந்தள்பாழியில் பள்ளிவிரும்பிய
வேந்தனைச்சென்றுகாண்டும் வெஃகாவுளே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கூந்தலார் | கூந்தலையுடைய ஸ்த்ரீகள் | மாந்து | அமுதுசெய்து வர்த்திக்கிற ஸர்வேஶ்வரனை |
| மகிழ் | உகக்கும்படியான | அழுந்தையில் | திருவழுந்தூரில் |
| கோவலனாய் | கோ (ஶ) பனாய், | கண்டு | (முன்பு) ஸேவித்து |
| வெண்ணெய் | வெண்ணெயை | மகிழ்ந்து | ஆநந்தித்து, |

அந:—ஆரும்பாட்டு. (வானையித்யாதி) தம்மை அவனநுபவித்தபடியை அநுஸந்தித்தார்கீழ். அநந்யப்ரயோஜநரான தம்முடைய விடத்தில் இப்படி வ்யாமுக்த (ஶ) னானமையைச்சொல்லவேணுமோ? ப்ரயோஜநாந்தரபரர்க்கும் உடம்புநோவக் கடல்கடைந்து அமுதமளித்தானென்று ஸங்கதியை ஸூசிப்பிக்கிறார் (ப்ரயோஜநாந்தர பரர்க்குமித்யாதி).

*(மேலுக்கு)என்றது - "யாம்" என்கிறபதம்-கர்த்ருபதமாகையாலே, அது க்கு மேலுக்கு என்கை. ... ... ... ... ... ... (௬

| | | | |
|---|---|---|---|
| | (இன்றைக்கு) | விரும்பிய | விரும்பியருளின |
| போய் | சென்று | வேந்தனை | ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ்வரனை |
| பாந்தள் | திருவநந்தாழ்வானாகிற | | |
| பாழியில் | படுக்கையிலே | வெஃகாவுளே | திருவெஃகாவிலே |
| பள்ளி | திருக்கண்வளர்ந்தருளுகையை | சென்று | கிட்டி |
| | | காண்டும் | ஸேவிக்கக்கடவோம். |

அவ;—ஏழாம்பாட்டு. க்ருஷ்ணனாய் அநுகூலஸ்பர்ஶமுள்ள வெண்ணெயை விழுங்கினவனைத் திருவழுந்தூரிலே கண்டோம்; இனிப்போய்த் திருவெஃகாவிலே காணக்கடவோம்.

(கூந்தலாரித்யாதி) நல்ல கூந்தலையுடைய ஸ்த்ரீகளுக்கும்போக்யனாய், கோ(ஸ்ரீ)பனாய் வெண்ணெயை அமுதுசெய்து வர்த்திக்கிறவனைத் திருவழுந்தூரிலேகண்டு உகந்துபோய். "பாந்தள்" என்று-மேலுக்கு. "பாந்தள்" என்று-பாம்பு. "பாழி" - படுக்கை. திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வானாகிறபடுக்கையிலே கண்வளர ஆதரித்த ஸர்வரக்ஷகனானவனை. *வெஃகாவில் துயிலமர்ந்தவேந்தனை. (காண்டும் வெஃகாவுளே) கண்வளரக்காணலாவது திருவெஃகாவிலே.

மூ;—பத்தராவியைப் பான்மதியையணித்
தொத்தை மாலிருஞ்சோலைத் தொழுதுபோய்
முத்தினை மணியை மணிமாணிக்க
வித்தினைச்சென்று விண்ணகர்க்காண்டுமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பத்தர் | பக்தர்களுக்கு | அணித்தொத்தை | ஆபரணமாலைபோலே ஸ்ப்ருஹணீயனான ஸர்வேஶ்வரனை |
| ஆவியை | ஆத்மாவாய், | மாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையிலே |
| பால் | நிஷ்களங்கனான | தொழுதுபோய் | (முன்பு) ஸேவித்து, |
| மதியை | சந்த்ரனைப்போலே ஸதாத்ரஷ்டவ்யனாய், | | (இன்றைக்கு) |

---

அரு;—ஏழாம்பாட்டு. (கூந்தலித்யாதி) தேவர்களுக்கு அமுதமளித்தவன்தான் ஆஶ்ரித கரஸ்பர்ஶமுள்ள த்ரவ்யமல்லது தரியாதானாய், இடைச்சிகளுக்கு ஸுலபனானவனென்று அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(பாந்தளென்று மேலுக்கு) என்றது - "காண்டுமே" என்றபதத்துக்கு மேலான "வெஃகாவுளே" என்றபதத்துக்கு என்கை. ... ... (எ)

| | | | |
|---|---|---|---|
| முத்தினை | முத்துப்போலே குளிர்ந்திருக்குமவனாய், | மாணிக்கம் | மாணிக்கம்போலே தர்ஶநீயனாய், |
| மணியை | நீலமணிபோல் ப்ரமஹரமான வடிவை யுடையனாய், | வித்தினை | ஸர்வகாரண பூதனான ஸர்வேஶ்வரனை |
| | | விண்ணகர் சென்று | திருவிண்ணகரிலே போய் |
| மணி | பெருவிலையனான | காண்டும் | ஸேவிக்கக் கடவோம். |

அவ;—எட்டாம்பாட்டு. தன் திருவடிகளுக்கு நல்லார்க்கு ஆத்மாவானவனைத் தெற்குத்திருமலையிலே கண்டோம். இனிப் போய்த் திருவிண்ணகரிலே-காணக் கடவோமென்கிறார்.

வ்யா;—(பத்தராவியை யித்யாதி) தம்திருவடிகளுக்கு நல்லரானவர்களுக்கு ஆத்மாவானவனை; தாரகனாய்த் தன்னையொழியச் செல்லாதபடி யிருக்குமென்கை. அன்றிக்கே (க) "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம் - ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்கிறபடியே ஸ்நேஹிகளாயிருப்பாரைத் தனக்குத் தாரகமாகவுடையனாயிருக்கு மென்னுதல்; ஆவியாகக் கண்ணுக்குத்தோற்றாதபடி யிருக்கையன்றிக்கே, மறுவற்ற சந்த்ரனைப்போலே ஸதா த்ரஷ்டவ்யனாய், பூமிக்கெல்லாம் ஆப்யாயநம் பண்ணுமவனை. (அணித்தொத்தை) ஆபரணமாலையை. பொன்னரிமாலையைப்போலே; அன்றிக்கே (மணித்தொத்தை) நீலமணிமாலைபோலே ப்ரமஹரமான வடிவையுடையவனை - தெற்குத் திருமலையிலே கண்டுபோய்.

(முத்தினை) என்று-மேலுக்கு. முத்துப்போலே உடம்பிலே அணைந்தால் விடாய் கெடும்படி குளிர்ந்திருக்குமவனை; நீலமணி போலே கண்ணுக்கு ப்ரமஹரமான வடிவை யுடையனாயிருக்கை.

---

அநு.—எட்டாம்பாட்டு. (பத்தராவியையித்யாதி) கோபிமார்க்கேபவ்யனாயிருந்தபடியேயன்றிக்கே, ஆஶ்ரிதர்க்கெல்லாம் தாரகாதிகளானவனென்று அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

பால்போன்றமதியென்றாய், அத்தால்பலிதம்(மறுவற்றசந்த்ரனை) என்றது. ஆபரணரூபமாலை என்றத்தை விசேஷிப்பிக்கிறார் (பொன்னரி) பொன்மணி மாலையென்கை. பாடாந்தரத்தில் பொருளருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி).

(முத்தினையென்று மேலுக்கு) என்றது - வித்தினை யென்னுமளவும் "சென்று" என்றத்தோடே அந்வயியாமையாலே விண்ணகர்பதத்துக்கு மேலான பதத்தோடே அந்வயிக்குமென்கை. ... ... ... (அ)

---

(க) கீ-எ-௧அ.

பெருவிலையனான மாணிக்கம் போலே தர்ஸநீயமாயிருக்கும் வடிவழகே யன்றிக்கே, இதுக்கெல்லாம் ஸர்வகாரணபூ(ஞூ)தனாயிருக்கிறவனை. விண்ணகர்காண்டுமே. .... .... .... .... (அ)

மூ;—கம்பமாகளிறஞ்சிக் கலங்கவோர்
கொம்புகொண்ட குரைகழல் கூத்தனைக்
கொம்புலாம்பொழில் கோட்டியூர்க்கண்டுபோய்
நம்பனைச்சென்றுகாண்டும் நாவாயுளே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கம்பம் | நடுக்கத்தை விளைக்குமதாய் | கூத்தனை | தர்ஸநீயமாக நடந்தவனை ஸர்வேஶ்வரனை, |
| மா | பெரியவடிவை யுடைத்தான | கொம்புஉலாம் | தழைத்த கிளைகளால் நிறைந்துள்ள |
| களிறு | குவலயாபீடமானது | பொழில் | சோலைகளையுடைய |
| அஞ்சி | பயப்பட்டு | கோட்டியூர் | திருக்கோட்டியூரிலே |
| கலங்க | கலங்கி முடியும்படி | கண்டுபோய் | (முன்பு) ஸேவித்து, (இன்றைக்கு,) |
| ஓர்கொம்பு | (அதின்) கொம்பை | நம்பனை | ஆஶ்ரிதர்களுக்கு விஶ்வஸநீயனானஎம்பெருமானை |
| கொண்ட | வாங்கி முறித்தெறிந்தவனாய், | நாவாயுள் | திருநாவாயிலே |
| குரை | ஒலியாநின்றுள்ள | சென்று | போய் |
| கழல் | வீரக்கழலையுடையனாய், | காண்டும் | ஸேவிக்கக் கடவோம். |

அவ;—ஒன்பதாம்பாட்டு. குவலயாபீடத்தின் கொம்பைப் பறித்தவனைத் திருக்கோட்டியூரிலே கண்டுபோய், திருநாவாயிலே காணக்கடவோமென்கிறார்.

வ்யா.—(கம்பமித்யாதி) தன்னைக் கண்டார்க்கு நடுங்கவேண்டும்படியாய் பெரியவடிவையுடைய குவலயாபீடம் - தன்னைக்கண்டார் படும்நடுக்கத்தைத்தான்பட்டு அஞ்சிக்கலங்கிப்போம்படி, அதின்கொம்பை அநாயாஸேந வாங்கி, ஒலியோடுகூடினவீரக்கழலையுடையனாய், தர்ஸ

ஃஅரு.—ஒன்பதாம்பாட்டு. (கம்பமித்யாதி) ஆஶ்ரிதர்க்கெல்லாம் தாரகாதிகளானவளவே யன்றிக்கே, ஆஶ்ரித விரோதிகளை அழியச்செய்கையாலே வீரக்கழலிட்டுத் திரிகிறானென்று ஸங்கதி.

நீயமாக நடந்தவனை. அன்றிக்கே, மத்தமாய் கம்பத்தைப் பிடுங்கிக்கொண்டு ஸஞ்சரிக்கிற ஆனையானது பயப்பட்டுக் குலையும்படி, அதின்கொம்பைப்பறித்து அக்கொம்புகளைக்கையிலே ஆயுதமாகக் கொண்டு, கம்ஸன் மற்றையாரைத் துடர்ந்து கொடுதிரிகிறபோது ஆபரணங்களால் வந்தத்வநியை யுடைத்தான திருவடிகளை வீசிக்கொண்டு நடந்தபோது, வல்லாராடினுப்போலேயாயிற்றிருந்தபடி.

(கொம்புலாவித்யாதி) நித்யவஸந்தமாய், தழைத்த பொழிலை யுடைய திருக்கோட்டியூரிலே கண்டுபோய் எல்லாத்தசையிலும் இவ்வாத்மாவுக்குத் தஞ்சமானவனைத் தன்னைவிஶ்வஸித்தார் உகக்கும் திருநாவாயிலே காண்டும். .... .... .... .... (௯)

மூ;—பெற்றமாளியைப் பேரில்மணாளனைக்
கற்றநூல்கலிகன்றி யுரைசெய்த
சொல்திறமிவை சொல்லிய தொண்டர்கட்கு
அற்றமில்லை யண்டமவர்க்காட்சியே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



| பதம். | உரை. |
|---|---|
| பெற்றம் | பசுக்களை |
| ஆளியை | நோக்குவனாய், |
| பேரில் | திருப்பேர் நகரில் எழுந்தருளியிருக்கிற |
| மணாளனை | மணவாளப்பிள்ளையான ஸர்வேஶ்வரன்விஷயமாய், |
| நூல் | சாஸ்த்ரங்களை |
| கற்ற | அப்யஸித்த |
| கலிகன்றி | ஆழ்வார் |
| உரைசெய்த | அருளிச்செய்த |
| இவை | இந்த |
| சொல்திறம் | ஶப்தராஶியை |
| சொல்லிய | ஓதவல்ல |
| தொண்டர்கட்கு | ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு |
| அற்றம்இல்லை | (பகவதநுபவத்தில்) விச்சேதமில்லை; |
| அண்டம் | பரமபதமானது |
| அவர்க்குஆட்சி | அவர்களிட்ட வழக்காயிருக்கும். (௧௦) |

* கம்பபதத்துக்கும் கழல்பதத்துக்கும் அர்த்தாந்தரமருளுகிறார்(அன்றிக்கே யித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௯)

அரு;—பத்தாம்பாட்டு. (பெற்றமித்யாதி) "மாளிகை" என்றுபாடமாய், "பேரில்" என்றதுக்கு விசேஷணமாக்கியருளிச்செய்தது, "ஆளியை" என்று

வ்யா;—பத்தாம்பாட்டு. (பெற்றமித்யாதி) "பெற்ற" என்று-பெருமையாய், மாளிகைக்கு விசேஷணமாகவுமாம். "பெற்றமாளிகை" என்று - பாடமாகில், பசுக்களை நோக்குமவனையென்றது. (கற்றநூல்) திருமந்த்ரம் கற்றவிடத்திலே கற்குமித்தனையிறே அல்லாதவையும்; சாஸ்த்ர மர்யாதை தப்பாதபடிசொன்ன சப்தராசிரத்நக்குவைபோலே இவைசொல்லும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விச்சேதமில்லை. (௧) "ந ச புநராவர்த்ததே – நசபுநராவர்த்ததே" (௨) "ஆண்மின்கள் வானகம்" என்கிறபடியே நித்யாநுபவம் பண்ணலாம் தேசத்தை ஆளுவர்கள். .... .... .... .... .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி
## பத்தாம்பத்து முதல்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## பத்தாம்பத்து இரண்டாந்திருமொழி
### இரக்கம் ப்ரவேசம்.

வ்யா.—திருப்பதிகளை அநுபவித்தார்கீழ்; அது தலைக்கட்டி அவதாரங்களிலே போந்தநுபவிக்கிறார். இதிலே தமக்கபிமதமான ராமவிஜயத்தை எதிரிகள் மேலெழுத்திட்ட பாசுரத்தாலே அநுபவிக்கிறார். அங்குத்தை விஜயம் தமக்கிஷ்டமாகையாலே அந்த விஜயத்

---

யாடாந்தரமருளுகிறார் (பெற்றமித்யாதி). *மயர்வற மதிநலம் பெற்றாராயிருக்க இவரை "கற்றவர்" என்னக்கூடுமோவென்ன (திருமந்த்ரமித்யாதி). சொல்திறமித்யாதிக் கர்த்தமருளுகிறார் (சாஸ்த்ரமர்யாதையித்யாதி). ... (௧௦)

ஜீயர்திருவடிகளே சரணம்.

---

அரு;—இரக்கம் ப்ரவேசம்.—"வாடினேன்" என்றுதுடங்கி-இவ்வளவும் வரத்திருப்பதிகளெல்லாம் ப்ராதாந்யேந அநுபவித்தவர், இனிமேல் *மற்றமுளவளவாக விபவங்களிலே ப்ராதாந்யம் தோற்றப்பாடி அநுபவிக்கிறாரென்று பேடிகாஸங்கதியருளுகிறார் (திருப்பதிகளையித்யாதி). அதில் இத்திருமொழிக்கு ஸங்கதியருளுகிறார் (இதிலித்யாதி). (மேலெழுத்திட்ட பாசுரத்தாலே) என்றது - "பொங்கத்தம்பொங்கு" என்று வாத்யமடித்தமைக்கு

---

(௧) சாந்தோ-அ-௧௫-௧. (௨) தி-வாய்-௧௦-௯-௬.

துக்கு இலக்காய்த், தோற்றராக்ஷஸர் தசைபிறந்து, பிராட்டிமார் தசைபிறந்து பேசுமாபோலே தாமானதன்மை தோற்றாதே, தோற்றராக்ஷஸர் பாசுரத்தாலேராமவிஜயத்தைப்பேசி அநுபவிக்கிறார்.*

மூ;—இரக்கமின்றி யெங்கோன்செய்ததீமை
யிம்மையே யெமக்கெய்திற்றுக்காணீர்
பரக்கயாமின்றுரைத்தென் இராவணன்
பட்டன னினியாவர்க்குரைக்கோம்
குரக்குநாயகர்கா ளிளங்கோவே
கோலவல்விலி ராமபிரானே
அரக்கராடழைப்பாரில்லை நாங்க
ளஞ்சினோம் தடம்பொங்கத்தம்பொங்கோ. (க)

| பதம். | உரை. |
|---|---|
| எம் | எங்களுக்கு |
| கோன் | ஸ்வாமியான ராவண[ன் |
| இரக்கம்இன்றி | தயையில்லாமல் |
| செய்த | செய்த |
| தீமை | தீமையானது |
| எமக்கு | எங்களுக்கு |
| இம்மையே | இஹலோகத்திலேயே |
| எய்திற்றுக்காணீர் | பலித்துவிட்டபடியைக்காணுங்கோள்; |
| இன்று | இப்போது |
| யாம் | நாங்கள் |
| பரக்க | விரிவாக |
| உரைத்து | சொல்லி |
| என் | பயனென்?; |
| இராவணன் | ராவணனானவன் |
| பட்டனன் | மாண்டுபோனான்; |
| இனி | இனிமேல் |
| யாவர்க்கு | யாருக்கு |
| உரைக்கோம் | (இத்தைச்) சொல்லுவோம்?; |

| பதம். | உரை. |
|---|---|
| குரக்குநாயகர்காள் | வாநரயூதபதிகளே! |
| இளங்கோவே | இளையபெருமாளே! |
| கோலம் | தர்ஶநீயமாய் |
| வல் | வலிமையுடைத்தான |
| வில் | வில்லையுடைய |
| இராமபிரானே | சக்ரவர்த்தித் திருமக[னே! |
| அரக்கர் | ராக்ஷஸஜாதியில் |
| ஆடு அழைப்பார் | வெற்றிசொல்லக்கட[வார் |
| இல்லை | இல்லை; |
| நாங்கள் | (தோற்ற) நாங்கள் |
| அஞ்சினோம் | பயப்படாநின்றோம்; (தோற்ற எங்களுக்கு) |
| பொங்கத்தம் பொங்கோ. | "பொங்கத்தம் பொங்கம்" என்கிற ஜயஸூசக வாத்யத்தின் சப்தாநுகாரம் |
| தடம் | ஒத்தது. (க) |

ஸூசகமான சப்தோச்சாரணம் பண்ணிக்கொண்டு திரிகிற எங்களுக்கு, தடம்-ஒத்ததென்று சொல்லுகையைக் கடாக்ஷித்து, அதுக்குப் பலிதமான வர்த்தம் சொன்னபடி. ... ... ... ... ... ... ... *

வ்யா.—முதற்பாட்டு. (இரக்கமித்யாதி) பெருமாளையும் பிராட்டியையும் சேரக்கண்டால் (௧) "வடிவாய் நின்வலமார்பினில்வாழ்கின்றமங்கையும் பல்லாண்டு" என்கிறபடியே மங்களாசாஸநம் பண்ண ப்ராப்தமாயிருக்க, மிதுநத்தைப் பிரித்த நிர்தயனை ராவணன் செய்ததீமை. (௨) "ஐஹைவ ஃபலமஶ்நுதே- இஹைவபலமஶ்நுதே" என்கிறபடி இஹலோகத்திலே எங்களுக்குப் பலித்தது. பல சொல்லியென்? தான்செய்ததப்பின்பலம்தானே அநுபவித்தான். அன்றிக்கே, இன்னார் பட்டாரென்றறியாமையாலேராவணன் பட்டானென்னவுமாம். பிற்பட்டகாலத்திலே சொல்லுகிறாராகையாலே இவர்க்கு அவன் பட்டானென்று சொல்லவுமாம். இனி இத்தை ஆர்க்கு இருந்து சொல்லுவோம். வாநரயூதபதிகாள்! இளையபெருமாளே!

அரு;—முதற்பாட்டு. (இரக்கமித்யாதி) "இரக்கம்" என்னில் - ஸ்நேஹமாதல், தயையாதல் விவக்ஷித்து இரண்டையும் அருளிச்செய்து, தாத்பர்யமருளுகிறார் (பெருமாளையுமித்யாதி). (ப்ராப்தமாயிருக்க) என்றவநந்தரம் "இதுக்கு உறுப்பான ப்ரேமமின்றிக்கே"என்றுசேஷம். "யாம் அவன் தீமைகளைப் பரக்க நின்றுசொல்லி யென்" என்று சப்தார்த்தம் விவக்ஷித்தருளுகிறார் (பலவித்யாதி). அரக்கர் பட்டபடிகளைப் பரக்கச்சொல்லியென், என்றர்த்தாந்தரமருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி). (அறியாமையாலே) என்றது - ப்ரயோஜநாபாவத்தாலே விசாரியாமையாலே யென்கை.

"எங்களையொழியக்குலையவனை" என்று மேலே-ராவணனை நிரஸிக்குகை சொல்லியிருக்க, இங்கே ராவணன் பட்டானென்று சொல்லக்கூடுமோவென்னும் சங்கையிலே, (௩) "நேயமஸ்தி புரீலங்கா - நேயமஸ்தி புரீலங்கா" என்கிற ந்யாயத்தாலே தீமையின் ப்ராபல்யத்தாலே ஸித்தவத்கரித்து அருளிச்செய்தாரென்றும், மற்றும்படுகிற ராக்ஷஸரெல்லாம் பட்டபடியைக் கண்டால், இனிராவணன் பட்டானென்றது-கைமுதிகந்யாயத்தாலே ஸித்தமன்றோவென்றும் இரண்டுவிதமாகப் பரிஹாரமருளிச்செய்து, இப்பாட்டிலே ராவணன் பட்டபின்பு சொல்லுகிறவர்கள் பாசுரமென்றும், அப்பாட்டில் - ராவணன் படுவதற்குமுன்புள்ள [illegible] விரோதமில்லையென்று திருவுள்ளம்பற்றி. ஆனால் அது [illegible] முந்துறச் சொல்ல வடுப்பது; இத்தையே இவர் முந்துற அருளிச்செய்வானென்னென்கிற சங்கையிலே அருளுகிறார் (பிற்பட்டவித்யாதி). இத்தால் ராமவிஜயத்தில் இவர்க்குண்டான ஆசையாலே இத்தையே முந்துறவருளிச் செய்தாரென்று கருத்துச் சொல்லிற்றாயிற்று.

(௧) திருப்பல்லாண்டு-௨. (௨) (௩) ரா-ஸு-௪௩-௨௫.

தர்ஶநீயமானவலியையுடைத்தான வில்லையுடைய சக்ரவர்த்தித்திரு மகனே !.

(அரக்கராடழைப்பாரில்லை) "ராக்ஷஸரில் இனி ஆடுபோலேகூப்பிடக்கடவாரில்லை" என்று பட்டர் அருளிச்செய்தாரென்று நஞ்ஜீயரருளிச் செய்வர். "இது ஓரர்த்தமாயிராமையாலே, இங்ஙனே இதுசொன்னாலோ" என்று, நான் கேட்டேன் ; சொல்லலாகாதோ என்ன; "ஆடு"என்று-வெற்றி; இந்தராக்ஷஸஜாதியில் வெற்றிசொல்லக் கடவாரில்லை என்கிறதுஎன்ன; "இதுவேயிறே பொருளென்று அருளிச்செய்தார்" என்று பிள்ளையருளிச்செய்வர். (அஞ்சினோமித்யாதி) எதிரிகளைவென்று அவர்கள் வெற்றியாலே தூர்யகோஷத்தைப் பண்ணுவித்து அதுக்கீடாக ஆடும் கூத்துப்போலே தோற்றவர்கள் தோல்வியாலே பறையடிக்க ஆடுவதொருகூத்துண்டு ; அந்தச்சப்தாநுகாரம் - "பொங்கத்தம் பொங்கு" என்கிறவிது. (௧)

(ஆடுபோலே கூப்பிடக்கடவாரில்லை) என்றது-ஒருநொண்டியாடுஸிம்ஹத்தைக்குறித்து"ஏகஸிம்ஹம் பக்ஷ்யாமி - ஏகஸிம்ஹம் நபக்ஷ்யாமி" என்று சொன்னதுண்டென்று லௌகிகமான கதையுமுண்டிறே. அந்த ஆடுபோலேயும் தைர்யமில்லை யென்றுகருத்து. (இது ஓரர்த்தமாய்) என்றது - இதுவே-பதத்துக்கு அர்த்தமென்று நிர்பந்தமில்லாமையாலேயென்கை. ஆழ்வார்கள் பாசுரங்கள் அநேகார்த்தகர்ப்பங்களாகையாலே இன்னமும் பதார்த்தம்சொல்லலாமென்று திருவுள்ளமென்று கருத்து.

(வெற்றிசொல்லக்கடவாரில்லை)என்றதுக்கு-நாமும் "வெற்றிபெறவாருங்கோள்" என்று அழைக்கைக்கு ஒருவருமில்லையோவென்றுகருத்து. (இதுவேயிறே பொருள்) என்றது-கொண்டாட்டத்திலே. இத்தனை இவ்வர்த்தத்தை வ்யாவர்த்திக்க வில்லையென்று கருத்து. "பொங்கத்தம் பொங்கோ-தடம்" என்றந்வயம். "பொங்கத்தம் பொங்கம்" என்று-லக்ஷணயா சொல்லக்கடவவாத்யமே பேசினோமான எங்களுக்கு, "தடம்-ஒத்தது" என்று சப்தார்த்தம் விவக்ஷித்து, அதின் ஸ்வரூபத்தை யருளுகிறார் (எதிரிகளையித்யாதி). (ஆடுவதொருகூத்து) என்றது - " குழமணிதூரம் " என்றகூத்தென்று கருத்து. (அந்த) என்றது - அவ்வாத்யத்தினுடைய என்கை. இரண்டு பர்யாயம் "பொங்கத்தம்பொங்கம்"என்னத்துடங்கினவாய் அஞ்சினபடிக்கு ஸூசகமாக "பொங்கோ" என்று குறைத்து நிர்த்தேசித்தாரென்று திருவுள்ளம். ... (௧)

மூ;—பத்துநீண்முடியு மவற்றிரட்டிப்
பாழித்தோளும் படைத்தவன் செல்வம்
சித்தம் மங்கையர்பால் வைத்துக்கெட்டான்
செய்வதொன்றறியா வடியோங்கள்
ஒத்ததோளிரண்டு மொருமுடியும்
ஒருவர்தம் திறத்தோமன்றி வாழ்ந்தோம்
அத்தவெம்பெருமா னெம்மைக் கொல்லேல்
அஞ்சினோம்தடம் பொங்கத்தம் பொங்கோ. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| நீள் | நீண்ட |
| பத்துமுடியும் | பத்துத்தலைகளையும் |
| பாழி | பலிஷ்டமாய் |
| அவற்று இரட்டி | தலைகளின் கணக்குக்கு இரட்டித்த கணக்கையுடைய |
| தோளும் | (இருபது) தோள்களையும் |
| படைத்தவன் | உடையனான ராவணனானவன், |
| மங்கையர்பால் | ஸ்த்ரீகள் பக்கலிலே |
| சித்தம் | மநஸ்ஸை |
| வைத்து | செலுத்தி |
| செல்வம் | (தன்) ஸம்பத்தை |
| கெட்டான் | அழித்தான்; |
| செய்வதொன்று அறியா | இதிகர்த்தவ்யதா மூடர்களாய் |
| அடியோங்கள் | அத்தலைக்கு சேஷபூதரான நாங்கள் |
| தோள் இரண்டும் | இரண்டுதிருத்தோளும் |
| ஒருமுடியும் | ஒரு திருமுடியுமாய் |
| ஒத்த | விக்ருதவேஷரல்லாத |
| ஒருவர்தம் | ஒப்பற்றபெருமாளுடைய |
| திறத்தோம் அன்றி | இடையாட்டமுடையோமல்லாமையால் |
| வாழ்ந்தோம் | கெட்டோம்; |
| அத்த | எங்களுக்கு ஜநகனானவனே! |
| எம்பெருமான் | எங்கள்நாதனே! |
| எம்மை | எங்களை |
| கொல்லேல் | கொல்லாதொழியவேணும்; |
| அஞ்சினோம் தடம்பொங்கத்தம் பொங்கோ. (உ) | |

அ;—இரண்டாம்பாட்டு. (பத்தித்யாதி). "యచ్ఛీలస్స్వామీ-తచ్ఛీలోదాసః-
யச்சீலஸ்ஸ்வாமீ - தச்சீலோதாஸ:" என்கிறபடியே நீங்களும் அவனைப்போலே தீமைசெய்தீர்களோவென்ன; அவன் தலைப்பத்துப் படைத்தோமென்று தீமைகளைச் செய்தான்; எங்களுக்குக் குற்றமில்லை யென்று விண்ணப்பம் செய்கிறார்களென்று ஸங்கதி.

"இராவணன்" என்று சொல்லலாயிருக்க, இப்படி விசேஷித்ததுக்கு ப்ரக்

வ்யா;—இரண்டாம்பாட்டு. (பத்துநீண்முடியும்) (க) "వాక్య ముక్తం దశానన - வாக்யமுக்தம் தசாநந" என்கிறபடியே "உனக்கு அவர்காலிலேவிழப் பத்துத்தலையுண்டு; அஞ்ஜலிபண்ணுகைக்கு இருபதுகையுண்டு; அவரைச் சரணம்புகவல்லையே" என்றானிறே விபீஷணாழ்வான். பத்துத்தலையும், வலியையும், பெருமையுமுடையனாய், இருபது தோளையுமுடையனானவன் விஷயப்ரவணனாய்த் தன் ஸம்பத்தை அழித்தான். (செய்வதித்யாதி) ரக்ஷகனானவன்போகையாலே செய்வதறியாத நாங்கள். அறிவுகேடரான நாங்கள். இரண்டு தோளும் ஒரு முடியும் விக்ருத வேஷரல்லாத பெருமாளைப் பெருமையாலே கெட்டோம். "வாழ்ந்தோம்" என்று-க்ஷேபபரம்.

அன்றிக்கே, இரண்டுதோளும் ஒருமுடியுமாயிருக்கிற நாங்கள் ஒருவரிடையாட்டத்தோமல்லேமாகையால், நாங்கள் விஷய ப்ரவணரல்லாமையாலே வாழ்ந்தோம்; அன்றிக்கே (உ) "సర్వస్వ..."

ருதோபயோகம் காட்டுகிறார் (வாக்யமித்யாதி). (விபீஷணாழ்வான்) என்றவநந்தரம் "அப்படியே சொல்லுகிறார்கள்" என்று சேஷம். இத்தால் பத்தும் பத்தாக வாழ்வுக்கு உடலாயிருக்கக் கெட்டானென்று வெறுக்கிறாரென்று கருத்து. பாழிபதத்துக்கு - மிடுக்கும், பெருமையு மிரண்டர்த்த மென்று விவக்ஷித்து, சப்தார்த்தமருளுகிறார் (பத்தித்யாதி). "செல்வம்-கெட்டான்" செல்வத்தைக் கெடுத்தானென்று திருவுள்ளம். (போகையாலே) கெட்டுப் போகையினாலே. "ஒன்று" என்றத்தாலே-தவிர்வது மறியோமென்னுமது பலிக்கையாலே, பலிதார்த்தம் (அறிவித்யாதி).

ராமாவதாரத்துக்கே "தோளிரண்டும் ஒருமுடியும், ஒருவராய் - அத்விதீயரான, தம்முடைய - தேவருடைய, திறத்தோமன்றி - இடையாட்டத்தோமன்றிக்கே"-என்று வாக்யார்த்தமாய் அருளுகிறார் (இரண்டித்யாதி). "ஒத்த" என்றது-லோகத்தாரோடொத்த வென்றாய், "முடியும்" என்றவநந்தரம்-"உடையோமாகையாலே" என்று சேஷபூரணமும் திருவுள்ளம்பற்றி யோஜிக்கிறார் (அன்றிக்கேயித்யாதி). இப்பக்ஷத்தில் ராவணனைப் பத்தித்யாதியாலே வர்ணித்தது - கேட்டுக்குடலாக யோஜநாந்தரம் கண்டு கொள்வது. "ஒத்த தோள்" ஒரு தோளுக்கொத்த என்றும், "ஒருவர்தம் திறத்தோமாய் வாழ்ந்தோம்" என்று முந்துறத்தாத்பர்யமருளுகிறார் (அன்றிக்கே பரம்பரேத்யாதி). அழகைக்கண்டு எல்லாரும் உஜ்ஜீவித்தோமென்று கருத்து.

(க) ரா-யு-கரு-கக. (உ) ரா.

ஸ்ரீ-ப்ரஸ்பரஸ்ய ஸத்ருமௌ" என்கிறபடியே ஒன்றுக்கொன்று ஒப்பாயிருக்கிற தோளிரண்டையும், ஒருதிருவபிஷேகத்தையுமுடையராயிருக்கிற உம்மைக்கண்டு அடியரான நாங்கள் ஒருவர் இருவரன்றிக்கே எல்லாரும் ஒக்கவாழ்ந்தோம். கண்டென்கிற விடமத்தனையும் அத்த்யாஹரித்துக்கொள்வது. (அத்த) எமக்குஜநகனனவனே! (எம்பெருமான்) எங்கள்நாதனே! எங்களைக் கொல்லாதொழியவேணும்."அஞ்சினோம்"என்றுரைக்கொல்லுகை உனக்குப்போருமோ?.

மூ;—தண்டகாரணியம் புகுந்தன்று
தையலைத் தகவிலியெங்கோமான்
கொண்டுபோந்து கெட்டா னெமக்கிங்கோர்
குற்றமில்லைக்கொல்லேல் குலவேந்தே
பெண்டிரால்கெடு மிக்குடிதன்னைப்
பேசுகின்றதென் தாசரதீயுன்
அண்டவாணருகப்பதே செய்தாய்
அஞ்சினோம் தடம்பொங்கத்தம்பொங்கோ. (ந)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தகவுஇலி | நிர்க்ருணனை | எமக்கு | எங்களுக்கு |
| எம்கோமான் | எங்களுக்கு நியாமகனையிருந்த ராவணன் | ஓர்குற்றம் | ஒருகுற்றமும் |
| | | இல்லை | கிடையாது; |
| அன்று | (நீங்கள்) காட்டிலே தாபஸரா யிருக்கும் போது | குலம் | (நிரபராதரை நலியா இக்ஷ்வாகுவின்) வம்ஶத்துக்கு |
| | | வேந்தே | தலைவராய் [யாளே! |
| தண்டகாரணியம் | தண்டகாரண்யத்தில் | தாசரதீ | தசரதபுத்ரரான பெரு |
| | | கொல்லேல் | கொல்லாதொழியவேணும். |
| புகுந்து | ப்ரவேஶித்து | | |
| தையலை | பிராட்டியை | பெண்டிரால் | ஸ்த்ரீசாபல்யத்தாலே |
| கொண்டு போந்து | அபஹரித்துவந்து | கெடும் | கெடக்கடவ |
| (அக்குற்றமடியாக) | | இக்குடி தன்னை | இந்தராக்ஷஸ ஜாதியைப்பற்றி |
| கெட்டான் | முடிந்துபோனன்; | பேசுகின்றது | பேசலாவது |
| இங்கு | இவ்விஷயத்தில் | என் | என்ன இருக்கிறது? |

| | |
|---|---|
| உன் தேவரீருக்கு (இஷ்டரான) அண்டவாணர் தேவர்கள் உகப்பதே உகக்கக்கடவகார்யத்தையே | செய்தாய் செய்துவிட்டாய்; அஞ்சினோம் தடம்பொங்கத்தம் பொங்கோ. (௩) |

வ்யா;—மூன்றாம்பாட்டு. (தண்டகாரண்யம்புகுந்து) தானிருந்த விடத்திலே அவர்வந்து அடைமதிள்படுத்த அபகாரம்பண்ணினனென்று, காட்டிலே தாபஸவேஷத்தோடே திரியாநிற்க, அங்கே வந்து பிராட்டியைப்பிரித்து நிர்க்க்ரு(ஞ)ணனையல் †கெட்டுப் போனான். நாங்கள் செய்ததொரு குற்றமில்லை. எங்களைக் கொல்லாதொழியவேணும். நிரபராதரைக்கொல்லாத இக்ஷ்வாகுவம்சத்திலே பிறந்ததுக்குத்தலையன்றோநீர். விஷயப்ரவணராய் கெடக்கடவ இஜ்ஜாதியை எத்தைச் சொல்லுவது. ஸ்வர்க்கத்துக்கு வன்னியமறுத்தவன் மகனே! உனக்கு இஷ்டரான தேவர்கள் உகந்ததே செய்துவிட்டாய். .... .... .... .... .... .... (௩)

மூ;—எஞ்சலிலிலங்கைக்கிறை யெங்கோன்
றன்னைமுன்பணிந்து எங்கள்கண்முகப்பே
நஞ்சுதானரக்கர்குடிக்கென்று
நங்கையை யவன்றம்பியேசொன்னான்
விஞ்சைவானவர் வேண்டிற்றேபட்டோம்
வேரிவார்பொழில் மாமயிலன்ன
அஞ்சலோதியைக் கொண்டுநடமின்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம் பொங்கோ. (௪)

அரு;—மூன்றாம்பாட்டு. (தண்டகாரண்யமித்யாதி) கீழ்ப்பாட்டில் "மங்கையர்பால்" என்று-ஸாமாந்யேந தேவதாஸ்த்ரீகள் முதலானார் பக்கல் சித்தம் வைத்த தப்பைச் சொன்னார்கள்; இதில் நேரே பெருமாள் விஷயத்திலே தானே தீரக்கழியப்பண்ணினகுற்றத்தைப்பேசுகிறார்களென்றுஸங்கதி.

(ஜாதியை) ஜாதிக்கு என்கை. தசரதன் சம்பராஸுர நிரஸநம் பண்ணமையைத் திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (ஸ்வர்க்கேத்யாதி). ... (௩)

அரு;—நாலாம்பாட்டு. (எஞ்சலிலித்யாதி). எமக்கு இங்கோர் குற்றமில்லையென்று நின்றிகோள்; அவன் தையலைக்கொண்டு போந்தானாகில் நீங்கள் அவனுக்கு ஹிதம் சொல்லாதே எதிரம்பு கோத்துவந்தது குற்றமன்றோவென்ன; தம்பியே சொல்லிக்கேளாதே கெட்டவன்-எங்கள் வார்த்தையைக்கேட்கப் புகுகிறானோ என்கிறார்களென்று ஸங்கதி.

† (பா) கொடுபோனான்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எஞ்சல் இல் | (யுத்தோப கரணங்களால்) குறைவற்ற | சொன்னான் | சொன்னான்; |
| இலங்கைக்கு | லங்காநகரத்துக்கு | விஞ்சைவானவர் | வித்யாதரர் முதலான தேவர்கள் |
| இறை | நிர்வாஹகனாய் | வேண்டிற்றே | ப்ரார்த்தித்தபடியே |
| எம் | எங்களுக்கு [னை | பட்டோம் | (நாங்கள்) அநர்த்தப் பட்டோம்; |
| கோன் தன்னை | ஸ்வாமியான ராவண | வேரி | பரிமளத்தை யுடைத் |
| முன் | நாங்கள் ஓலக்கம் கொடுத்துக் கொண்டிருக்கிற காலத்திலே | வார் | பரந்திருந்துள்ள [தாய் |
| அவன் தம்பியே | அந்தராவணனுடைய தம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வான் தானே | பொழில் | சோலையிலுள்ள |
| எங்கள் | எங்களுடைய | மாமயில் அன்ன | மயில்போலிருப்பவளாய் |
| கண்முகப்பே | கண்ணெதிரில் | அஞ்சு | (இருட்சி, சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு என்று) ஐந்து வகைப்பட்ட |
| பணிந்து | ராவணன் காலிலே விழுந்து | அல் | இருண்ட |
| நங்கையை | கல்யாணகுணங்களால் பூர்ணையான இப்பிராட்டியை | ஓதியை | மயிர்முடியை யுடையளான பிராட்டியை |
| அரக்கர்குடிக்கு | "ராக்ஷஸ குலத்துக்கு | கொண்டுபோந்து | கொண்டுபோங்கோள்; |
| நஞ்சுதான் என்று | விஷம் கிடாய்" என்று | மின் | |

அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ. (௪)

வ்யா;—நாலாம்பாட்டு. (எஞ்சலில்) "எஞ்சல்" என்று ஸங்கோசம். பிராட்டியைக்கொண்டு புகுந்தானாய், "இவ்வூரிலே வந்து இவளை மீட்கவல்லாருண்டோ?" என்று குறைவற்றானாயிருந்த ராவணனை நாங்களடைய ஓலக்கம் கொடுத்துக்கொண்டிருக்க, எங்கள் முன்னே அவன்காலிலேவிழுந்து, கல்யாணகுணங்களால் பூர்ணையாயிருக்கிற இவளை "ராக்ஷஸகுலத்துக்கு நஞ்சுகிடாய்" என்று ஸ்ரீ விபீஷணாழ்வான் சொன்னான்.

---

(ஸங்கோசம்) என்று-குறைவாய், யுத்தோபகரணங்களாலே குறைவற்ற இலங்கை என்றாய், தாத்பர்யமருளுகிறார் (பிராட்டியித்யாதி).

"விஞ்சிவானவர்" என்று - வித்யாதரராய், அத்தாலே தேவ ஜாதிக்கு உபலக்ஷணம். பரிமளத்தையுடைத்தாய் பரந்த பொழிலில் தன்நிலத்தில் மயில்போலேயிருக்கிற (அஞ்சலோதியை) சுருண்டு நெய்த்துப்பரிமளிதமாய், என்றாப்போலே அஞ்சுவகைப்பட்டிருப்பதாய், இருண்டிருந்துள்ள மயிர்முடியையுடைய பிராட்டியைக் கொடுபோங்கோள். "அஞ்சு" என்று-அஞ்சுவகைப்பட்டிருக்கை. "அல்" என்று-ராத்ரி. அத்தால் இருட்சியை நினைக்கிறது. "ஓதி" என்று - மயிர்முடி. .... .... .... .... .... (௪)

மூ;—செம்பொன் நீண்முடி யெங்களிராவணன்
சீதையென்பதோர்தெய்வம் கொணர்ந்து
வம்புலாம்கடிகாவில் சிறையா
வைத்ததே குற்றமாயிற் றுக்காணீர்
கும்பனோடுநிகும்பனும் பட்டான்
கூற்றம் மானிடமாய்வந்து தோன்றி
அம்பினாலெம்மைக் கொன்றிடுகின்றது
அஞ்சினோம் தடம்பொங்கத்தம்பொங்கோ. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| செம் | செவ்விதான |
| பொன் | பொன்னால் செய்யப் பட்டதாய் |
| நீள் | நீண்டிருப்பதுமான |
| முடி | கிரீடத்தையுடையனாய் |
| எங்கள் | எங்களுக்கு நியந்தா |
| இராவணன் | ராவணனானவன் [வான |
| சீதை என்பது | "பிராட்டி" என்கிற |
| ஓர் தெய்வம் | ஒரு தேவதையை |
| கொணர்ந்து | கொண்டு வந்து |
| வம்பு உலாம் | புதுமை மாறாதேயிருப்பதாய் |
| கடி | பரிமளத்தை யுடைத்தான |
| காவில் | அசோக வநிகையிலே |
| சிறையா | சிறையிலிருப்பாம்படி |
| வைத்ததே | வைத்திருந்த விதுதானே |
| குற்றமாயிற்றுக்காணீர் | தப்பாய்த்தலைக் கட்டிற்று; (அக்குற்றமே ஹேதுவாக,) |
| கும்பனோடு | கும்பனும் |
| நிகும்பனும் | நிகும்பனும் |
| பட்டான் | மாண்டு போனார்கள்; |
| கூற்றம் | (ராவணன் கையிலே முன்பு தோற்ற) ம்ருத்யுவானவன் |

(என்றாப்போலே) என்றது-செறிவையும் மென்மையையும் ஸூசிப்பிக்கிறது. (௧) "செறிமென் கூந்தல்" என்னக்கடவதிறே. "மாமயில்" என்ற த்ருஷ்டாந்த பலத்தாலே நீட்சிஸித்தமென்று திருவுள்ளம்பற்றி, மற்றவற்றைப் பிரித்தருளிச் செய்தார். ... ... ... ... ... (௪)

(௧) பெரி-தி-௧-௧-௪.

| | |
|---|---|
| மானிடமாய் மாநுஷ வேஷத்தைப் பரிக்ரஹித்து | எம்மை எங்களை |
| வந்துதோன்றி (இவ்விடத்தில்) வந்து தோன்றி | கொன்றிடுகின் நலியாநின்றான்; றது |
| அம்பினால் பாணத்தினால் | அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ. (௫) |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (செம்பொனித்யாதி) ஶ்லாக்யமான திக்விஜயம்பண்ணிக்கவித்த முடியையுடையனானஎங்களுடைய ராவணன், பிராட்டியன்றொரு தேவதையைக்கொண்டுவந்து. (வம்பித்யாதி) புதுமைமாறாதே யிருப்பதாய், பரிமளத்தையுடைத்தான அசோகவநிகையிலே, பெருமாளுக்கும் அவளுக்குமேகாந்தமாகவநுபவிக்கலாம் தேசத்திலே அவர்பக்கல் நின்றும்பிரித்து, அவளைத் தனியே வைத்தவிது குற்றமாய், அதுவே ஹேதுவாக கும்பநிகும்பர்கள் பட்டார்கள்.

(கூற்றமித்யாதி) ராவணன்கையிலே முன்புதோற்ற ம்ருத்யுவானவன் வந்து; ராவணன் தேவர்களை நெருக்கிவரக்கொண்டு மநுஷ்யர்களை அநாதரித்தான்; அத்தாலே அந்தம்ருத்யு - மாநுஷவேஷத்தைப் பரிக்ரஹித்துத்தோன்றி, அந்தமணிச்சுக்கு ஏகாந்தமான அம்பாலே எங்களைக்கொல்லுகிறவித்தனை. .... .... (௫)

மூ;—ஓதமாகடலைக் கடந்தேறி
புயர்கொள்மாக்கடிகாவை யிறுத்துக்
காதல்மக்களும் சுற்றமும் கொன்று
கடியிலங்கை மலங்க வெரித்துத்
தூதுவந்தகுரங்குக்கே உங்கள்
தோன்றல்தேவியை விட்டுக்கொடாதே
ஆதர்நின்று படுகின்றதந்தோ
அஞ்சினோம்தடம்பொங்கத்தம் பொங்கோ. (௬)

அந;—அஞ்சாம்பாட்டு. ( செம்பொனித்யாதி ) ராவணன் ம்ருதப்ராயனென்று பிராட்டியைக் கொண்டு நடமின் என்றார்கள். அவன் ம்ருதப்ராயனைக்கு உடலாக ப்ரபல வீரர்கள் பட்டபடியைச் சொல்லி முதலிகளைக் குறித்து பயத்தை அறிவிப்பிக்கிறார்களென்று ஸங்கதி.

பட்டபின்புசொல்லுவார் பாசுரம் கீழேயென்னும்பக்ஷத்திலே, இப்பாட்டுத் துடங்கி ராவணவதாத்பூர்வம் என்று கொள்ளவேணும். கடிகாவில் வைத்தது சிறையாமோ வென்ன வருளுகிறார் (பெருமாளுக்கித்யாதி). (௫)

| பதம். | உரை. |
|---|---|
| ஓதம் | அலையெறிகிற |
| மா கடலை | பெருங்கடலை |
| கடந்து | தாண்டி, |
| ஏறி | அக்கரைப்பட்டு |
| உயர்கொள் | ஒக்கத்தையுடைத்தாய் |
| மா | பரந்த |
| கடி | பரிமளிதமாயிருந்துள்ள |
| காவை | சோலையையுடைய அசோகவநிகையை |
| இறுத்து | முறித்து, |
| காதல் | (ராவணனுடைய) ஸ்நேஹ விஷயரான |
| மக்களும் | அக்ஷகுமாரன் தொடக்கமான புத்ரர்களையும் |
| சுற்றமும் | அந்தரங்க கிங்கரர்களையும் |
| கொன்று | கொன்று, |
| கடி | காவல்களையுடைத்தான |
| இலங்கை | லங்கையானது |
| மலங்க | கலங்கும்படி |

| பதம். | உரை. |
|---|---|
| எரித்து | (அக்நியாலே) தஹித்து, |
| தூதுவந்த | (பிராட்டி பக்கல்) தூது சொல்லவந்த |
| குரங்குக்கே | ஒரு குரங்கின் (ஹநுமான்) கையிலேயே |
| உங்கள் | உங்களுக்கு |
| தோன்றல் | ஸ்வாமியான பெருமாளுடைய |
| தேவியை | தேவியான பிராட்டியை |
| விட்டுக்கொடாதே | விட்டுக்கொடாமல் |
| ஆதர் | இளிம்பரான நாங்கள் |
| நின்று | இப்படி துவண்டு நின்று |
| படுகின்றது | அநர்த்தப்படவேண்டிற்று; |
| அந்தோ | ஐயோ! |

அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ. (௬)

வ்யா;—ஆறும்பாட்டு. (ஓதமாகடலையித்யாதி) அலையெறிகிற பெருங்கடலைத் தன் கவட்டின்கீழேயாம்படி கடந்து அக்கரைப் பட்டு. (உயர்கொளித்யாதி) ஒக்கத்தையுடைத்தாய் பரந்து பரிமளிதமாயிருந்துள்ள சோலையையுடைய அசோகவநிகை, அத்தை

அ௩;—ஆறும்பாட்டு. (ஓதமித்யாதி). "கூற்றம் மானிடமாய் வந்து தோன்றிக்-கொன்றிடுகின்றது" என்றுசொல்லாநின்றீர்கள்; ஒருகுரங்குவந்து ஊரைச்சுட்டபோதே அஞ்சி, ஸந்தி (✱) பண்ணிக்கொள்ள வொண்ணாதோ?. ✱க(✕)தேஜலே ஸேதுபந்தம்போலே ஹதசேஷராய் இப்போது கூப்பிடுவா னென்னென்ன; இங்ஙனே விவேகமுண்டாகில் இத்தனைவருமோ என்கிறார்க ளென்று ஸங்கதி.

(கவட்டின்கீழே)-தப்படிக்குள்ளே யென்கை. (சோலை) என்றத்தைப் பிரித்து வாக்யபேதமாக்கி, "இப்படி வைலக்ஷண்யத்தை யென்றத்தை" ஏ

முறித்து. (காதன்மக்களித்யாதி) ராவணனுக்கு ஸ்நேஹ விஷயமான அக்ஷயகுமாரன் துடக்கமானபுத்ரர்களேயும், அவனுக்குஅந்தரங்கரான கிங்கரர் துடக்கமானரையுங் கொன்று.

(கடியிலங்கையித்யாதி) அரணையுடைத்தாய், அக்நியும்புகுர அஞ்சியிருக்குமிவ்வூர் - ஒருவர்கூறை எழுவருடுக்கும்படி அக்நியை ப்ரவேசிப்பித்து. (தூதுவந்தவித்யாதி) "வெறுங்கையே தூதுவந்தானொருவன்செய்தது இதுவானல், நாம் இவனைக்கொண்டிருப்போமல்லோம்" என்று அவன்கையிலே பிராட்டியை விட்டுக்கொடாதே. (ஆதரித்யாதி) "ஆதர்" என்று - இளிம்பரென்றபடி. இளிம்பரான நாங்கள் இப்படிப்படாநின்றேம். (அஞ்சினேம்) அச்சமில்லாத அன்று பட்டத்தை இன்று படவேணுமோ? .... .... (சு)

மூ;—தாழமின்றி முந்நீரை யஞ்ஞான்று
தகைந்ததேகண்டு வஞ்சிநுண்மருங்குல்
மாழைமான்மடநோக்கியை விட்டு
வாழகில்லா மதியின்மனத்தானை
ஏழையை யிலங்கைக் கிறைதன்னை
யெங்களையொழியக் கொலையவனைச்
சூழுமாநினை மாமணிவண்ணா
சொல்லினேம் தடம் பொங்கத்தம்பொங்கோ. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாமணி வண்ணா!—; | | மான் | மானினுடைய |
| தாழம் இன்றி | விளம்பமில்லாமல் | மடம் | ம்ருதுவான |
| முந்நீரை | கடலை | நோக்கியை | நோக்கையுமுடைய ளான பிராட்டியை |
| அஞ்ஞான்று | அன்றைக்கு | விட்டு | பெருமாள் ஸந்நிதியிலே ஸமர்ப்பித்துவிட்டு |
| தகைந்ததே | அணைசெய்த தொன்றையே | வாழகில்லா | வாழமாட்டாத |
| கண்டு | கண்டு, | மதி இல் மனத்தானை | மதிகேடனுமாய் |
| வஞ்சி | வஞ்சிக்கொடிபோலே | | |
| நுண் | ஸூக்ஷ்மமான | | |
| மருங்குல் | இடையையும் | | |
| மாழை | முக்த (X) மான | | |

ன்று அத்த்யாஹரித்துக்கொள்வது. (புத்ரர்களை) என்றது-மந்த்ரி புத்ரர்களையென்கை. (க) "ஸப்த மந்த்ரிஸுதாநபி ஶூரமக்ஷஞ்ச- ஸப்த மந்த்ரிஸுதாநபி, சூரமக்ஷஞ்ச" என்னக்கடவதிறே. ... ... ... ... (சு)

(க) ரா-பா-எகு.

| | |
|---|---|
| ஏழையை அஜ்ஞ (அப்ராப்தவிஷயத்திலே சாபலத்தைப்பண்ணுமவ)னாய் | கொலையவனை வதம்பண்ண ப்ராப்தனான ராவணனை |
| இலங்கைக்கு லங்காநகரத்துக்கு | சூழும் ஆ "சூழ்த்துக்கொள்ளும் ப்ரகாரத்தை |
| இறைதன்னை நிர்வாஹகனாக அபிமானித்திருப்பவனாய் | நினை நினைத்தருளவேணும்" (என்று) |
| எங்களை ஒழிய (குற்றமற்ற) எங்களை நீக்கி | சொல்லினோம் சொன்னோம்; தடம்பொங்கத்தம் பொங்கோ. (எ) |

வ்யா;—ஏழாம்பாட்டு. (தாழுமின்றி) அக்கரைப் படுக்கைக்கு ஒரு கடல் இடைச்சுவராய்க் கிடந்ததென்ன. விளம்பமின்றிக்கே. (அஞ்ஞான்று தகைந்ததே கண்டு) கடலை அணைசெய்ததொன்றுமே கண்டு. இத்தைக்கண்டால் இவன் நம்மை அழிக்க வல்லனென்று இருக்கவேண்டாவோ?. (வஞ்சியித்யாதி) "இவள் வடிவழகுக்கு அவன் வேணுமத்தனையல்லது, நமக்குத்தகாள்" என்று பார்த்து, இவளை விட்டு வாழமாட்டாத மதிகேடனை.

(ஏழையை) அப்ராப்தவிஷயத்திலே சாபலத்தைப்பண்ணுமவனை. (இலங்கைக்கிறை தன்னை) இதொன்றையுமாயிற்று புத்திபண்ணியிருந்தது. நான் இவ்வூர்க்கதிபதி-நிர்வாஹகனென்று; இதொன்றையுமே நினைத்திருந்தான். (எங்களையொழியக் கொலையவனை) குற்றம நின்றவிடத்தே வதம் பண்ணப் பார்த்தருளவேணும்.

---

அ௩;—ஏழாம்பாட்டு. (தாழுமித்யாதி) "உங்கள தோன்றல் தேவியை விடக்கொடாதே" என்று முதலிகளைப்பார்த்துக்கூப்பிடச்செய்தேயும், ராம சரவர்ஷம் மாறாதே நடக்கையாலே, பெருமாள் ஸந்நிதியிலேவந்து, ராவணனுடைய மதிகேட்டையும்சொல்லி, அவனையன்றோ கொல்லவடுப்பது என்று விண்ணப்பம் செய்கிறார்களென்று ஸங்கதி.

"மாமணிவண்ணா" என்றத்தைக்கடாக்ஷித்துப் பிராட்டியை வர்ணித்ததுக்குக் கருத்தருளுகிறார் (இவளித்யாதி).

"எங்களையொழியக் கொலையவனை" என்றெடுத்த ப்ரதீகம் "சூழுமா நினை" என்னுமளவுக்கும் உபலக்ஷணமென்று, எல்லாவற்றுக்கும் பலிதமான தாத்பர்யமருளுகிறார் (குற்றமித்யாதி). "இறைதன்னை - எங்களையொழியக் கொலையவனை என்னுமவனை, சூழுமா - சூழ்த்துக்கொள்ளும் ப்ரகாரம், நினைத்தருளவேணும்" என்று சப்தார்த்தம் கண்டுகொள்வது- ... ... (௩)

(சொல்லினோம்) நாங்கள் அறியாமல் கொலையுண்டோமாகாமல் சொன்னோம். .... .... .... .... .... .... (எ)

மூ;—மனங்கொண்டேறும் மண்டோதரிமுதலா
அங்கயல்கண்ணினார்க ளிருப்பத்
தனம்கொள்மென்முலை நோக்க மொழிந்து
தஞ்சமே சிலதாபதரென்று
புனங்கொள்மென்மயிலைச் சிறைவைத்த
புன்மையாளன் நெஞ்சில் புகவெய்த
அனங்கனன்ன திண்டோ ளெம்மிராமற்கு
அஞ்சினோம் தடம்பொங்கத்தம் பொங்கோ. (அ)

| பதம். | உரை. |
|---|---|
| மனம்கொண்டு | (தன்னுடைய) ஹ்ருதயத்தை அபஹரித்து |
| ஏறும் | (நெஞ்சுக்குப்) பொருந்தியிருப்பவர்களான |
| மண்டோதரி முதலா | மந்தோதரி முதலான |
| அம் | அழகிய |
| கயல் | கயல் போன்ற |
| கண்ணினார்கள் | கண்ணழகையுடைய மஹிஷிகள் |
| இருப்ப | இருக்கச்செய்தே, |
| தனம்கொள் | (தனக்கு) ஸர்வஸ்வமுமாய் |
| மெல் | ம்ருதுவான |
| முலை | (அவர்களுடைய) முலைகளிலே |
| நோக்கம் | பேணுதலை |
| ஒழிந்து | விட்டு, |
| தஞ்சம் | ("பிராட்டிக்குத்) தஞ்சமாய் வருவார் |
| சிலதாபதரே | சிலதாபஸரன்றோ? |
| என்று | (அவர்கள் சரக்கென்") என்றுகருதி, |
| புனங்கொள் | அரண்யத்திலே யிருக்கிற |
| மென்மயிலை | அழகிய மயில்போன்ற பிராட்டியை |
| சிறைவைத்த | சிறையிலேவைத்தவனாய் |
| புன்மையாளன் | நீசமான நினைவையுடையனான ராவணனுடைய |
| நெஞ்சில் | நெஞ்சிலே |
| புக | உறைக்க |
| எய்த | எய்யவல்லராய், |
| அனங்கன் அன்ன | ஸாக்ஷாந்மந்மத மந்மதராய், |
| திண்தோள் | திண்ணிய தோளையுடையராய், |
| எம் | எங்களைக்காக்க வல்லருமான |
| இராமற்கு | பெருமாளுக்கு |
| அஞ்சினோம் | பயப்பட்டோம்; |
| தடம்பொங்கத்தம் பொங்கோ. (அ) | |

அநு;—எட்டாம்பாட்டு. (மனம்கொண்டேறு மித்யாதி) பெருமாள் ஸந்நிதியிலேவந்து "எங்களையொழிய அவனைக்கொலை" என்னவே, அநந்தரம் ராவணனைவென்று கொன்றபடியைக்கண்டு மிகவுமஞ்சி, முதலிகளைக் குறித்து

வ்யா;—எட்டாம்பாட்டு. (மனங்கொண்டேறும்) தனக்கு யோக்யமானவிஷயமில்லாமைகெட்டானல்லன். ஹ்ருதயத்தைஹரிக்க வல்லவர்களாய், நெஞ்சுக்குப் பொருந்துவர்களுமான மண்டோதரி துடக்கமான அழகிய கயல்போலேயிருக்கிற கண்ணழகையுடையவர்களிருக்க, தனக்குத்தநமாய், ஸர்வஸ்வமாயிருக்கிற அவர்கள் முலைகளைப்பாராதே "இவனுக்குத் தஞ்சமாய் வருவார் சில தாபஸரன்றோ? அவர்களில் சரக்கென்" என்று பிராட்டியைச்சிறைவைத்த ராவணனுடைய தப்ப நினைத்த நெஞ்சிலே. (புகவெய்த) உறைக்க எய்ய வல்லனாய், அழகிய வடிவையும், திண்ணிய தோளையுமுடைய பெருமானுக்கு அஞ்சினோம். .... .... ...., (அ)

மூ;—புரங்கள் மூன்றுமோர் மாத்திரைப்போதில்
பொங்கெரிக் கிரைகண்டவ னம்பில்
சரங்களே கொடிதாயடுகின்ற
சாம்பவானுடன்நிற்கத் தொழுதோம்
இரங்குநீ யெமக் கெந்தைபிரானே
இலங்குவெங்கதிரோன் சிறுவா
குரங்குகட்கரசே யெம்மைக்கொல்லேல்
கூறினோம் தடம்பொங்கத்தம் பொங்கோ. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஓர்மாத்திரைப் போதில் | ஒருகண்ணிமைப் பொழுதில் | அம்பில் | அம்புகளிலுங்காட்டில் |
| புரங்கள்மூன்றும் | த்ரிபுரங்களையும | கொடிதாய் | கொடியதாயிருக்கிற |
| பொங்கு | வ்ருத்தியடையாநின்று | சரங்களே | ராமபாணங்களே |
| எரிக்கு | அக்நிபகவானுக்கு[ள்ள | அடுகின்ற | நலியாநின்றன; |
| இரைகண்டவன் | இரையாகக்கண்ட (தஹித்த) ருத்ரனுடைய | சாம்பவான் | ஸ்ரீஜாம்பவான் |
| | | உடன்நிற்க | புருஷகாரமாகக்கூட நிற்க |

விண்ணப்பம் செய்கிறார்களென்று ஸங்கதி.

ராவணன் மனத்தைக் கொள்ளவும், அவன் மனத்திலேறவும் வல்லவரான மண்டோதரி என்றுக்கி அருளுகிறார் (ஹ்ருதயத்தையித்யாதி). இத்தால்கண்டபோதே சி(-ஓ)த்தாபஹாரிகளாய், உத்தரோத்தரம் ப்ரீதிவர்த்தகருமாயிருப்பர்களென்றதாயிற்று. (சரக்கு) என்று- சௌர்யாதிகளென்றபடி. (அ)

தொழுதோம் வணங்காநின்றோம்;
எந்தைபிரானே எங்கள்நாயகனே!
இலங்கு லோகத்துக் கடைய ப்ரகாசகனுன
வெம்கதிரோன் ஆதித்யனுடைய
சிறுவா மகனுன ஸுக்ரீவனே!
குரங்குகட்கு வாநரயூத (ஃ) பதி
அரசே யே!
எமக்கு எங்கள் திறத்திலே
இரங்கு இரங்கியருள வேணும்;
எம்மை எங்களை
கொல்லேல் கொல்லாதொழிய வேணும்;
கூறினோம் எங்களால் சொல்லலாவதைச்சொன்னோம்;
தடம்பொங்கத்தம் பொங்கோ. (கூ)

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (புரங்கள் மூன்றும்) த்ரிபுரதஹநம் பண்ணின ருத்ரன் அம்புகளிலுங்காட்டில் கொடிதாயிருக்கிற ராம சரங்கள் எங்களை முடியாநின்றன. வ்ருத்த(ஃ)ராய், நன்மை தீமைகளுக்குக்கடவ ஸ்ரீஜாம்பவான், மஹாராஜர் புருஷகாரமாகத் தொழுதோம்; எங்களுக்கு இரங்கவேணும்; எங்கள் நாயகனே! லோகத்துக் கடைய ப்ரகாசகனுன ஆதித்யன் மகனன்றோ நீர். ஸர்வநிர்வாஹகரன்றோ; (கூறினோம்) நாங்கள் சொல்லச் செய்தே எங்களைக் கொல்லில் உமக்கு அவத்யமாம். .... .... .... (கூ)

அநு:—ஒன்பதாம்பாட்டு- (புரங்களித்யாதி) கீழ்ப்பாட்டில் முதலிகளைப் பார்த்து முறையிடச்செய்தேயும், அவர்கள் - பரதந்த்ரர்களாகையாலே தங்களுக்கு அரசரான மஹாராஜரை ஆச்ரயிக்கச்சொல்ல, இவர்களும் புருஷகாரத்தை முன்னிட்டுக்கொண்டு பெருமாளுடைய அம்பின் தீக்ஷ்ணதையைச் சொல்லி இரங்கச்சொல்லுகிறார்களென்று ஸங்கதி.

ராவணவதாநந்தரம் ராமபாண ஸஞ்சாரமில்லாவிட்டாலும், பயகாதரதையாலே முன்பு ப்ரயோகித்தபடி நெஞ்சிலே கிடந்து, இப்போதும் தோற்றுகையாலே (க) "ఆనయైనం హరిశ్రేష్ఠ - ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட" என்றவராகையாலே, நமக்குப்பெருமாள் இரங்குகைக்கு மஹாராஜர் பரிக்ரஹம் வேணுமென்று சரணம் புகுகிறார்களென்று கருத்து. "ஏகமாத்ரோச்சாரணகாலம்- 'ஒருமாத்திரைப்போது' என்றது" என்று - சப்தார்த்தம் விவக்ஷித்து பலிதார்த்தமருளுகிறார் (த்ரிபுரேத்யாதி). அங்கதாதிகள் இருக்க, ஜாம்பவானைப் புருஷகாரமாக்குவானென்னென்ன வருளுகிறார் (வ்ருத்த (ஃ) ராயித்யாதி).

(க) ரா-யு-கஅ-ஙச.

மூ;—அங்கு வானவர்க் காகுலம் தீர
அணியிலங்கை யழித்தவன் றன்னைப்
பொங்குமாவலவன் கலிகன்றி
புகன்ற பொங்கத்தங்கொண் டிவ்வுலகினில்
எங்கும்பாடி நின்றாடுமின் தொண்டீர்
இம்மையேயிடரில்லை இறந்தால்
தங்குமூரண்டமே கண்டுகொண்மின்
சாற்றினோம் தடம்பொங்கத்தம்பொங்கோ. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டீர் | பகவத்பக்தர்களே!, | எங்கும் | எல்லாவிடத்திலும் |
| அங்கு | தேவலோகத்திலுள்ள | பாடிநின்று | பாடிக்கொண்டு |
| வானவர்க்கு | தேவதைகளுடைய | ஆடுமின் | கூத்தாடுங்கோள்; |
| ஆகுலம்தீர | மனக்குழப்பம் தீரும் [படி | இம்மையே | இந்தஜந்மத்தில் |
| அணி | தர்சநீயமான | இடர்இல்லை | உங்களுக்கு வருவதொரு துன்பமில்லை; |
| இலங்கை | லங்கையை | | |
| அழித்தவன் தன்னை | அழித்த சக்ரவர்த்தித் திருமகனை, | இறந்தால் | ஶரீரம்நஶித்தால் (பிறகு) |
| பொங்கு | கிளர்த்தியையுடைய | தங்கும்ஊர் | தங்குமிடம் |
| மா | "ஆடல்மா" என்னும் குதிரையை | அண்டமே | பரமபதமே; |
| | | கண்டுகொண் மின் | (இத்தை அபநுவத்தாலே) அறிந்து கொள்ளுங்கள்; |
| வலவன் | நடத்தவல்லரான | | |
| கலிகன்றி | ஆழ்வார் | | |
| புகன்ற | அருளிச்செய்த | பொங்கத்தம் பொங்கோ | "பொங்கத்தம் பொங்கம்" என்கிற சப்தாநுகாரம்(உங்களுக்கு) |
| பொங்கத்தம் கொண்டு | "பொங்கத்தம் பொங்கோ" என்ற வெற்றிப் பாசுரங்களைக் கொண்டு | தடம் | ஒத்தது(என்றத்தை) |
| | | சாற்றினோம் | (எல்லாரு மறிய) சொன்னோம். (கO) |
| இவ்வுலகினில் | இந்தப்பூலோகத்தில் | | |

---

அ௩;—பத்தாம்பாட்டு. (அங்கித்யாதி) மஹாராஜர் ஸந்நிதாநத்திலே கூறினோமென்று சொல்லச்செய்தேயும், இவர்களாலே கூத்துக் காணக்கடவராய் வார்த்தை சொல்லாமலிருக்க, அந்தக்கோஷ்ட்டியிலே எல்லாரும் அறிய

வ்யா.—பத்தாம்பாட்டு. (அங்குவானவரித்யாதி) தேவஜாதி குடி கிடக்கும்படி தர்ஶநீயமான லங்கையை அழித்த சக்ரவர்த்தித் திருமகனைக் கவிபாடிற்று. அவனைப்போலே ஆண்பிள்ளையானவராயிற்றுக்கவிபாடினார். (புகன்ற) சொன்ன. (தொண்டீர்)-அந்தரங்கர்க்கே கண்ட பாசுரமன்று இது. (க) "ஜயந்-ஜிதம்தே" என்றால் எல்லாருக்கும் சொல்லவேணுமிறே. இச்சரீராநந்தர மிருக்கு மிடம் பரமபதம். அதுதான் அநுபவத்தாலே அறிந்து கொள்ளுமத்தனை. எல்லாருமறியச் சொன்னோம். .... .... .... (௧௦)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரிய திருமொழி

## பத்தாம்பத்து இரண்டாம் திருமொழி முற்றிற்று

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## பெரிய திருமொழி

## பத்தாம்பத்து மூன்றும் திருமொழி

ஏத்துகின்றோம் ப்ரவேசம்.

வ்யா;—குணலைக் கூத்துப்போலே தோற்றார் தோல்விக்கீடாகக் குழமணிதூரக் கூத்தென்று ஒருகூத்துண்டுஆடுவது; அத்தை ராக்ஷ

"பொங்கத்தமென்று சொன்னோம்" என்று-தங்கள் பபத்தாலே சொன்ன பாசுரத்தை யருளுகிறார்; இத்திருமொழிக்குப் பலத்தையும் தாமான தன்மையிலே சொல்லி விடுகிறாரென்று ஸங்கதி.

"அங்குவானவர்" என்கிறது - மெல்லொத்தென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (தேவேத்யாதி). (எல்லாருமறியச் சொன்னோம்) என்றது - "பொங்கத்தம் பொங்கோதடம்" என்று எங்களுக்குத் தக்கதென்று, நீங்களெல்லாரும் அறியச்சொன்னோமென்று வாநரஸேநையைக் குறித்துச் சொன்னபடி. ... ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அ௩;—ஏத்துகின்றோம் ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே எல்லாருமறியப் பற்றி அடிக்கிறோமென்று சொன்ன வளவிலேயும், மஹாராஜர் கூத்துக் காணவேண்டியிருக்க, அவ்வளவிலே வாநரஜாதி ஜாதிப்பகையாலே நலியப்புகுர, ரஸாவஹமாகக் கூத்தாடக்கடவோ மென்கிறார்களென்று ஸங்கதியை உட்கொண்டு "குழமணிதூரம்" என்கிறத்தை விவரித்தருளுகிறார் (குணலைக் கூத்தித்யாதி). ... ... ... ... ... ... ... *

ஸர்செய்தபடியைப்பேசி அவர்கள்,பாசுரத்தாலே பகவத்விஷயத்தை அநுபவிக்கிறார். .... .... .... .... .... *

மூ:—ஏத்துகின்றோம் நாத்தழும்ப இராமன்திருநாமம்
சோத்தநம்பி சுக்கிரீவா வும்மைத்தொழுகின்றோம்
வார்த்தைபேசீரெம்மை யுங்கள்வானரங் கொல்லாமே
கூத்தர்போல வாடுகின்றோம் குழமணிதூரமே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இராமன் | சக்ரவர்த்தித்திருமகனுடைய | வானரம் | வாநரவீரர்கள் |
| திருநாமம் | திருநாமங்களை, | எம்மை | எங்களை [படி |
| நா | நாக்கானது | கொல்லாமே | கொல்ல வொண்ணாத |
| தழும்ப | தழும் பேறும்படி | வார்க்கைபேசீ | (முகப்பிலேபரிவுதோன்றும்படிஎங்களோடே) வார்த்தை சொல்லவேணும். |
| ஏத்துகின்றோம் | ஸ்துதியாநின்றோம்; | கூத்தர்போல | கூத்தாடுவாரைப்போலே |
| நம்பீ | ஆண்பிள்ளைத் தனத்தாலேபூர்ணரான | குழமணிதூரம் | குணலைக் கூத்துப்போலேயிராநின்ற தொருகூத்தை |
| சுக்கிரீவா | மஹாராஜரே! | ஆடுகின்றோம் | ஆடாநின்றோம். (௧) |
| சோத்தம் | இதோரஞ்ஜலி; | | |
| உம்மை | உம்மை | | |
| தொழுகின்றோம் | திருவடிகளில்விழுந்து வணங்காநின்றோம்; | | |
| உங்கள் | நீங்களிட்டவழக்காயிராநின்ற | | |

வ்யா;—முதற்பாட்டு. (ஏத்துகின்றோமித்யாதி)நாத்தழும் பெழும்படிஏத்துகின்றோம், ஏத்தாதிருக்கவொண்ணாதவிஷயத்தை. (௧) "రామో రామో రామఇతి- ராமோராமோ ராமஇதி", "சோத்தம்" என்று அஞ்ஜலிபண்ணுவார் அதுக்கு உசிதமாகச் சொல்லுவதொரு பாசுரம். (நம்பீ) ஆண்பிள்ளைத் தனத்தாலே பூர்ணரான உமக்குச் சிலரைக்கொன்று வருவதோரேற்றமுண்டோ ?. (உம்மைத்தொழுகின்றோம்) பெருமாள் திருநாமத்தையே சொல்லி ஏத்துவார்க்கு உம்

அரு;—முதற்பாட்டு. (ஏத்துகின்றோ மித்யாதி). "இராமன்" என்ற பதத்துக்குத் தாத்பர்யமருளுகிறார் (ஏத்தாது) என்று. ஏத்தப்பண்ணும் என்னுமதுக்கு ப்ரமாணம் (ராமஇத்யாதி). ஒருவர் திருநாமத்தைச் சொல்லுகையும் மற்றொருவரைத் தொழுகையும் கூடுமோவென்ன வருளுகிறார் (பெரு

(௧) ரா-யு-௧௩௧-௧௦௪.

மை ஆஶ்ரயிக்க வேணுமிறே. அவர் இசைந்தாலும் (௧) "ஸர்வதாஸ்-வத்த்யதாம்" என்று நீர் சொன்னால் உம்மை இசைப்பித்து (௨) "ஆநய - ஆநய" என்று உம்மைவிட்டு அழைப்பித்துக்கைக் கொள்ள வேண்டுகையாலே.

"முன்பு பிராட்டியைப் பிரித்தபையலுக்குப்பரிகாரமாய் நின்று, இன்றுவந்து அநுகூலிக்குங்காட்டில் ரக்ஷிக்கையாவதென்" என்று பேசாதேநின்றார்; அவ்வளவிலேமுதலிகள்வந்து கைக்கொள்ளப் புக்கார்கள்..(வார்த்தைபேசீர்) அல்லாதது பார்த்துக் கொள்ளுகிறோம்; எங்களோடே வார்த்தை சொல்லவமையும், ராஜாவோடே வார்த்தை சொல்லுகிறவர்களென்று முதலிகள் சொல்லாதபடி; என்கிறார்கள். (கூத்தர்போலே) பண்டே சிக்ஷித்து வைத்தவர்கள் போலே ஆடுகின்றோம்; எங்கள் செயலறுதியாலே. .... .... (௧)

மூ;—எம்பிரானே யென்னையாள்வா யென்றென்றலற்றாதே
அம்பின்வாய்ப் பட்டாற்றகில்லா திந்திரசித்தழிந்தான்
நம்பியநுமா சுக்கிரீவா வங்கதனே நளனே
குமபகர்ணன் பட்டுப்போனான் குழயணி தூரமே. .... (௨)

---

மாளித்யாதி). இத்தால் உமக்கு இஷ்டமென்று "ராமன்" என்கிற திருநாமத்தைச் சொன்னோ மத்தனையென்று கருத்து. அவரையே தொழவொண்ணாதோவென்ன (அவரித்யாதி).

"தொழுகின்றோம்" என்றவநந்தரம் "கூத்துக் காணவேண்டிப்பேசாதிருக்க, இவர்களை அநாதரித்தாராகக் கொண்டு † புதுமையாராயாதுமுதலிகள் நலியத் துடங்கினார்களென்று ஸங்கதியை அருளுகிறார் (முன்பித்யாதி).

(நின்றார்) என்றவநந்தரம் "ஆகக்கொண்டு" என்று சேஷம். ... (௧)

அநு;—இரண்டாம்பாட்டு. (எம்பிரானேயித்யாதி) கீழ்ப்பாட்டிலே "குழமணி தூரமே யாடுகின்றோம்" என்ன; ஹநுமத் ப்ரப்ருதிகள்-நீங்களும் ராக்ஷஸராயிருந்து இங்ஙனே கூத்தாடுகை உசிதமோ? கரவதாதிகளாலே ப்ரஸித்த ஶௌர்யரான பெருமாளிருக்கச் செய்தேயும், இந்த்ரஜித்ப்ரப்ருதிகள் வணங்காமல் போவானென்னென்ன; வணக்கம் அவன் ஜந்மப்ரப்ருதி அறியாமை துர்மாநத்தாலே பட்டான்; எங்களுக்கு அங்ஙனேபடவேண்டுவதில்லை யென்கிறாரென்று ஸங்கதி.

---

(௧) ரா-யு-௧௭-௨௬. (௨) ரா-யு-௧௮-௩௪. † (பா) அதுவுமாராய்ந்து.

| பதம். | உரை. |
|---|---|
| இந்திரசித்து | இந்த்ரஜித்தானவன் |
| எம்பிரானே | "எனக்குஉபகாரகனானவனே!, |
| என்னைஆள்வாய் | என்னை யடிமைகொள்ளுமவனே!" |
| என்றென்று | என்றிப் புடைகளிலே யுண்டான பாசுரங்[களை |
| அலற்றாதே | வாயால்பாடாதே |
| அம்பின்வாய் | பாணத்தின்வாயிலே |
| பட்டு | அகப்பட்டு |

| பதம். | உரை. |
|---|---|
| ஆற்றகில்லாது | ஆற்றமாட்டாமல் |
| அழிந்தான் | முடிந்து போனான்; |
| நம்பி | குணபூர்ணரான |
| அனுமா | சிறியதிருவடியே! |
| சுக்கிரீவா | மஹாராஜரே! |
| அங்கதனே | அங்கதரே! |
| நளனே | நளரே! |
| கும்பகர்ணன் | கும்பகர்ணனானவன் |
| பட்டுப்போனான் | மாண்டு போனான்; |

குழமணிதூரமே. (௨)

வ்யா;—இரண்டாம்பாட்டு. (எம்பிரானே) "எனக்கு உபகாரகனானவனே! என்னைஅடிமை கொள்ளுகிறவனே!" என்று இப்பாசுரங்கள்வாயில் படாமையாலே, தான் அம்பின்வாயிலே அகப்பட்டு ஆற்றமாட்டாமை முடிந்துபோனான் இந்த்ரஜித்து. (நம்பியநுமா) மஹாராஜர் (க) "ஸ்ம்ருத்தம் - வத்ஸ்யதாம்" என்றாலும் இத்தேசத்திலே இக்காலத்திலே வந்தானென்று சொல்லுமவரோடு மலைந்து கைக்கொள்ளப்பண்ணும்படியன்றோ உன்பூர்த்தி. (கும்பகர்ணனித்யாதி) எங்களுக்குவேறே சில ரக்ஷகருண்டென்று நினைத்து நலியவேண்டுவதில்லை. .... .... .... .... .... .... (௨)

மூ,—ஞாலமாளு முங்கள்கோமானெங்களிராவணற்குக்
காலனாகி வந்தவா கண்டஞ்சிக் கருமுகில்போல்
நீலன்வாழ்கச் சுடேணன்வாழ்க வங்கதன் வாழ்கவென்று
கோலமாக வாடுகின்றோம் குழமணிதூரமே. .... (௩)

---

"நம்பி" என்று-அநுமானை விசேஷித்ததுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (மஹாராஜரித்யாதி). (மலைந்து) மறுதலைத்து. ... ... ... (உ)

அ௩;—மூன்றாம்பாட்டு. (ஞாலமித்யாதி) கீழ்ப்பாட்டிலே "எம்பிரானே! என்னையாள்வானே" என்று இந்த்ரஜித் ப்ரப்ருதிகள் சேராமை தூரபிமாநராவானென்னென்ன; "ராஜதர்மமன்றோ" என்று ஸோபஹாஸோக்தி பண்ண, இந்தப் பூமிக்கெல்லாமவரேயன்றோ ராஜா; அத்தை அறியாதே அவர்கள்தூரபிமாநப்பட்டார்கள் ; நாங்கள் அறிந்தோமாகையால் உங்கள் ஸம்ருத்தியை ஆஸ்ராஸித்துக்கொண்டு நாங்கள் ஆட ; நீங்கள் கண்டு மகிழவேணு மென்கிறார்களென்று ஸங்கதி.

---

(க) ரா-யு-கஎ-உ௩.

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| ஞாலம் | பூமிப்பரப்பையடைய | நீலன் | நீலனானவன் |
| ஆளும் | ரக்ஷித்தருளா நின்ற வராய் | வாழ்க | (பல்லாண்டு பல்லாண்டாய் வாழ்ந்திருக்க வேணும்; |
| உங்கள் | (வாநரவீரர்களான) உங்களுக்கு | சுடேணன் | ஸுஷேணனானவன் |
| கோமான் | ஸ்வாமியான பெருமான் | வாழ்க | வாழ்ந்திருக்கவேணும்; |
| எங்கள் | எங்களுக்கு நியாமகனா[ன] | அங்கதன் | அங்கதனானவன் |
| இராவணற்கு | ராவணனுக்கு | வாழ்க | வாழ்ந்திருக்கவேணும்'' |
| காலனாகி | ஸாக்ஷாத்-யமனாய் | என்று | என்று பல்லாண்டு பாடிக்கொண்டு |
| வந்தது | வந்தபடியை | | |
| கண்டு | பார்த்து | கோலமாக | அழகிதாக |
| அஞ்சி | பயப்பட்டு, (நாங்கள்) | | குழமணிதூரமாடுகின்றோம். (௩) |
| கருமுகில்போல் | "காளமேகம்போன்ற | | |

வ்யா;—மூன்றாம்பாட்டு. (ஞாலமித்யாதி) பூமிப்பரப்படைய ஒருவர்மூலையடியே நடவாதபடி ரக்ஷிக்குமவரிறேபெருமாள். (க) "இக்ஷ்வாகூணாம் - இக்ஷ்வாகூணாம்" இத்யாதி. இப்படியிருக்கிறபெருமாள், எங்களுக்குக் கடவனாய்ப் போந்த ராவணனுக்குக் கூற்றமாய் வந்தபடிகண்டு அஞ்சி; நாங்கள் போக்கற்ற வழிமாத்ரமல்ல;உங்கள் ஸம்ருத்தி(ஸ்ம்ருத்தி)எங்களுக்கு ப்ரயோஜநமாம்படியானோம். (கோலமாக) எங்களைக்கொல்லுகைக்கு ப்ரயோஜந முண்டோ?; கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி இத்தைக் காணலாகாதோ?; .... (௩)

மூ;—மணங்கள் நாறும் வார்குழலார் மாதர்களா தரத்தைப்
புணர்ந்த சிந்தைப் புன்மையாளன் பொன்றவரிசிலையால்
கணங்களுண்ண வாளியாண்ட காவலனுக்கிளையோன்
குணங்கள்பாடி யாடுகின்றோம் குழமணிதூரமே. .... (ச)

---

"கோலமாக" என்று-விசேஷித்ததுக்குக் கருத்தருளுகிறார் (எங்களித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௩)

அரு.—நாலாம்பாட்டு. (மணங்களித்யாதி) கீழ்ப்பாட்டில் நீலாதிகளை எத்தினார்களாகிலும்,ராமாநுஜாபிமாநம்வேணுமென்று,தங்கள்ராவணனுடைய தௌஷ்ட்யத்தையும் சொல்லி உகந்தாட ஒருப்படுகிறார்களென்று ஸங்கதி.

---

(க) ரா-கிஷ்கி-கஅ-௫.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மணங்கள் | எல்லா கந்தங்களும் | கணங்கள் | (பிசாசங்களின்) திரளா னது [யாகவும், |
| நாறும் | பரிமளியாநின்றுள்ள | உண்ண | (அவனை) புஜிக்கும்படி |
| வார் | நீண்டிருக்கிற [தாய் | வரி | தர்ஸநீயமான |
| குழலார் | கூந்தலையுடைய | சிலையால் | வில்லிலே |
| மாதர்கள் | ஸ்த்ரீகள்பக்கலுண்டா | வாளி | அம்புகளை |
| ஆதரத்தை | அபிநிவேஸத்தை [ன | ஆண்ட | தொடுத்தருளின |
| புணர்ந்த | எப்போதும் விடாதே யிருக்கிற | காவலனுக்கு | ரக்ஷகரான, பெருமா ளுடைய |
| சிந்தை | நெஞ்சையுடையனாய், | இளையோன் | திருத்தம்பியாரான இளையபெருமாளு டைய |
| புன்மையாளன் | அதிக்ஷுத்ரனான ராவ ணன் | குணங்கள்பாடி | குணங்களைப்பாடி |
| பொன்ற | முடியும்படியாகவும், | | குழமணிதூரமாடுகின்றோம். |

வ்யா;—நாலாம்பாட்டு. (மணங்கள் நாறுமித்யாதி) எல்லாமணத்தையு முடைத்தாய், நீண்டிருக்கிற குழலையுடைய ஸ்த்ரீகள் பக்கலுண்டான் ஆதரத்தை எப்போதும் விடாதேயிருக்கிற நெஞ்சையுடையனாகையாலே க்ஷுத்ரனான ராவணன்முடிய. (கணங்களித்யாதி ) பச்சிறச்சிதின்னும் ம்ருகாதிகள் அவனைபுஜிக்க, தர்ஸநீயமானவில்லிலே அம்பைத்தொடுத்த பெருமாள் தம்பியாருடைய குணங்கள்பாடி ஆடுகின்றோம். .... .... .... .... (௪)

மூ;—வென்றிதந்தோம் மானம்வேண்டோம் தானமெமக்காக
இன்றுதம்பினெங்கள்வாணா ளெம்பெருமான்தமர்காள்
நின்றுகாணீர்கண்களார நீரெம்மைக்கொல்லாதே
குன்றுபோலவாடுகின்றோம் குழமணிதூரமே. (௫)

---

"பொன்ற" என்றதினர்த்தம் (முடிய) என்றது. (பச்சிறச்சி) புதுமாம்ஸம்.

அநு;—அஞ்சாம்பாட்டு. (வென்றியித்யாதி) நீங்கள் "இளையபெருமாள் குணங்களையும் பாடி ஆடுகின்றோம்" என்று இங்ஙனே இப்போது இப்படி சொல்லுமத்தனையிறே. பூர்வவாஸனை அநுவர்த்தித்து எதிரிகளாய் விட்டீர்களோ வென்ன ; எங்களுக்கு இனி அங்ஙனே யிருப்பது ஒரு துரபிமாநம் வேண்டுவதில்லை யென்கிறார்களென்று ஸங்கதி.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எம்பெருமான் தமர்காள் | ராமபக்தர்களான வாநர வீரர்களே! | வாழ்நாள் | ஆயுஸ்ஸை |
| வென்றி | ஜயத்தை | எமக்கு | எங்களுக்கு |
| தந்தோம் | (வெற்றிக்காக எங்களை நலிய நினைக்கிற உங்களுக்குக் கொடுத்து விட்டோம்; | தானம்ஆக | தாநமாக |
| | | இன்று | இப்போது |
| | | தம்மின் | தாருங்கோள்; |
| | | நீர் | நீங்கள் |
| | | எம்மை | எங்களை |
| மானம் | (நாங்களுமாண்பிள்ளையென்றிருக்கைக்குடலான) துர்மாநத்தை | கொல்லாதே | கொல்லாமல் |
| | | கண்கள்ஆர | கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி |
| | | நின்றுகாணீர் | நின்றுகாணுங்கோள்; |
| வேண்டோம் | கைவிடாநின்றோம்; | குன்றுபோல | மலைபுரிந்தாற்போலே குழமணிதூரமாடுகின்றோம். |
| எங்கள | எங்களுடைய | | |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (வென்றிதந்தோம்) நீங்கள்தான் எங்களைக் கொல்லுகிறது வெற்றிக்காகவிறே. அத்தை உங்களுக்கு நாங்கள்தந்தோம். (மானம்வேண்டோம்) நாங்களும் ஆண்பிள்ளைகளென்றிருக்கிறது-துர்மாநத்தாலேயிறே. எங்களை நலிகிற துர்மாநத்தை வேண்டோம். (தானமித்யாதி) வெற்றிக்குமேலெழுத்திடவும் வேணும்; இதுக்கு நசைபண்ணுதொழியவும் வேணுமிறே. உங்களுக்குஎல்லாம் வாய்ச்சுதிறே. எங்கள்ஜீவநம் நீங்கள்இட்டவழக்காகையாலே எங்களாயுஸ்ஸை எங்களுக்குதா(ன)நமாக இன்றுதாருங்கோள். (எம்பெருமான்தமர்காள்) உங்களுக்கும் எங்களுக்கும் இங்ஙனே ஒருஸம்பந்தமுண்டு. அந்த ஸம்பந்தமுண்டாங்காட்டில்தர வேண்டுகிறதென்னென்னில்; (நின்றுகாணீர்) நின்று காணமாட்டிகோளோ, கண்படைத்த ப்ரயோஜநம்பெறும்படி. எத்தையென்ன; (குன்றுபோல) மலைபுரிந்தாப்போலே நின்று ஆடுகின்றோம். (௫)

''வென்றிதந்தோம்'' ''மானம் வேண்டாம்'' என்கிற பதங்களிலே லப்ப்யமான அர்த்தத்தை ஹேதுவாக்கிக் கொண்டு தாத்பர்ய மருளுகிறார் (வெற்றி...யாதி வாக்யசதுஷ்டயத்தாலே). ''எம்'' என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (உங்களுக்கு மித்யாதி). (காட்டில்) என்றவநந்தரம் '' இனி '' என்று சேஷம். ''காணீர்'' என்ற வநந்தரம் ''ஆகில்'' என்று சேஷம். (௫)

மூ;—கல்லின்முந்நீர்மாற்றிவந்து காவல்கடந்திலங்கை
அல்லல்செய்தானுங்கள்கோமா னெம்மையமர்க்களத்து
வெல்லகில்லாதஞ்சினோம்காண் வெங்கதிரோன் சிறுவா
கொல்லவேண்டாவாடுகின்றோம் குழமணிதூரமே. (௬).

| பதம். | உரை. |
|---|---|
| உங்கள்கோமான் | உங்களுக்கு ஸ்வாமியான பெருமாள், |
| கல்லில் | கற்களாலே [குன்றுகளாலே] |
| முந்நீர் | கடலை |
| மாற்றிவந்து | (அணைகட்டித்) தகைந்து வந்து |
| இலங்கை | லங்கையிலுள்ள |
| காவல் | அரண்களையும் |
| கடந்து | அதிக்ரமித்து |
| எம்மை | (வீரச்சோறுண்டுவளர்ந்த) எங்களை |
| அமர்க்களத்து | யுத்தரங்கத்திலே |
| அல்லல்செய்தான் | மிகவும் அந்தரப்படுத்தினர்; |
| வெம் | வெவ்விய |
| கதிரோன் | கிரணங்களை யுடையனான ஸூர்யனுடைய |
| சிறுவா | மகனான ஸுக்ரீவனே! |
| வெல்லகில்லாது | (உங்களை) ஜயிக்கமாட்டாமல் |
| அஞ்சினோம் காண் | பயப்பட்டோம்; |
| கொல்லவேண்டா | (எங்களைக்) கொல்லவேண்டா; |
| | குழமணிதூரமாடுகின்றோம். |

வ்யா.—ஆறும்பாட்டு. (கல்லித்யாதி) நீரிலே ஆழும்கல்லைக் கொண்டு (௧) "அப்ரமேயோமஹோததி:- அப்ரமேயோமஹோததி:" என்கிறகடலை அணைகட்டி. (அல்லலித்யாதி) வீரச்சோறுண்டபோந்தவெங்களை ஒருவர்பட்டறியாத அல்லலை விளைத்தார் உங்கள் பெருமாள். பூசல்களத்திலே வெல்லமாட்டாமை அஞ்சினோம். பராபிபவநஸாமர்த்த்ய முடையவன் மகனன்றோ?. (கொல்லவித்யாதி) எங்களைக் கொல்லவேண்டா. காரியம்கொள்ளவமையும்.

அ௫;—ஆறும்பாட்டு. (கல்லித்யாதி) "எம்பெருமான் தமர்காள்" என்று எல்லாரையும் பார்த்து "வாணுள்தம்மின்" என்று ப்ரார்த்தித்தவுடன், மஹாராஜர் ஸந்நிதியிலே "நம்மேல் வினைகள் வாராமுன்" என்று எம்பெருமானுடைய பராக்ரமங்களைச் சொல்லி ஆடத்துடங்கினர்களென்று ஸங்கதி.

"கல்லில்"என்கிறஸப்தமியை-வேற்றுமைமாருட்டத்தாலேத்ருதீயையாக்கி"கல்லாலேமுந்நீரை,மாற்றி-தகைந்துவந்து, இலங்கையைக்காவல்கடந்து" என்றந்வயித்துப் பலிதார்த்த மருளுகிறார் (நீரிலேயித்யாதி). ... ... (௬

(௧) ரா-யு-௧௩-௩௧.

மூ;—மாற்றமாவதித்தனையே வம்மினரக்கருள்ளீர்
சீற்றம்நும்மேல்தீரவேண்டில் சேவகம்பேசாதே
ஆற்றல்சான்றதொல்பிறப்பி லநுமனைவாழ்கவென்று
கூற்றமன்னூர்காணவாடீர் குழமணிதூரமே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அரக்கர்உள்ளீர் | ராக்ஷஸ ஜந்மத்துக்குத் தக்கபடி வணங்கா முடிகளா யிருப்ப வர்களே! | சேவகம் | வீரப்பாடு தோன்றும் படியான மிடுக்குப் பேச்சுக்களை |
| வம்மின் | (எம்மைப்போலே ஸு க்ரீவ ஸந்நிதாநத்தி லே) வந்து கிட்டுங் கோள்; | பேசாதே | பேசாமல், |
| மாற்றம் ஆவது | (நீங்கள் உஜ்ஜீவிக்கச் சொல்லவேண்டும்) வார்த்தையாவது | தொல் | அநாதியான (அடிகா ணவொண்ணாத) |
| இத்தனையே | இதொன்றுமே; | பிறப்பில் | பிறப்பே பிடித்து |
| நும்மேல் | உங்கள் பக்கலிலே | ஆற்றல்சான்ற | மிக்க வலியை யுடைய ரான |
| சீற்றம் | (ஸுக்ரீவாதிகளுக்கு ண்டான) கோப மானது | அநுமனை | சிறிய திருவடியை |
| தீரவேண்டில் | தவிரவேணுமாகில், | வாழ்க என்று | "பல்லாண்டுபல்லாண் டு" என்று மங்களா ஶாஸநம் பண்ணிக் கொண்டு, |
| | | கூற்றம்அன்னூர் | ம்ருத்யு ஸத்ருஶரான மற்றுமுள் வாநரர்க [ள் |
| | | காண | காணும்படியாக |
| | | குழமணிதூரம் ஆடீர் | குழமணிதூரமாடுங் கோள். (௭) |

வ்யா;—ஏழாம்பாட்டு. (மாற்றமாவதித்தனையே) சிலர்உஜ்ஜீ விக்கச்சொல்லவேண்டும் வார்த்தை இதொன்றுமே. (வம்மின்) ஸமதமாத்யுபேதனை அழைக்குமாபோலேஅழைக்கிறதாயிற்று இவர் களை. உங்களுக்குக்கடவ ராவணன்செய்த அநீதிகள் அறிவீகோளி றே. அத்தால்உங்கள்பக்கல் பிறந்த சீற்றந்தவிர வேணுமாகில்,

அ;—ஏழாம்பாட்டு. (மாற்றமித்யாதி) கீழ்ப்பாட்டிலே மஹாராஜர் ஸந் நிதாநம் பெற்றார் சிலர்- மற்றுமுள்ள ராக்ஷஸரை எல்லா மழைத்து உஜ்ஜீவ நோபாயம் சொல்லுகிறார்கள் மேலிரண்டு பாட்டாலே என்று ஸங்கதி.

ராவணவதாநந்தரம் எல்லார்க்கும் அச்சமொத்திருக்க, சிலரை அழைக்க வேண்டுவா னென்னென்னில்; அவர்கள் அரக்கராகையாலே வணங்காமுடிக ளாயிருக்க, அவர்களுக்கு வருமநர்த்தம் கண்டு அழைக்கிறார்களென்று விவ க்ஷித்துக்கருத்தருளுகிறார் (சமதமேத்யாதி).

முந்துற முன்னம் சேவகப்பாடு சொல்லாதேகொள்ளுங்கோள்.

(ஆற்றலித்யாதி) வலியையுடையனுகையைப் பிறப்பேயுடைய திருவடிவாழ்வானென்று. பரிகரமடையஅவன்பக்கலிலே ப்ராவண்யம். இவனைவாழ்த்தவே கொல்லுவாரில்லை. (கூற்றம்) திருவடியைச் சொன்னோமாகில் ம்ருத்யு ஸத்ருஸராயிருப்பாரும் விலங்குவர்கள் போலேகாணும். .... .... .... .... .... .... (எ)

மூ;—கவளயானைப்பாய் புரவித் தேரோடரக்கரெல்லாம்
துவளவென்ற வென்றியாளன்தன் றமர்கொல்லாமே
தவளமாடநீடயோத்தி காவலன்றன்சிறுவன்
குவளைவண்ணர்காண வாடீர் குழமணிதூரமே, (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கவளயானை | மதித்த யானைகளும் | தமர் | கிங்கரர்களான வாநர வீரர்கள் |
| பாய்புரவி | பாய்ந்து வருகிற குதிரைகளும் | கொல்லாமே | கொல்லாதபடி, |
| தேரோடு | தேர்களோடே | குவளை | கருநெய்தல் போன்ற |
| அரக்கர்எல்லாம் | ராக்ஷஸர்களெல்லாரும் | வண்ணர் | திருநிறத்தை யுடையராயும், |
| துவள | சுவறிப் போம்படியாக | தவளம் | வெள்ளையிட்டும் |
| வென்ற | ஜயித்த | நீடு | ஓங்கியுமிருக்கிற |
| வென்றியாளன்தன் | ஆண்பிள்ளையானபெருமாளுடைய | மாடம் | மாடங்களையுடைய |

"அரக்கருள்ளீர்" என்று-தாங்களும் அரக்கராயிருக்கவும் விசேஷிக்கையாலே, தாங்கள் வேறுபட்டமை ஸூசிதமென்று திருவுள்ளம். "உங்களுக்குக் கடவன்" என்றதுக்கு, தாங்கள் அருள்பெற்றவராகையாலே ராவணஸம்பந்த மற்றபடி தோற்றச்சொன்னார்களென்று கருத்து. அன்றிக்கே; கீழே ஸுக்ரீவ மஹாராஜர் தசக்ரீவ பரிகரத்தின் கூத்தைக்கண்டு தாமும் ஏகக்ரீவராய், "நீங்கள்-ராமகார்ய துரந்தரரான ஹநுமானைப் புகழ்ந்து கொண்டு பெருமாள் காணக் கூத்தாடுங்கோள்" என்று சொன்ன பாசுரத்தைத், தாமும் அவர்தசைபிறந்து இந்த இரண்டுபாட்டாலே அருளுகிறாரென்ற ஸங்கதியாகவுமாம்.

"தொல்-அநாதியாய், நம்மால் அடிகாணாத படியான, பிறப்பில், ஆற்றல் சான்ற-மிடுக்குச்சேர்ந்த, அநுமன்" என்று சப்தார்த்தமாய் தாத்பர்ய மருளுகிறார்(வலியையித்யாதி). திருவடியை வாழ்த்தினால், வாநரம் கொல்லாதிருக்குமோ வென்ன; (பரிகரமித்யாதி). (திருவடியை) என்றவநந்தரம் 'வாழ்த்து" என்று சேஷம். ... ... ... ... ... ... (எ)

| | | | |
|---|---|---|---|
| அயோத்தி | அயோத்யைக்கு | சிறுவன் | திருமகனுருமான பெருமாள் |
| காவலன்தன் | நிர்வாஹகனுன சக்ரவர்த்தியின் | காண | கடாக்ஷித்தருளும்படி குழமணிதூரம் ஆடீர். (அ) |

வ்யா;—எட்டாம்பாட்டு. (கவளயானை) மதித்தஆனை, பாய்ந்து வருகிறகுதிரை. (துவள) நாமே நாமாம்படி சுவறிப்போம்படி வென்ற ஆண்பிள்ளை. (தவளமாடமித்யாதி) வெள்ளையிட்டு ஓங்கின மாடங்களையுடைய திருவயோத்த்யைக்குக்கடவ சக்ரவர்த்தித் திருமகன். (குவளையித்யாதி) ஶ்யாமமான நிறத்தையுடையவர் காண, ஆடிகோள்; ராஜா கூத்துக்காணுநின்றுனென்று உங்களை விடும்படி. .... .... .... .... .... .... (அ)

மூ;—ஏடொத்தேந்தும் நீணிலைவே லெங்களிராவணனுர்
ஓடிப்போனுர் நாங்களெய்த்தோ முய்வதோர் காரணத்தால்
சூடிப்போந்தோ முங்கள்கோமானுணை தொடரேன்மின்
கூடிக்கூடி யாடுகின்றோம் குழமணிதூரமே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எடு ஒத்து | பனையோலை விரிந்தாப்போலே அகன்றும் | எய்த்தோம் | (கொல்லவொண்ணுதபடி) இளைத்தோம்; |
| நீண் | நீண்டுமிருக்கிற | உய்வதோர்காரணத்தால் | (நாங்கள்) உஜ்ஜீவிக்கைக்காக |
| இலை | இலையையுடைய | உங்கள்கோமான் | உங்களுக்கு ஸ்வாமியானபெருமாளுடைய |
| வேல் | வேலை | ஆணை | ஆஜ்ஞையை |
| ஏந்தும் | கையிலேதரித்திருந்த, | சூடிப்போந்தோம் | ஶிரஸாவஹித்துக்கொண்டுபோந்தோம்; |
| எங்கள் | எங்களுக்கு நியந்தாவான | தொடரேல்மின் | (எங்களை நலியத்) தொடரவேண்டாம்; |
| இராவணனுர் | ராவணனுனவன் | கூடிக்கூடி | திரள்திரளாக விருந்து குழமணிதூரமாடுகின்றோம். (௯) |
| ஓடிப்போனுர் | முதுகு காட்டி ஓடிப்போனுன்; | | |
| நாங்கள் | நாங்களோ | | |

அ௩;—எட்டாம்பாட்டு. (கவளமித்யாதி) எல்லாம்துவளவென்கையாலே வணங்கா முடிகள் ஒருவருமில்லாதபடி என்று பலிக்கையாலே அத்தை அருளுகிறுர் (நாமேயித்யாதி). "கூற்ற மன்னுர்காண வாடும்படி எங்ஙனே, அவர்கள் வென்றியாளன் தமரன்றோ?; ஸ்வாதந்த்ர்யேண கூத்துக்காண்பரோ" என்று சங்கையிலே இப்பாட்டென்னுமது தோற்றத் தொகுத்தபாவமருளுகிறுர் (ராஜேத்யாதி). ... ... ... ... ... ... (அ)

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (ஏடொத்தேந்தும்) அகலத்தை யுடைத்தாய், நீண்ட இலையையுடைய வேலைக்கையிலே தரித்து அத்தால் வந்த மதிப்பையுடையராவணன்; ஆயுதங்களும் அறுப்புண்டு முதுகுகாட்டி ஓடிப்போனன். (நாங்களெய்த்தோம்) எங்களைக் கொல்லவொண்ணுதபடி இளைத்தோம். (உய்வதித்யாதி) நாங்கள் உஜ்ஜீவிக்கைக்காக (௧) "गच्छानुजानामि-கச்சாநுஜாநாமி" என்று விட்டடித்தவருடைய ஆஜ்ஞையே சிரஸாவஹித்துக்கொண்டு போந்தோம். (தொடரேன்மின்) ஓடுவாரையிறே தொடரலாவது. (கூடிக்கூடியித்யாதி) எங்களைத் திரளாகக்கண்டது பூசலுக்கிறே என்று நினைக்கவேண்டா. .... .... .... .... .... (௯)

மூ;—வென்றதொல்சீர் தென்னிலங்கை வெஞ்சமத்தன்றரக்கர்
குன்றமன்னராடியுய்ந்த குழமணிதூரத்தைக்
கன்றிநெய்நீர்நின்ற வேற்கைக் கலியனொலிமாலை
ஒன்றுமொன்று மைந்துமூன்றும் பாடிநின்றாடுமினே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

---

அரு;—ஒன்பதாம்பாட்டு. (எடுத்யாதி) "குவளைவண்ணர் காணவாடீர்" என்று சொன்னஉபதேசத்தைக்கேட்டு கூத்தாடுவதாக எல்லாருங்கூட, வாநர ஸேனையானது அரக்கர்கூட்டம் கண்டமையிலேஅதிசங்கையாலே துடர்ந்து அடிக்கவர; அவர்களைப்பார்த்து "எங்கள் ராவணன் ப்ரதமயுத்தத்திலே தானே(௨) 'ससालचापञ्च मुमोच- சசாலசாபஞ்சமுமோச' என்றுமூர்ச்சிதனாக உங்கள் கோமான் *ரிபூணாமபிவத்ஸலனாகையாலே (௧) 'गच्छानुजानामि- கச்சாநுஜாநாமி' என்றபோதே 'நமக்கு இவரே ரக்ஷகர்' என்று நிர்ணயித்தோம்; இனிராவணன் பட்டபின்பு, நாங்கள் கூடிற்றுக் கூத்துக்காக வித்தனை, எங்களைத்துடர வேண்டா" என்கிறார்களென்று ஸங்கதி.

ஏடு-பனையோலையாய், அத்தாலே அகலம் விவக்ஷித மென்றது (அகலத்தையித்யாதி). மேலே நீட்சி சொல்லுகையாலே, பனையோலை விரித்தால் அகன்றிருக்குமே, அதுவே உசிதமென்று திருவுள்ளம். "ராவணனார்" என்று - பஹுவசநவிவக்ஷிதம் (மதிப்பையுடைய) என்றது. (அடித்தவர்) அடித்து விடுமவரென்றபடி. ... ... ... ... ... ... (௯)

(௧) ரா-யு-௫௯-௪௪. (௨) ரா-யு-௫௯-௧௪௦.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வென்ற | வெற்றியை விளைப்ப | கை | திருக்கையிலே தரித்த |
| தொல் | ஸ்வாபாவிகமான[தாய் | கலியன் | ஆழ்வார் |
| சீர் | வீரஸ்ரீயையுடைய | ஒலி | அருளிச்செய்த |
| தென் இலங்கை | லங்காபுரியில் | மாலை | சொல்மாலையான |
| வெம்சமத்து | பூசற்களத்திலே | ஒன்றும் ஒன்றும் | (மஹாராஜரை நோக்கிச்சொன்ன) இரண்டு பாட்டுக்களும், |
| அன்று | அப்போது | ஐந்தும் | (வாநரமுதலிகளைக் குறித்துச்சொன்ன) ஐந்துபாட்டுக்களும், |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் | மூன்றும் | (பரோபதேச ரூபமான) மூன்றுபாட்டும் (ஆகிய இப்) பத்துப் பாட்டை |
| குன்றம் அன்னார் | மலைபோன்ற பெரியவடிவுடையராய் | பாடிநின்று | பாடிக்கொண்டு [யும்) |
| ஆடி உய்ந்த | ஆடி உஜ்ஜீவித்த | ஆடுமின் | (ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகக்) கூத்தாடுங்கோள். |
| குழமணிதூரத்தை | 'குழமணிதூரம்' என்னும் கூத்தின்விஷயமாக, | | |
| கன்றி | (எதிரிகள் ரக்தங்களாலே) கன்றி | | |
| நெய்நீர்நின்ற | நெய்யிட்டிருக்கையை யேஸ்வபாவமாகவுடைய | | |
| வேல் | வேலை | | |

வ்யா;—பத்தாம்பாட்டு. (வென்றதொல்சீரித்யாதி) வெற்றியை விளைப்பதாய், ஸ்வாபாவிகமான வீரஸ்ரீயையுடைய லங்கையில் பூசல்களத்தில் ராக்ஷஸர் பெரியவடிகளோடே ஆடி உஜ்ஜீவித்துக் குழமணிதூரத்தைப்பேசிற்று. (கன்றிநெய்) எதிரிகள் ரக்தங்களாலே கன்றி நெய்யிட்டிருக்கையே - ஸ்வபாவமாகவுடைய வேலைக் கையிலே தரித்ததிருமங்கையாழ்வாரருளிச் செய்தது. ஆக ஆண்

---

அ௫;—பத்தாம்பாட்டு. (வென்றவித்யாதி) "கலியன்" என்றவநந்தரம் "பேசின" என்று அத்யாஹாரம் வேணுமென்று திருவுள்ளம்பற்றி (பேசிற்று) என்றது. ஆழ்வார் தம்முடைய வீரத்தை இப்போது சொல்லுகை - தோற்றூர் பாசுரத்தைச்சொல்லும் ப்ரகரணத்துக்குச் சேரும்படி என்னென்ன வருளுகிறூர் (ஆகவித்யாதி), வீரர்கூத்தைப்பாட வீரர்கூத்தையாடத்துண்ண

பிள்ளை கவிபாடுகிறார்; ஆண்பிள்ளைகள் தோற்றுடுகிறார்கள். (ஒன்று மொன்றுமித்யாதி) இப்பத்தையும் பாடிக்கொண்டாட, உங்களுக்கு இனிவரக்கடவதொரு பயமில்லை. (க) "நாவலிட்டுழிதருகின்றோம்" என்று வேண்டினபடி ஆடித்திரியுங்கோள். .... .... .... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## பத்தாம்பத்து மூன்றாந்திருமொழி முற்றிற்று.

## பத்தாம்பத்து நாலாந்திருமொழி
### சந்தமலர் ப்ரவேசம்.

வ்யா;—சந்தமலர்ப்ரவேசம். ராமாவதாரத்தில் பிற்பட்டார்க்கும் இழவாமைக்கிறே-க்ருஷ்ணவதாரம்; த்வேஷத்துக்கெல்லையானார்க்கும் இசையவேண்டும்படி யிருக்கிற ராமாவதாரத்தில் விஜயத்துக்குத் தோற்றவர்கள் பாசுரத்தாலே அநுபவித்தார்கீழ்; ராகத்துக்கெல்லையான யசோதைப்பிராட்டி பாசுரத்தாலே க்ருஷ்ணவதாரத்தை அநுபவிக்கிறார் இதில். .... .... .... .... ....

மூ;—சந்தமலர்க்குழல்தாழத் தானுகந்தோடித்தனியே
வந்தென்முலைத்தடந்தன்னை வாங்கிநின்வாயில்மடுத்து
நந்தன்பிறப்பெற்றநம்பி நானுகந்துண்ணுமமுதே
எந்தைபெருமானே யுண்ணா யென்னம்மஞ்சேமமுண்ணாயே.

இங்ஙனேயும் ஒருரஸம்தோற்றத்தம்முடையவீரத்வம்பேசினாரென்றுகருத்து;

இத்திருமொழி தான்-முதல்பாட்டும், ஆறும்பாட்டும்-கேவலம் மஹாராஜரைப் பார்த்துச்சொல்லுகிறதாயிருக்கையாலே அவற்றை "ஒன்றுமொன்றும்" என்று கூட்டியும், இரண்டாம்பாட்டுத் துடங்கி-ஒருநாலும், ஒன்பதாம்பாட்டும்-வாநரமுதலிகளைக் குறித்துச் சொல்லுகையாலே "ஐந்தும்" என்று தொகுத்தும், மேல் ஏழாம்பாட்டும், எட்டாம்பாட்டும், பத்தாம்பாட்டும் - பரோபதேச ரூபமாகையாலே "மூன்றும்" என்று சேர்த்தும் ஆழ்வார் அநுபவித்தாராகத் திருவுள்ளம்பற்றி, ச(ஃ)காரத்தாலே இதினேற்றத்தை ஸூசிப்பிக்கிறார் (இப்பத்தையும்) என்று. ... ... ... ... ... ... (௧0)

ஜீயர்திருவடிகளே சரணம்.

அ;—சந்தமலர் ப்ரவேசம். ஸங்க்ரஹேண ஸங்கதியருளிச் செய்து அதின் ப்ரகாரத்தை விவரிக்கிறார் (த்வேஷத்துக்கித்யாதி). ... *

(க) திருமாலை-க.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நந்தன் | நந்தகோபரானவர் | தனியே | (பலராமனையொழியத்) தனியே |
| பெறப்பெற்ற | (உன்னைப்) பிள்ளையாகப்பெறும்படியான ஏற்றத்தை யுடைய | உகந்து | அபிநிவேசத்தோடே |
| | | ஓடிவந்து | ஓடி (என்னிடம்)வந்து |
| நம்பீ | பூர்ணனே! | என் | என்னுடைய |
| நான் | நான் | முலைத்தடந் தன்னை | (பாலாலே நிரம்பின) முலையை |
| உகந்து | ப்ரீதிபுரஸ்ஸரமாக | வாங்கி | கையில்வாங்கி |
| உண்ணும் | புஜிக்கிற | நின் | உன்னுடைய |
| அமுதே | அம்ருதம்போல் ரஸ்யனானவனே! | வாயில் | வாயிலே |
| எந்தைபெருமானே | என்குலநாதனான கண்ணனே! | மடுத்து | நிறைத்துக்கொண்டு |
| | | உண்ணாய் | உண்ணவேணும்; |
| சந்தமலர் | செவ்விப்பூக்களணிந்த | சேமம் | க்ஷேமத்தை விளைக்கக் கடவ |
| குழல் | மயிர்முடியானது | | |
| தாழ | அலைந்துவர, | என் அம்மம் | என்முலைப்பாலை |
| தான் | தான் [நீ] | உண்ணாய் | உண்ணக்கடவை. (௧) |

வ்யா;—முதற்பாட்டு. (சந்தமலர்க்குழல் தாழத்தான்) செவ்விப்பூக்களாலே அலங்கரித்து வைப்பார்களிறே திருக்குழல்களை. "சந்தம்" என்று-அழகாயிற்று. வெறும்புறத்திலே ஆகர்ஷகமான குழல். (தாழ) பூவாலே அலங்க்ருதமாய், பேணாமையாலே அலைந்துவர. (உகந்தோடி) ஆதரித்து அபிநிவேசத்தாலே ஓடி. (தனியே வந்து) (க) "பலதேவனென்னும் தன் நம்பியோடப் பின் கூடச் செல்வான்" என்கிறபடியே இருவரும் கூடவாயிற்று முலையுண்ண வருவது. கூடவரில் இருவருக்கும் ஓரோமுலையாமென்று தனியே வந்து. (என்முலையித்யாதி) அவை தனக்கு போக(்ய)மாயிருக்கிறபடி. பாலாலே நிரம்பினமுலையை.

---

அரு;—முதற்பாட்டு. (சந்தமலரித்யாதி) "சந்தம்" என்றது - மலருக்கு விசேஷணமாக்கி அருளிச்செய்து, குழலுக்கு விசேஷணமாக்கி யருளுகிறார் (சந்தமென்றதித்யாதி). சந்தமலர்க்குழலானால் தாழக்கூடுமோ வென்ன (பூவாலித்யாதி). (பேணாமையாலே) அத்தைப்பேணிக்கொண்டிராதே ஓடித் திரிகையாலே. "மடுத்து" என்றதுக்குத்தாத்பர்யம் (அவையித்யாதி). (தனக்கு) க்ருஷ்ணன் தனக்கு. "தடத்தை" என்னாதே "தன்னை" என்றதுக் குக் கருத்து (பாலாலேயித்யாதி).

---

(க) பெரி-தி-க-அ-ரு.

(நந்தனித்யாதி) (௧) [[illegible]- குணைர்தசரதோபம:] "பரமபதத்திலுள்ள ஸ்வாபாவிககுணங்களும், அவதரித்து ஆர்ஜித்த குணங்களும் கூடினால் சக்ரவர்த்தியோடு உபமாநம் மார்மட்டமாய் நிற்குமித்தனை" என்று இத்தை ஜீயரருளிச்செய்ய, "பரமபுருஷனுக்கு ஓரிடத்தே பிறந்து ஒருகுணம் தேடவேணுமோ?" என்றார் ஸுந்தரபாண்டியதேவர். "நாமோடுகிற நரம்பு இவனறிந்திலன்" என்றத்தைவிட்டு, "பரமபுருஷனென்றபோதை அழகிருந்தபடியென்" என்றாராம். 'எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே அந்வயமில்லாதார், பகவத்விஷயத்தில் சொன்ன ஏற்றமெல்லாம் அர்த்தவாதமென்றிருப்பர்கள். அதுடையவர்கள் பகவத் ப்ரபாவத்துக்கு அவதியில்லாமையாலே சொன்னவை சில சொன்னவித்தனை; சொல்லாததுவேபெரிது" என்றிருப்பர்கள். (௨) "[illegible]-ஸத்யே நாதிவததி" யிறே.

(நந்தன்பிறப்பெற்றநம்பி) ஈஶ்வரனுக்கு இது அலப்யலாபமாயிருக்கிறபடி. இவர்பிள்ளையாகப்பெற்ற வேற்றமுடையவனே! (௩) "[illegible] - பிதரம்ரோசயாமாஸ" என்று அவனை ஆசைப்பட்டிறே பிறந்தது. தனக்குக் கிடையாதது பெறுகையிறே -

---

நந்தன் பெற்றத்தால் "நம்பி" என்று விவக்ஷித்து, அதுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (குணைரித்யாதி). (௪) "[illegible] - பஹவோந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்யஸந்திதே" நாட்டார் கொண்டாடும்படி * ஸமஸ்த கல்யாணகுணாம்ருதோததியாயிருக்குமவரை தசரதனோடு ஸாம்யம் சொல்லும்படி அமைத்துக் கொண்டிருக்கையாலே * மஹதோமந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷரூப குணம் ஸூசிதமென்று தாத்பர்யமருளுகிறார் (பரமபதத்திலித்யாதி). (நரம்பறிந்திலன்) ரஸதாரை அறிந்திலனென்றபடி. (அத்தை) ஸௌசீல்யகுணத்தை. இந்த அழகை அவனறியாதே போனானென்று கருத்து. "தசரதாதிகளோடு ஸாம்யம் ஸௌஶீல்யமென்று சொல்லக்கூடுமோ? அபிநயமாமத்தனையன்றோ" என்றும் சங்கையிலருளுகிறார் (எம்பெருமானாரித்யாதி).

"நந்தன் பெற்ற" என்னாதே, "பிறப்பெற்ற" என்றதுக்குக் கருத்தருளுகிறார் (ஈஶ்வரனுக்கித்யாதி-பெறுகையுமென்னுமளவும்). ... ... (௧)

---

(௧) ரா-அ-௧-௧௬. (௨) சா-௭-௧௬-௧. (௩) ரா-பா-௧௫-௩௦. (௪) ரா-அ-௨-௨௫.

அலப்ப்யலாபமாவது. பிறக்கிற ஸம்ஸாரிக்குப் பிறவாமை ஏற்றமா மோபாதியிறே, அவனுக்குப் பிறக்கப்பெறுகையும். (நாளித்யாதி) தேவர்கள் தாங்கள் புஜிக்கும் அம்ருதத்தில்வாசி. என்குலநாதனே; "நந்தன் பிறப்பெற்ற" என்று தொடங்கி இவளுதரித்து முலையுண்கைக் காக ஸ்தோத்ரம் பண்ணுகிறாள். (என்னம்மம் சேமமுண்ணாயே) என்னுடைய அம்மமாகிற-சேமத்தை. (க)"சேமமெடுத்தது" என்னக் கடவதிறே. ராஜாக்களுக்குக்காவலோடேவரும் சோறாயிற்றுச் சேமமாகிறது.

மூ;—வங்கமறிகடல்வண்ணா மாமுகிலே யொக்குநம்பி
செங்கணெடியதிருவே செங்கமலம்புரைவாயா
கொங்கைசுரந்திட வுன்னைக்கூவியும் காணாதிருந்தேன்
எங்கிருந்தாயர்தங்களோ டென்விளையாடுகின்றாயே. (௨)

| பதம். | உரை. |
|---|---|
| வங்கம் | கப்பல்களோடேகூடி |
| மறி | ஓதங்கிளர்ந்த |
| கடல் | கடல் போன்ற |
| வண்ணா | வடிவையுடையவனே! |
| மாமுகிலேஒக்கும் | காளமேகத்தை ஒத்திரா நின்றுள்ள |
| நம்பீ | பூர்ணனே! |
| செம் | சிவந்து |
| நெடிய | நீண்டிராநின்றுள்ள |
| கண் | கண்களையுடைய |
| திருவே | ஸர்வாதிகனானவனே! |
| செங்கமலம் புரை | செந்தாமரைப் பூப் போன்ற |
| வாயா | திருமுகத்தையுடையவனே! |
| கொங்கை | (என்) முலைகளிலே |
| சுரந்திட | பால்சுரவாநின்ற வளவிலே |
| உன்னை | உன்னை |
| கூவியும் | அழைத்தும் |
| காணாதிருந்தேன் | (நீ) வரக்காண்கிறிலேன்; |
| ஆயர்தங்களோடும் | இடைப்பிள்ளைகளோடு |
| இருந்து | கூடியிருந்து |
| எங்கு | எவ்விடத்தில் |
| என்விளையாடுகின்றாய் | என்னவிளையாட்டு விளையாடாநின்றாய். |

வ்யா;—இரண்டாம்பாட்டு. (வங்கம்) மரக்கலங்களோடுகூடி

அநு:—இரண்டாம்பாட்டு. (வங்கமித்யாதி) கீழ்ப்பாட்டில் "முலைத் தடம் தன்னை நின்வாயில் மடுத்துண்ணாய்" என்னச்செய்தேயும் அவன் தோழரோடு விளையாட்டைவிடாமலிருக்க, இவள் முலைக்கடுப்பாலே தேடிப் பிடித்தழைக்கிறாளென்று ஸங்கதி.

"வங்கங்களையுடைத்தாய், மறியாநிற்கிற கடல்" என்று சப்தார்த்த மாய்த் தாத்பர்யம் (மரக்கலமித்யாதி). வடிவுக்கொரு த்ருஷ்டாந்தம் சொல்லி

ஓதம்கிளர்ந்த கடல்போன்றவடிவையுடையவனே!. வடிவழகுக்குப் போலி தேடப்புக்கால் அங்குமிங்கும் கதிர்பெறுக்க வேண்டும்படியான பூர்த்தியை யுடையவனே!. (செங்கண்) அவயவசோபையோ தான்.சொல்லிமுடியலாயிருக்கிறது. (திருவே) ஸர்வாதிகவஸ்துவை "திரு" என்று போலேகாணும் சொல்லுவது. (செங்கமலமித்யாதி) எல்லா அவயவமும் அப்படியேயாயிருப்பது.

(கொங்கையித்யாதி) நீயேபா(ஞ)வஜ்ஞனாய்,தாய்முலே சுரந்து பார்த்திருக்குமன்று வருகையன்றிக்கே, நான் அழைத்தும் வரக்காணுதிருந்தேன். (எங்கித்யாதி) எங்கே புக்கிருந்து உன் பக்கல் நிரபேக்ஷராணுரோடே, ஸாபேக்ஷையாய் நான் பார்த்திருக்க, என்னவிளையாட்டு விளையாடுகிறது. .... .... .... (உ)

மூ;—திருவில்பொலிந்த வெழிலா ராயர்தம்பிள்ளைகளோடு
தெருவில்திளைக்கின்றநம்பீ செய்கின்ற தீமைகள்கண்டிட்டு
உருகியென்கொங்கையின்தீம்பா லோட்டந்து பாய்ந்திடுகின்ற
மருவிக்குடங்காலிருந்து வாய்முலேயுண்ண நீவாராய். (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருவில் | ஸம்பத்தால் | நம்பீ | பூர்ணனே! |
| பொலிந்த | மிக்கவர்களாய் | செய்கின்ற | (நீ) செய்து போரா நின்ற |
| எழில் | வடிவழகிலும் | தீமைகள் | [களை (விளையாட்டுத்) தீம்பு |
| ஆர் | உன்னோடு ஒத்திரா நின்றுள்ள | கண்டிட்டு | (நான்) பார்த்து, (அந்த)உகப்பாலே), |
| ஆயர்தம் பிள்ளைகளோடு | இடைப்பிள்ளைகளோடே | என் | என்னுடைய |
| தெருவில் | தெருவிலேயிருந்து | கொங்கையின் | முலேயிலுண்டான |
| திளைக்கின்ற | விளையாடுகிற | | |

மீளவும் ஒருத்ருஷ்டாந்தம் சொன்னதுக்குக் கருத்து (வடிவித்யாதி). "நெடிய செங்கண்" என்றருளுகிறார் (அவயவேத்யாதி). "வாய்" என்றது- திருக்கைகளுக்கும் உபலக்ஷண மென்றருளுகிறார் (எல்லாவித்யாதி).

"கூவியும்" என்ற ச(ஃ)காரத்தை உட்கொண்டருளுகிறார் ( நீயேயித்யாதி ). "ஆயர்களோடும்" என்கையாலே அவர்களுக்கு விளையாடுகையில் அபேக்ஷையின்றிக்கேயிருக்க, நீயே அவர்களையும் கூட்டிக்கொண்டு "என்ன விளையாடுகிறாய் என்றாய்" என்கிறளென்று விவக்ஷித்து அருளுகிறார் (எங்கேயித்யாதி). ... ... ... ... ... ... ... (உ)

| | | | |
|---|---|---|---|
| தீம்பால் | இனியபாலானது | குடங்கால் | (என்) மடியிலே |
| உருகி | (தானே) உருகி | மருவி இருந்து | பொருந்தியிருந்து |
| ஓட்டந்து | வெள்ளமிட்டு | வாய் | வாயாலே |
| பாய்ந்திடுகின்ற | பாய்ந்து பாழேபோகா நின்றது; (ஆகையால்) | முலை | முலைப்பாலை |
| | | உண்ண | உண்பதற்கு |
| | | நீவாராய் | நீவரவேணும். (ரு) |

வ்யா;—மூன்றாம்பாட்டு. (திருவில்பொலிந்த) ஸம்பத்தால் மிக்கு, வடிவழகிலும் உன்னோடொத்த * தன்னேராயிரம் பிள்ளைகளோடே தெருவிலேயிருந்து விளையாடுகிற விளையாட்டுக்கு அவதி(தி)யில்லாதவனே! முலையுண்ணுகையையும் விட்டிறே அத்தைவிரும்புகிறது. போக(भोग)த்தையும்விட்டு லீலையைவிரும்புமவன் நீ.(செய்கின்ற) விளையாடுகிறபடியை ஒளித்துக்கண்டு நின்றாள்போலே. (உருகியித்யாதி) உன்ஸ்வம்மடையவன்றோ பாழேபோகிறது. (தீம்பால்) இனியபால். (மருவியித்யாதி) அவயவங்கள்தோறும் முழுசா முகத்தைப்பாரா முலைசுரக்கப்பண்ணமல் மடியிலே இருந்தாயிற்று உண்பது. இதடையத் தரையிலே போகாமே உன்வாயிலேயாம்படி முலையுண்ண வாராய். .... .... .... .... .... (ரு)

மூ;—மக்கள்பெறுதவம்போலும் வையத்துவாழும் மடவார்
மக்கள்பிறர்கண்ணுக்கொக்கும் முதல்வாமதக்களிறன்னாய்
செக்கரிளம்பிறைதன்னை வாங்கி நின்கையில்தருவன்
ஒக்கலைமேலிருந்தம்ம முகந்தினிதுண்ணநீவாராய். (ச)

---

அரு;—மூன்றாம்பாட்டு. (திருவிலித்யாதி) கீழ்ப்பாட்டிலே "என் விளையாடுகின்றாயே" என்னச்செய்தேயும் லீலாரஸப்ரதானனாகையாலே தெருவிலே ஓடிநாநாவிதமான லீலைகளைப்பண்ண, அத்தைக்கண்டு அநுராகாதிசயத்தாலே முலைப்பால் வெள்ளமிட, பால்பாழே போகாதபடி போய் அழைக்கிறாளென்று ஸங்கதி.

(க) "రుషానిరస్తో పితరుష్యన్నయోర్నజాతుమాతుశ్చరణే జిహాసతి - ருஷாநிரஸ்தோபி ஸுதஸ்தநந்தயோ நஜாது மாதுஶ்சரணௌ ஜிஹாஸதி" என்றன்றோ லோகத்தில் பிள்ளைகளென்ன வருளுகிறார் (முலையித்யாதி). (விரும்புமவன்) விரும்புமவனன்றோ என்கை. கையும் கோலுமாய்ப் புறப்பட்டும், தாய்பார்க்க அவன் தீமைகள் செய்வனோ? இவள் கண்டபடி யென்னென்ன வருளுகிறார் (விளையாடுகிற வித்யாதி). ... ... ... ... ... ... (ரு)

---

(க) ஸ்தோ-ர-உகூ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வையத்து | நாட்டிலே | செக்கர் | சிவந்தவானத்திலிருக் |
| வாழும் | வர்த்திக்கிற | இளம்பிறைத | பாலசந்த்ரனை [கிற |
| மடவார் | ஸ்த்ரீகளுடையவும், | ன்னை | |
| பிறர் | மற்றுமுள்ள | வாங்கி | வாங்கி (பிடித்து) |
| மக்கள் | மநுஷ்யர்களுடையவும் | நின் | உன்னுடைய |
| கண்ணுக்கு | கண்ணுக்கு, | கையில் | கையிலே |
| மக்கள்பெறு | பிள்ளை பெறுகைக்கு | தருவன் | கொடுப்பேன்; |
| தவம்போலு | நோற்கும் தபஸ்ஸு | ஒக்கலைமேல் | (என்)இடுப்பின்மேலே |
| மொக்கும் | தான் ஒருவடிவு கொண்டாற்போலே யிராநின்றுள்ள | இருந்து | இருந்து |
| | | அம்மம் | ஸ்தந்யத்தை |
| | | உவந்து | ஆதரித்து |
| முதல்வா | ஜகத்காரணபூதனே! | இனிது | இனிதாக |
| மதக்களிறு | மத்தகஜம்போன்றவ | உண்ண | புஜிக்க |
| அன்னாய் | வனே!; | நீ வாராய் | நீ வரவேணும். (௪) |

வ்யா;—நாலாம்பாட்டு. (மக்கட்பெறுதவம்) (வையத்துவாழும் மடவார்மக்கள் பிறர்-இவர்கள் கண்ணுக்கு, மக்கள் பெறுதவம்போலொக்கும் முதல்வா) நாட்டிலே வர்த்திக்கிற ஸ்த்ரீகள் - மற்றுண்டானமநுஷ்யர்கள், இவர்கள்கண்ணுக்குப் பிள்ளைபெறுகைக்குநோற்கும் தபஸ்ஸுதான் ஒருவடிவு கொண்டாப்போலே யிருக்கிறவனே! (மதக்களிறன்னாய்) ஸஞ்சாரமே இனிதாயிருக்கிறபடி. சிவந்தஆகாசமிருக்கிறபடி கண்டாயே. அதுக்குப் பரபாக (ஸூக்) மான பிறையிருக்கிறபடி கண்டாயே. அப்பிறையைவாங்கி உன்னுடைய சிவந்த கையிலேதருவன். (என்னொக்கலையித்யாதி) என்ஒக்கலையிலே இழியாதிருந்து ஆதரித்து இனிதாக அம்ம முண்ணவாராய். (௪)

---

அரு;—நாலாம்பாட்டு. (மக்களித்யாதி) கீழ்ப்பாட்டிலே தெருவிலே விளையாடா நிற்கச்செய்தே, அழைத்தவுடனே யானைக்குட்டிபோலே பிடிகொடாதேயிருக்க, "உனக்கு விளையாடுகைக்கு அம்புலியம்மானைப் பிடித்துத் தருகிறேன்வா" என்றழைக்கிறுளென்று ஸங்கதி.

"மக்கள்" என்றதினர்த்தம்-(மநுஷ்யர்) என்றது. "போலும்" என்றும், "ஒக்கும்" என்று மிருக்கையாலே முற்றுவமை தோற்று மென்றருளுகிறார் (தபஸ்ஸுதானித்யாதி). ... ... ... ... ... (௪)

மூ;—மைத்தகருங்குஞ்சிமைந்தா மாமருதூடு நடந்தாய்
வித்தகனேவிரையாதே வெண்ணெய்விழுங்கும் விகிர்தா
இத்தனைபோதன்றியென்றன் கொங்கைசுரந்திருக்ககில்லா
உத்தமனேயம்மமுண்ணு யுலகளந்தா யம்மமுண்ணாய். (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மைத்த | மையின் தன்மையை யுடைத்தாய் | என்றன் | என்னுடைய |
| கரு | இருண்டிராநின்றுள்ள | கொங்கை | ஸ்தநமானது |
| குஞ்சி | குழலையுடைய | சுரந்து | பால்சுரந்து |
| மைந்தா | முக்த(ஃ)னே! | இத்தனைபோது அன்றி | இத்தனை போதல்லாதே |
| மா | பெரிய | இருக்ககில்லா | பொறுத்துப் பாடாற்றப் போகாது; |
| மருதூடு | மருதுகளின் நடுவே | உத்தமனே | ஸர்வோத்க்ருஷ்டனே |
| நடந்தாய் | நடந்தருளினவனே! | அம்மம் | ஸ்தந்யத்தை |
| வித்தகனே | ஆஶ்சர்ய ஶக்தி யுக்தனே! | உண்ணாய் | உண்ணவேணும்; |
| விரையாதே | த்வரியாமல் | உலகு | உலகங்களை |
| வெண்ணெய் | வெண்ணெயை | அளந்தாய் | (மூவடியால்) அளந்தருளினவனே! |
| விழுங்கும் | விழுங்குகிற | | அம்மம் உண்ணாய். (௫) |
| விகிர்தா | விகிர்தமான (வேறுபட்ட) செயலையுடையவனே!, | | |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (மைத்த) மையின்தன்மையை யுடைத்தாய், கண்ணுக்குக்குளிர்ந்து இருண்டகுழலையுடைய முக்த(ஃ)னே!. பெரியமருதுகளின்நடுவே நடந்தாய், பெரியவற்றையெல்லாம் செய்கைக்கிடான ஆஶ்சர்யசக்தியை யுடையவனே! (விரை

அ௫;—அஞ்சாம்பாட்டு. (மைத்தகருங்குஞ்சியித்யாதி) கீழ்ப்பாட்டிலே "அம்புலியம்மானை நின்கையில்தருவேன்" என்றுவைத்ததுவே வ்யாஜமாக்கி, மூன்றுற நின்கையில் பிடித்துக்கொடு வந்தாயாகில், நான் வருவேனென்ன; இவள் "அங்ஙனொத்த ஆஶ்சர்யங்களைச் செய்யவல்லாய் நீ யன்றோ" என்று புகழ்ந்து போது போக்காதே, நான் முலைக்கடுப்புப்பொறுக்கமாட்டேனென்று ப்ரார்த்திக்கிறாளென்று ஸங்கதி.

"வித்தகனே" என்றதின் தாத்பர்யம் (பெரியவற்றையித்யாதி). மாமருதூடு நடந்த வித்தகனாகையாலே, விரையாதே வெண்ணெயை விழுங்கத்

யாதே) "இனிஇதுசெய்யான்" என்னும்படி படுக்கையிலே கிடந்து அவள் பேரநின்றவாறே வெண்ணெயை விழுங்கும் விகிர்தமான செயலையுடையவனே! நெடும்போதுண்டாயிற்று முலைக்கடுப்போடேயிருக்கிறது. (இத்தனைபோதன்றி) இத்தனைபோது அல்லாதே, என்னால் பொறுத்துப் பாடாற்றப்போகாது. (உத்தமனே) உன் நோவிலும் தாய் நோவறியுமவனன்றோ? வேண்டுமளவிலே வந்து ஸ்பர்ஶித்த நீயன்றோ?.

மூ;—பிள்ளைகள்செய்வன செய்யாய் பேசில் பெரிதும்வலியை
கள்ள மனத்திலுடையைக் காணவே தீமைகள்செய்தி
உள்ளமுருகியென்கொங்கை யோட்டந்து பாய்ந்திடுகின்ற
பள்ளிக்குறிப்புச்செய்யாதே பாலமுதுண்ண நீவாராய்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிள்ளைகள் | (உன்னோடொத்த) பிள்ளைகள் | தீமைகள் | (ஆஶ்சர்யமான) தீம்பு |
| செய்வன | செய்யுமவற்றை | செய்தி | செய்யாநின்றாய்; [களை |
| செய்யாய் | நீ செய்கிறிலை ; | என் | என்னுடைய |
| பேசில் | பேசப்புக்கால் | உள்ளம் | நெஞ்சானது |
| பெரிதும் | மிகவும் | உருகி | உருகி, |
| வலியை | மிடுக்கையுடையனாயிராநின்றாய்; | கொங்கை | ஸ்தநமானது |
| மனத்தில் | நெஞ்சிலே | ஓட்டந்து | (பால்) பெருகி |
| கள்ளம் | கபடத்தை | பாய்ந்திடுகின்ற | பாயாநின்றது; |
| உடையை | வஹியாநின்றாய்; | நீ | நீ |
| காணவே | (விலக்குவார்க்கும்) பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்படி | பள்ளிக்குறிப்பு | (கண்கள் சிவப்பது முதலான) நித்ராலக்ஷணங்களை |
| | | செய்யாதே | அபி(ழு)நயியாமல் |
| | | | பாலமுது உண்ணவாராய். (௬) |

தொடங்கினானென்று விவக்ஷித்து, இதுவுமொரு ஆஶ்சர்யமான படியை யருளுகிறார் (இனியித்யாதி). உரலோடு கட்டுண்டவனாகையாலே இனிச்செய்யானென்று தானிருக்க, அதுவே-அவனுக்கு விரையாமைக்கு உடலாமென்று ஆஶ்சர்யப்படுகிறாரென்று திருவுள்ளம். மேலுக்குத் தாத்பர்யம் (நெடும்போதித்யாதி). (வேண்டுமளவிலே)-லோகத்திலே வேண்டுமளவிலே. ... (௫)

வ்யா;—ஆரும்பாட்டு. (பிள்ளைகள்) உன் பருவத்தில் பிள்ளைகள் செய்வனவன்று நீ செய்வது. (பேசில்பெரிதும்வலியை) கண்ணெச்சிலானவற்றைச் செய்யாநிற்புதி. கண்ணெச்சிலாமென்று சொல்லாதொழியு மித்தனை. சொல்லில் பெரியமிடுக்கையுடைய உன்நெஞ்சில் நினைக்குமவை இன்னதென்று தெரியாது; விலக்குவார்க்கும் .கண்டுகொடுநிற்கவேண்டும் தீமைகள் செய்யாநிற்புதி. கண்டிருக்க ஆகர்ஷகமான தீம்புகளைச் செய்வுதி; அத்தீமைகாண என்ஹ்ருதயம்உருகி முலைவழியே பாலாய்ப்புறப்படாநின்றது. (பள்ளிக்குறிப்புச் செய்யாதே) கண்கள்சிவப்பது, மூரிநிமிர்வது, கொட்டாவிகொள்வது, அழுவதாகாதே. .... .... .... (௬)

மூ;—தன்மகனாக வன்பேய்ச்சிதான் முலையுண்ணக்கொடுக்க
வன்மகனாயவளாவிவாங்கி முலையுண்டநம்பீ
நன்மகளாய்மகளோடு நானிலமங்கைமணாளா
என்மகனேயம்மமுண்ணு யென்னம்மம்சேமமுண்ணாயே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வல் | நெஞ்சில் க்ரௌர்யத்தை யுடைய | ஆவி | ப்ராணனை |
| பேய்ச்சி | பூதனையானவள் | வாங்கி | (முலைவழியே)முடித்து |
| தன்மகனாக | தன் புத்ரனாக அபிநயித்து, | முலை | முலையை |
| தான் | தான் | உண்ட | உறிந்தருளின |
| முலை | முலையை | நம்பீ | (ஆஸ்சர்ய சேஷ்டிதங்களால்) பூர்ணனானவனே! |
| உண்ண | புஜிக்கும்படி | | |
| கொடுக்க | (வாயில்) வைக்க, (அவ்வளவிலே,) | நல்மகள் | நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய |
| வல் மகனாய் | வலியஆண்பிள்ளையாய் | ஆய்மகளோடு | நப்பின்னைப் பிராட்டிக்கும், |
| அவள் | அந்தப் பூதனையினுடைய | | |

அரு;—ஆரும்பாட்டு. (பிள்ளைகளித்யாதி) கீழ்ப்பாட்டிலே இத்தனை போது நான் பொறுக்கமாட்டே னென்னச் செய்தே விளையாட்டிலே மிகுதியாலே அலசி உறங்கப்புகுவதி, அது அங்ஙனே செய்யாய்; வாவென்று அழைக்கிறாளென்று ஸங்கதி.

"கள்ளமனத்திலுடையை" என்றதினர்த்தம் (உன் நெஞ்சிலித்யாதி).

நால்நிலமங்கை நால்வகை நிலங்களுக் கபிமாநியான ஸ்ரீபூமிப் பிராட்டிக்கும் அம்மம் உண்ணாய்;
மணாளா வல்லபனானவனே! சேமம் க்ஷேமத்தை விளைக்கக் கடவ
என்மகனே எனக்குப் பிள்ளையாகப் பெற்றவனே! என் அம்மம் உண்ணாய். (எ)

வ்யா;—ஏழாம்பாட்டு. (தன்மகனாக) யசோதைப் பிராட்டியாக வந்தாளாயிறறு. (வன்பேய்ச்சி) இவனைக்கண்டவிடத்திலும் நெகிழாத நெஞ்சில் வன்மையையுடையவள். (தான்முலையுண்ணக் கொடுக்க) பரிவோடே கொடுக்கிறாளென்று தோற்றும்படிகொடுக்க. (வன்மகனித்யாதி) தானும்தாயென்று ப்ர(ஸ்)மியாதே அவளபிஸந்தியை புத்திபண்ணி அப்பருவத்திலேபெரியஆண்பிள்ளையாய் அவள் ப்ராணன்களை முலைவழியே உண்டு அவளை முடித்து இப்படிப்பட்ட செயல்களாலே பூர்ணனானவனே!

(நன்மகளித்யாதி) இப்படி பூதனைகையிலே அகப்பட்ட உன்னை ஆராக நினைத்தாய். நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கும் ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும் வல்லபனானவனே! (என்மகனே) அப்படியே ஓரேத்தம்போலே காணாய் இவள் மகனானதுவும். (சேமமுண்ணாயே) அம்மம் என்று - புஜிக்கப்படுமவை எல்லாவற்றுக்கும்பேர். .... .... .... .... (எ)

மூ;—உந்தமடிகள்முனிவருன்னை நானென்கையில் கோலால்
நொந்திடமோதவுங்கில்லே னுங்கள்தமாநிரையெல்லாம்
வந்துபுகுதரும்போது வானிடைத்தெய்வங்கள்காண
அந்தியம்போதங்குநில்லே லாழியங்கையனேவாராய். (அ)

அரு;—ஏழாம்பாட்டு. (தன்மகனித்யாதி) "நீ காணவே தீமைகள் செய்தி" என்னாநின்றாய்; நான் செய்த தீமைகளில் ஒன்றைச் சொல்லிக் காணாயென்ன; பூதனை முலைப்பாலுண்டு தீம்பு செய்தாயில்லையோ வென்கிறாளென்று ஸங்கதி.

வேற்றுமுலையறிந்து உண்கை தீம்பென்றுகருத்து. "தான்" என்றதின் பலிதம் (பரிவோடேயித்யாதி).

நாலுவகைப்பட்ட நிலத்துக்கு அபிமாநியானமங்கை யென்றருளுகிறார் (ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கும்) என்று. ... ... ... ... (எ)

அரு;—எட்டாம்பாட்டு. (உந்தமித்யாதி) கீழ்ப்பாட்டில் பூதனை முலையுண்டத்தைத் தீமையாகச் சொல்லுகையாலே நம்மைக்கட்டவும் அடிக்கவு

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | நீ தீமைகள் செய்தால், | வந்து | (காடுகளில் மேய்ந்து) மீண்டுவந்து |
| உந்தம் | உன்னுடைய | | |
| அடிகள் | பிதாவான நந்தகோபர் | புகுதரும்போது | (ஊருக்குள்ளே) புகும்போது |
| முனிவர் | சீறுவர்; | | |
| உன்னை | (தீம்பிலே கைவளருகிற) உன்னை | வானிடை | ஆகாசத்திலுள்ள |
| | | தெய்வங்கள் | தேவதைகள் |
| நான் | (உன்னை நோக்கக் கடவ) நான் | காண | (எச்சில் கண்ணால்) காணும்படி |
| என் | என்னுடைய | அந்தியம்போது | (அஸுரர்களுக்கு பலம் வளரக்கடவ) ஸந்த்யா காலத்திலே |
| கையில் | கையிலிராநின்றுள்ள | | |
| கோலால் | கோலாலே | | |
| நொந்திட | நோம்படியாக | அங்கு | நாற்சந்தியிலே |
| மோதவும் | அடிக்கவும் | நில்லேல் | நில்லாதே கொள்; |
| கில்லேன் | சக்தையாகிறிலேன்; | ஆழி அம் | திருவாழியாழ்வாலே அழகிய |
| உங்கள்தம் | உங்களுடைய | கையனே | திருக்கையை யுடையவனே! |
| ஆநிரை எல்லாம் | பசுக்கூட்டமெல்லாம் | வாராய் | (என்னருகே)வா. (அ) |

வ்யா;—எட்டாம்பாட்டு. (உந்தமடிகள் முனிவர்) தாயாரைக்கண்டால் தீமையிலே ஒன்று பத்தாகப் பணைக்கும். ஸ்ரீநந்தகோபர்க்காயிற்று அஞ்சுவது. அத்தாலேஅவனுக்கு அச்சமுறுத்துகைக்காக யசோதைப்பிராட்டி சொல்லும் பாசுரமாயிற்று. உங்கள் முதலியார் சீறுவர்கிடீர். (உன்னைநான்) தீம்பிலே கைவளருகிற உன்னைநோக்கவிருக்கிறநான். (என்கையில்கோலால்) கண்டாயிறே-இதின்பேர். இப்போதே சிவிட்கென்ன அடிக்கலாமிறே. அதுமாட்டுகிறிலேன்.

அடிக்கவேண்டும்படி செய்ததீமைதானென்னென்ன; (உங்கள்தமி

---

மழைக்கிறுளாக வேணும்; "அம்ம முண்ண" என்று வ்யாஜமாத்ர மென்று நாலடி ஓட, கோலும் கையுமாய் பின்தொடர்ந்து அச்சமுறுத்தி அழைக்கிறுளென்று ஸங்கதி.

கோலும் கையுமாய்த் தான் நிற்க, "உந்தமடிகள் முனிவர்" என்பானென்னென்ன வருளுகிறார் (தாயாரையித்யாதி).

"நிரை எல்லாம்" என்று ஸமூஹ பாஹுள்யம் சொல்லுகைக்குத் தாத்

த்யாதி ) உபயவிபூதியோபாதியும் பரப்புப்போருமாயிற்று. இவன் தன்னையொழியவேயும் கண்ணெச்சிலாம்படியாயிற்று அவை வந்து புகுரும்போதிருப்பது. இங்குகாண்கின்றருண்டோ வென்ன வேண்டா; (வானிடைத்தெய்வங்கள் காண) எத்தனை தேவதைகள் ஆகாசத்திலே பார்த்து நிற்கக்கடவது. அசுரர்களுக்கு ப(ப)லம் வர்த்திக்கும்போது அங்குநில்லாதேகொள். ( அங்கு ) "இவை இவனின" என்று உன்னோடே சேர்த்துச் சொல்லலாம்படி அங்கு நில்லாதேகொள். ( ஆழியித்யாதி ) இவற்றையொழியவேயும் (க) "வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு" என்னும்படியாயிற்றிருப்பது. .... .... .... .... .... (அ)

மூ;—பெற்றத்தலைவனெங்கோமான் பேரருளாளன்மதலாய்
சுற்றக்குழாத்திளங்கோவே தோன்றியதொல்புகழாளா
கற்றினம்தோறும்மறித்துக் கானந்திரிந்தகளிறே
எற்றுக்கென்னம்மமுண்ணுதே யெம்பெருமானிருந்தாயே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பெற்றம் | பசுக்களுக்கு | தோன்றிய | எங்கும் ப்ரஸித்தமாய் |
| தலைவன் | ப்ரதாநனானவனே! | தொல் | ஸ்வாபாவிகமாய் |
| என்கோமான் | எனக்குஸ்வாமியானவனே! | புகழாளா | ஏத்தும்படியான அபதாநமுடையவனே! |
| பேர் அருளாளன் | மஹாதயாளுவான | கானந்தோறும் | காடுதோறும் |
| | நந்தகோபருடைய | கன்றுஇனம் | பசுக்களின் திரளை |
| மதலாய் | திருமகனே! | மறித்து | மேய்த்து |
| சுற்றக்குழாம் | பந்துவர்க்கத்துக்கெல்லாம் | திரிந்த | உலாவின |
| இளங்கோவே | யுவராஜாவானவனே!, | களிறே | மத்தகஜம் போன்றவனே! |

பர்யமருளுகிறார் (உபயேத்யாதி). நின்றால் குற்றமென்னென்ன; அங்கு நின்றால் "க்ருஷ்ணன் மாட்டுத் திறமித்தனையோ?" என்று ஸம்ருத்தியைக் கண்டால் த்ருஷ்டி தோஷமாமென்று கருத்தருளுகிறார் (இவனித்யாதி). நீயும் நின்றால் கேட்க வேண்டாவிறே என்று கருத்து. "ஆநிரைவரும்போது" என்றத்தாலே, அந்தி என்னுமதுபலிக்கவும்,"அந்தி" என்றருளிச்செய்ததுக்குக்கருத்தருளுகிறார்( அஸுரர்களுக்கித்யாதி)."அங்கு"என்று-நாற்சந்தி. அங்குநின்றால் குற்றமானமையையருளுகிறார் (இவையித்யாதி)·( இவனின) இவனுடையவை. ... ... ... ... ... ... ... (அ)

(க) திருப்பல்லா-௨.

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமான் | எனக்குப்பெருமையை விளக்கத்தக்கவ[னே!] | அம்மம் | ஸ்தந்யத்தை |
| | | உண்ணுதே | உண்ணமல் |
| எற்றுக்கு | எதுக்காக | இருந்தாய் | இராநின்றாய். (௯) |
| என் | என்னுடைய | | |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (பெற்றத்தலைவனெங்கோமான்) பசுக்களுக்கு ப்ரதாநனானவனே!. மேல்விழுந்து முலையுண்ண எத்துகிறாள். எனக்குஸ்வாமியானவனே!. இத்தால் ஐஶ்வர்யம்சொல்லுகிறது. (பேரருளித்யாதி) அருளால் குறைவற்றவன் மகனன்றோ நீ. அவன்படி உனக்குமுண்டாகவேண்டாவோ?. (சுற்ற) பந்துவர்க்கத்துக்கெல்லாம் யுவராஜாவானவனே! (தோன்றிய) எங்குமொக்கப்ரஸித்தமான ஸ்வாபாவிகமான புகழினுடையவார்த்தைப் பாட்டையுமுடையவனே!. (கற்றினம்) கன்றினுடையதிரள். ஒன்றிரண்டுபோராது. கன்றுகளைத்திரளாக மறித்துக்காட்டிலே அங்கே இங்கேதட்டித்திரியும்போது ஒருமத்தகஜம் உலாவுமாபோலேயாயிற்றிருப்பது. (எற்றுக்கு) உனக்கு விடாய்இல்லாமையோ?, உனக்கு முலைதாராதொழிந்தபோது நான் தரிப்பனோ?. .... (௯)

மூ;—இம்மையிடர்கெடவேண்டி யேந்தெழில்தோள்கலிகன்றி
செம்மைப்பனுவல்நூல்கொண்டு செங்கணெடியவன்றன்னை
அம்மமுண்ணென்றுரைக்கின்ற பாடலிவையைந்துமைந்தும்
மெய்ம்மைமனத்துவைத்தேத்த விண்ணவராகலுமாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏந்து | பெருமையான (மிகுந்த) | கெடவேண்டி | நஶிக்கவேண்டி, |
| எழில் | அழகையுடைய | செம்மை | ஸர்வலக்ஷணஸம்பந்நமாய் |
| தோள் | தோளையுடையரான | நூல் | (இவ்வருகுள்ளார்க்கு) ஶாஸ்த்ரம்போன்ற |
| கலிகன்றி | ஆழ்வார், | | |
| இம்மை | இந்தஸம்ஸாரத்திலுள்[ள] | | |
| இடர் | துன்பமானது | | |

அ௩;—ஒன்பதாம்பாட்டு. (பெற்றமித்யாதி) கீழே அச்சமுறுத்திப்பார்த்தாள்; அது கார்யகரமாகாமையாலே மிகவும் கொண்டாடி அழைக்கிறாளென்று ஸங்கதி.

"எற்றுக்கு" என்றதுக்கு-நாநாகோடிகள் சொல்லவென்றாகையாலே அருளுகிறார் (உனக்கித்யாதி). ... ... ... ... ... ... (௯)

| | |
|---|---|
| பனுவல்கொண்டு | அருளிச்செயல்களைக் கொண்டு, |
| செம்கண் | புண்டரீகாக்ஷனை |
| நெடியவன் தன்னை | ஸர்வேஶ்வரனை |
| அம்மம்உண் என்று | "அம்மமுண்ணவா" என்று |
| உரைக்கின்ற | அழைத்தமையைச் சொல்லாநின்ற |
| பாடல்இவை ஐந்தும் ஐந்தும் | இப்பத்துப்பாட்டுக்களையும் |
| மெய்ம்மை | யதார்த்தமான (அந்த பாவ)த்தோடே |
| மனத்து | மநஸ்ஸில் [கூடின) |
| வைத்து | தரித்து |
| ஏத்த | அநுஸந்திக்க (அவர்கள்) |
| விண்ணவர் | நித்யஸூரிகளாக |
| ஆகலுமாம் | ஆவர்கள்; (அவர்களோடொக்கப் பெறுவர்கள்). (௧௦) |

வ்யா;—பத்தாம்பாட்டு. (இம்மையித்யாதி) இவள் முலை கொடுத்தல்லது தரியாதாப்போலே, கவிபாடியல்லது தரியாதாராய்ப்பாடின கவியாயிற்று. மிக்கஎழிலையுடைத்தான தோளையுடைய ஆழ்வார். (செம்மைப்பனுவல்நூல்கொண்டு) சாஸ்த்ரங்களில் பரக்கச்சொல்லுகிற லக்ஷணங்களிலே ஒன்றும் குறையாமல் செய்ததுவுமாய், இதுதான் இவ்வருகுள்ளார்க்கு ஶாஸ்த்ரமாக எழுதிக்கொள்ளலாயிருக்கிற இவற்றைக்கொண்டு. "பனுவல்" என்றும் - "நூல்" என்றும் - சாஸ்த்ரமாகையாலே சொல்லிற்று. புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனை "அம்மமுண்" என்று சொன்ன இப்பத்தையும் அந்த பா(வ)வ்ருத்தியோடே சொல்லுவார்க்கு வந்தேறியான முக்தரா

அரு;—பத்தாம்பாட்டு. (இம்மையித்யாதி). "இடர்கெடவேண்டி-அம்மமுண்ணென்று உரைக்கின்ற" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி ஸமபிவ்யாஹார தாத்பர்யமருளுகிறார் (இவளித்யாதி).யசோதைக்கு முலைக்கடுப்பும், இவருக்கு நாக்கு வரட்சியும் இடரென்று கருத்து. சாஸ்த்ரமாகையாலே அர்த்த பேக்ஷஜமென்று சேஷம். இரண்டாம்பாட்டும், மூன்றும்பாட்டும், அஞ்சாம் பாட்டும், ஆறும்பாட்டும், ஒன்பதாம்பாட்டுமாக - ஐந்துபாட்டும்-முலைக்கடுப்பாலே அவஸாதம் தோற்றச்சொன்னவையுமாய்,மற்றவைந்தும்-அங்ஙனேயன்றிக்கே சொன்னவையென்று இரண்டு வகையாக வருளிச் செய்தாரென்னுமதுதோற்ற, (இப்பத்தையும்) என்றுகூட்டி அருளிச்செய்தாரென்று கொள்வது. "ஐந்து மைந்தும்" என்றது - இப்பத்தையும் என்றபடி. (அந்த பாவ

வர்களன்றிக்கே, அஸ்ப்ருஷ்டஸம்ஸாரிகளான நித்ய ஸூரிக ளோடொக்கத் தரம் பெறலாம். .... .... .... .... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி
# பத்தாம்பத்து நாலாந்திருமொழி முற்றிற்று.

## பத்தாம்பத்து அஞ்சாந்திருமொழி
## பூங்கோதை ப்ரவேசம்.

வ்யா;—முலையில் வாசியறிந்துண்ணும் பிள்ளைப்பருவத்தை அநுபவித்து இனியரானார்கீழ்; அதுக்கநந்தரம் லீலையிலே இழிந்து சப்பாணிகொட்டும் பருவத்தை அநுபவித்து இனியராகிறார்.

மூ;—பூங்கோதையாய்ச்சி கடைவெண்ணெய்புக்குண்ண
ஆங்கவளார்த்துப்புடைக்கப் புடையுண்டு
ஏங்கியிருந்து சிணுங்கி விளையாடும் [பாணி)
ஓங்கோதவண்ணனேசப்பாணி யொளிமணிவண்ணனேசப்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூ | மாலையாலே அலங்கரிக்கப்பட்ட | ஆங்கு | அவ்விடத்திலேயே |
| கோதை | மயிர்முடியையுடைய | ஆர்த்து | (தாம்பால்) கட்டி |
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி | புடைக்க | அடிக்க |
| கடை | கடைகிற [யானவள் | புடைஉண்டு | அவ்வடியையுண்டு, |
| வெண்ணெய் | வெண்ணெயை | ஏங்கிஇருந்து | (சற்றுப்போது) அழுது கொண்டிருந்து (அநந்தரம்) |
| புக்கு | (அங்கேறப்) புகுந்து | சிணுங்கி | சீராட்டப்பெற்று |
| உண்ண | அமுதுசெய்தவளவில் | விளையாடும் | விளையாடாநிற்கிற, |
| அவள் | அந்தயசோதைப்பிராட்டி | | |

வ்ருத்தி)என்றது-அர்த்தயாதார்த்த்ய நிபந்தநமான இருவகைப்பட்ட பாவவ்ருத்தி என்கை. ... ... ... ... ... ... ... (க0)

ஜீயர்திருவடிளே சரணம்.

அநு;—பூங்கோதைப்ரவேசம். "அம்மமுண்ணாய்" என்றத்தையும், "சப்பாணிகொட்டாய்" என்றத்தையும் கடாக்ஷித்தருளுகிறார் (முலையிலித்யாதி).

| | | | |
|---|---|---|---|
| ஏங்குஓதம் | கினார்ந்த கடல்போன்ற [னே! | ஒளி | புகரையுடைத்தான |
| | | மணி | மணிபோன்ற |
| வண்ணனே | வடிவையுடையவ | வண்ணனே | திருநிறத்தையுடைய |
| சப்பாணி | சப்பாணிகொட்ட வேணும்; | | வனே! சப்பாணி. |

வ்யா;—முதற்பாட்டு, (பூங்கோதையித்யாதி) செவ்விமாலையாலே அலங்க்ருதமான மயிர்முடியையுடைய யசோதைப்பிராட்டி கடைகிற வெண்ணெயை. ஒப்பித்து நின்றாயிற்றுத் தயிர்கடைவது. (௧) "வாசநறுங்குழலாய்ச்சியர்". (கடைவெண்ணெய்புக்குண்ண) கடைந்து திரட்டிச்சேமித்துவைத்தால் களவு காண்கையன்றிக்கே, கடைகிறபோதே நிழலிலே ஒதுங்கிக் களவுகண்டாயிற்று அமுதுசெய்வது. (ஆங்கவளித்யாதி) அவளுக்குத் தயிர் கடைகையிலன்றே அந்யபரதை; இவனை நோக்குகையிலேயிறே. ஆகையாலே அவள்கண்டு பிடித்துக் கட்டியடிக்க அடியுண்டு.

(ஏங்கியித்யாதி) ப்ரதமபரிபவமாகையாலே முந்துற ஏங்கி, அநந்தரம் அது ஆறிச் சீராட்டிப்பின்னை லீலையோடே தலைக்கட்டும். தேங்கின கடல்போலேயாயிற்று அப்போதிருக்குமிருப்பு. (உ) "விரலொடித்யாதி" (ஒளி) அவ்வளவேயன்றிக்கே புகரையுடைத்தான மணிபோலே யிருக்கிறவனே! (சப்பாணி) வடிவைக்காட்டி வாழ்வித்ததுவேயன்றிக்கே, சப்பாணிகொட்டி வாழ்விக்கவேணும். (௧)

மூ;—தாயர்மனங்கள்தடிப்பத் தயிர் நெய்யுண்
டேயெம்பிராக்க ளிருநிலத்தெங்கள்தம்
ஆயரழக வடிகளரவிந்த [சப்பாணி.
வாயவனேகொட்டாய்சப்பாணி மால்வண்ணனேகொட்டாய்

அரு;—முதற்பாட்டு. (பூங்கோதையித்யாதி). யசோதைப்பிராட்டி தசை இவருக்கு இருந்தபோதிலும், அநீதாபதாநங்களிலும் மேல்செய்யும் சேஷ்டிதங்களே இவருக்கு அநுபாவ்யங்களாயிருக்கையாலே (யசோதைப்பிராட்டி கடைகிற)என்றருளிச்செய்தது."வெண்ணெய்" என்ன அமைந்திருக்க, "கடை" என்றதுக்குத் தாத்பர்யம் (கடைந்தித்யாதி).

"சிணுங்கி" என்றதினர்த்தம் (சீராட்டி) என்றது. விளையாடும்போது ஓங்கோர்த வண்ணனாகில்,ஏங்கியிருந்தபோது எப்படியிருப்பனென்ன வருளுகிறார் (தேங்கினவித்யாதி). ... ... ... ... ... ... (௧)

(௧) திருப்பாவை-எ. (உ) ௧-திருவ-உச.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தாயர் | தாய்மார்களுடைய | எங்கள்தம் ஆயர் | எங்கள் இடைஜாதியி லுள்ளாரில் |
| மனங்கள் | நெஞ்சுகளானவை | அழக | மிக்கஅழகையுடைய வனே! |
| தடிப்ப | (ஹர்ஷத்தால்) துடிக்[கும்படி | அரவிந்தம் | செந்தாமரைமலர் போன்ற |
| தயிர் | தயிரையும் | அடிகள் | திருவடிகளையும் |
| நெய் | நெய்யையும் | வாயவனே | திருவதரத்தையுமு டையவனே! |
| உண்டு | அமுதுசெய்து, | சப்பாணிகொட்டாய்;— | |
| எய் | இது தனக்குப்பொருந் தின செயலென்றி ருந்துள்ள | மால்வண்ண னே | கறுத்தநிறத்தையு டையனே! |
| எம்பிராக்கள் | எம்பெருமானே!, | சப்பாணிகொட்டாய். | |
| இரு | பரப்பையுடைய | | |
| நிலத்து | பூமியில்வர்த்திக்கிற | | |

வ்யா;—இரண்டாம்பாட்டு. (தாயர்மனங்கள்தடிப்ப) பெற்று வளர்த்த தன்னேடொத்த ப்ராப்தியையுடையவர்கள். (மனங்கள் தடிப்ப) அமூர்த்தமானநெஞ்சு-கண்ணுக்குத் தோற்றும்படி துடியா நின்றது. சரீரத்வாராதோற்றுமிறே. தயிரையும்நெய்யையுமுண்டு. (எயெம்பிராக்கள்) தயிரையும் நெய்யையும் களவுகண்டு புஜிக்கை போராததொரு செயலிறே. இப்படிபோராத செயலைச் செய்தோ மென்று லஜ்ஜிக்கவுமறியாதே தனக்குப்பொருந்தின செய்லைச்செய் தானாய், அத்தாலே என்னை எழுதிக்கொண்டிருக்கிறவனே !. தனக் குத் தகுதியான செயலைச் செய்தானாய் செய்ததுக்கு லஜ்ஜிக்கவும் கூடவறியாத மௌக்த்யத்திலேயாயிற்று இவனும் தோற்றது.

(இருநிலத்தெங்கள்தமாயரழக) பரப்பையுடைத்தான பூமி யில் எங்களிடை ஜாதியிலுள்ளாரில் மிக்க அழகையுடையவனே! (அடிகளரவிந்தவாயவனே) திருவடிகளும் திருவதரமும் செவ்வித்

---

அரு;—இரண்டாம்பாட்டு. (தாயரித்யாதி) கீழ்ப்பாட்டில் தான் மகிழச் சப்பாணி கொட்டச் சொன்னளாய், இதில்மற்றும் தாய்முறையாரெல்லாரும் சப்பாணி கொட்டச் சொன்னர்களாயிருக்கிறதென்று ஸங்கதி.

(சரீரத்வாரா)என்றவநந்தரம்"ஹர்ஷம்"என்றுசேஷம்."எய்"என்றதுக்கு ஒத்திருக்கையாய், ஆயருக்குக் கருத்தருளுகிறர் (தயிரையுமித்யாதி). விவர ணம் (தனக்கித்யாதி). ... ... ... ... ... ... (உ)

தாமரைபோலே யிருக்கிறவனே!, அன்றிக்கே, "அடிகளரவிந்தமாயவனே" என்றுபாடமாகில், திருவடிகள் தாமரையாயிருக்கிறவனென்றுகிறது. "எம்பிராக்கள்" என்பானென்?; "அழக" "வாயவன்" என்று ஏகவசநமாயிருக்க வென்னில்; (க) "பத்துடையடியவர்க்கெளியவன்" "அரும்பெறலடிகள்" என்றுப்போலே. (மால்வண்ணனே) அதுக்குப்பரபாக (பாக) மான நிறத்தையுடையவனே! சப்பாணி கொட்டவேணும். .... .... .... .... .... (உ)

மூ;—தாமோருருட்டித் தயிர்நெய்விழுங்கிட்டுத்
தாமோதவழ்வரென் றுய்ச்சியர் தாம்பினால்
தாம்மோதரக்கையாலார்க்கத் தழும்பிருந்த
தாமோதரா கொட்டாய்சப்பாணி தாமரைக்கண்ணனேசப்பாணி. (ந)

| பதம். | உரை. |
|---|---|
| தாம் | தாம் |
| மோர் | மோரை |
| உருட்டி | உருட்டிவிட்டு, |
| தயிர் | தயிரையும் |
| நெய் | நெய்யையும் |
| விழுங்கிட்டு | விழுங்கிவிட்டு, |
| தாமோ | "இப்படி பெருத்தகாரியத்தைச் செய்த அவர் தாமேயோ |
| தவழ்வர் | அறியாதவர்போல்) தவழாநின்றார்" |
| என்று | என்று சொல்லிக் கொண்டு |

| பதம். | உரை. |
|---|---|
| ஆய்ச்சியர்தாம் | இடைச்சிகளானவர்கள் |
| தாம்பினால் | தாம்பாலே |
| மோதர | அடிக்கவும் |
| கையால் | கைகளாலே |
| ஆர்க்க | கட்டவும் |
| தழும்பிருந்த | தழும்பேறிக்கிடவாநின்ற |
| தாமோதரா | (அதுக்குநிரூபகமான) "தாமோதரன்" என்னும் திருநாமத்தையுடையவனே! |
| | சப்பாணிகொட்டாய்; தாமரைக்கண்ணனே! சப்பாணி. |

வ்யா;—மூன்றும்பாட்டு.(தாமோருருட்டியித்யாதி)தயிரையும் நெய்யையும்மோரையும் சேரவைப்பர்கள்-பாகவதர்களோடேஅபாக(பாக)வதர்கள்கலந்திருக்குமாபோலே; இங்ஙனேதாவா மோரைஉருட்டி ப்ரயோஜநபரமான தயிரையும் நெய்யையும் அமுது செய்யுமா

அரு;—மூன்றும்பாட்டு. (தாமோரித்யாதி) கீழ்ப்பாட்டில் தயிர் நெய் உண்டது பொருந்தின செயலாய், அத்தைப்பொருந்தப்பண்ணிக் கொண்டு சப்பாணி கொட்டச் சொல்லுகிறுளென்று ஸங்கதி.

(தாவா) தாவி. (ப்ரயோஜந பரமான) என்றது-ப்ரயோஜநங்களில் பரமெ

(க) தி-வாய்-க-ந-க.

யிற்று. (தாமோதவழ்வர்) அப்பெரியசெயலைச்செய்யாப் பின்னைத் தவழாநிற்பர். முன்பெல்லாம் கிடந்து உறங்கி, அவர்கள் பேரநின்ற வநந்தரம் இவற்றை அமுதுசெய்து, அநந்தரம் "இவனை இங்ஙனே சொல்லும்படி யெங்ஙனே" என்னும்படி தவழாநிற்கும்.

"நீ எல்லாம் செய்து மறைக்கப்பார்த்தாலும் உன்னையொழிய இச்செயல் செய்வாருண்டோ?" என்று இடைச்சிகள்தாங்கள் தாம் பாலே,(மோதர)கையாலேசட்ட என்னுதல்; அன்றியே-அலங்க்ருத மான கைகளாலே கட்ட."தாம்மோதரக்கையால்"என்று பிரித்து, மோதரத்தை "மோதிரம்"என்று வ்யவஹரிக்கிறவித்தனை. "படா கை, கணறு" என்கிற இவற்றை "பிடாகை, கிணறு" என்கிறாப் போலே. (தழும்பித்யாதி) உடம்பிலே தழும்புகிடக்கையாலே "தா மோதரன்" என்னும் திருநாமத்தை யுடையவனே!. எனக்குக்கட் டலாம்படி பவ்யனான நீ இத்தையும் செய்யப்பாராய். .... (௩)

மூ;—பெற்றார்தளைகழலப் பேர்ந்தங்கயலிடத்து
உற்றாரொருவருமின்றி யுலகினில்
மற்றாருமஞ்சப்போய் வஞ்சப்பெண் நஞ்சுண்ட
கற்றாயனேகொட்டாய் சப்பாணிகார்வண்ணனே கொட்டாய்சப்பாணி.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பெற்றார் தளை | மாதாபிதாக்களுடைய காலில் விலங்கானது | ஒருவரும் இன்றி | ஒருவருமின்றிக்கே, |
| கழல | கழன்று விழும்படி | உலகினில் | லோகத்திலும் |
| பேர்ந்து | வந்து அவதரித்து, | மற்றாரும் | ( உறவு முறையின்றிக் கே யிருக்கிற ) மற் றுள்ளாரும் |
| அங்கு | அவ்விடத்தில் | | |
| அயலிடத்து | கிட்டின [பார் | | |
| உற்றார் | உறவுமுறையா யிருப் | அஞ்ச | அஞ்சும்படியாக |

ன்றாய், பரம ப்ரயோஜநமான வென்றபடி."தாமோ" என்றது-வ்யங்க்யபரமா ய், அத்தையருளுகிறார் (அப்பெரியவித்யாதி). பெரிய செயலானபடி எங் ஙனே யென்னவருளுகிறார் (முன்பெல்லாமித்யாதி).

"ஆய்ச்சியர்-தாம்-தாம்பினால் மோதரக் கையாலே ஆர்க்க" என்றந்வயி த்து, ஆய்ச்சியருக்குத்தாமான தன்மை நிரூபண சாதுரியென்று, அத்தை அருளுகிறார் (நீ எல்லாமித்யாதி). "போதர" என்னுமாபோலே, "மோதர" என்று கிடக்கிறதென்றர்த்த மருளுகிறார் (மோதர) என்று. (க) "இங்கே போதக்கண்டீரே" என்னுமாபோலே, 'மோத" என்றாகிறது. ... (௩)

(க) நா-தி-௧௭-௩.

| | | | |
|---|---|---|---|
| போய் | திருவாய்ப்பாடியேறப் போய் | கன்று | கன்றுகளை மேய்க்கைக்கு |
| வஞ்சம் | வஞ்சனை செய்யவந்த | ஆயனே | இடைக்குலத்தில் வந்தவதரித்தவனே! |
| பெண் | பூதனையின் | | சப்பாணி கொட்டாய்; |
| நஞ்சு | (முலையில் தடவின) விஷத்தை | கார் | காளமேகம்போன்ற |
| உண்ட | அமுது செய்தருளின | வண்ணனே | வடிவையுடையவனே! |
| | | | சப்பாணிகொட்டாய். (ச) |

வ்யா;—நாலாம்பாட்டு. (பெற்றாரித்யாதி) மாதா பிதாக்கள் காலில் விலங்கு கழலும்படி வந்தவதரித்து. பேருகையாவது -முன்பிருந்த விருப்பு நினைவும்போருகை. (க) "నాగపర్యఙ్కముత్సృజ్య హ్యాగతో మధురాంపురీమ్ - நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்''இத்யாதி. (அங்கித்யாதி) அங்கு அருகும்உறவுமுறையாயிருப்பாரொருவருமின்றிக்கே, லோகத்திலும் உறவுமுறை யின்றிக்கேயிருக்கிற மற்றுள்ளாருமெல்லாம் அஞ்சும்படியாகப்போய். (கற்றாயனே)ஜாத்யுசிதமான வ்ருத்தியையுடையவனே! கன்றுகள்மேய்க்குமவனே!.

(ச)

மூ;—சோத்தெந நின்னைத்தொழுவன் வரந்தரப்
பேய்ச்சி முலையுண்ட பிள்ளாய் பெரியன
ஆய்ச்சிய ரப்பந்தருவ ரவர்க்காகச்
சாற்றியோராயிரம் சப்பாணி தடம்கைகளால் கொட்டாய் சப்பாணி.

---

அரு;—நாலாம்பாட்டு. (பெற்றாரித்யாதி) கீழ்ப்பாட்டில் நெய்உண்டது பொருந்தாத செயல் என்றத்தை உபபாதித்தருளி, அவ்வளவேயோ? நஞ்சுண்டதும் †பொருந்தாத செயல் என்னக்கோலி அடியே பிடித்துச் செய்த செயல்களை யருளுகிறார் என்று ஸங்கதி.

(அங்கு) நந்தர்திருமாளிகை. (அருகும்)-அசலகம். (போய்)என்றது-திருவாய்ப்பாடியில் போயென்றபடி; அதாவது-வந்தென்றபடி. ... ... (ச)

அரு;—அஞ்சாம்பாட்டு. (சோத்தெனவித்யாதி) நஞ்சுண்கையாகிற பொருந்தாத செயலை எனக்கு உபகரித்தபடியைச் சொல்லிக்கொண்டு சப்பாணி கொட்டுகைக்காக அப்படிகளை நினைப்பிட்டு ப்ரார்த்திக்கிறாளென்று ஸங்கதி.

---

† (பா) பொருந்தின. (க) ஹரிவம்ஶ.

| பதம். | உரை. |
|---|---|
| பேய்ச்சி | பூதனையின் |
| முலை | (விஷஸம்மிஸ்ரமான) ஸ்தந்யத்தை |
| உண்ட | அமுதுசெய்த |
| பிள்ளாய் | கண்ணபிரானே! |
| வரம் | என்னால் ப்ரார்த்திக்கப் பட்டதை |
| தர | நீ தருகைக்காக |
| நின்னை | உன்னை |
| சோத்தென | ‘சோத்தம்’என்று சொல்லிக்கொண்டு |
| தொழுவன் | தொழாநின்றேன்; |
| ஆய்ச்சியர் | இடைச்சிகளானவர்கள் |
| பெரியன | மிகப்பெரிதான |
| அப்பம் | அப்பங்களை |
| தருவர் | (உனக்குக்) கொடுப்பர்கள்; |
| அவர்க்காகச்சாத்தி | அவர்களுக் கென்று வ்யாஜமிட்டு ஓர் ஆயிரம் சப்பாணி; |
| தட | போக்யதை மிக்கிருந்துள்ள |
| கைகளால் | திருக்கைகளால் சப்பாணிகொட்டாய். (ரு) |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (சோத்தெனவித்யாதி) “சோத்தம்” என்று வாயாலே சொல்லாநின்றுகொண்டு உன்னைத் தொழுவன். எதுக்காகவென்னில்; (வரம்தர) என்னுடைய ப்ரார்த்திதங்களை நீ தருகைக்காக. (பேய்ச்சி முலையுண்டபிள்ளாய்) பருவம் நிரம்பாத வளவிலே உபகரித்தவனே! உனக்குப்பருத்த அப்பங்களை இடைச்சிகள் தருவர்கள். (அவர்க்காகச் சாத்தி) அவர்கள் பேரிட்டு எங்களை வாழ்விக்கவேணும். (தடம் கைகளால்) கண்டுகொண்டிருக்க வேண்டும் கைகளால் சப்பாணி கொட்டவேணும். .... .... (ரு)

மூ;—கேவலமன்றுன்வயிறு வயிற்றுக்கு
நானவலப்பம் தருவன் கருவிளைப்
பூவலர் நீண்முடி நந்தன்றன் போரேறே
கோவலனே கொட்டாய் சப்பாணி குடமாடீ கொட்டாய் சப்பாணி.

---

“என” என்றது-எனவென்றாய், அதினர்த்தம் (சொல்லாநின்றுகொண்டு) என்றது. (ப்ரார்த்திதங்கள்) ஆசைப்படப் பட்டவை. (பேரிட்டு) வ்யாஜமாக்கி. சிறுகைகளை தடமென்னக் கூடுமோவென்ன, போக்யதாதிக்யம் விவக்ஷித மென்றருளுகிறார் (கண்டுகொண்டித்யாதி). ... ... (ரு)

அரு;—ஆறும்பாட்டு. (கேவலமித்யாதி) “ஆய்ச்சியரப்பம் தருவர்” என்னவே, இவன்கையில் தந்தவற்றை அமுது செய்து வெறுமனேயிருக்க, தான்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கருவிளைப் பூவ லர் | காகணம் பூப்போன்ற நிறத்தை யுடையையாய் | உன் | உன்னுடைய |
| நீள் | ஆதிராஜ்யஸூசகமான | வயிறு | வயிறானது |
| முடி | திருவபிஷேகத்தையு முடையையாய் | கேவலம் அன்று | ஸாதாரணமானதன்று; |
| நந்தன்தன் | ஸ்ரீநந்த கோபர் வளர்க்க வளர்ந்த | நான் | நான் |
| போர் | செருக்கின | வயிற்றுக்கு | (உன்) வயிற்றுக்குப் |
| ஏறே | வ்ருஷபம் போன்ற | அவல் | அவலையும் [போரும்படி |
| கோவலனே | பசுமேய்க்கப் பிறந்த கண்ணனே!, | அப்பம் | அப்பத்தையும் |
| | | தருவன் | கொடுப்பேன்; |
| | | சப்பாணி கொட்டாய் | |
| | | குடமாடீ | குடக்கூத்தாடினவனே! |
| | | சப்பாணி கொட்டாய்; | (௬) |

வ்யா;—ஆறும்பாட்டு. (கேவலமன்றுன் வயிறு) "ஓரப்பம் தந்தோம்" என்றுகைவாங்கியிருக்கவொண்ணாது. (உன்னித்யாதி) உன் வயிற்றுக்குப் போரும்படி நான் அவல் அப்பம்தருவன். (கருவிளையித்யாதி) கருவிளைப்பூவைக் காட்டாநின்றுள்ள நிறத்தையும், ஆதி(தி)ராஜ்யஸூசகமான முடியையுமுடையையாய்க்கொண்டு ஸ்ரீநந்தகோபர் கொண்டாடிவளர்க்க வளர்ந்த செருக்கையுடையவனே! (கோவலனேயித்யாதி) ஜாத்யுசிதமாம்படி குடமாடி வாழ்வித்த நீ சப்பாணிகொட்டி வாழ்விக்கவேணும். .... .... .... (௬)

மூ;—புள்ளினைவாய்பிளந்து பூங்குருந்தம்சாய்த்துத்
துள்ளிவிளையாடித் தூங்குறிவெண்ணெயை
அள்ளியகையா லடியேன்முலைநெருடும் [சப்பாணி.
பிள்ளைப்பிரான்கொட்டாய் சப்பாணிபேய்முலையுண்டானே

---

அவலையும் அப்பத்தையும் தன்கையிலே வைத்துக்கொண்டு காட்டி சப்பாணி கொட்டச் சொல்லுகிறுளென்று ஸங்கதி.

"நான்வலவப்பம்" என்று வ்யாக்க்யாநங்களிலே பாடபேதமுண்டு. (கருவிளைப்பூவை) காக்கணம்பூவை. ... ... ... ... ... (௬)

அ௭;—ஏழாம்பாட்டு. (புள்ளித்யாதி) "நான்வேண்டின அப்பம்தருவன்" என்னச்செய்தேயும், சிறுபிள்ளையாய், சப்பாணி கொட்ட அறியாதவனைப்

| பதம். | உரை. |
|---|---|
| புள்ளினை | பகா (ப̄ கா̄) ஸுரனு |
| வாய் | வாயை [டைய |
| பிளந்து | கிழித்துப்பொகட்டு, |
| பூ | பூத்துக்கிடந்த |
| குருந்தம் | குருந்தமரத்தை |
| சாய்த்து | வேரோடே பறித்து, |
| துள்ளி | ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணி |
| விளையாடி | லீலாரஸமநுபவித்து, |
| தூங்கு | தொங்கா நின்றுள்ள |
| உறி | உறியிலே சேமித்து வைத்திருந்த |

| பதம். | உரை. |
|---|---|
| வெண்ணெயை | வெண்ணெயை |
| அள்ளிய | அள்ளி அமுது செய்த |
| கையால் | திருக்கைகளாலே |
| அடியேன் | என்னுடைய |
| முலை | முலையை |
| நெருடும் | (பால்சுரக்கைக்காக) நெருடுகிற |
| பிள்ளைப்பிரான் | பிள்ளைத்தனத்திலேயே உபகரித்தருளின கண்ணனே! |

சப்பாணி கொட்டாய்;
பேய்முலை உண்டானே! சப்பாணி.

வ்யா.—ஏழாம்பாட்டு. (புள்ளினையித்யாதி) வாயையங்காந்து கொண்டுவந்த பகாஸுரன்வாயைக்கிழித்து, அடியேதுடங்கித்தலையளவும் தர்ஶநீயமாகப்பூத்துநின்ற குருந்தை வேரோடே பறித்து, ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி லீலாரஸமநுபவித்து. (தூங்குறியித்யாதி) தூங்காநின்றுள்ள உறியிலே சேமித்துவைத்த வெண்ணெயை அள்ளிஅமுதுசெய்தகையில் முடைநாற்றத்தோடேகூடி, உன்னுடைய செயலிலே மோஹிக்கிற என்னுடைய முலைக்கண்களைப் பால் சுரக்கைக்காக நெருடுகிற. (பிள்ளைப்பிரான் கொட்டாய் சப்பாணி) பிள்ளைத்தனத்திலே கண்ணழிவற்றிருக்கச்செய்தே உன்னை நோக்கித்தந்து உபகரித்தவனே! (பேய்முலையுண்டானே சப்பாணி) அன்று பூதனைதன்னை முடித்து உன்னைநோக்கித்தந்த நீ இன்று நான் சொல்லிற்றுச்செய்ய வேண்டாவோ?. .... .... .... (௭)

மூ;—யாயும்பிறரு மறியாதயாமத்து
மாயவலவைப் பெண்வந்து முலைதரப்
பேயென்றவளைப் பிடித்துயிருண்ட [சப்பாணி.
வாயவனேகொட்டாய் சப்பாணிமால்வண்ணனே கொட்டாய்-

---

போலே முலை வேண்டிப்போக, முலைகொடுத்து மீளவும் சப்பாணி கொட்டச் சொல்லி ப்ரார்த்திக்கிறாளென்று ஸங்கதி.

“சாய்த்து” என்ற பதவாஸனை (வேரோடேயித்யாதி). ... ... (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| யாயும் | பெற்றதாயாரும் | அவளை | அவளை [ணி, |
| பிறரும் | மற்றுமுள்ளவர்களும் | பேயென்று | பேயென்று புத்திபண் |
| அறியாத | அறியாத | பிடித்து | (முலைவழியே)பிடித்து |
| யாமத்து | நடுச்சாமத்திலே, | உயிரைஉண்ட | (அவளுடைய)ப்ராண ஊ யமுது செய்த ருளின |
| மாய | வஞ்சநபரையாயும் | வாயவனே | திருப்பவளத்தையுடை யவனே! |
| அலவை | பரிவுதோன்றபஹுஜல் பங்களை யுடைய ளுமான | | சப்பாணி கொட்டாய். (அ) |
| பெண் | பூதனையானவள் | | மால்வண்ணனே சப்பாணிகொட்டாய் |
| வந்து | வந்து | | |
| முலைதர | முலைகொடுக்க, | | |

வ்யா;—எட்டாம்பாட்டு. (யாயுமித்யாதி) பெற்றதாயும் மற்று முள்ளவாளொருவரும்; இவர்களொருவருமறியாத நடுச்சாமத்தி லே. (மாயவலவை) வஞ்சநத்தையுடையளாயிருக்கச் செய்தேயும் யசோதைப்பிராட்டி பரிவுதோற்ற ஏத்திக்கொண்டு வருமாபோலே பூதனையானவள் ஜல்பித்துக்கொண்டு வந்து முலையைக்கொடுக்க; (பேயென்றித்யாதி) "பேய்" என்று-அவளைபுத்திபண்ணி முலைவழி யே அவளைப்பிடித்து முலையுண்டு, அவளை முடித்ததிருப்பவளத்தை யுடையவனே! (மால்வண்ணனே கொட்டாய்) உகவாதாரை அழி யச்செய்வுதி, உகப்பார்சொல்லிற்றும் செய்யவேண்டாவோ?. (அ)

மூ;—கள்ளக்குழவியாய்க் காலால்சகடத்தை
தள்ளியுதைத்திட்டுத் தாயாய்வருவாளை
மெள்ளத்தொடர்ந்து பிடித்தாருயிருண்ட [சப்பாணி.
வள்ளலேகொட்டாய்சப்பாணி மால்வண்ணனேகொட்டாய்

---

அரு;—எட்டாம்பாட்டு. (யாயுமித்யாதி) கீழ்ப்பாட்டிலே "பேய் முலை யுண்டானே!" என்றது பின் நாட்டி அதின்படியை யடையச் சொல்லுகிரு ரென்று ஸங்கதி.

அலவை-ஜல்பிக்கையாய், அத்தை ப்ரக்ருதோபயுக்தமாக விசேஷிக்கி ருர் (யசோதையித்யாதி). ... ... ... ... ... ... (அ)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (கள்ளவித்யாதி) வாயால் பேயை வென்ற வளவேயோ? சிறு காலாலே சகடத்தையும் சாடிளுயென்றுஅவன் படியை யும்சொல்லி சப்பாணி கொட்ட ப்ரார்த்திக்கிருளென்று ஸங்கதி.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கள்ளம் | க்ருத்ரிமச்செய்கைகள் அமைந்த | வருவாளை | வந்து தோற்றின பூதனையை |
| குழவியாய் | பிள்ளைப்பருவத்தை யுடையையாய், | மெள்ளத்தொடர்ந்து | க்ரமத்திலே கிட்டக்கொண்டு |
| சகடத்தை | (அஸுராவிஷ்டமான) சகடத்தை | பிடித்து | மேல்விழுந்து பிடித்து |
| காலால் | திருவடியாலே | ஆர் | அருமையான |
| தள்ளிஉதைத்திட்டு | தள்ளியுதைத்து, | உயிர் | (அவளுடைய) ப்ராணனை |
| தாயாய் | தாயின்வடிவையுடையளாய் | உண்ட | அமுது செய்தருளின |
| | | வள்ளலே | பரமோதாரனே! |

சப்பாணி கொட்டாய்;
மால்வண்ணனே சப்பாணிகொட்டாய்.

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (கள்ளக்குழவியாய்) பிள்ளைப்பருவத்திலே க்ருத்ரிமத்தை யுடையையாய். (காலால்சகடத்தை) "முலைவரவுதாழ்த்தது" என்று திருவடிகளை நீட்டின வ்யாஜத்தாலே நலியக்கோலி, மேலிட்ட சகடத்தைப் பொடியாம்படி தள்ளி உதைத்து. யசோதைப்பிராட்டி வடிவுடையளாய் வந்து தோற்றின பூதனையை அவள்வருமளவும் ஆறியிருந்து கிட்டக்கொண்டு, தப்பாதபடி மேல்விழுந்து பிடித்து முலையுண்டு அவளைமுடித்துத் தன்னைக்காத்தமஹோதாரனே!, உதாரராயிருப்பார்க்கு அபேக்ஷிதங்களெல்லாம் செய்யவேண்டாவோ?. .... .... .... (௯)

மூ;—காரார்புயல்கைக்கலிகன்றி மங்கையர்கோன்
பேராளன்நெஞ்சில் பிரியாதிடம்கொண்ட
சீராளா செந்தாமரைக்கண்ணா தண்டுழாய்த் [ணி.
தாராளாகொட்டாய்சப்பாணி தடமார்வாகொட்டாய் சப்பா

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

—∞—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கார் | மேகம்போலே | கை | திருக்கைகளையுடையராய் |
| ஆர் | பூர்ணமாக | | |
| புயல் | கொடாநின்ற | மங்கையர் | திருமங்கையி லுள்ளார்க்கு |

"வள்ளலே" என்றதுக்கு ப்ரக்ருதோபயோகம் (உதாரராயித்யாதி). (௯)

| | |
|---|---|
| கோன் | நிர்வாஹகராய் [க்கு |
| பேராளன் | மஹாயசஸ்வியான |
| கலிகன்றி | ஆழ்வாருடைய |
| நெஞ்சில் | திருவுள்ளத்திலே |
| பிரியாது | க்ஷணகாலமும்விட்டுப் பிரியாமல் |
| இடங்கொண்ட | நித்யவாஸம் பண்ணு நின்றுள்ள |
| சீராளா | ஸம்பத்தை யுடையவனே! [ன்ற |
| செந்தாமரை | செந்தாமரைப்பூப்போ |
| கண்ணு | திருக்கண்களையுடைய |
| தண் | குளிர்ந்த [வனே |
| துழாய் | திருத்துழாயாலே தொடுக்கப்பட்ட |
| தாராளா | மாலையை அணிந்தவ |
| | சப்பாணி கொட்டாய்; [னே |
| தடம் | விசாலமான |
| மார்பா | திருமார்பை யுடையவனே! |
| | சப்பாணி கொட்டாய். (௧௦) |

வ்யா;—பத்தாம்பாட்டு. (காராரித்யாதி) கார்காலத்திலே கழுத்தேகட்டளையாக நீரைப்பருகின காளமேகம்போலே ஸர்வாதிகாரமாம்படி ப்ரபந்தத்தைப்பண்ணின மஹோதாரராய், திருமங்கையிலுள்ளாருக்கு நிர்வாஹகருமான. (பேராளன்) நம்மாழ்வார்-(௧) "சொல்லுமாறமைக்கவல்லேற்கு" என்று; அநந்தரம் "யாவர் நிகர்" என்றாப்போலே கவிபாடப்பெற்ற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே தாமே தம்மைப் புகழ்ந்தாப்போலே "பேராளன்" என்கிறார்.

(பேராளன்நெஞ்சில் பிரியாதிடங்கொண்ட சீராளா) இவருடைய திருவுள்ளத்தைவிட்டுப் பிரியாதே இங்கே நித்யவாஸம் பண்ணுகையாலுள்ள ஸம்பத்தையுடையனானவிது-பிராட்டியைத் தனக்குஉடையனானதுக்குமேலே ஒன்றாயிற்று. (செந்தாமரையித்யாதி) இவையுமெல்லாம் ஐஸ்வர்யஸூசகமாயிருக்கிறது. இதுக்கு பல

அரு;—பத்தாம்பாட்டு. (காராரித்யாதி) கார்போலே-மேகம்போலே, ஆர்-பூர்ணமாக, புயல்-கொடுக்கிற கையையுடையவரென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளுகிறார் (கார்காலத்திலித்யாதி).

சீர்-ஸம்பத்தும், பிராட்டியும் என்றிரண்டர்த்தமாய், இரண்டையு மருளுகிறார் (இவளுடைய வித்யாதி). "தம்மைத்தாமறியாமை" என்றது - இப்பாட்டிலும் யசோதாபாவனை நடக்கையாலே என்கை. ஆனால் (௨) "இரக்கமின்றி" என்கிற திருமொழியில் பத்தாம்பாட்டிலேயும் தோற்ற ராக்ஷஸபாவனை அநுவர்த்திக்கவும், "தங்குமூரண்டமே கண்டுகொண்மின்" என்ற

(௧) தி-வாய்-ச-௫-அ. (௨) கூ-உ.

ஶ்ருதிசொல்லாவிட்டது தம்மை அறியாமை இவ்வநுபவந்தானே பிறர்க்கும் பலமாயிருக்கிறது. .... .... .... .... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி பத்தாம்பத்து அஞ்சாம் திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## பத்தாம்பத்து ஆறுந்திருமொழி
### எங்கானும் ப்ரவேசம்.

வ்யா:—சப்பாணி கொட்டி விளையாடும் பருவத்தை அநுபவித்தார்கீழ்; அதுக்கநந்தரமாக வெண்ணெயும் தயிரையும் களவுகண்டமுது செய்தபடியைப் பரிவுடையயசோதைப்பிராட்டிபாசுரத்தாலே அநுபவிக்கவென்ற வார்த்தைமறந்து, தாம் அதிலேஈடுபட்டு, அவனுடைய ஸர்வேஶ்வரத்வத்தையும், பராபிபவநஸாமர்த்த்யத்தையும், வேண்டப்பாட்டையும், ஸர்வப்ரகாரத்தாலுண்டான உத்கர்ஷத்தையுமடைய அநுபவித்து, "அப்படிப்பட்ட மேன்மையை யுடையவன் இன்று இங்ஙனே ஓரபலைகையாலேகட்டுண்டு அடியுண்டு நோவுபடுவதே?" என்று இவன் ஸௌலப்யத்தை அநுஸந்தித்து இரியராகிறார்.

---

பலம் சொல்லவில்லையோ? இங்கேயும் பலம் சொன்னாலோ வென்ன வருளுகிறார் (இவ்வநுபவமித்யாதி). ... ... ... ... ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அரு;—எங்கானும் ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலும் யசோதாபாவனை அநுவர்த்திக்கவும், இத்திருமொழியும் க்ருஷ்ணாவதாரபரதாநாநு ஸந்தாநமாயிருக்க, தானான தன்மையாலே பேசுவானென்னென்ன (சப்பாணியித்யாதி). பிறர் வாயாலேபேசுவாரைப்போலே †ஆழ்வார் ஈடுபட்டாப்போலே பேசும்படி ஈடுபடுத்திற்று அவன் படி என்று கருத்து. *

---

† "அந்த யசோதை தானே" என்று அதிக பாடம்.

மூ;—எங்கானுமீதொப்ப தோர்மாயமுண்டே
நரநாரணனா யுலகத்தறநூல்
சிங்காமைவிரித்தவ னெம்பெருமான்
அதுவன்றியும் செஞ்சுடரும் நிலனும்
பொங்கார்கடலும் பொருப்பும்நெருப்பும்
நெருக்கிப்புகப் பொன்மிட றத்தனைபோது
அங்காந்தவன்காண்மி னின்றுய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே! (௧)

| பதம். | உரை. |
|---|---|
| நரநாரணன்ஆய் | நரநாராயண ரூபியாய்க்கொண்டு |
| உலகத்து | லோகத்திலே |
| அறம் | தர்மப்ரகாசகமான |
| நூல் | வேதஶாஸ்த்ரமானது |
| சிங்காமை | ஸங்குசிதமாகாதபடி |
| விரித்தவன் | ( அத்தை ) விஸ்தரிப்பித்தவனாய், |
| எம்பெருமான் | எமக்கு ஸ்வாமியாய்; |
| அதுஅன்றியும் | அவ்வளவு மன்றிக்கே |
| செம் சுடரும் | சந்த்ரஸூர்யர்களும் |
| நிலனும் | பூமியும் |
| பொங்கார் | திரைக்கிளப்பத்தையுடைய |
| கடலும் | ஸமுத்ரமும் |
| பொருப்பும் | மலைகளும் |
| நெருப்பும் | அக்நியும் (ஆகியஇவையடங்கலும்) |
| நெருக்கி | நெருக்கிக்கொண்டு |
| புக | புகும்படியாக |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான |
| மிடறு | திருமிடற்றை |
| அத்தனைபோது | இவை உள்ளேபுகுமளவும் |
| அங்காந்தவன் காண்மின் | விவரித்துக்கொண்டிருந்தவன் கிடீர்! |
| இன்று | இப்போது |
| அளை | கடைந்து திரட்டின |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| உண்டு | (களவுகண்டு) அமுது செய்து |
| ஆய்ச்சியரால் | இடைச்சிகளாலே |
| ஆப்புண்டிருந்தவன் | தாம்பால் கட்டுண்டிராநின்றான்; |
| ஈது ஒப்பதுஓர் | இத்தோடொத்திருப்பதொரு |
| மாயம் | ஆஶ்சர்யம் |
| எங்கானும் | எங்கேனுமோரிடத்திலே தான் |
| உண்டே. | கண்டதுண்டோ? (௧) |

வ்யா;—முதற்பாட்டு. (எங்கானும்) எங்கேனுமோரிடத்திலே தான் இத்தோடொத்திருப்பதோ ராஶ்சர்யமுண்டே? இப்படிப் பட்ட ஆஶ்சர்யந்தானேதென்னில்; (நரனித்யாதி) நரநாராயணரூபி

யாய்க்கொண்டு லோகத்திலே, அறநாலுண்டு - ஹிதாநுசாஸநம் பண்ணப்போந்தவேதம்; அது சிங்காதபடியாக - அதுஸங்குசித மாகாமே விஸ்த்ருதமாம்படி பண்ணினவனே,! உபதேசத்தாலும் அநுஷ்டாநத்தாலுமாக விஸ்த்ருதமாம்படி பண்ணினன். (எம் பெருமான்) தான் ஹிதகாமனாயிருக்கு மிருப்பைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவனே. (அதுவன்றியும்) அத்தையொழியவேயும்.

(செஞ்சுடரித்யாதி)சந்த்ரஸூர்யர்களும், பூமியும், திரைக்கிளப் பத்தையுடைத்தான பெரியகடலும், மலைகளும், அக்நியும், இவைய டைய நெருக்கிக் கொடுபுகும்படியாக ஶ்லாக்யமான மிடற்றை இவைபுகுமளவும் விரித்துக்கொண்டிருந்தவன்கிடீர், இன்றுதயிரை யும் வெண்ணெயும் களவுகண்டு அமுதுசெய்து ஓரிடைச்சிகையாலே கட்டுண்டு அடியுண்டு ஒருப்ரதிக்ரியை அற்றுப்போகமாட்டாதே யிருக்கிறான். (க) "காரேழ்" என்கிறபாட்டின்படியே. .... (க)

மூ;—குன்றொன்றுமத்தா வரவமளவிக்
குரைமாகடலைக் கடைந்திட்டொருகால்
நின்றுண்டைகொண்டோட்டிவன்கூன்நிமிர
நினைந்தபெருமா னதுவன்றியும்முன்
நன்றுண்டதொல்சீர் மகரக்கடலேழ்
மலையேழுலகே ழொழியாமைநம்பி
அன்றுண்டவன்காண்மி னின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே.

---

அநு;—முதற்பாட்டு. (எங்கானுமித்யாதி) (ஹிதாநுசாஸநம் பண்ணப் போந்த வேதம்) என்றது-வேதஸாரமான திருமந்த்ரமென்றபடி. நாராயண னும் விரித்தால் போராதோ? நரனுமாவானென்னென்ன ; (உபதேசத்தாலு மித்யாதி). "இருந்தவனே" என்றவிடத்தில் ஏவகாரத்தை "எம்பெருமான்" என்ற விடத்திலே கூட்டவேணுமென்று திருவுள்ளமாயருளுகிறார் (எழுதிக் கொண்டவனே) என்று. ... ... ... ... ... ... (க)

அநு;—இரண்டாம்பாட்டு. (குன்றித்யாதி) வேதஸமுத்ரமதநம் பண் ணித் திருமந்த்ரமாகிற அம்ருதத்தை பூ(பூ)ஸுரர்களுக்குக் கொடுத்தவன் கிடீர் வெண்ணெய்க்காகக் கட்டுண்டானென்று ஈடுபட்டாள் அதில்; க்ஷீர ஸமுத்ரமதநம்பண்ணி ஸாக்ஷாத மம்ருதத்தை ஸுரருக்குக் கொடுத்தவனே - வெண்ணெய்க்காகக் கட்டுண்டானென்று ஈடுபடுகிறாரென்றுஸங்கதி.

---

(க)தி-வாய்-கo-அ-உ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒன்று | அத்விதீயமான | நன்று | அழகிதாக |
| குன்று | மந்தரபர்வதத்தை | உண்ட | தன்னுள்ளே அடங்கிக் கிடக்கிற |
| மத்தா | மத்தாகக்கொண்டு | தொல் | நிரவதிகமான |
| அரவம் | வாஸுகியை | சீர் | ஸம்பத்தையுடைத்தாய் |
| அளவி | (கடைகயிறுகச்) சுற்றி, | மகர | முதலைகளையுடைத்தான |
| குரை | கோஷத்தை யுடைத்தான | கடல் ஏழ் | கடல்களேழும் |
| மாகடலை | பெருங்கடலை | மலை ஏழ் | மலைகளேழும் |
| கடைந்திட்டு | கடைந்தருளி, | உலகு ஏழ் | உலகங்களேழும் |
| ஒருகால் | மற்றொருகாலத்திலே | ஒழியாமை | (ஆகிய இவையொன்றும்) தப்பாதபடி |
| நின்று | முன்புநின்ற நிலையிலே நின்று | நம்பி | ஆதரித்து |
| உண்டைகொண்டோட்டி | (வில்லினுள்ள) உண்டைகளை நடத்தி | உண்டவன் காண்மின் | தன்திருவயிற்றிலே வைத்துக்காத்தருளினவன்கிடீர் |
| வன்கூன் | வலியகூனது | | |
| நிமிர | நிமிரும்படி | | |
| நினைந்த | திருவுள்ளமாயருளின | | |
| பெருமான் | ஸர்வேஶ்வரனாய், | | |
| அதுஅன்றியும்;— | | | |
| முன் | முன்னே | | |
| அன்று | அந்தமஹாப்ரளயத்திலே, | | |

இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவன். (உ)

வ்யா;—இரண்டாம்பாட்டு. (குன்றொன்றுமத்தா) அத்விதீயமான மலையை மத்தாகக்கொண்டு, வாஸுகியினுடைய உடலை அங்கே கடைகயிறுகச்சுற்றி, கோ (கோ) ஷத்தையுடைத்தான பெருங்கடலைக்கடைந்தான். முன்பு நின்ற நிலையிலே நின்று வில்லினுண்டான உண்டைகளை நடத்தி வலியகூன் நிமிரும்படிசெய்த ஸர்வேஶ்வரன். அதுக்குமேலே. (நன்றித்யாதி) அங்கே இங்கே சிலபிறிகதிர்படாமே அழகிதாகத்தன்னுள்ளே அடங்குகையாகிற நிரவதிக ஸம்பத்தையுடைத்தாய், மகரங்களையுடைத்தான கடலேழும் மலையேழும் உலகேழும் இவையொன்றும் தப்பாதபடியாக ஆதரித்துத்தன்

"அளவி" என்றதினர்த்தம் (சுற்றி) என்றது. (முன்பு நின்ற நிலை) என்றது-ராமாவதாரத்திலே என்கை. (௧) "கூனே சிதைய" என்றவிடத்திலே ராமாவதார விஷயமாக ஒருயோஜனை யுண்டிறே, "நம்பி" என்றதினர்த்தம்

(௧) தி-வாய்-௧-௫-௫.

திருவயிற்றிலே வைத்தவன்கிடீர். (இன்றித்யாதி) அந்தப்ரளயகால த்து அவை தன்வயிற்றிலே புகாதபோதுண்டான தளர்த்தியெல் லாம் இவ்வெண்ணெய் பெறுதபோது உடையனுய்க்கொண்டு அமுது செய்தான். .... .... .... .... .... (௨)

மூ;—உளைந்திட்டெழுந்த மதுகைடவர்கள்
உலப்பில்வலியா லவர்பால்வயிரம்
விளைந்திட்டதென்றெண்ணி விண்ணோர்பரவ
அவர்நாளொழித்த பெருமான்முனநாள்
வளைந்திட்டவில்லாளி வல்வாளெயிற்று
மலைபோலவுண னுடல்வள்ளுகிரால்
அளைந்திட்டவன்காண்மி னின்றுய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| உலப்புஇல் | நிரவதிகமான |
| வலியால் | பலத்திஞல் |
| எழுந்த | பெரியகிளர்த்தியோடே தோன்றின |
| மதுகைடவர்களவர்பால் | மதுகைடபர்களோடே |
| வயிரம் | ஶாத்ரவமானது |
| விளைந்திட்டது என்று | உண்டாய்விட்டதென்று |
| எண்ணி | புத்திபண்ணி |
| உளைந்திட்டு | அஞ்சி (நடுங்கி) |
| விண்ணோர் | தேவர்கள் |
| பரவ | (திருவடிகளிலே விழுந்து) எத்த, |
| | (அவர்களுக்காக) |
| அவர் | அந்தமதுகைடபர்களுடைய |
| நாள் | ஆயுஸ்ஸை |
| ஒழித்த | முடித்த |

| பதம். | உரை. |
|---|---|
| பெருமான் | ஸர்வேஶ்வரனுய், |
| | (அதுவுமல்லாமல்,) |
| முனநாள் | முன்னாள் |
| வளைந்திட்ட | வளைந்திருந்துள்ள |
| வில்லாளி | வில்லைக்கையிலேயுடையனுய், |
| வல் | வன்மையையுடைத்தாய் |
| வாள் | ஒளிபொருந்திய |
| எயிற்று | பற்களையுளையடையனு |
| மலைபோல் | மலைபோன்ற வடிவையுடையனுன |
| அவுணன் | ஹிரண்யாஸுரனுடைய |
| உடல் | ஶரீரத்தை |
| வள் உகிரால் | வளைந்த நகங்களாலே |
| அளைந்திட்டவ | இரண்டாகக் கிழித்தன் |
| காண்மின் | கிடீர்! |
| | இன்று இத்யாதி பூர்வவத். (௩) |

(ஆதரித்த ;என்றது.கீழ்ப்பாட்டில் "அங்காந்தவன்" என்றத்தாலே-உண்டத்தைச் சொல்லி, இப்பாட்டிலும் அத்தையே சொன்னதுக்குக் கருத்தருளுகிறுர் (அந்தவித்யாதி). ... ... ... ... ... ... (௨)

வ்யா;—மூன்ரும்பாட்டு. (உளைந்தித்யாதி) உலப்பில்வலியராய்க்கொண்டு எழுந்தமதுகைடபரோடே வைரம்விளைந்ததென்றெண்ணி விண்ணோர் உளைந்திட்டுப்பரவ. மிக்கப(ப)லத்தையுடையராய்க்கொண்டு பெரியகிளர்த்தியோடே தோன்றின மதுகைடபர்களோடே நிலைநின்ற பாத்ரவமானது விளைந்ததென்று புத்திபண்ணி, தேவர்கள் நடுங்கி வந்து திருவடிகளிலே விழுந்தேத்த, அவர்களுக்காக அந்த மதுகைடபர்கள் ஆயுஸ்ஸைக்கழித்தஸர்வேஶ்வரன். (வளைந்திட்டவித்யாதி). சத்ருபக்ஷமானது முடியும்படி வளைந்தவில்லைக்கையிலேயுடைய பெரியமிடுக்கன். வன்மையையும் ஒளியையு முடைத்தான எயிற்றையுடையனாய், மலைபோலேயிருக்கிற வடிவையுடையனான ஹிரண்யாஸுரனுடைய முருட்டுடலை வளைந்த உகிராலே இரண்டாகக்கிழித்தவன்கிடீர்; பெருமிடுக்கனான ஹிரண்யனை நிரஸித்தவன்கிடீர், இன்று ஓர் அப(ப)லைகையிலே கட்டுண்டிருக்கிறான். .... .... .... .... .... (௩)

மூ;—தளர்ந்திட்டிமையோர் சரண்தாவெனத்தான்
சரணாய் முரணாயவனையுகிரால்
பிளந்திட்டமரர்க் கருள்செய்துகந்த
பெருமான் திருமால்விரிநீருலகை
வளர்ந்திட்டதொல்சீர் விறல்மாவலியை
மண்கொள்ளவஞ்சித் தொருமாண்குறளாய்
அளந்திட்டவன்காண்மி னின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே. (௪)

---

அ௩;—மூன்ரும்பாட்டு. (உளைந்தித்யாதி) கீழ் இரண்டு பாட்டாலும் அம்ருதப்ரதனாய், ஆபத்ஸகனானவன் கிடீர் வெண்ணெய்க்கு ஆப்புண்டானென்றார்; இதில்-விரோதிகளைக் கிழங்கெடுத்தவன் கிடீர் கட்டுண்டானென்கிறாரென்று ஸங்கதி.

அந்வயத்தைக் காட்டி, தததுகுணமாக வர்த்தம். (மிக்கவித்யாதி). "ஆய்ச்சியர்" என்றது-ஆத்மநிபஹு வசநமாக்கி (ஓரபலைகையாலே) என்றது.

அ௩;—நாலாம்பாட்டு. (தளர்ந்திட்டித்யாதி) கீழ்ப்பாட்டில் ஹிரண்ய நிரஸநம் பின்னாட்ட, அவன்-வம்ஶ்யனான ப(ப)லியை வஞ்சித்து மண்ணை அடிப்படுத்தின வீரகன் கிடீர் வெண்ணெய் களவு காணப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே ஆப்புண்டானென்று ஈடுபடுகிறாரென்று ஸங்கதி.

| பதம். | உரை. |
|---|---|
| இமையோர் | தேவர்களானவர்கள் |
| தளர்ந்திட்டு | (அஸுரர்களாலே நெருக்குண்டு) மிகவும் ஶிதிலராய் |
| சரண்தாஎன | "நீ எமக்கு ரக்ஷகனாக வேணும்" என்ன, |
| தான்சரண்ஆய் | தான்ரக்ஷகனாகநின்று |
| முரணுடையவனை | பெருமிடுக்கனான ஹிரண்யனை |
| உகிரால் | திருவுகிர்களாலே |
| பிளந்திட்டு | கிழித்துப்பொகட்டு |
| அமரர்க்கு | தேவர்களுக்கு |
| அருள்செய்து | க்ருபை பண்ணி |
| உகந்த | திருவுள்ள முகந்தருளின |
| பெருமான் | ஸர்வேஶ்வரனாய், |
| திருமால் | ஶ்ரிய:பதியாய், |
| வளர்ந்திட்ட | மேன்மேலே வளராநின்றுள்ள |
| தொல் | நிரவதிகமான |
| சீர் | ஸம்பத்தையுடையனாய் |
| விறல் | பெருமிடுக்கனான |
| மாவலியை | மஹாபலியை |
| மண்கொள்ள | பூமியைக்கொள்ளுகைக்காக |
| வஞ்சித்து | க்ருத்ரிமித்து |
| ஒரு | அத்விதீயமாய் |
| மாண் | தர்ஶநீயமான |
| குறள் ஆய் | வாமந வேஷத்தை யுடையனாய்க் கொண்டு |
| விரிநீர் | கடல்சூழ்ந்த |
| உலகை | லோகத்தை |
| அளந்திட்டவன் | அளந்து கொண்டவன் |
| காண்மின் | கிடீர்! |
| இன்று இத்யாதி பூர்வவத். (௪) | |

வ்யா.—நாலாம்பாட்டு. (தளர்ந்தித்யாதி) தேவர்கள் அஸுரர்களாலே நெருக்குண்டு போரத்தளர்ந்துவந்து "நீ எனக்கு ரக்ஷகனாகவேணும்" என்ன; ரக்ஷகனாய். (முரணுடையவனை) பெருமிடுக்கனான ஹிரண்யனைத் திருவுகிராலே பிளந்து தேவர்களுக்கு க்ருபைபண்ணி "அவர்கள் விரோதிபோகப் பெற்றோமிறே" என்று உகந்த ஸர்வேஶ்வரன். அதுக்கு நிபந்தநமென்னென்னில்; ஶ்ரிய:பதியாகை. கடல்சூழ்ந்த பூமியை. (வளர்ந்திட்டதொல் சீர்விறல்மாவலியை) மேன்மேலெனவளராநின்றுள்ள நிரவதிக ஸம்பத்தையுடைய பெருமிடுக்கனான மஹாபலியை. பூமியைக்கொள்ளுகைக்காக தர்ஶநீயமான வாமநவேஷத்தையுடையனாய்க்கொண்டு க்ருத்ரிமித்து லோகத்தை அளந்தவன்கிடீர்; மஹாபலியைச் சிறையிலிட்ட ஆண்பிள்ளை கிடீர் 'ஓரபலையிட்ட சிறை விட்டுக்கொள்ளமாட்டாதேயிருக்கிறான்.

---

"சரண்தா"என்று பதவிபாக([illegible])மாய்அருளுகிறார் (நீஎமக்கித்யாதி).

மூ;—நீண்டான்குறளாய் நெடுவானளவும்
அடியார்படுமாழ் துயராயவெல்லாம்
தீண்டாமைநினைந் திமையோரளவும்
செலவைத்தபிரா னதுவன்றியும்முன்
வேண்டாமை நமன்தமரென்தமரை
வினவப்பெறுவாரல ரென்றுலகேழ்
ஆண்டானவன்காண்மி னின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குறள் ஆய் | வாமநவேஷத்தோடே வந்து தோற்றி | வைத்த | (திருவடிகளை) வைத்தருளின |
| நெடு | பரப்பை யுடைத்தான | பிரான் | உபகாரகனாய், |
| வான் அளவும் | ஆகாச மெங்கு மிடமடையும்படி | அது அன்றியும்;— | |
| நீண்டான் | வளர்ந்தவனாய், | முன் | முன்னே |
| அடியார் | தன் திருவடிகளில் ஆஸ்ரயித்தவர்கள் | வேண்டாமை | ("எல்லாரையும் யமபடர்களாராயக்கடவர்கள்" என்றதன் நியமநத்தை) வேண்டாத படியாலே |
| படும் | அநுபவியா நின்ற | நமன் தமர் | "யமபடர்களானவர்கள் |
| ஆழ் | ஸம்ஸாரத்தில் அழுந்தப் பண்ணுவதான | என் தமரை | எம்மடியாரை |
| துயராயஎல்லாம் | பாபங்களெல்லாம் | வினவப்பெறுவார்அலர் | ஆராயக் கடவர்களல்லர்" |
| தீண்டாமை | (அவர்களை) ஸ்பர்ஸியாதபடி | என்று | என்றிப்படியாலே |
| நினைந்து | மநோரதித்து | உலகு எழ் | லோகங்களேழையும் |
| இமையோர் அளவும் | நித்யஸூரிகளளவும் | ஆண்டான் அவன்காண்மின் | தன் ஆஜ்ஞையிலே நடத்ினவன்கிடீர்! |
| செல | செல்லும்படியாக | இன்று இத்யாதி பூர்வவத். | (௫) |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (நீண்டானித்யாதி) வாமநவேஷத்தோடேவந்துதோற்றி, பரப்புடைத்தான ஆகாசமெங்குமிடமடையும்படி வளர்ந்தான். (அடியாரித்யாதி) தன் திருவடிகளை ஆஸ்ரயித்திருக்கும் சேஷபூதர்க்கு அநுபவித்தாலல்லது நசியாதபாபங்க

ளெல்லாம் அவர்களை ஸ்பர்ஶியாதபடியாக மநோரதித்து விரோ தியைப் போக்கிக் கொடுத்து, அவ்வளவேயன்றிக்கே நித்யஸூ ரிகளோடும் செல்லும்படியாகவைத்த உபகாரகன். (வேண்டாமை யித்யாதி) யமனுடையார் நம்முடையாரை ஆராயக்கடவரல்லர். அதுக்கு நிபந்தநமென்னென்னில்; வேண்டாமை. "அல்லாதாரை இவன் ஆராயக்கடவன், என்றிட்டநாமே இத்தைக் கழித்துக்கொடு த்தோம்" என்று இப்படியாலே லோகங்களேயும் தன்ஆஜ்ஞை யிலேநடத்தினவன்கிமர் இன்று தன் ஆஜ்ஞைஅழிந்து ஓர் அபலைகையி லே கட்டுண்டு அடியுண்கிறன். .... .... .... .... (௫)

மூ;—பழித்திட்டவின்பப்பயன் பற்றறுத்துப்
பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம்
ஒழித்திட்டவரைத் தனக்காக்கவல்ல
பெருமான்திருமா லதுவன்றியும்முன்
தெழித்திட்டெழுந்தே யெதிர்நின்றமன்னன்
சினத்தோளவையாயிரமும் மழுவால்
அழித்திட்டவன்காண்மி னின்றுய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பழித்திட்ட | ஶாஸ்த்ரங்களிலே தூஷிக்கப்பட்ட | துயராயஎல்லாம் | பாபங்களை யெல்லாம் |
| இன்பம் | ஐஹிகஸுகமாகிற | ஒழித்திட்டு | கழித்து |
| பயன் | ப்ரயோஜநத்தை | அவரை | அவர்களை |
| பற்றறுத்து | ஸவாஸநமாகக் கழித்துவிட்டு | தனக்கு ஆக்க வல்ல | தனக்கு நித்ய கிங்கரர்களாகச் செய்யவல்ல |
| பணிந்து | திருவடிகளிலே விழுந்து | பெருமான் | ஸ்வாமியாய், |
| ஏத்தவல்லார் | ஸ்துதிக்கவல்லவர்களுடைய | திருமால் | ஶ்ரியஃபதியாய், |
| | | அது அன்றியும் முன்;— | |

---

அ௬;—ஆறாம்பாட்டு. (நீண்டானித்யாதி) கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான வாமநாவதாரத்தை அடியொத்திக்கொண்டு ஆஶ்ரிதர்க்கு யமபாசங்களை யடைய விடுவிப்பான்தானே ஆப்புண்டானென்கிறர் (அல்லாதா ரையித்யாதி). (இத்தை) ஆஶ்ரிதவர்க்கத்தை. ... ... ... (௬)

| | | | |
|---|---|---|---|
| தெழித்திட்டு | பெரிய ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு | சினம் | கோபத்தாலே முடியர் நின்றுள்ள |
| எழுந்து | மிக்க கிளர்த்திகொண்டு | தோள் அவை ஆயிரமும் | தோள்களாயிரத்தையும் |
| எதிர்நின்ற | ("நான்எதிரி" என்று பொருவதாக)முன்னே வந்து நின்ற | மழுவால் | "பரசு" என்னும் ஆயுதத்தினல் |
| | | அழித்திட்டவன் | துணித்துப் பொகட்டவன் காண்மின் வன்கிடீர்! |
| மன்னன் | ஸஹஸ்ர பாஹுவர்ஜுநனுடைய | | இன்று இத்யாதி பூர்வவத். (௬) |

வ்யா;—ஆறும்பாட்டு. (பழித்திட்டவித்யாதி) ஶாஸ்த்ரங்களிலே நிஷேதிக்கப்பட்ட ஐஹிகஸுகமாகிற ப்ரயோஜநங்களைவாஸனையோடேகழித்துத் திருவடிகளிலே விழுந்தேத்த வல்லவர்களுக்குக் காலதத்வமுள்ளதனையும் அநுபவித்து முடியவொண்ணுதபடியான பாபங்களையடையக் கழித்து, அவர்கள்தாங்களே (க) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்னப்பண்ணவல்ல ஸர்வேஶ்வரன். அதுக்கு நிபந்தநம்- ஶ்ரியஃபதியாகையாலே. (தெழித்தித்யாதி)பெரிய ஆரவாரத்தைப்பண்ணிக்கொண்டு மிக்ககிளர்த்தியோடே "நான்எதிரி" என்று பொருவதாக முன்னேவந்து நின்ற மன்னனுண்டு-ஸஹஸ்ரபாஹுவர்ஜுநன்; அவனுடைய சினத்தையுடைத்தான தோள்களாயிரத்தையும் அழகுக்குப்பிடித்தமழுவாலே துணித்துப்பொகட்டவன் கிடீர் இன்றேரபலேகையிலே கட்டுண்டிருந்தான். .... (௬)

அநு;—ஆறும்பாட்டு. (பழித்திட்டவித்யாதி) கீழ்ப்பாட்டில் ஆஶ்ரித விஷயத்தில் ப்ரீதியுக்ததையும், வாமநாவதாராபதாநமும் சொல்லிற்று. அந்த ஆஶ்ரிதரை ஆளும்படியும், அந்த வாமநாவதாரத்துக்கு அநந்தராவதாரமான பரசுராம விஜயத்தையும் அநுஸந்தித்து, "இப்படிப்பட்டவன் இப்படி ஆப்புண்டிருப்பதே" என்று ஈடுபடுகிருரென்று ஸங்கதி.

(நிபந்தநம்) என்றவநந்தரம் "எங்ஙனே யென்னில்" என்று சேஷம். (சினத்தை) பணைத்தலே. ... ... ... ... ... ... (௬)

அநு;—ஏழாம்பாட்டு. (படைத்தித்யாதி) கீழ்ப்பாட்டிலே பரசுராமாவதாரத்தை அநுஸந்தித்தார்; அவர் மிடுக்கையும் விஞ்சின சக்ரவர்த்தித் திரு

(க) தி-வாய்-௨-௯-௪.

மூ;—படைத்திட் டதிவ்வையமுய்ய முனநாள்
பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம்
துடைத்திட்டவரைத் தனக்காக்கவென்னத்
தெளியா வரக்கர்திறல் போயவிய
மிடைத்திட்டெழுந்த குரங்கைப்படையா
விலங்கல்புகப்பாய்ச்சி விம்மக்கடலை
அடைத்திட்டவன்காண்மி னின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முனநாள் | ப்ரளயங்கொண்ட காலத்தில் | தெளியா | அறிந்துகொள்ளாத |
| இவ்வையம் | இவ்வுலகங்களை | அரக்கர் | ராக்ஷஸர்களுடைய |
| படைத்திட்டு | (கரணகளேபரங்களோடு) ஸ்ருஷ்டித் | திறல் | மிடுக்கானது |
| அது | அவைகளானவை [து | போய் அவிய | அழிந்துபோம்படியாக |
| உய்ய | வழிபடுகைக்குடலாக, | மிடைத்திட்டு | நெருக்கிக்கொண்டு |
| பணிந்து | (அநுபவித்து)திருவடிகளிலே விழுந்து | எழுந்த | கிளர்ந்த |
| ஏத்தவல்லார் | ஸ்துதிக்க வல்லவர்களுடைய | குரங்கை | வாநரவீரர்களையே |
| துயராயஎல்லாம் | பாபங்களையெல்லாம் | படையா | ஸேனையாகக்கொண்டு |
| துடைத்திட்டு | போக்கி | விம்ம | (கடல்) நிரம்பும்படி |
| அவரை | "அவர்களையடைய | விலங்கல் | மலைகளை |
| தனக்கு ஆக்க என்ன | தனக்கேசேஷமாக்க வேணும்" என்ற ஈஶ்வராபிப்ராயத்தை | புகப்பாய்ச்சி | பரப்பியிட்டு |
| | | கடலை | ஸமுத்ரத்தை |
| | | அடைத்திட்டவன்காண்மின் | அடைத்தவன் கிடீர்! |

இன்று இத்யாதி பூர்வவத். (எ)

வ்யா;—ஏழாம்பாட்டு. (படைத்திட்டு) முன்பு இதடங்கலும்ப்ரளயம்கொண்டு உபஸம்ஹ்ருதமாய்க்கிடக்க, இவற்றுக்குக்கரண களேபரங்களைக்கொடுத்து ஸ்ருஷ்டித்து அவைவழிபடுகைக்குஉடலாக, அநுபவித்துத் திருவடிகளிலே விழுந்தேத்துமவர்களுடைய பாபமென்று பேர்பெற்றவற்றையடையப்போக்கி, அவர்களையடையத்

---

மகன் செய்த அதிமாநுஷ சேஷ்டிதத்தை அநுஸந்தித்து வித்த (ஞ்) ராகிறாரென்று ஸங்கதி.

முன்னாள் இவ்வையம்படைத்திட்டு, அது உய்யும்படியாக "தனக்காக்க" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றியருளுகிறார் (முன்பித்யாதி). "தனக்காக்க

தானிட்டவழக்காக்கவென்ன. (தெளியாவித்யாதி) "ஈஶ்வராபிப்ராயம் இதுவாகாதே" என்றுதெளியமாட்டாத துஷ்ப்ருக்ருதிகளான ராக்ஷஸர்மிடுக்கழியும்படியாக நெருக்கிக்கொண்டு தோற்றின ஶ்ரீவாநரவீரர்களையே ஸேனையாகக்கொண்டு மலைகளையிட்டு நிரம்பும்படியாகப்பாய்ச்சி கடலை அணைசெய்தவன்கிடீர்; மஹத்தத்வமான கடலை அணைகட்டினவன் கிடீர் இன்றொருத்தி கட்டவிட்கமாட்டாதே யிருக்கிறான். .... .... .... .... .... (எ)

மூ;—நெறித்திட்டமென்கூழை நன்னேரிழையோ
டுடனாயவில்லென்ன வல்லேயதனை
இறுத்திட்டவனின்ப மன்போடணைந்திட்
டிளங்கொற்றவனாய்த் துளங்காதமுந்நீர்
செறித்திட் டிலங்கைமலங்க வரக்கன்
செழுநீண்முடி தோளொடுதாள்துணிய
அறுத்திட்டவன்காண்மி னின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெறித்திட்ட | நெறித்திரா நின்றுள்ள | அவள் இன்பம் | அவளோட்டைஸம்ஶ்லேஷ ஸுகத்தை |
| மென் | ம்ருதுவான [தாய் | அன்போடு | ப்ரீதியோடே |
| கூழை | மயிர்முடியை யுடைய | அணைந்திட்டு | லபித்து |
| நல் | விலக்ஷணமாய் [ளாய் | இளங்கொற்றவனாய் | யுவராஜாவாய் |
| நேர் | அழகியதான | துளங்காத | ஒருவராலும் சலிப்பிக்கவொண்ணாத |
| இழையோடு | ஆபரணங்களாலே அலங்க்ருதையான பிராட்டியோடே | முந்நீர் | கடலை |
| உடனாய | கூடப்பிறந்த | செறித்திட்டு | அணைகட்டி |
| வில்லென்ன | த(ஃ)நுஃப்ரஸித்தியையுடைத்தாய் | இலங்கை | லங்கையானது |
| | | மலங்க | கலங்கும்படியாக |
| வல் ஏய் | மிடுக்கையுடைத்தாயிருந்துள்ள | அரக்கன் | ராவணனுடைய |
| | | செழு | செழித்து |
| அதனை | அந்தவில்லை | நீள் | ஆதிராஜ்யஸூசகமான |
| இறுதிட்டு | முறித்து விட்டு | முடியோடு | முடிகளோடு |

வென்ன" என்றது-என்று நினைக்கவுமென்றபடி. "விம்ம" என்றதினர்த்தம் (நிரம்பும்படி) என்றது. ... ... ... ... ... ... (எ)

| | | |
|---|---|---|
| தோள் | தோள்களும் | அறுத்திட்ட அறுத்தவன்கிடீர்! |
| தாள் | தாள்களும் | வன்காண்மின் |
| துணிய | துணியும்படி | இன்று இத்யாதி பூர்வவத். (அ) |

வ்யா;—எட்டாம்பாட்டு. (நெறித்தித்யாதி) நெறித்து ம்ருதுவான மயிர்முடியை யுடையளாய், விலக்ஷணமான ஆபரணங்களாலே அலங்க்ருதையான பிராட்டியோடே ஒக்கப்பிறந்தத(ஓ)நு: ப்ரஸித்தியை யுடைத்தாய், மிடுக்கையுடைத்தாயிருக்கிற அந்தவில்லை. இவ்வில்லை முறித்தார்க்கு இவளைக்கொடுக்கக்கடவதாக நியமித்தபடியாலே "உடையனாய்" என்கிறது. "அல்" என்று-இருளாய், இருண்ட வில்லென்னுமாம். அந்தவில்லைமுறித்து அவளோட்டை ஸம்ஶ்லேஷஸுகத்தை ப்ரீதியோடே லபித்து யுவராஜாவாய், ஒருவராலும் சலிப்பிக்கவொண்ணாதகடலை அணைகட்டி, லங்கையானது ஒருவர்கூறை எழுவருடுக்கும்படியாக ராவணனுடைய முடியோடே தோள்தாளிவை துணியும்படி அறுத்தவன்கிடீர் இன்று ஓரபலை கட்டவிழ்க்கமாட்டாதிருக்கிறான். .... .... .... .... (அ)

அநு;—எட்டாம்பாட்டு. (நெறித்தித்யாதி) கீழே கடலை அணைகட்டினபடி சொல்லிற்று. இவ்வளவேயோ? வில்லை முறித்த வீர்யமும், பூசலால் செய்த ஶௌர்யமும் குறைவற்றவனானவன்கிடீர் * கண்ணிநுண் சிறுத்தாம்பைஅறுக்கமாட்டாதேயிருக்கிறானென்று ஆஶ்சர்யப்படுகிறாரென்று ஸங்கதி.

"நெறித்து" என்றது - (க) "கூழை முடிகொடா" என்கிறபடியே முடிகொடாமையாலே. இத்தால் பருவத்திளமை சொல்லிற்று. (நன்றாய) - பணியில் நேரிய ; ஸூக்ஷ்மபுத்தி க்ருதமான இழை என்றாய் பலிதம் (விலக்ஷணமான) என்றது. "யுவராஜாவாய்" என்றதுக்கு-சக்ரவர்த்தி யௌவராஜ்யத்திலே வைக்கக் கோலினதுக்கு விக்நம் வர, ஶ்ரீ பரதாழ்வான் "மஹாராஜராகவேணும்" என்று சரணம்புகச் செய்தேயும், பித்ருவாக்ய பரிபாலநபரராகையாலே பாதுகாத்வாரா ஸங்கல்பித்த யௌவராஜ்யத்தை நடத்தியபடியாலே என்று கருத்து. மீண்டுவந்த பின்பிறே பெருமாள் மஹாராஜாவாய் ஶ்ரீ பரதாழ்வான் யுவராஜாவுமானது. ... ... ... ... (அ)

அநு;—ஒன்பதாம்பாட்டு. (சுரிந்திட்டவித்யாதி) கீழ் இரண்டு பாட்டிலும் ப்ரஸ்துதங்களான குரங்கைப் படையாக்குகைக்கும், அரக்கன் முடிகளை அறுக்குகைக்கும் அடியான ஸாலபஞ்ஜந கர்ணநாஸாச்சேதங்களைச்சொல்

(க) அ-உ-௬.

மூ;—சுரிந்திட்டசெங்கே ழுளைப்பொங்கரிமாத்
துலையப்பிரியாது சென்றெய்தியெய்தா
திரிந்திட் டிடங்கொண்டடங்கா ததன்வா
யிருகூறுசெய்த பெருமான்முனநாள்
வரிந்திட்டவில்லால் மரமேழுமெய்து
மலைபோலுருவத் தொரிராக்கதிமூக்கு
அரிந்திட்டவன்காண்மி னின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சுரிந்திட்ட | சுருண்டிரா நிற்பனவாய் | அதன் | அந்தக் கேசியினுடைய |
| செம் கேழ் | சிவந்தநிறத்தை யுடையனவான | வாய் | வாயை |
| உளை | பிடரி மயிர்களையுடைத்தாய்க்கொண்டு | இருகூறுசெய் | இருபிளவாம்படி பண்ணின |
| பொங்கு | களித்து வாராநின்றுள்ள | பெருமான் | ஸ்வாமியாய், |
| அரி | சாத்ரவம் பொருந்திய | முனநாள் | ராமாவதாரத்திலே |
| மா | குதிரைவடிவம் கொண்டகேசியானவன் | வரிந்திட்ட | கட்டுடைத்தான |
| துலைய | முடிந்துபோம்படியாக | வில்லால் | வில்லாலே |
| பிரியாது | (அத்தை) விடாதே | மரம் ஏழும் | மராமரங்களேழையும் |
| சென்று எய்தி | சென்று கிட்டி, | எய்து | முறித்து, |
| எய்தா | ஒருகாலும்வந்து கிட்டாததாய் | மலைபோல் | மலைபோன்ற |
| திரிந்திட்டு | அங்குமிங்கும் திரிந்து | உருவம் | வடிவையுடையளான |
| இடங்கொண் | அவகாசம் கொடாதே | ஒரு இராக்கதி | சூர்ப்பணகை யென்பாளொரு ராக்ஷஸியி[ன் |
| டடங்காது | அப(்ர)வ்யமாய்க்கிடந்த | மூக்கு | மூக்கை |
| | | அரிந்திட்டவ | அறுத்தெறிந்தவன் கின்காண்மின் டீர்! |
| | | | இன்று இத்யாதி பூர்வவத். (௯) |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (சுரிந்திட்டவித்யாதி) சுருண்டு சிவந்த நிறத்தையுடைத்தாய், "கேழ்" என்று-நிறம். உளைமயிரை,

லா நின்றுகொண்டு, கட்டுண்ட க்ருஷ்ணனுடைய வீர்யந்தானும் அத்புதமாயிருக்கையாலே கேசிநிரஸநத்தையும் அநுஸந்தித்து வித்த(ரா)ராகிறாரென்று ஸங்கதி.

யுடைத்தாய்க்கொண்டு களித்துவருகிற கேசிமுடியும்படியாக அத்தைவிடாதே சென்றுகிட்டி. (எய்தாதித்யாதி) ஒருகாலும்வந்து கிட்டாதே அங்கேயிங்கேதிரிந்து. (இடங்கொண்டடங்காது) அவகாசம்கொடாதே அபவ்யமாய்த்திரிகிற அதினுடையவாயை இருபிளவாம்படிபண்ணின ஸர்வேஶ்வரன். (வாங்கித்யாதி) கட்டுடைத்தானவில்லாலே மஹாராஜரை விஶ்வஸிப்பிக்கைக்காகமராமரங்களேழையுமெய்து, மலைபோலேயிருக்கிற வடிவையுடையளாயிருக்கச் செய்தேயும், பிராட்டிபோலே தன்னை ஸமானையாக புத்திபண்ணி வந்த சூர்பணகிக்கு வைரூப்யத்தைப்பண்ணி விட்டவன்கிடீர். ப்ராதிகூலையாய் வருகையாலேயிறே வைரூப்யத்தை விளைத்துவிட்டது. அநுகூலைக்கு அகப்படாமை யில்லையிறே. .... .... .... (௯)

மூ;—நின்றார்முகப்புச் சிறிதும்நினையான்
வயிற்றைநிறைப்பா னுறிப்பால்தயிர்நெய்
அன்றாய்ச்சியர்வெண்ணெய் விழுங்கியுரலோ
டாப்புண்டிருந்த பெருமானடிமேல்
நன்றாயதொல்சீர் வயல்மங்கையர்கோன்
கலியனொலிசெய் தமிழ்மாலைவல்லார்
என்றானுமெய்தா ரிடரின்பமெய்தி
யிமையோர்க்குமப்பால் செலவெய்துவாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நின்றார் | (வெண்ணெய் களவு செய்து கட்டுண்டிருந்த வாஶ்சர்யத்தைப்பார்க்கவந்து) நின்றவர்களுடைய | உறி | உறிகளிலே சேமித்து |
| | | பால் | பாலையும் [வைத்த |
| | | தயிர் | தயிரையும் |
| | | நெய் | நெய்யையும் |
| | | வெண்ணெய் | வெண்ணெயையும் |
| முகப்பு | முன்பே | விழுங்கி | (களவுகண்டு) அமுது |
| சிறிதும் | ஏகதேசமும் | அன்று | அப்போது [செய்து, |
| நினையான் | லஜ்ஜிக்கமாட்டாதவ | உரலோடு | உரலோடே |
| வயிற்றை | வயிற்றை [னாய், | ஆப்புண்டிருந் | கட்டுண்டிருந்த |
| நிறைப்பான் | நிறைக்கையொன்றிலுமே ஒருப்பட்டவ | பெருமான் | கண்ணபிரானுடைய |
| ஆய்ச்சியர் | இடைச்சிகள் [ளாய் | அடிமேல் | திருவடிகளின் மேலே |

"அரிமா"-சத்ருவான குதிரையாயருளுகிறார் (கேசி) என்று. ... (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| நன்றாய | விலக்ஷணமாய் | என்றானும் | ஒருகாலும் |
| தொல் | நிரவதிகமான | இடர் | துன்பத்தை |
| சீர் | ஸம்பத்தை யுடைய | எய்தார் | அடையமாட்டார்கள்; |
| வயல் | வயல்சூழ்ந்த [ராய் | இன்பம் | நிரதிஶயாநந்தத்தை |
| மங்கையர் | திருமங்கையி லுள்ளார் | எய்தி | அடைந்து |
| கோன் | நிர்வாஹகரான [க்கு | இமையோர்க்கும் | ப்ரஹ்மாதிகள் குடியிருப்புக்கும் |
| கலியன் | ஆழ்வார் | அப்பால் | அவ்வருகான பரமபதத்தை |
| ஒலிசெய் | அருளிச்செய்த | செலஎய்துவார் | ப்ராபிக்கப்பெறுவர்கள். (௧௦) |
| தமிழ் | த்ராவிட பாஷா ரூப | | |
| மாலை | சொல்மாலையை [மான | | |
| வல்லார் | ஓதவல்லவர்கள் | | |

வ்யா;—பத்தாம்பாட்டு. (நின்றாரித்யாதி) களவோடேகண்டு பிடித்துக்கட்டினவாறே பலரும் பார்க்கவருவர்களே ; அவர்கள் முகத்தைப் பார்த்து லஜ்ஜிக்குமது ஏகதேசமுமில்லை. (வயிற்றை நிறைப்பான்) இதொன்றையுமாயிற்று எப்போதும் நினைத்திருப்பது. உறிகளிலே இடைச்சிகள் சேமித்துவைத்த பால்தயிர்நெய் வெண்ணெய் இவற்றை அமுதுசெய்து, அவர்கள் உரலோடே சேர்த்துக்கட்டக் கட்டுண்டவன்மேலே சொல்லிற்று. (என்றானுமித்யாதி) ஒருகாலும் துக்கத்தை ப்ராபியார்கள். நிரதிசயாநந்தத்தை ப்ராபித்து ப்ரஹ்மாதிகள் குடியிருப்புக்குமவ்வருகான பரமபதத்தைப்ராபிப்பர். .... .... .... .... .... .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி
## பத்தாம்பத்து ஆறாந்திருமொழி முற்றிற்று.

---

அந;—பத்தாம்பாட்டு. (நின்றாரித்யாதி) "சிறிதும் நினையானுமாய், வயிற்றை நிறைப்பானுமாய், ஆப்புண்டிருந்த" என்றந்வயம். ... ... (௧௦)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

# பத்தாம்பத்து ஏழாந்திருமொழி
## மானம் ப்ரவேசம்.

வ்யா;—வெண்ணெய் களவுகாணும் பருவத்தைத்தப்பி, வெண்ணெயும் பெண்களையுமொக்கக்களவுகாணும் பருவமாயிருக்கிறபடியை அநுஸந்தித்து, யசோதைப்பிராட்டியானவள் விளைவதறியாமையாலே "இது எவ்வளவாய்ப்புகுகிறதோ?" என்று அஞ்சியிருக்க, இவனாலே நோவுபட்டு ஊரிலுள்ளாரடங்கலும் "அதுபோயிற்று, இதுபோயிற்று" என்று இங்ஙனே முறைப்பட, அவளும், அவர்களுமாகப் பரிமாறின அப்பெரிய குழாங்களைத்தாமநுபவிக்கிறார்.

அவ;—ஒருத்தியைப்பார்த்து வார்த்தைசொல்லுகிறார். .... ❋

மூ;—

மானமுடைத்துங்களாயர்குல மதனால்பிறர்மக்கள்தம்மை
ஊனமுடையனசெய்யப்பெறாயென் றிரப்பனுரப்பகில்லேன் [கேண்
நானுமுரைத்திலேன் நந்தன்பணித்திலன் நங்கைகாள்நானென்செய்
தானுமோர்கன்னியும் கீழையகத்துத் தயிர்கடைகின்றான்போலும்.

அநு;—மானத்தின்ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே யசோதைப் பிராட்டி பா(ஞா)வனையிருக்கச் செய்தே, அவள் பிறர் வாயாலே சொல்லுமாபோலே திருமங்கையாழ்வார் ஈடுபட்டாராகப்பேசி வித்தாராயிருந்தார்; அவள் தானும்-இவன் பருவம் அல்பம் முற்றின வளவிலே பெண்களைக் களவுகாணக் கண்டு வித்தை(த்தி)யாயிருக்க, அவ்வூரிலெல்லாரும் முறைப்பட்ட வளவிலே அத்தை அநுஸந்தித்து அத்தனைபேருடைய தசையையுமுடையராய், அநுபவிக்கிறாரென்று ஸங்கதி யருளுகிறார் (வெண்ணெயித்யாதி). ❋

அநு;—முதற்பாட்டு. (மானமித்யாதி) "நங்கைகாள்" என்று-பஹுவசநமாகப் பாட்டிலே யிருந்தாலும், பிள்ளையின் தூ(ர்)ர்த்த சேஷ்டிதத்தைப் பலர் கேட்கச் சொல்லுமது சேராமையாலே அந்தரங்கையானவொருத்தியை உபசரித்து பூஜ்யதைதோற்றச்சொல்லுகிறாளென்றருளுகிறார் (ஒருத்தியை யித்யாதி).

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உங்கள் | "உங்களுடைய | நந்தன் | (தமப்பனாரான) ஸ்ரீநந்தகோபரும் |
| ஆயர்குலம் | இடைக்குலமானது | பணித்திலன் | (ஒன்று) அருளிச்செய்யப் பெற்றிலர்; |
| மானம்உடைத்து அதனால் | மாநத்தையுடையதாகையால் | நங்கைகாள் | ப (பூ) ர்யரான பிள்ளைகளைப்பெற்று வளர்க்கும் பூர்த்தியையுடைய பெண்காள்! |
| பிறர் | அயலாருடைய | நான்என்செய்கேன் | நான்செய்யக்கடவதென்?; |
| மக்கள்தம்மை | பெண்கள்பக்கலிலே | | (இக்கண்ணபிரானானவன்,) |
| ஊனமுடையன | இழிதொழில்களை | தானும் | தானும் |
| செய்யப்பெறாய் என்று | செய்யாதொழியவேணும்" என்று | ஓர்கன்னியும் | ஒருகன்னியுமாய்க் கொண்டு |
| இரப்பன் | (காலைப்பிடித்து) ப்ரார்த்திப்பேன்; | கீழைஅகத்து | கீழண்டைவீட்டில் |
| | (அத்தனைபோக்கி) | தயிர் | தயிரை |
| உரப்ப | பொடிந்துவார்த்தை சொல்ல | கடைகின்றான்போலும் | கடைந்துகொண்டிரா நின்றான் போலும். |
| கில்லேன் | சக்தையாகிறிலேன்; | | |
| நானும் | (தாயான) நானும் | | |
| உரைத்திலேன் | (ஒன்று) சொல்லப் பெற்றிலேன்; | | |

வ்யா;—முதற்பாட்டு. (மானமித்யாதி) எங்கேனுமோரிடத்திலே "சுறுசுறு" என்னக்கேட்டால் பின்னைக்கொண்டு ஜீவியார்கள் மாநத்தாலே; ஆகையால் பிறருடையபெண்களை ஸம்போகசிஹ்நங்களை விளைத்துவிடப்பெறாயென்று இங்ஙனே இரப்பன். (உரப்பகில்லேன்) பொடியில் தீம்பிலே இரட்டிக்குமே; காலைப்பிடித்துஇரப்பன்;. பொடிகிறிலேன்; நான் சொல்லிற்றைச்செய்தல், தமப்பனார் சொல்லிற்றைச்செய்தல் செய்யாதபருவமிறே உன்பருவம். நானும்

"உங்களாயர் குலம் - மானமுடைத்தாகையாலே - பிறர்மக்கள் தம்மை ஊன முடையன செய்யப்பெறாய்" என்றந்வயம் திருவுள்ளம் பற்றித்தாத்பர்யமருளுகிறார். (எங்கேனுமித்யாதி). (சுறுசுறு) ஏகாந்தமாகஅபவாதம் சொல்லுகை. உரப்புதல் இரட்டிக்கைக்கு ஹேதுவாமோ வென்ன ; அவன் பருவம் அப்படிப்பட்டதென்று மேலுக்குத் தாத்பர்யம் (நானித்யாதி).

சொல்விற்றிலேன்; தமப்பனாரும் அருளிச்செய்திலர்; (நங்கைகாள்) நீங்களுமெல்லாம் பிள்ளைபெற்றுவளர்க்கிறீர்களே, நான் இனிச் செய்வதென்? (தானுமித்யாதி) ஸூசகமாத்ரமேயன்றிக்கே காரக முமுண்டாயிருந்தது. .... .... .... .... .... (க)

மூ;—

காலையெழுந்துகடைந்தவிம்மோர் விற்கப் போகின்றேன்கண்டேபோ
மாலைநறுங்குஞ்சி நந்தன்மகனல்லால் மற்றுவந்தாருமில்லை [னேன்
மேலையகத்து நங்காய் வந்துகாண்மின்கள் வெண்ணெயேயன்றிருந்த
பாலும்பதின்குடம் கண்டிலேன் பாவியேனென்செய்கேனென்செய்கேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காலைஎழுந்து | ப்ராதக்காலத்திலெழு [ந்து | வந்தாரும்இல் | (என் அகத்தில்) |
| கடைந்த | கடைந்த | லை | வந்ததில்லை ; |
| இம்மோர் | இந்தமோரை | மேலைஅகத்து | மேலண்டையகத்தி லுள்ள |
| விற்க | விற்பதற்காக | | |
| போகின்றேன் | (தெருவேறப்) போகா நின்ற நான், (எனக்கெதிராகவந்த கண்ணபிரானை) | நங்காய் | யசோதைப்பிராட்டீ! |
| | | வந்து | (என் அகமேற) வந்து |
| | | காண்மின்கள் | (கண்ணன்செய்ததைப்)பார்க்கக்கடவை; |
| கண்டே | பார்த்தே | வெண்ணெயே | (கடைந்துவைத்த) |
| போனேன் | இனி எவ்வளவாய் விளையுமோ வென்றஞ்சிப்)போனேன்; | அன்று | வெண்ணெயையே யன்றிக்கே |
| | | பதின்குடம் | பத்துக்குடங்களிலே |
| மாலை | பூமாலையாலே | இருந்த | (கடைகைக்காக) சேமித்துவைத்திருந்த |
| நறு | பரிமளியாநின்றுள்ள | | |
| குஞ்சி | மயிர்முடியையுடையனாய் | பாலும் | பாலையும் |
| | | கண்டிலேன் | காண்கிறிலேன்; |
| நந்தன் | ஸ்ரீநந்தகோபருடைய | பாவியேன் | மஹா பாபத்தைப்பண்ணின நான் |
| மகன்அல்லால் | குமாரனான கண்ணனொருவனொழிய | | |
| | | என்செய்கேன் | என்ன செய்யக் கடவேன்? |
| மற்று | மற்றொருவரும் | என்செய்கேன். | |

சுருசுருகேட்டு நீ "இங்ஙனே என் செய்கேன்" என்கிறதென்னென்ன வருளுகிறார் (ஸூசகேத்யாதி). (காரகம்)காரணம். பெண்ணும் பிள்ளையுமாயிருந்து தயிர்கடைந்தபடி கண்டால், இனி ஸம்ஶ்லேஷத்துக்கு ஸம்ப்ரய முண்டோ வென்று கருத்து. ... ... ... ... ... ... (ச)

வ்யா:—இரண்டாம்பாட்டு. (காலையெழுந்து) ப்ராஹ்மே முஹூர்த்தத்திலே எழுந்திருந்து ஹிதசிந்தைபண்ணுவாரைப்போலே. (கடைந்த) இவையடையப் பாழிலே போக்கவொண்ணாதே, போகாநிற்கச்செய்தே நடுவழியிலேகண்டு "இது எவ்வளவாய் விளையக்கடவதோ?" என்று அஞ்சிப்போனேன்; (மாலையித்யாதி) ரக்ஷகத்வத்துக்குத் தனிமாலையிட்டிருக்கிறவனை யொழிய; செய்ததுக்கு நிவாரகரில்லாதவனையொழிய இதுசெய்யக்கடவாரில்லை; (மேலையகத்துநங்காய்) வந்தார்க்கு அறிவிக்குமது தவிர்ந்து அழைத்துக்காட்டவேண்டுமளவாய்வந்து விழுந்தது. கடைந்து சேமித்துவைத்த வெண்ணெயேயன்றிக்கே கடைகைக்கு யோக்யமான பாலுங்கூடக் கண்டிலேன். (பாவியேனித்யாதி) கோத(ர்ஃ)நராகையாலே உபஜீவ்யம் கவ்யமாயிருக்குமிறே. அத்தை இழந்தால் பின்னைப்பொறுக்க மாட்டார்களிறே. .... .... .... .... .... .... (உ)

மூ;—

தெள்ளியவாசிறியான் நங்கைகாணுறிமேலத்தடாநிறைந்த
வெள்ளிமலையிருந்தாலொத்த வெண்ணெயைவாரிவிழுங்கியிட்டு
கள்வனுறங்குகின்றான் வந்துகாண்மின்கள் கையெல்லாம்நெய்வயிறு
பிள்ளைபரமன்றிவ்வேழுலகும் கொள்ளும்பேதையேனென்செய்கேனோ

---

அரு;—இரண்டாம்பாட்டு. (காலையித்யாதி) ஆனைச்சாத்தன் எழுந்திருக்கும்காலத்திலே*வாசநறுங்குழலாய்ச்சியொருத்தி-தயிர்கடைய, அவளோடே தயிர்கடைந்து புறப்பட்டபடியைக்கண்டு, தாயானவள் அந்தரங்கையான ஒருத்தியோடே சொல்லி விசாரப்பட்டுக் கொண்டிருக்க, அநந்தரம் கடைந்த மோரை விற்கவேணுமென்று கீழையகத்து குடும்பினியானவள் புறப்பட்டுப் போய் வந்து வெண்ணெயும் பாலுமிழந்த க்லேசாதிசயத்தாலே மேலையகத்து நங்கையானயசோதையோடே முறைப்பட, அந்த தசையையுடையராய்த்தாமநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(ஒண்ணாதே) என்றவநந்தரம் "என்று" என்று சேஷம். "அழைத்துக் காட்ட" என்றதுக்கு-மேலையகத்து நங்கையான யசோதையைத்தானே அழைக்குமளவாய், அத்தனை க்லேசமென்று கருத்து. "பதின் குடமிருந்தபாலும்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் (கடைந்தவித்யாதி). (உ)

அரு;—மூன்றாம்பாட்டு. (தெள்ளியவித்யாதி) கீழ்ப்பாட்டிலே கீழையகத்து நங்கை யசோதையோடே முறைப்பட்டிருக்க, அங்கே பெருங்கூட்டமாக

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | நங்கைகாள் !—; | உறங்குகின்று ன் | உறங்காநின்றுன்; |
| தெள்ளிய | (அமுதவூறலினுலே) தெளிந்திரா நின்றுள்ள | | வந்து காண்மின்கள்;— |
| வாய் | திருப்பவளத்தை யுடையனுன | | (செய்த களவை மறைக்கவொண்ணுத படி) |
| சிறியான் | இச்சிறுப் பிள்ளையானவன், | கை எல்லாம் | கைத்தலங்களடங்கலும் |
| உறிமேல | உறியின்மேல் வைக்கப் | நெய் | நெய்யாயிராநின்றன ; |
| தடா | மிடாவிலே [பட்ட | வயிறு | (இவனுடைய) வயிருனது |
| நிறைந்த | நிறைக்கப்பட்டும் | | |
| வெள்ளிமலை | வெள்ளிமலையானது | பிள்ளைபரமன்று | பிள்ளைப் பருவத்துக்குரிய திறமுடைத்தாயிருந்ததில்லை; |
| இருந்தாலொத்த | இருந்தாற்போலிரா நின்றுள்ளதுமான | | |
| வெண்ணெயை | வெண்ணெயை | இவ்வேழுலகும் | இந்த ஸப்த லோகங்களையும் [ளும்; |
| வாரி | (தன்தடங்கையார)வாரி | கொள்ளும் | உள்ளேயடங்கக்கொள் |
| விழுங்கியிட்டு | விழுங்கிவிட்டு | பேதையேன் | அறிவிலியான நான் |
| கள்வன் | கள்ளத்தனத்தைக் காட்டா நின்றவனுய் | என்செய்கேன் | என்ன செய்யக் கடவேன். (ந) |

வ்யா;—மூன்றும்பாட்டு. (தெள்ளியவாய்ச் சிறியான்) கண்ணுக்கு இருக்கிறபடியும் செயலிருக்கிறபடியும்காண். (நங்கைகாளித்யாதி) மேலே தடாத்தன்னிலே வெள்ளிமலைபோலே சேமித்துவைத்த வெண்ணெயை வாரி அமுதுசெய்து "இவனைஎங்ஙனே இதுசொல்லும்படி" என்னும்படியாகத்தான் அறியாதாரைப்போலே கிடந்து உறங்காநின்றுன். நீங்களெல்லாம் இத்தை வந்துபாருங்கோள். இவன் மறைக்கப்பார்த்தாலும் ப்ரயோஜநமில்லை, கையெல்லாம் நெய்யாயிருக்க; (பிள்ளைபரமன்று) இவன் பருவத்தளவல்ல வயிற்றின்பெருமை. வெண்ணெயேயன்றிக்கே இவ்வேழுலகும் கொள்

---

விருப்பாரை யெல்லாரையும் பார்த்து யசோதைதான் அவன் செய்தவதுக்கு முறைப்பட்டபடியைத்தா மநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

"தெள்ளியவாயில் அமுதவூறல் தெளிவுறலுடைய சிறியான்" என்று சப்தார்த்தமாய், "வந்து காண்மின்கள்" என்னுமளவுக்கும் கருத்தருளுகிறுர் (கண்ணுக்கித்யாதி). கேட்ட பெருங்கூட்டத்திலே நீயும் எங்களைப்போலே

ளும். "இத்தயிரும்பாலும் பாழ்போகாமே ஒருபிள்ளைவேணுமென்றன்றோ நீபெற்றது. அவன் இப்போது அமுதுசெய்தானாகில் நீ இப்படிபடுகிறதென்" என்ன; (பேதையேனென் செய்கேனோ) "அவனுக்கு இது ஸாத்மியா தொழியில் செய்வதென்" என்றன்றோ அஞ்சுகிறது நான். .... .... .... .... .... (ரு)

மூ;—

மைந்நம்புவேல்கண்நல்லாள் முன்னம்பெற்றவளைவண்ணநன் மா
தன்நம்பிநம்பியுமிங்கு வளர்ந்த தவளிவைசெய்தறியான் [மேனி
பொய்ந்நம்பிபுள்ளுவன் கள்வம்பொதியறைப் போகின்றவாதவழ்ந்திட்டு
இந்நம்பிநம்பியா ஆய்ச்சியர்க் குய்வில்லை யென்செய்கேனென்செய்கேனோ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மை நம்பு | அஞ்ஜனமணிந்த | இவை | இவ்வாறான தீம்புகளை |
| வேல் | வேல்போன்ற | செய்தறியான் | செய்ததில்லை; |
| கண் | கண்களையுடையளாய், | பொய் நம்பி | பொய்யால் குறைவற்றவனாய் |
| நல்லாள் | ஆத்ம குணங்களையுடையளான தேவகிப் பிராட்டி | புள்ளுவன் | வஞ்சகரில் தலைவனாய் |
| | | கள்வம் | கள்ளத்தனத்துக்கு |
| பெற்ற | பெற்ற | பொதியறை | ஒரு கொள்கலமாயிருந்துள்ள இக்கண்ணபிரான், (தான் களவு செய்யாதவன் போலே) |
| வளைவண்ணம் | சங்க (ீஜ) த்தின் நிறத்தை யுடைத்தாய் | | |
| நல் | விலக்ஷணமாய் | | |
| மா | மாண்மையை யுடைத்தான | தவழ்ந்திட்டு | தவழ்ந்து |
| | | போகின்ற ஆ | போகிறபடிஎன்தான்!; |
| மேனி | திருமேனியை யுடைய | இந்நம்பி | நிரபேக்ஷனான இவன் |
| தன்நம்பி நம்பியும் | நம்பி மூத்தபிரானும் | நம்பியா | (இப்படி தீம்பால்) பூர்ணனும் போதைக்கு |
| முன்னம் | முற்காலத்திலே | ஆய்ச்சியர்க்கு | (அபலைகளான)இடைச்சிகளுக்கு |
| இங்கு | இவ்வாய்ப்பாடியில் | | |
| வளர்ந்தது | வளர்ந்ததுண்டு; | உய்வு இல்லை | உஜ்ஜீவிக்கவழியில்லை; |
| அவன் | அவன் | என்செய்கேன் | என்செய்கேனோ. (ச) |

---

வெண்ணெய்க்காக முறையிடப்போமோ? என்ன; "அதுவன்று என்கருத்து" என்று சொல்லுகையிலே தாத்பர்யம் "பேதையேனித்யாதிக்கு" என்றருளுகிறார் ( இத்தயிருமித்யாதி ). ... ... ... ... (ரு)

வ்யா;—நாலாம்பாட்டு. (மைநம்பித்யாதி) மைபற்றின - அஞ்ஜநம் பற்றின வேல்போலேயாயிற்றுக் கண்ணில் † கருமையும் புகருமிருக்கிறபடி. அவ்வளவல்லாத ஆத்மகுணத்தையுடையவள்பெற்ற. (வளைவண்ண நன்மாமேனி) சங்கவர்ணனையிறே நம்பிமூத்தபிரானிருப்பது. தன்தமையன் தீம்பால் குறையற்றானொருவனிறே. அவன் முற்காலத்திலே இங்கு விளையாடித்திரியும்போது நாங்கள் இப்பாடு பட்டறியோம்.

(பொய்நம்பி) பொய்யால் குறைவற்றிருக்கிறவன். (புள்ளுவன்) கண்ணி வைப்பாரைப்போலே கடைகிறபோதே தொடங்கி "இவர்கள் எங்கேவைப்பர்களோ?" என்று அடியொற்றிக்கொண்டு திரியாநிற்குமாயிற்று. (கள்வம்பொதியறை) களவிட்டு வைக்கைக்கொரு கொள்கலம். (போகின்றவாதவழ்ந்து) இக்களவைச்செய்து தானல்லாதாரைப்போலே தவழாநிற்கும். (இந்நம்பி நம்பியாலாய்ச்சியர்க்குய்வில்லை) நிரபேக்ஷனை இவன் இவனாக, இவ்வூரில் இடைச்சிகளுக்கு உஜ்ஜீவிக்கவிரகில்லை. (என்செய்கேனித்யாதி) இவர்கள்கீழே எங்ஙனே நான் இவ்வூரில் குடிகிடக்கும்படி. .... .... .... (௪)

மூ;—

தந்தைபுகுந்திலன் நானிங்கிருந்திலேன் தோழிமாராருமில்லை
சந்தமலர்க்குழலாள் தனியேவிளையாடு மிடம்குறுகிப்
பந்துபறித்துத் துகில் பற்றிக்கீறிப் படிறன்படிறுசெய்யும்
நந்தன்மதலைக்கிங்கென் கடவோம் நங்காயென் செய்கேனென்செய்கேனோ?

---

அ௫;—நாலாம்பாட்டு. (மையித்யாதி) கீழ்ப்பாட்டிலே யசோதைப்பிராட்டி கீழையகத்துநங்கைக்கு உத்தரமாம்படி எல்லாரையும் பார்த்துத் தானும் இழந்தபடி சொல்லிவிட்டார்; அத்தைக் கேட்டுக் கீழையகத்து நங்கை மறுமாற்றம் காணாமையாலே, வாய்வந்தபடி பழித்துக்கொண்டு நம்பிமூத்தபிரானைக்கொண்டாடி, "இனி ஒருத்தருக்கும் இங்கேயிருந்து பிழைக்கவிரகில்லை" என்று கொண்டு, வெறுத்துக்கொள்ளுகிற படியைத் தாமநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"நல்லாள்" என்றதுக்கு - தாத்பர்யம் (அவ்வளவித்யாதி).

(கண்ணிவைப்பார்) வலைவைப்பார். (இவர்கள்) ராமக்ருஷ்ணர்கள். (௪)

---

† (பா) பெருமையும் கூர்மையும்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நங்காய் | பூர்ணையான யசோதா ய்! | இடம் | ப்ரதேசத்திலே |
| தந்தை | (இப்பெண்பிள்ளையின்) தமப்பனார் | குறுகி | சென்றுகிட்டி, (அவள் அடித்துக் கொண்டிருந்த) |
| புகுந்திலன் | வீட்டில் ப்ரவேசித்தி லர்; | பந்து | பந்தை |
| நான் | (தாயான) நானும் | பறித்து | பறித்தும் |
| இங்கு | இந்த வீட்டில் | துகில் | பரியட்டத்தை |
| இருந்திலேன் | இருந்தேனில்லை; | பற்றிக்கீறி | பிடித்துக் கிழித்தும் (ஆகஇப்படிப்பட்ட) |
| தோழிமார் | தோழிமார்களில் | படிறு | தீம்புகளை |
| ஆரும் | ஒருத்தியும் | செய்யும் | செய்யாநின்ற |
| இல்லை | (அருகில்) இருந்திலள்; | படிறன் | தூ(ஃதூ)ர்த்தனாய் |
| சந்தம் | பரிமளம்மிக்க | நந்தன்மதலைக்கு | நந்தகோபர் குமாரனான கண்ணனிடையாட்டத்திலே |
| மலர் | பூக்களணிந்த | இங்கு | இவ்விடத்தில் |
| குழலாள் | மயிர்முடியை யுடைய என் பெண்பிள்ளை | என்கடவோம் | என்செய்யக்கடவோம்; என்செய்கேன்! என்செய்கேனோ?(௫) |
| தனியே | அத்விதீயையாய் | | |
| விளையாடும் | விளையாடாநின்ற | | |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (தந்தையித்யாதி) சொன்னபடியே தலைக்கட்டிற்று. இவர்கள் தமப்பனார் புகுந்திலர்; நானும் இங்கிருந்திலேன்; (தோழிமாராருமில்லை) கூட்டிக்கொடுக்கைக்குத் தோழிமாருமில்லை. இவன்தான் பெண்பிறந்தார் தனியே விளையாடுமிடம்

---

அரு;—அஞ்சாம்பாட்டு. (தந்தையித்யாதி) கீழ்ப்பாட்டில் கீழையகத்து நங்கைமுறையிட்டுக் கொண்டிருக்கச்செய்தே ஏதேனும் சொல்லி, அசலகத்தார் ஏதேனும்பேசக்கேட்க மாட்டாத வந்தயசோதைப்பிராட்டியோடே மற்றும் அசலகத்தொருத்தி பெண்ணைக்களவு கண்டபடியைச்சொல்லி முறைப்பட அத்தசையையு மநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

பாட்டில் ப்ரமேயத்தையெல்லாம் கடாக்ஷித்து, கீழ்ப்பாட்டில் "ஆய்ச்சியர்க்கு உய்வில்லை" என்றதுவும் திருவுள்ளத்திலோடி வ்யாக்க்யாதாவின் ஈடுபாடாகத் தாத்பர்யம் (சொன்னவித்யாதி). "இங்கென்கடவோம்" என்று பஹுவசநமாயிருக்கையாலே தன் பெண்ணைப் படுத்தினபடி எல்லார்க்குமொக்கு மென்கிறுளாகையாலே அருளுகிறுர் (இவர்களென்று); - பெண்களென்றபடி. ... ... ... ... ... ... ... (௫)

பார்த்துக்கொடுதிரியும். அவர்களோடே சென்றுகிட்டிப் பந்தைப் பறித்தும், பரியட்டங்களைக்கிழித்தும். (படிறன்) பின்பு சொல்ல வொண்ணாதபடி களவுசெய்யும். (நந்தன்மதலைக்கு) ப்ரபுக்கள் கீழ் குடியிருக்க வொண்ணாதே ஸாதுக்களுக்கு. .... .... (௫)

மூ;—

மண்மகள்கேள்வன் மலர்மங்கைநாயகன் நந்தன்பெற்றமதலை
அண்ணலிலைக்குழலூதி நம்சேரிக்கே † யல்லில்தான் வந்தபின்னைக்
கண்மலர்சோர்ந்து முலைவந்துவிம்மிக் கமலச்செவ்வாய்வெளுப்ப
என்மகள்வண்ணமிருக்கின்றவா நங்காய் என்செய்கே னென்செய்கேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நங்காய் | பூர்ணையான யசோதாய்! | வந்தபின்னை | வந்தபிறகு, |
| மண்மகள் | ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு | கண்மலர் | நயனகமலமானது |
| கேள்வன் | வல்லபனாய், | சோர்ந்து | மிகவும் வதங்கி |
| மலர்மங்கை | தாமரைமலரில் திருவவதரித்தருளின ஸ்ரீதேவிக்கு | முலை | முலைகளானவை |
| | | வந்து விம்மி | நெறித்துக்கிளர்ந்து |
| நாயகன் | நாயகனாய், | கமலம் | தாமரைபோலே |
| நந்தன் | ஸ்ரீநந்தகோபர் | செம் | சிவந்திருந்துள்ள |
| பெற்ற | பெற்ற | வாய் | அதரமானது |
| மதலை | சிறுப்பிள்ளையாய், | வெளுப்ப | (ஆத்தஸாரமாய்ப் போகையாலே) வெளுமையைக் காட்ட |
| அண்ணல் தான் | ஸர்வசேஷியான கண்ணபிரானானவன், | | |
| இலை | இலையாலான | என் மகள் | என்னுடைய பெண்பிள்ளையின் |
| குழல் | முரளியை | வண்ணம் | நிறமானது |
| ஊதி | ஊதிக்கொண்டு | இருக்கின்றவா | (வைவர்ண்யப்பட்டு) இருந்தபடி பாராய்; |
| அல்லில் | இரவில் | | |
| நம் சேரிக்கே | நம்முடைய சேரியேற | என் செய்கேன்! என்செய்கேனே. | |

வ்யா.—ஆறும்பாட்டு. (மண்மகளித்யாதி) தாய்மாரும் தாய்

---

அநு;—ஆறும்பாட்டு. (மண்மகளித்யாதி) கீழை அசலகத்தாள் பூசவிட்டாள்; அப்போதே அசல்சேரியில் நங்கை தன்மகளிருக்கின்றவற்றைச் சொல்லிக்கூப்பிட, அந்தத் தசையையடைந்து அநுபவிக்கிறாரென்றுஸங்கதி.

அசல்சேரியானவளுக்கு ஸ்ரீபூவல்லபனென்னுமது தெரிந்தபடியென்னென்ன; அதுக்கு இரண்டுவகையாக வருளுகிறார் (தாய்மாரித்யாதி). தாலா

† (பா) அல்லுற்றான்.

மாரோடு ஒருகோவையாயிருப்பாரும் உகக்கும் பாசுரம். "மண்மகள்நாதனே? மாமலராள் நாயகனே?" என்றுயிற்று உகப்பது. அன்றிக்கே, ப்ரணயதா(ஞ)ரையில் அவர்களுக்கு தேசிகனானவன்கிடீர் இவளை இப்படிப்படுத்தினானென்னவுமாம்.(நந்தன்பெற்றமதலை) அதுக்குமேலே பிறப்பாலுண்டான ஏற்றம். (அண்ணல்) தன்னுடைய சேஷித்வத்தைக்காட்டி எல்லாரையும் எழுதிக்கொண்டிருக்குமவன். (இலைக்குழலூதி) குழலையும் ஊதிக்கொண்டு ராத்ரியிலே வந்தபின்னை. (கண்மலர்சோர்ந்து) ஸம்போகாநந்தரம் விளைந்த கலவிக்குறிகள். (கமலச்செவ்வாய்) தாமரைபோலேயிருக்கிற அதரமானது. (வெளுப்ப) வெளுத்த என்றபடி. (என்மகள்வண்ணம்) இவள்நிறம் பெறுகைக்கு நான் எத்தைச்செய்வேன். .... (சு)

மூ;—

ஆயிரங்கண்ணுடை யிந்திரனுருக் கன்றுயர் விழவெடுப்பப்
பாசனநல்லன பண்டிகளால் புகப்பெய்தவதனையெல்லாம்
போயிருந்தங்கொரு பூதவடிவுகொண் டுன்மகனின்றுநங்காய்
மாயனதனையெல்லாம்முற்ற வாரிவளைத்துண்டிருந்தான் போலும்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நங்காய்!—; | | இன்று | இன்றையதினம் |
| அன்று | முற்காலத்தில் | அங்கு | அவ்விடத்தில் |
| ஆயர் | இடையர்கள் | போயிருந்து | போயிருந்து, |
| ஆயிரம் கண் உடை | ஸஹஸ்ராக்ஷனை | ஒரு | அத்புதமானதொரு |
| இந்திரனுருக்கு | தேவேந்த்ரனுக்காக | பூதம் | பூதத்தின் |
| விழவு எடுப்ப | அந்நத்தினால்உத்ஸவம் செய்வதற்கு | வடிவுகொண்டு | வடிவைப்பூண்டு |
| நல்லன | நல்லவையான | மாயன் | (அமுது செய்தருளின) ஆஶ்சர்யசேஷ்டிதமுடைய |
| பாசனம் | பாத்ரங்களிலே (சேமித்து வைத்து) | உன்மகன் | உன் பிள்ளையானகண்ணன், |
| பண்டிகளால் | வண்டிகளாலே | அதனை எல்லாம் முற்ற | அந்த அந்நராஶி முற்றும் |
| புகப்பெய்த | கொண்டுவந்து தள்ளப்பட்ட | வாரி | (கைகளால்) வாரி |
| அதனை எல்லாம் | அந்த அந்நராஶி யடங்கலும், | உண்டு | அமுது செய்து |
| | | வளைத்திருந் | (அல்லாதாரைப்போலே) |
| | | தான்போலும் | சூழ்ந்து கொண்டிருந்தான்போலும். (எ) |

ட்டுப் பாட்டுப்பாடும்போது பிள்ளை இங்ஙன்சொல்லுவாரென்று கருத்து. (சு)

வ்யா;—எழாம்பாட்டு. (ஆயிரங்கண்ணித்யாதி) தான் ஆயிரங் கண்ணையுடையனுகையாலே இதரவிஸஜாதீயனாய், தான் தேவயோநியிலே பிறந்தவனாய், அத்தாலே துர்மாநியாயிருக்கிறவனுக்கு இடையர் உத்ஸவமாகப்போத்தி நல்ல பா (ஷா) ஜநங்களிலே சோற்றையெடுத்து சகடத்தாலே கொடுவந்துதள்ள, அத்தையடங்கலும் "கோவர்த்தநோஸ்மி" என்று தான் அமுதுசெய்த ஆஸ்சர்யசக்தியுக்தன். (அதனையித்யாதி)அத்தையடங்கலும் அமுது செய்தானாய், அல்லாதாரைப்போலே இருந்தானாயிற்று. .... .... (எ)

மூ;—

தோய்த்ததயிரும் நறுநெய்யும்பாலு மோரோகுடம்துற்றிடுமென்று
ஆய்ச்சியர்கூடி யழைக்கவும் நானிதற்கெள்கியிவனை நங்காய்
சோத்தம்பிரானிவை செய்யப்பெறு யென்றிரப்பனுரப்பகில்லேன்
பேய்ச்சிமுலையுண்டபின்னை யிப்பிள்ளையைப் பேசுவதஞ்சுவனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | நங்காய்!- | ஆய்ச்சியர் | இடைச்சிகளுடைய |
| தோய்த்த | "தோய்த்து வார்த்த | கூடி | திரளாகக்கூடி |
| தயிரும் | தயிரையும் | அழைக்கவும் | கூப்பிடச்செய்தேயும் |
| நறு | (புதிதாக உருக்கப்பட்டு) பரிமளித [மான | நான் | (அவனைப்பெற்ற தாயான) நான் |
| நெய்யும் | நெய்யையும் | | |
| பாலும் | பாலையும் | இதற்கு | இந்தச்செயலுக்கு |
| ஓரோகுடம் | ஒவ்வொரு தடாக்களினின்றும் | எள்கி | ஈடுபட்டு, |
| துற்றிடும் என்று | (கண்ணபிரான்) அமுது செய்துவிடுவென்" என்று | | (அநந்தரம்) |

அநு;—எழாம்பாட்டு. (ஆயிரமித்யாதி) அசலகத்தாரும் அசல்சேரியாரும் எல்லாரும் ஏககாலத்திலே முறைப்பட்டபடியைக்கண்டு, "என்னபுதுமை, நீங்களும் பிள்ளைபெற்றதில்லையோ? என்மகனித்தனை செய்யவல்லனோ?" என்றுயசோதைப் பிராட்டிசொல்ல, அத்தைக்கேட்டு எல்லாரும் ஒருமிடறுய்ச் சேர்ந்து, "பருப்பதத்தை யுண்டவனன்றோ? அவன் செய்யமாட்டாதது மொன்றுண்டோ? "என்கிறவர்கள்படியாலே, அநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

(பாஜநங்களிலே)- பாத்ரங்களிலே. "பூதவடிவுகொண்டு" என்றவநந்தரம் "உண்ட" என்றுசேஷம். ... ... ... ... ... (எ)

| | | | |
|---|---|---|---|
| இவனை | இப்பிள்ளையை நோக்கி | | (இப்பிள்ளையானவன்) |
| பிரான் | "உபகாரகனே! | பேய்ச்சி | பூதனையின் |
| சோத்தம் | உனக்கோரஞ்ஜலி; | முலை | (விஷமிஶ்ரமான) முலையை |
| இவை | இவ்வாறுனதீம்புகளை | உண்டபின்னை | அமுதுசெய்தபின்பு, இப்பிள்ளையை இப்பிள்ளையிடையாட்டத்திலே |
| செய்யப்பெறுய் | (இனி) செய்யாதொழியவேணும்" | பேசுவது | பொடிந்து வார்த்தை சொல்லுவதைப் பற்றி |
| என்று | என்று அநுநயம்பண்ணிக் கொண்டு | அஞ்சுவனே | மிகவும் பயப்படாநின்றேன். (அ) |
| இரப்பன் | (காலைப்பிடித்து) ப்ரார்த்திப்பேன்; (அத்தனைபோக்கி,) | | |
| உரப்பகில்லேன் | சீறிப்பேசமாட்டுகிறிலேன்; | | |

வ்யா;—எட்டாம்பாட்டு. (தோய்த்தவித்யாதி) நின்ற நின்ற அவஸ்த்தைகள்தோறும் சேஷியாதபடி பண்ணினுனயிற்று. தோய்த்து அட்டின தயிரையும், புத்துருக்கு நெய்யையும், நெய்வாங்குகைக்கு யோக்யமானபாலையும் சேஷியாதபடியாக அமுது செய்யுமென்று ஆய்ச்சியரெல்லாரும் கூப்பிடச்செய்தேயும். (நானிதற்கெள்கி) நான் இதுக்கீடுபட்டு, இவனை ஆக்ரஹியாதே (பிரானே சோத்தம்) "இங்ஙனே செய்யலாகாதுகாண்" என்றும் இரவாநிற்பன். என்செய்ய, உன்மகனைபின்பு நிக்ரஹிக்கலாகாதோவென்ன; இவன் பூதனையுடையமுலையை அமுதுசெய்தபின்பு என்னுடைய பிள்ளையென்றிருக்க அஞ்சுவன். .... .... .... .... .... (அ)

---

அரு;—எட்டாம்பாட்டு. (தோய்த்தவித்யாதி) கீழ்ப்பாட்டிலே எல்லாரும்கூடி, "இந்த்ரனுக்கிட்ட சோற்றையெல்லாமுண்டவனுக்கு இவ்வூர்பால் வெண்ணெய் முதலானவை சேஷிக்க விரகுண்டோ? தீம்பிலே கைவளரும்படி பண்ணினுய் நீயன்றோ" என்று கூசவிட, அத்தையெல்லாம்கேட்டு ஆரவாரமடங்கவிட்டு எல்லாரும் கேட்கும்படி அதிலே ஒருத்தியைப்பார்த்துப் "பேய்முலையுண்டவனை நானுரப்பஅஞ்சுவன், இங்குஎன்னைக் குற்றம்சொல்லவேண்டா" என்ற அவன் தாயாயநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

(நின்றநின்ற அவஸ்த்தைகள்) என்றது - ஒருகவ்யத்துக்கே தயிராகை முதலானவெல்லாத் தசைகளென்கை. (அட்டின) வார்த்த. (ஆக்ரஹியாதே) கோபியாதே. ... ... ... ... ... ... ... (அ)

மூ;—ஈடும்வலியுமுடையவிந்நம்பி பிறந்தவெழுதிங்களில்
ஏடலர்கண்ணியினானை வளர்த்தி யமுனைநீராடப்போனேன்
சேடன்திருமறுமார்வன் கிடந்துதிருவடியால் மலைபோல்
ஓடும்சகடத்தைச்சாடியபின்னை யுரப்புவதஞ்சுவனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஈடும் | சரீரபலத்தையும் | திரு | பிராட்டியையும் |
| வலியும் | மிடுக்கையும் | மறு | ஸ்ரீவத்ஸத்தையும் |
| உடைய | உடையனாய் | மார்பன் | திருமார்விலே உடையனான இவன், |
| இந்நம்பி | பூர்ணனான இப்பிள்ளை | மலைபோல் | ஒருமலைபோலே |
| பிறந்த | அவதரித்த | ஓடும் | ஊர்கின்ற |
| எழுதிங்களில் | ஏழாம்மாஸத்திலே, | சகடத்தை | (அஸுராவிஷ்டமான) சகடத்தை |
| ஏடு | இதழ்களானவை | கிடந்து | தான் கிடந்த கிடை மாறாதே |
| அலர் | அலராநின்றுள்ள | திருவடியால் | திருவடியாலே |
| கண்ணியினானை | மாலையாலே அலங்கரிக்கப்பட்டுள்ள இப்பிள்ளையை | சாடியபின்னை | முறித்துத் துகளாக்கின பிறகு |
| வளர்த்தி | (குளிப்பாட்டித்) தூங்கப்பண்ணிவிட்டு, | உரப்புவது | (இவனைச்) சீறிப்பேசும்விஷயத்திலே |
| யமுனை | யமுநாநதியிலே | அஞ்சுவன் | பயப்படாநின்றேன். (௯) |
| நீராட | நீராடுவதற்காக | | |
| போனேன் | போனேன்; | | |
| சேடன் | மிகவும்இளையனாய் | | |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (ஈடுமித்யாதி) கனமுடைமையும் மிடுக்குமுடைய இப்பிள்ளை ஏழாமாஸத்திலேகுளிப்பாட்டிச்செவ்வியுடைத்தான மாலையைச்சூட்டி வளர்த்திவைத்துப்போனேன், யமுனையிலே நீராட. (சேடன்) அத்யந்த சைசவத்தையுடையவன்; இவ

அரு;—ஒன்பதாம்பாட்டு. (ஈடுமித்யாதி) எல்லாருங்கூடி "பேய்ச்சிமுலையுண்டத்தை நினைத்தஞ்சுவன்" என்றாய்; பிள்ளையினுடைய ஜீவநாத்ருஷ்டத்தாலே அவள் முடிந்தாள்; அத்தைக்கண்டு நீ அஞ்சுகைக்குப் போருமோவென்ன; அது ஒன்றுமேயோ? சகடுதைத்தபடியைக் கேளுங்கோளென்கிறாளென்று ஸங்கதி.

(கனமுடைமை)-காயபலம். (மிடுக்கு)-பராபிபவநஸாமர்த்த்யம். (ஏடு)-தளமாய், (அலர்)புஷ்பமாய், இப்படி விசேஷித்ததுக்குக்கருத்து(செவ்வியித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௯)

ன் செய்யும் செயல்களுடைய ஸர்வேஸ்வரனோடொக்கும். (திருவடியால்) திருவடிகளாலே மலைபோலே ஊருகிற சகடத்தைச் சாடித்துகளாக்கினபின்பு இவனைப்பொடிய அஞ்சுவன். .... .... (௯)

மூ;—

அஞ்சுவன்சொல்லி யழைத்திட நங்கைகாளாயிர நாழிநெய்யை
பஞ்சியமெல்லடிப்பிள்ளைகளுண்கின்ற பாகந்தான் வையார்களே
கஞ்சன்கடியன் கறவெட்டுநாளி லென்கைவலத்தாதுமில்லை
நெஞ்சத்திருப்பனசெய்துவைத்தாய்நம்பீ யென்செய்கேனென்செய்கேனே.

| பதம். | உரை. |
|---|---|
| நங்கைகாள் | பூர்ணைகளான பெண்காள்! |
| சொல்லி | (இவன் செய்த தீம்புகளைச்) சொல்லி |
| அழைத்திட | (இவனை) அழைக்க |
| அஞ்சுவன் | பயப்படாநின்றேன்; |
| நம்பீ | கண்ணபிரானே! |
| பஞ்சியம் | பஞ்சுபோலே |
| மெல் | ம்ருதுவான |
| அடி | அடிகளையுடைய |
| பிள்ளைகள் | (உன்னோடொத்த ஆயிரம்) பிள்ளைகள் |
| உண்கின்ற | புஜியாநின்ற |
| ஆயிரநாழிநெய்யை | ஆயிரநாழிகளிலே நிறைக்கப்பட்டநெய்யில் |
| பாகந்தான் | பாதிபாகத்தையும் |
| வையார்கள் | சேஷித்து வைக்கிறிலர்கள்; |
| கஞ்சன் | கம்ஸனானவன் |

| பதம். | உரை. |
|---|---|
| கடியன் | மிகவும் க்ரூரனாயிராநின்றான்; |
| கறவு | (அவனுக்குக் கட்டவேண்டிய) கப்பமானது |
| எட்டுநாளில் | எட்டு நாளைக்குள் கட்டவேண்டும்படி ஸமீபித்தது; |
| என் | எனக்கு |
| கைவலம் | கைம்முதல் |
| ஆதும் இல்லை | ஒன்றுமில்லை; (ஆனபின்பு) |
| நெஞ்சத்திருப்பன | (என்னுடைய) நெஞ்சில்புண்பட்டிருக்கும்படியான கார்யங்களை |
| செய்துவைத்தாய் | பண்ணிவைத்தாய்; |
| என்செய்கேன் | என்செய்கேனே. (௧௦) |

அநு;—பத்தாம்பாட்டு. (அஞ்சுவனித்யாதி) கீழ் இரண்டு பாட்டிலும், பிள்ளைச் செல்வைக் கேட்டைக்கேட்டுத் தங்களெல்லாரும் முகங்களைப்பார்த்துக்கொண்டு இனி மறுமாற்றமுண்டோ வென்று திகைத்திருக்க, அவர்களெல்லாரையும் பார்த்து, "நீங்கள் எது சொல்லிலும், இவனைக்கூப்பிட நான் அஞ்சுவன்;" என்று நிருத்தரமாகச்சொல்ல, எல்லாரும் "இப்படியுண்டோ? உனக்குக் கட்டவுமடிக்கவும் எளியனாயிருக்க, உரப்ப அஞ்சுவன்" என்கிற,

வ்யா;—பத்தாம்பாட்டு. (அஞ்சுவன் சொல்லியழைத்திட) (பஞ்சியமித்யாதி) பஞ்சுபோல ம்ருதுவான அடியையுடையராயிருக்கிற ;பிள்ளைகள் ஆயிரநாழி நெய்யை உண்கிறவிடத்தில் பாதியும் சேஷியாதபடியாயிற்று புஜித்தது. (கஞ்சன்கடியன்) கம்ஸனனவன் சாலக்கொடியவன். (கறவெட்டுநாளில்) கறவென்று-இறைக்குப்பேர். எட்டுநாளில் இறை இடையர் பாலிருக்கக் கடவதாயிருக்குமிறே. (என்கைவலத்தாதுமில்லை) எனக்குக் கைம்முதலொன்றுமில்லை. அன்றிக்கே, என்கையில் பலமில்லை என்னவுமாம். (நெஞ்சத்திருப்பன செய்துவைத்தாய்நம்பீ) என் நெஞ்சுப்புண்மாறாதபடியாகப் பண்ணினாய்; நான் இக்கார்ஹஸ்த்ய தர்மத்வதை எங்ஙனே அநுஷ்டிக்கும்படி. .... .... .... .... .... (௧௦)

மூ;—

அங்ஙனும்தீமைகள்செய்வர்களோநம்பீ ஆயர் மடமக்களைப்
பங்கயநீர்குடைந்தாடுகின்றார்கள்பின்னே சென்றொளித்திருந்து
அங்கவர்பூந்துகில்வாரிக்கொண்டிட் டரவேரிடையாரிரப்ப
மங்கைநல்லீர்வந்துகொள்மினென்று மரமேறியிருந்தாய்போலும்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நம்பீ | கண்ணபிரானே! | செய்வர்களோ | செய்யக் கடவதோ?; |
| ஆயர் | இடையர்களுக்கு | பங்கயநீர் | தாமரைப் பொய்கை |
| மடம் | பவ்யைகளான | குடைந்து | அவகாஹித்து [யிலே |
| மக்கள் | பெண்கள் திறத்திலே | ஆடுகின்றார்கள் | நீராடப்புக்க ஸ்த்ரீகளுடைய |
| அங்ஙனும் | அப்படியுங்கூட | | |
| தீமைகள் | தீம்புகளை | | |

விதில் நாம் குடிவாங்குமித்தனை. பெண்களைப் புடைவைகளை உரிவது முதலான தீமைகளுக்கு ஒரு கணக்கில்லையென்று முறைப்பட, அவர்களை விட்டு அவர்கள் முன்னே தன்பிள்ளையை நியமிக்க ஒருப்படுகிறாள் மேல்நாலு பாட்டென்று ஸங்கதி.

*சோறே அறம்செய்யும் நந்தகோபாலன்பிள்ளையாகையாலே"நீதான் *தன்னேராயிரம் பிள்ளைகளல்லது உண்பதில்லை; அவர்களெல்லார்க்கும்-ஆயிரநாழி நெய்யைத்தாராதே தீராது; அவர்களுண்ணும்போது சேஷித்ததை யாகிலும் இறைக்குக்கூட்டிவைக்கவிரகில்லை. கொண்டுவிற்கைக்குக்கைம்முதலுமில்லை; நீயோ என்னகத்திலே இத்தனை தீம்புசெய்கிறாய்''என்று வெறுக்கிறாளென்று விவக்ஷித்து உட்கருத்தருளுகிறார் (என் நெஞ்சித்யாதி வாக்யத்வயத்தாலே).

| | |
|---|---|
| பின்னெசென்று | பின்னே போய் |
| ஒளித்திருந்து | மறைந்து கொண்டிருந்து |
| அங்கு | அவ்விடத்தில் |
| அவர் | அந்த ஸ்திரீகளுடைய |
| பூ | அழகிய |
| துகில் | பரியட்டங்களை யடைய |
| வாரிக்கொண்டிட்டு | வாரிக்கொண்டு, |
| | (அவ்வளவிலே) |
| அரவு ஏர் | அரவு போலே நுண்ணிதான |
| இடையார் | இடையையுடைய அப்பெண் பிள்ளைகள் |
| இரப்ப | (தந்தாம் பரியட்டங்களை) யாசிக்க, |
| நல் மங்கைமீர் | "அழகிய பெண்காள்! |
| வந்து | நானிருக்கு மிடமேற வந்து |
| கொண்மின் | உங்கள் துகில்களைப் பெற்றுப்போங்கோள்" |
| என்று | என்றுசொல்லிக்கொண்டு |
| மரம் | மரத்தினுச்சியிலே |
| ஏறியிருந்தாய் | ஏறியிருந்தாய். |
| போலும் | (௧௧) |

வ்யா;—பதினோராம்பாட்டு. (அங்கனுமித்யாதி) சொல்ல வொண்ணாதபடியான தீம்புகளை விளக்கக்கடவதோ? ஒரு குடியிலே பிறந்த பெண்பிள்ளைகளைச்செய்யும் தீம்பு. தாமரைப் பொய்கையிலே சென்று ஒளித்திருந்து அவர்களுடைய பரியட்டங்களையடைய வாரிக்கொண்டு. (அரவேரிடையாரித்யாதி) அரவுபோலே நுண்ணிய இடையையுடைய ஸ்த்ரீகள் இரக்க, (மங்கைநல்லீர் துகில் கொண்மினென்று மரமேறியிருந்தாய்போலும்) வேணுமாகில் இங்ஙனே ஏறிவாங்கிக்கொள்ளுங்கள் என்றிருந்தாய். .... .... (௧௧)

மூ;—
அச்சந்தினைத்தினையுமில்லையிப்பிள்ளைக் காண்மையுஞ்சேவகமும்
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக்குரைத்திலன்தானின்றுபோய்
பக்கிலைப்பூங்கடம்பேறி விசைகொண்டுபாய்ந்துபுக் காயிரவாய்
நச்சழல்பொய்கையில்நாகத்தினோடுபிணங்கிநீவந்தாய்போலும்.(௧௨)

---

அந;—பதினோராம்பாட்டு. (அங்கனுமித்யாதி) கீழ்ப்பாட்டிலே "என் செய்கேன்" என்று தன்னைப்பார்த்துவேறேயும் சிலரைப்பாரா அச்சம்தோற்ற நிற்க, அநந்தரம் நங்கைகள் சொன்ன தீம்புகளைத்தான் சொல்லி இப்படி செய்ய வடுக்குமோ வென்று கேட்கிறுளென்று ஸங்கதி.

(செய்யும் தீம்பு) என்றவநந்தரம் "ஏதென்று" என்று சேஷம்; இதுக்கு "கொள்ளுங்களென்று, இருந்தாய்" என்றத்தோடே அந்வயம். (௧௧)

| பதம் | உரை. |
|---|---|
| இப்பிள்ளைக்கு | இந்தப்பிள்ளைக்கு |
| தினைத்தினை | ஈஷத்தும் |
| அச்சம் இல்லை | பயமில்லை ; |
| ஆண்மையும் | பௌருஷமும் [து ; |
| சேவகமும் | சேவகப்பாடுமே யுள்ள |
| உச்சியில்முத்தி | உச்சிமோந்து |
| வளர்த்தெடுத் | வளர்த்தெடுத்ததாயா |
| தேனுக்கு | ன எனக்கு |
| தான் | தான் |
| உரைத்திலன் | (செய்யப்புகும் செய் கைகளைச்) சொல் லுகிறிலன் ; |
| இன்று போய் | இன்றைக்குப்போய் |
| பச்சிலை | பசுமையான இலைக ளை யுடைத்தாய் |

| பதம். | உரை. |
|---|---|
| பூ | பூத்துக்கிடந்த [றி |
| கடம்பு ஏறி | கடப்பமரத்தின்மேலே |
| விசைகொண்டு | பெரியவேகத்தோடே |
| பாய்ந்துபுக்கு | (மடுவிலே)எறப்பாய்ந்து, |
| ஆயிரம் வாய் | ஆயிரம் வாயாலும் |
| நச்சு அழல் | விஷத்தை உமிழாநிற் பானாய் [ கிடக்கிற |
| பொகையில் நச்சுப் | பொய்கையிலே |
| நாகத்தினொடு | காளிய நாகத்தினோடு |
| நீ | இளம்பருவத்தனான நீ |
| பிணங்கி | போர்செய்து |
| வந்தாய்போலு ம் | வந்தாயோதான். |

(௧உ)

வ்யா;—பன்னிரண்டாம்பாட்டு. (அச்சமித்யாதி) பயமேகதேசமும் கூட வில்லை, இப்பிள்ளைக்கு. (ஆண்மையித்யாதி) ஆண்பிள்ளைத்தனமும் சேவகப்பாடுமேயாயிற்று உள்ளது. (உச்சியில்முத்தி) உச்சி மோந்து வளர்த்தெடுத்தேனுக்கு, ஒன்றுமுரைத்திலன்தான். இன்றுபோய், (பச்சிலையித்யாதி) திருவடிகளோடுண்டான ஸ்பர்ஶத்தாலே தழைத்துப் பூத்தகடம்பிலே ஏறிப்பெரிய வேகத்தாலே மடுவிலே எறப்பாஞ்சு; (ஆயிரவாயித்யாதி) ஆயிரம் வாயாலும் விஷத்தை உமிழாநிற்பானாய் தான் நச்சுப்பொய்கையிலே கிடக்கிற காளியனோடே பிணங்கி வந்தாய்போலே இருந்தது. .... (௧உ)

---

அரு;—பன்னிரண்டாம்பாட்டு. (அச்சமித்யாதி) கீழ்ப்பாட்டிலே பொய்கையிலே பெண்களோடு பிணங்கினபடியைச் சொல்லச்செய்தே, நச்சுப்பொய்கையிலே போனது ஸ்ம்ருதிவிஷயமாய், அதுக்கு வயிறு மறுகியத்தைச் சொல்லி வெறுக்கிறுளென்று ஸங்கதி.

"தினைத்தினை"-எள்ளத்தனையென்னுமாபோலே, அல்பத்தைச்சொல்லுகிற தென்கிறுர் ( பயமித்யாதி ). தினை-க்ஷுத்ரதாந்யம்; "இப்பிள்ளைக்கு" என்கையாலே நங்கைகளையும் ஒருகண்ணாலே பார்த்துச்சொல்லி, மேலே இவனை ஒருகண்ணாலே பார்த்துச் சொல்லுகிறுளென்று கொள்வது. ... (௧உ)

மூ;—

தம்பரமல்லனவாண்மைகளைத் தனியேநின்றுதாம்செய்வரோ?
எம்பெருமானுன்னைப்பெற்றவயிறுடையேனினியானென்செய்கேன்
அம்பரமேழுமதிருமிடிகுர லங்கனல்செங்கணுடை
வம்பவிழ்கானத்துமால்விடையோடு பிணங்கிநீவந்தாய்போலும்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எம்பெருமான் | எனக்குப்பெருமையை விளைவிக்கக் கடவ கண்ணனே! | இனி என்செய்கேன்;— | |
| தாம் | ஓரோ காரியங்களிலே யிழிவார் | அம்பரம் எழும் | உபரிதந லோகங்களெல்லாம் |
| தம்பரம் அல்லன | தந்தாமால் செய்து தலைக்கட்ட வொண்ணாத | அதிரும் | அதிரும்படியாக |
| ஆண்மைகளை | வீரச்செயல்களை | இடி | முழங்காநின்றுள்ள |
| தனியேநின்று | தனித்து நின்று | குரல் | த்வநியையுடைத்தாய் |
| செய்வரோ | செய்யக்கடவர்களோ?; | அனல் | நெருப்புப்போலே |
| உன்னை | இப்படி அஸாத்யமான செயலைச் செய்கிற உன்னை | செம் | சிவந்த |
| பெற்ற | பெற்ற | கண் உடை | கண்களை யுடைத்தாய் |
| வயிறுஉடையேன் | வயிற்றை யுடையளான | மால் | கறுத்திருந்துள்ள |
| யான் | நான் | விடையோடு | ரிஷபங்களோடே |
| | | வம்பு அவிழ் | மணம்மாறுதே நித்ய வஸந்தமான |
| | | கானத்து | அச்சோலைக்குள்ளே |
| | | | பிணங்கிநீவந்தாய்போலும். (௧௩) |

வ்யா;—பதின்மூன்றாம்பாட்டு. (தம்பரமித்யாதி) ஓரோகாரியங்களிலே இழிவார் தந்தாமால் செய்து தலைக்கட்டலாம் கார்யங்களிலே யன்றோ இழிவது. (ஆண்மைகள்) ஓரோவொன்றையே

அ;—பதின்மூன்றாம்பாட்டு. (தம்பரமித்யாதி) கீழ்ப்பாட்டில் "நாகத்தினொடு பிணங்கி நீ வந்தாய்" என்னக்கேட்டு, நீ இதுக்கஞ்சவேணுமோ? சிறுப்பிள்ளையாயிருக்கச் செய்தே நான் நச்சுமுலையுண்டதாகச் சொன்னாயே, இவ்விஷயம் எனக்கு ரஸ்யமானது ஆஜந்மஸித்தமென்று ப்ரஸித்தமா யிருக்கையாலே "விஷமேருத ப்ரக்ருதி இவன்" என்று தேறியிருக்கலாமே யென்ன; அதுவொன்றுமோ தேறியிருக்கைக்கு; மலைபோலே பெரியவிடைகளின்மேல் விழுந்ததுக்கு நானென்செய்கே னென்கிறாளென்று ஸங்கதி.

கார்யங்களை என்னவேண்டியிருக்க, "ஆண்மை" என்று விசேஷசப்தத்தாலே சொல்லுவானென்னென்ன வருளுகிறார் (ஓரோவென்று தொடங்கி).

தலைகாணவொண்ணாதபடியிருக்கை. (தனியே நின்று) நம்பி மூத்த பிரானோடே கூடநின்று செய்தானாகில் கண்ணெச்சில் வாராதபடி அவன் தலையிலே ஏறிடலாம். (தாம்செய்வரோ) தந்தாமையும் பார்க்கவேண்டாவோ? (எம்பெருமான்) உன்னைப்பெற்றவிதுவே அமையாதோ வயிற்றெரிச்சலுக்கு வேண்டுவது. நீ ஒருசெயலைச் செய்ய வேணுமோ? (அம்பரமேழும்) உபரிதநலோகங்கள் அதிரும்படியான த்வநியையுடைத்தாய், அகவாயில் மரமெல்லாம் தெரியும்படி நெருப்புப்போலே சிவந்தகண்ணையுடைத்தாயிருக்கிற வ்ருக்ஷங்களோடு கூட நித்யவஸந்தமான சோலைக்குள்ளே பிணங்கிவந்தாய் போலேயிருந்தது என்கிறாள். .... .... .... .... .... (க௩)

மூ;—அன்னநடைமடவாய்ச்சி வயிறடித்தஞ்சஅருவரைபோல்
மன்னுகருங்களிற்றாருயிர்வவ்விய மைந்தனைமாகடல்சூழ்
கன்னிநன்மாமதிள்மங்கையர்காவலன் காமருசீர்கலிகன்றி
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க் கேதுமிடரில்லையே

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்னநடை | ஹம்ஸகதியையும் | மைந்தனை | மிடுக்கனான கண்ணபிரான் விஷயமாக, |
| மடம் | ஆத்மகுணத்தையுமுடையளான | மாகடல் | அசழாகப் போரும்படியான கடலாலே |
| ஆய்ச்சி | யசோதைப் பிராட்டியானவள் | சூழ் | சூழப்பட்டதாய், |
| வயிறுஅடித்து | வயிற்றிலே அடித்துக் [கொண்டு | கன்னி | ஶாஶ்வதமாய் |
| அஞ்ச | அஞ்சும்படி, | நல் | விலக்ஷணமாய் |
| அருவரைபோல் | பெரியதொருமலைபோலே | மா | அரணாகப் போரும்படியான ஔக்கத்தையுடைத்தான |
| மன்னு | பொருந்தியிருக்கிற | | |
| கரு | கருமையையுடைய | மதிள் | மதிளையுடைய |
| களிறு | குவலயாபீடத்தின் | மங்கையர் | திருமங்கையிலுள்ளார் [க்கு |
| ஆருயிர் | அருமையான உயிரை | காவலன் | நிர்வாஹகராய் |
| வவ்விய | அபஹரித்த | காமரு | ஸ்ப்ருஹணீயமான |

(தலைகாண) எல்லைகாண. வ்யாக்க்யாதருவாக்யம் (நம்பியித்யாதி). (தந்தாமை) தன் ஸௌகுமார்யத்தை யென்கை. ... ... ... ... (க௩)

| | | | |
|---|---|---|---|
| சீர் | கல்யாணகுணங்களையுடையரான | மாலைகளீரேழு | சொல்மாலையான பதிநான்கு பாசுரங்களை |
| கலிகன்றி | ஆழ்வார் (அருளிச்செய்த) | வல்லவர்க்கு | ஓதவல்லவர்களுக்கு[யும் |
| இன் | இனிதான | இடர் | துன்பமானது |
| இசை | இசையையுடைய | ஏதும் இல்லை | ஈஷத்துமில்லை. (௧௪) |

வ்யா;—பதினாலாம்பாட்டு. (அன்னமித்யாதி) ஆகர்ஷகமான நடையையுடையளாய், ஆத்மகுணோபேதையாயிருக்கிற யசோதைப் பிராட்டியானவள் வயிற்றிலே அடித்துக்கொள்ள. (அருவரைபோல்) மலை கால்கொண்டு நடந்தாப்போலேயாய், கண்டார்கண்கள் பிணிப்படும்படியிருக்கிற ஆனையை முடித்துப் பொகட்டமிடுக்கனை. (மாகடல்) கடலை அகழாகவுடைத்தாய் அரணுக்குப்போரும்படியான மதிளையுடைத்தான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார். (இன்னிசையித்யாதி) இத்திருமொழியை வல்லவர்களுக்கு யசோ

---

அரு;—பதினாலாம்பாட்டு. (அன்னமித்யாதி) இவ்வாழ்வாருக்கு யசோதைப்பிராட்டி தசைபிறந்து க்ருஷ்ணன் தீம்புகளையும் அதிமாநுஷசேஷ்டிதங்களையும் ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கும்போது, பத்தாம்பாட்டிலே நேரே அவனோடு வார்த்தை சொல்லுகையாலுண்டான அநுபவாதிசயத்தாலும், வயிறுமறுகும்படியான ஆண்மைகளையும் திருமேனிஸௌகுமார்யாதிகளையும் கண்டு வயிறடித்துக்கொள்ளும்படியான ப்ரேமத்தாலும், கீழ்த்திருமொழிகளின் கணக்கிலே பத்துப்பாட்டாக வருளிச்செய்யும் கட்டளையும் மறந்தும் ஈரேழாக வநுஸந்தித்தாரென்று கண்டுகொள்வது.

கீழ்ஸௌகுமார்யத்துக்கு அஞ்சினபடிசொல்லி, இதில் வயிறுபிடித்தபடி சொல்லிற்றென்று ஸங்கதி. அந்தஅச்சம் தீரும்படிக்குக் குவலயாபீடத்தைக் கொன்று பெருமிடுக்கைக்காட்டத் தெளிந்தவநந்தரம், இத்திருமொழிக்குப் பலம்சொல்லுகிறாரென்று மேலுக்கு ஸங்கதி.

தீம்புகளைச்சொல்லிப் பழியிடுகிறபாட்டுக்கள் ஒரேழும், சேவகத்தைப் பேசுகைப்ராதாந்யேந தோற்றும்படியான தோரேழுமாகப் பிரித்து "ஈரேழுமென்றார்" என்று விவக்ஷித்து, ப்ரக்ருதோபயுக்தமாக வருளுகிறார் (இத்திருமொழியை யித்யாதி). ... ... ... ... ... ... (௧௪)

ஜீயர்திருவடிகளே சரணம்.

தைப்பிராட்டியுடைய அநுபவத்தில் குறைய அநுபவிக்கவேண்டா வென்கிறார். .... .... .... .... .... .... (கச)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி
## பத்தாம்பத்து ஏழாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---

## பத்தாம்பத்து எட்டாந்திருமொழி
### காதில் ப்ரவேசம்.

---

வ்யா;—வெண்ணெயையும் பெண்களையுமொக்கக் களவுகாணு மது தவிர்ந்து அவர்களும் கைபுகுந்து நினைத்தபடியே ஸம்ஶ்லேஷ மும் ப்ரவ்ருத்தமாய் நின்றதுகீழ்; இனி இது ப்ரஸித்தமாம்படியான வாறே அகலநின்றான்; இவர்களுக்கு ப்ரணயரோஷம் தலையெடுத்து ஸம்ஶ்லேஷத்தினுடைய மத்யந்திநமாய், அறமுறுடுகொளுத்தியி ருக்க, அவனும் வருந்தி காலைக்கையைப்பிடித்து ஸம்ஶ்லேஷித்தபடி யைப் பேசுகிறதாயிருக்கிறது.

மூ;—காதில்கடிப்பிட்டுக் கலிங்கமுடுத்துத்
தாதுநல்ல தண்ணந்துழாய்கொ டணிந்து
போதுமறுத்துப் புறமேவந்துநின்றீர்
ஏதுக்கிதுவென் னிதுவென் னிதுவென்னோ. (க)

---

அநு;—காதில் ப்ரவேசம். "நந்தன்பெற்றமதலை நஞ்சேரிக்கே அல்லில் தான் வந்தபின்னை, கண்மலர் சோர்ந்தித்யாதி - என்மகள்வண்ணமிருக்கின்ற வாநங்காய், என்செய்கேன்" என்கையாலும், "அங்ஙனம் தீமைகள்செய்வர்க ளோநம்பீ" என்றுதாயும் ஆணைவிட்டபடியாலும், உந்மஸ்தகரஸம் தலையெ டுக்கும்படி ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாக, அதுஸாத்மிக்கவேணுமென்று, பிரி ந்தவநந்தரம், பிரிவுபொறுக்கமாட்டாமல் ஊடுதல்தலையெடுத்ததென்றும் ஸங்கதியை யருளுகிறார் (வெண்ணெயையுமித்யாதி). (ப்ரஸித்தமாம்படி) மிகவும் உந்மஸ்தகமாம்படி கைபுகுந்ததென்னும்படி. (மத்யந்திநம்) நாளுக்கு மத்யம்-ஸாயங்காலமென்றபடியாய், அத்தாலே ஸம்ஶ்லேஷத்துக்கு ஸாயங் காலமாவது-கேவலம் விஶ்லேஷமுமன்றிக்கே, ஸம்ஶ்லேஷமுமன்றிக்கே, முன்னேநிற்கிறநிலையானவாறே யென்கை. ... ... ... ... *

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காதில் | காதிலே | அணிந்து | (திருமுடியை) அலங்கரித்து |
| கடிப்பு | கர்ணபூஷணத்தை | | |
| இட்டு | சாத்திக்கொண்டு, | போது | (வருகைக்குக் குறிப்பிட்டுச் சொன்ன) காலத்தை |
| கலிங்கம் | கறுப்புத் திருப்பரியட்டத்தை | | |
| உடுத்து | தரித்துக்கொண்டு, | மறுத்து | அதிக்ரமித்து |
| தாது | இதழ்களையுடைத்தாய் | புறமே | பின்புறத்தில் |
| நல்ல | விலக்ஷணமாய் | ஏதுக்கு | எதுக்காக |
| தண் | குளிர்ந்த | வந்து நின்றீர் | வந்துநின்றீர்? |
| அம் | அழகிய | இது என் | இதென்னகாரியம்; |
| துழாய்கொடு | திருத்துழாய் மாலையைக்கொண்டு | | இது என்? இது என்னோ! (௧) |

வ்யா;—முதற்பாட்டு. (காதில் கடிப்பிட்டு) பெண்களோடே ஸம்ஶ்லேஷிக்க வருகிறவன் கடிப்பிட்டு வருகையாவதென்னென்னில்; பால்யாவஸ்த்தையில் பிடிகொடாதே தீம்பில் கைவளர்ந்து திரிகையாலே காதுகுத்த அவஸரமில்லை; பின்பு பருவம் நிறைந்து விளையாடப்புக்கவாறே பெண்களுடைய "விடுகாதழகியார்" என்றும், "சொணையழகியார்" என்றும் சொல்லுகிற க்ஷேபவசநம் பொறுக்கமாட்டாமையாலே பின்புகாணும் காதுகுத்தப்புக்கது. அதுபெருக்கிவரப் பற்றுகிறதில்லைகாணும்.

---

அரு;—முதற்பாட்டு. (காதிலித்யாதி) (௧) "காதில்கடிப்பைநோவத்திரிகிலுனக்கிங்கு இருக்குற்றென்காதுகள் நொந்திடுகில்லேன்" என்றத்தைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டருளுகிறார் (பால்யேத்யாதி). (௨) "கையில்திரியை இடுகிடாயிந்நின்ற காரிகையார் சிரியாமே" என்ற தாய்வாய் சொல் தன் நெஞ்சுக்கேற அநுபூதமானவாறே காதில்கடிப்பிட ஒருப்பட்டானென்கிறார் (பின்பித்யாதி). ஆனால் (௩) "மகரக்குழைகொண்டு வைத்தேன்" என்றாளே; காதுபெருக்கி * மகரநெடுங் குழைக்காதனாயன்றோவர அடுப்பது. கடிப்பிட்டுவரவேண்டுவானென்னென்ன வருளுகிறார் (அதித்யாதி). கடிப்பிட்டதுக்கே போதுமறித்ததாய் குற்றமாய்விழச்செய்தே, மகரக்குழையிட்டு வருமளவுதாழ்த்தால் முகம்பெறவிரகுண்டோவென்று கருத்து.

---

(௧) பெரி-தி-௨-௩-௧௨. (௨) பெரி-தி-௨-௩-௯. (௩) பெரி-தி-௨-௩-௩.

"காதில்" என்கையாலே வெறும்புறத்திலே பெண்பிறந்தாரை அநங்யார்ஹைகளாக்கிக் கொள்ளவற்றாயிற்று. அதுக்குமேலே கடிப்பையுமிட்டானாயிற்று. யுவாக்களாயிருப்பார்க்கு ஆராட்சிதோறச்செய்யும் செயலாயிற்று. (கலிங்கமுடுத்து) நல்லபுடவைகளையும் உடுக்கமாட்டாதவர்கள் உடுக்கப்புக்கவாறே பொல்லாதாயிருக்குமாயிற்று. அங்ஙனன்றிக்கே, உடைவாய்ப்பாலே நெஞ்சுபிணிப்புண்ணும்படியாகவாயிற்று உடுப்பது. (தாதுநல்ல) பரிமளத்தையும் செவ்வியையும் குளிர்த்தியையுமுடைத்தான திருத்துழாய் மாலையை முடிக்கவல்லன்; முடித்தவாறே கண்ணுக்கு ஆகர்ஷகமாயிருக்குமிறே.

(போதுமறுத்து) காலத்தைத் தப்பினானாயிற்று, ஒப்பித்துவரவேண்டுகையாலே. இவர்களுக்குஉடலாக ஒப்பிக்கிறத்தோடு இவர்களோடே ஸம்ஶ்லேஷிக்கிறத்தோடு வாசியென்னென்றாயிற்று அவன்படி. இருந்தபடியே உகக்கிற எங்களுக்கு ஒப்பிக்கவேணுமோ? புதியநிலங்களை அழிக்கைக்காகவன்றோ என்றாயிற்று இவர்கள்படி. கிட்டிவரச்செய்தேயும் காலத்தைத் தப்பிவருகையாலே ஓரடியிலே பத்தடியிட்டானாயிற்று. (நின்றீர்) ஸாபராதனாகையாலே கிட்டி

---

கடிப்பிட்டுவருவது காதிலன்றோ? மூக்கிலிடுவாருண்டோ? காதிலென்று விசேஷித்ததுக்குக்கருத்தென்னென்னவருளுகிறார் (காதிலித்யாதி). அவன்மிகவும் ஆகர்ஷகமாகக்கடிப்பிட்டுவந்தால், இதுவுமொரு குற்றம்சொல்லுமாபோலே சொல்லக்கருத்தென்னென்ன வருளுகிறார் (யுவாக்களித்யாதி). (ஆராட்சி) என்றது-இத்தனைநாளும் காதுகுத்தப்பொறுத இவன் இன்றைக்காகவேயோ காதுகுத்திக்கடிப்பிட்டானென்று விசாரிக்கையென்கை. பெண்களெச காதில் கடிப்பிட்டானென்று நாலுபேரும் சொல்லும்படி நீ இருக்கைகுற்றமேயன்றோ வென்கிறாளென்று கருத்து. "கலிங்கம்" கறுப்புத்திரிப்பரியட்டமாய், இத்தை உடுத்தென்றதுக்கு பா(ஞா)வமேதென்ன வருளுகிறார் (நல்லவித்யாதி).

(காலத்தை) வருகிறேனென்று சொன்னகாலத்தை. காலம்தப்பும்படி ஒப்பிக்கவேணுமோ? எற்கவே ஒப்பிக்கலாகாதோ வென்ன வருளுகிறார் (இவர்களுக்கித்யாதி). ஆனால் அதுவேகுற்றமாக்கி இவர்கள் வெறுப்பானென்னென்ன வருளுகிறார் (கிட்டியித்யாதி). ஆனால் நிற்பானென்னென்ன(ஸாபராதனித்

வரமாட்டுகிறிலன். ஆற்றாமையாலே புறம்புபோகமாட்டுகிறிலன். (எதுக்கிது) பசியில்கிடையாத சோறென்றிய. (என்னிதுவென்னிதுவென்னோ) ஒப்பித்துக் கொடுவரவேணுமோ?. காலத்தைத் தப்பிவரவேணுமோ? ஸாபராதனானால் மேல் விழவன்றோ வடுப்பது·

மூ;—துவராடையுடுத் தொருசெண்டுசிலுப்பிக்
கவராகமுடித்துக் கலிக்கச்சுக்கட்டிச்
சுவரார்கதவின்புறமே வந்துநின்றீர்
இவராரிதுவென்னிது வென்னிதுவென்னோ. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துவர் ஆடை | சிவப்பு நிறப்புடைவை யொன்றை | கலி | வலியையுடைய |
| உடுத்து | திருவரையில் சாத்திக் கொண்டு | கச்சு | கச்சுப்பட்டையை |
| ஒரு செண்டு | ஒரு செண்டையும் | கட்டி | (திருவரையிலே) டிக்கொண்டு, |
| சிலுப்பி | (கையால்) சலிப்பித்துக்கொண்டு(திருக்குழல்களை) | சுவர் ஆர் | சுவரோடிணைந்த |
| கவராக | இரண்டு ப்ரகாரமாக | கதவின்புறமே | கதவின்பக்கமாக வந்து நின்றீர்; |
| முடித்து | முடித்துக்கொண்டு, | இவர் ஆர் | இங்ஙனே வந்து நின்றவர் ஆர் கொல்? |
| | | | இதுவென்! இதுவென்? இதுவென்னோ |

வ்யா:—இரண்டாம்பாட்டு. (துவராடையித்யாதி) முற்பட-

---

யாதி). ஆனால்நடக்கலாகாதோவென்ன வருளுகிறார் (ஆற்றாமையித்யாதி). (என்றிய)-கிமர்த்தம் என்றபடி; உன்உறவுக்கு ப்ரயோஜநமென்னென்றபடி. போது மறுத்துவந்தது-குற்றமானாப்போலே, நின்றதும் குற்றமென்று விவக்ஷித்து "என்னோ" என்கிறஸ்வரத்துக் குக்கருத்தருளுகிறார் (ஸாபராதனித்யாதி).

அரு;—இரண்டாம்பாட்டு. (துவரித்யாதி). கீழ்ப்பாட்டிலே "எதுக்கிது வென்" என்று ப்ரணயரோஷம் முற்றினபடியைக்கண்டு நின்றநிலையிலே தானேவேறொரு வேஷங்கொண்டுஉள்ளேயுள்ளே ஓடும்படிகடந்துநிற்க, அதிலீடுபட்டு இன்னாரென்றறியாதே மயங்கி, பின்னையும் ப்ரணயரோஷத்தாலே சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"கலிங்கமுடுத்து" என்று சொல்லியிருக்க, "துவராடையுடுத்து" என்னக்கூடுமோ வென்னவருளுகிறார் (முற்படவித்யாதி).. (சிவப்புநிறப்புடைவை)

உடுத்ததுக்கு ஈடுபடாமையாலே அதுக்குமேலே ஒருசிவப்புநிறப் புடவைச் சிமிழ்த்துக்கொண்டு வந்தாளுயிற்று. (ஒருசெண்டுசிலுப்பி) புறம்பே அந்யபரனென்றுதோற்றுகைக்காகக் கையிலே ஒரு செண்டையும் சிலுப்பிக்கொடுவந்தாளுயிற்று. (சுவராகமுடித்து) கிண்ணகத்தில் இழிவாரைப்போலே மயிரைப்புகுந்துமுடித்து நழுக்தி, வலியுடைத்தான கச்சையிட்டுக்கட்டி.

(சுவரார்கதவின் புறமே வந்து) சுவரார்ந்தகதவுக்குப் புறமே வந்து, தள்ளவும் போகாதே நின்றுயிற்று. ப்ரத்யபிஜ்ஞார்ஹமல்லாதகாலத்திலேவந்தார்இவர், அந்யபரதைபாவித்துவரவேணுமோ? கதவுக்குப்புறம்பே நிற்கவேணுமோ? தள்ளவும் போகாதொழியவேணுமோ? .... .... .... .... .... .... (௨)

மூ;—கருளக்கொடியொன்றுடையீர் தனிப்பாகீர்
உருளச்சகடமதுறக்கில் நிமிர்த்தீர்
மருளைக்கொடுபோடி வந்தில்லம்புகுந்தீர்
இருளத்திதுவென்னிது வென்னிதுவென்னே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒன்று | அத்விதீயமான | உறக்கில் | கள்ளநித்திரை கொள்கின்ற காலத்திலே |
| கருளக்கொடி | கருடத்வஜத்தை | | |
| உடையீர் | நிருபகமாக உடையவரே! | சகடம் அது | அஸுராவிஷ்டமான சகடமானது |
| | (அந்தப் பெரியதிருவடியை)அத்விதீயமாக | உருள | உருண்டு துகளாம்படி |
| தனி | | நிமிர்த்தீர் | (திருவடியை) நிமிர்த்தருளினவரே ! |
| பாகீர் | நடத்தவல்லவரே !, | | |

என்றது-சிவப்புச்சாயமேற்றினபுடவை. (சிமிழ்த்துக்கொண்டு) சுற்றிக்கொண்டு. மயிரைப்பேணுகைக்கும் கச்சுக்கட்டுகைக்கும் தாத்பர்யமென்னென்ன வருளுகிறுர் (கிண்ணகத்திலித்யாதி). ப்ரவாஹத்திலிழிவார் மயிரைப்பேணி கச்சுக்கட்டி உத்யுக்தராய்இறங்குமாபோலே, இவன் ஒருபோக (ஸ்ரோத) ப்ரவாஹத்திலிழிகைக்கு ஒருப்பாடு தோற்றி நின்றுனென்கை.

(தள்ளவும்) என்றது - கதவைத்தள்ளவு மென்றபடி. அவளைத்தொட்டவளாகில் தள்ளமாட்டாளிறே. கீழே "வந்துநின்றீர்" என்றுவைத்து "இவரார்" என்கைகூடுமோவென்னவருளுகிறுர் (ப்ரதயபிஜ்ஞேத்யாதி). அன்றிக்கே, ஸந்தேஹிக்கிறுளென்று விவக்ஷித்தருளுகிறுர் (ப்ரத்யபிஜ்ஞேத்யாதி). (கதவுக்குப் புறம்பே) என்றது-சுவரோடே சேர்ந்தகதவுக்கும் வாசற்படிக்கும் நடுவே என்கை. ... ... ... ... ... ... ... (௨)

| | | | |
|---|---|---|---|
| இருளத்து | இராக்காலத்திலே | இல்லம் | அகத்துக்குள்ளே |
| மருளை | (பெண்பிறந்தாரை) மயக்கவல்லபாட்டை | புகுந்தீர் | ப்ரவேசித்திரே!; |
| பாடிக்கொடு வந்து | (மெள்ளப்) பாடிக்கொண்டு வந்து | இதுவென்? இதுவென்? இதுவென்னோ? | (௪) |

வ்யா;—மூன்றாம்பாட்டு (கருளக்கொடி) ஜகத்ப்ரஸித்தராயிருப்பார் அப்ரஸித்தரைப்போலே வரக்கடவதோ?. (தனிப்பாகீர்) எல்லார் பக்கலிலும் பண்ணும் ரக்ஷணமடைய அவரொருவனுக்குமே பண்ணவேண்டும்படியன்றோ உமக்கிருக்கிறது. (உருளச்சகடம்) அதிஸாஹஸங்களையன்றோ நீர்செய்வது. அஸுராவேசத்தாலே நின்ற சகடம் மூலைவரவு தாழ்த்தவாறே சிறி நிமிர்த்ததிருவடிகளுக்கு இலக்காய்த்துகளாய்ப் போயிற்று.

(மருளை) பெண்பிறந்தாரடைய நஞ்சுண்டாரைப்போலே மோஹிக்கும்படியாகப் பண்ணை நனுங்கிக்கொண்டுவந்து ராத்ரியிலே, ப்ரஸித்தராயிருப்பார் அப்ரஸித்தரைப்போலே வரக்கடவதோ?; பண்ணை நனுங்கிக்கொடுவரக்கடவதோ?; ராத்ரியிலேவரக்கடவதோ?.

மூ;—நாமம்பலவுமுடை நாரணநம்பீ
தாமத்துளவம் மிக நாறிடுகின்றீர்
காமனெனப்பாடிவந் தில்லம்புகுந்தீர்
ஏமத்திதுவென்னிது வென்னிதுவென்னோ. (௪)

---

அரு;—மூன்றாம்பாட்டு. (கருளவித்யாதி) கீழ்ப்பாட்டில் வாசல்படிக்குள்ளே அடியிட்டவளவிலே தயிர் கடையமாட்டாதே யிருக்கக்கண்டு கண்ணுக்கு இருண்டவாறே உள்ளேபுக, அத்தைக்கண்டு அவள் "கள்ளனைப்போலே வருகை-கொடிகட்டிக்கொண்டிருக்கிற உமக்கு உசிதமோ" என்கிறாளென்று ஸங்கதி.

"கருளத்தனிப்பாகீர்" என்றந்வயித்து அவ்வருகுமேற்கொள்ளுகை ரக்ஷணமென்று தாத்பர்யமென்றருளுகிறார் (எல்லாரித்யாதி). நான் உங்கள் வீட்டுக்கு அடியிட்டுவர, என்னை கருளப்பாகனுகச் சொல்லுகிறதென்னென்னும் ப்ரஶ்நத்திலே "உருளவித்யாதி" என்றுவிவக்ஷித்தருளுகிறார் (அதிஸாஹஸேத்யாதி). அதாவது - திருவடிமேலே வருதி; நீர்அடியிட்டுவருகை ஸாஹஸம். இது உனக்கு அடியே பிடித்து உண்டென்று கருத்தென்கை.

"மருளை, மருளப்பண்ணும்பாட்டை-பாடிக்கொண்டு" என்றந்வயித்து அர்த்த மருளுகிறார் (பண்ணித்யாதி). (நனுங்குகை) மெள்ளப்பாடுகை. ... (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நாமம்பலவும்உடை | ஸஹஸ்ர நாமங்களையுடைய | ஏமத்து | இராக்காலத்திலே |
| நாரண நம்பீ | ஒன்றாலும் குறைவில்லாத ஸ்ரீமந்நாராயணனே!, | காமன் என | "மந்மதனேஇவன்" என்னும்படியாக |
| துளவத்தாமம் | திருத்துழாய் மாலையாலே | பாடி | பாட்டைப்பாடிக் கொண்டு |
| மிக | மூக்கறும்படி [லே | வந்து | (அரணையழித்து)வந்து |
| நாறிடுகின்றீர் | வாஸித்துப்போராநின்றீர்; | இல்லம் | அகத்துக்குள்ளே |
| | | புகுந்தீர் | ப்ரவேசித்தீரே!; |
| | | இதுஎன்? இதுஎன்? இதுஎன்னோ?. | |

வ்யா;—நாலாம்பாட்டு. (நாமம்பலவுமுடை நாரணநம்பீ) "இன்னாருக்குசேஷபூதன், இன்னாருக்கு சேஷபூதன்" என்று நீ படைத்தபேருக்கு எல்லையுண்டோ? சொல்லவேணுமோ? நீர் ஊர் பொது வல்லீரோ? நீர்நிரபேக்ஷரல்லீரோ?. (தாமமித்யாதி) கலக்க வருவார் மாளிகைச்சாந்து நாற்றத்தோடேயோ வருவது.

(காமனெனப்பாடிவந்து) காமன் பாட்டாலே பெண்களை

---

அரு;—நாலாம்பாட்டு. (நாமமித்யாதி) கீழ்ப்பாட்டிலே மருளைக் கொடு பாடினபடியைச்சொல்லுகிறவிடத்தில், "பெண்பிறந்தாரை யெல்லாம் பிச்சேற்றுமவன்"என்று சொல்லக்கேட்டு "நான் உன்னையல்லதுவேறு அறிவனோ" என்னு நின்றுகொண்டு பெருந்தானத்திலே பாடத் துடங்கினான். அதிலே ஈடுபட்டு மாமிமார் முதலானாரறிய இப்படி பாடுவாருண்டோ என்று அதுவே குற்றமாக்கிச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

நாராயணபதத்துக்கு பஹுவ்ரீஹி ஸமாஸபலித ஸௌலப்யத்தைப் பற்ற ஒரு தாத்பர்யமருளிச்செய்து, தத்புருஷ ஸமாஸபலித பரத்வத்தைப் பற்ற வருளுகிறார் (நீர்நிரபேக்ஷரல்லீரோ) என்று. "மிக" என்கையாலே துளவத்துக்குள்ள பரிமளமேயன்றிக்கே, பெண்களுடைய கொங்கைத்தலத்தின் கோயில் சாந்து நாறுநின்றதென்று சொன்னமை தோற்றுகையாலே அருளுகிறார் (கலக்கவித்யாதி). இங்கே கலக்கவரும் போது இட்டமாலை சருகாயன்றோ இருக்கவேண்டுவது என்று கருத்து.

இப்படி அவள் "குறிகள் காணத்துடங்கினாள்"என்று மிகவும் மருளேற்ற வேணுமென்று பாடத்துடங்க, அதுதானும்அகத்தார் அறியில் குற்றமாமென்று அதுக்கு வெறுக்கிறாளென்று தாத்பர்யமருளுகிறார் (காமனித்யாதி). (ச)

வருத்துமாபோலேயாயிற்று, இவனும் ஈடுபடுத்தினபடி. (ஏமத்து) அரணழித்துவருவார் ஆதரமுடையாரன்றோ? பூர்ணராயிருப்பார் அபூர்ணரைப்போலே வரக்கடவதோ? கலக்கவருவார் அப்ரஸித்தமாகவன்றோவருவது; அரணழித்து வரவேணுமோ?. .... (௪)

மூ;—சுற்றும்குழல்தாழச் சுரிகையணைத்து
மற்றும்பலமாமணி பொன்கொடணிந்து
முற்றம்புகுந்து முறுவல்செய்து நின்றீர்
எற்றுக்கிதுவென்னிது வென்னிதுவென்னோ. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குழல் | திருக்குழல்களானவை | பொன் | திருவாபரணங்களையும் |
| சுற்றும் | பிடரியைச்சுற்றிலும் | அணிந்துகொடு | சாத்திக்கொண்டு |
| தாழ | தாழ்ந்தலைய, (அழகுக்குடலாக) | முற்றம்புகுந்து | எங்களகத்து முற்றத்துள்ளே புகுந்து |
| சுரிகை | உடைவாளை, | முறுவல்செய்து | மந்தஸ்மிதம் பண்ணிக்கொண்டு |
| அணைத்து | தரித்துக்கொண்டு, | நின்றீர் | நில்லாநின்றீர்; |
| மற்றும் | மற்றுமுள்ள | எற்றுக்கு | இது எதுக்காக?; |
| பல | பலவகைப்பட்ட | | இது என்? இதுஎன்? இது என்னோ?. |
| மா | பெருவிலையனான | | |
| மணி | ரத்நங்களால் சமைக்கப்பட்ட | | |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (சுற்றும்குழல்தாழ) மயிர்முடித்து அதில் ஈடுபடாமையாலே, குழலைப்பேணாதே வந்தானாயிற்று. (சுரிகையணைத்து) உகப்பார்க்கும் உகவாதார்க்கும் கருவி ஒன்றாயிற்று. சத்ருக்களை இருதுண்டமாகவிட்டு முடிக்கும்; அநுகூலரை அழகாலே கொல்லும். (மற்றும்பலமாமணி) ஆபரணகோடியோடொக்கச்

அரு;—அஞ்சாம்பாட்டு. (சுற்றுமித்யாதி) கீழ்ப்பாட்டிலே காமனெனப்பாடின பாட்டுக்கு இசையாதே, இப்படி பாடுகை ஏதென்னச்சொல்லுகையாலே, அத்தைவிட்டு, சிறுப்பிள்ளைப்பருவம் தோற்ற எட்டுமெட்டாத திருக்குழலோடே மெள்ளவடியிட்டு முற்றத்திலே போகப்பெற்றத்தாலே க்ருதார்த்தனாய்முறுவல்செய்து நிற்க, "இவன் க்ருதார்த்தனைப்போலேமுறுவல்செய்தான்; இதென்ன" என்று அத்தையும் வெறுக்கிறாளென்று ஸங்கதி.

கீழே "கவராகமுடித்து" என்றிருக்க, இங்கே "குழல்தாழ" என்னக்கூடுமோவென்ன வருளுகிறார், மயிரித்யாதி ). (கருவி) ஸாதநம். இப்போது சுரிகைக்கு ப்ரயோஜநமென்னென்ன (ஆபரணேத்யாதி).

சொல்லுகையாலே அதுவும் அழகுக்கு உடலாமத்தனை. பெரு விலையனான ரத்நங்களையுடைத்தான திருவாபரணங்களைச்சாத்தி.

(முற்றம்புகுந்து) (க) "ஜஸ்தவஸ்வதிஷ்டத - கஸ்த்தஏவ வ்யதிஷ்ட்டத" போலே. (முறுவலித்யாதி) புக்கவயஸ்ஸூக்கு மரணமில்லையிறே யென்றிருந்தானாயிற்று. (முறுவல்செய்து) எங்களையும் தோற்பித்தாலன்றோ உனக்கு இதுவெற்றியாவதும். (எற்றுக்கிது) மயிர்முடிபேணுதேவரவேணுமோ? ஆயுதத்தோடே வரவேணுமோ? பின்னை வெற்றிகொண்டாடி நிற்கவேணுமோ?. .... .... (ரு)

மூ;—ஆனுயருமாநிரையு மங்கொழியக்
கூனுயதோர்கொற்ற வில்லொன்றுகையேந்திப்
போனாரிருந்தாரையும் பார்த்துப்புகுதீர்
ஏனோர்கள்முன்னென்னிது வென்னிதுவென்னோ. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆன் ஆயரும் | கோரக்ஷணபரரான இடையர்களும் | ஏந்தி | ஏந்திக்கொண்டு, |
| | | போனார் | போகுமவர்களையும் |
| ஆ நிரையும் | பசுக்களின் திரளும் | இருந்தாரையும் | இருக்குமவர்களையும் |
| அங்கு ஒழிய | இங்கின்றிக்கே வேறிடத்திலே கிடக்க, | பார்த்து | (மெள்ள மெள்ளப்) பார்த்துக்கொண்டு |
| கூனுயது | வளைந்திருப்பதுமாய் | புகுதீர் | உள்ளே புகாநின்றீர்; |
| கொற்றம் | ஐஸ்வர்ய ஸூசகமுமாய் | ஏனோர்கள் | போக (ஜீவ) விரோதிகளாயிருப்பார் |
| ஓர் | ஒப்பற்றதுமான | முன் | முன்னே |
| வில் ஒன்று | ஒரு தநுஸ்ஸை | | |
| கை | திருக்கையிலே | | என் இது என்? இது என்னோ? (கூ) |

இத்தனை ஒப்பனையோடே வருமவன் முற்றத்திலே நிற்பானென்? உள்ளே புகலாமேஎன்ன; இவ்வொப்பனைக்கு அவர்கள் ஒப்பமிட்டாலிறே உள்ளே புகுரலாவது; என்று ஸ்ரீவிபீஷணாழ்வான் அநுமதிஸாபேக்ஷராய் நின்றாப்போலே நின்றானென்கிறார் (க (ஹ) ஸ்த்தஇத்யாதி). உள்ளேபுகப்பெறுதே முற்றத்திலே நிற்பானுக்கு முறுவல்வர ப்ரஸங்கமென்னென்ன வருளுகிறார் (புக்கவித்யாதி). "மரணபயம் கீழ்நாளிலே உண்டாகாதே ஜீவித்தோமே, இனிமேலேஅன்றோ உள்ளது" என்றுஸந்துஷ்டராயிருப்பாரைப் போலே "கதவையடைத்துப் புறத்திண்ணையிலே கிடவாதே, முற்றத்திலே இவர்களைப்பார்த்துக்கொண்டு நிற்கப்பெற்றோமே" என்றுசிரித்திருந்தானென்று கருத்து. அவன் முறுவல்தானே இவர்களுக்கு அறமுருடுபண்ணுகைக்கு உடலாயிற்றென்றருளுகிறார் (எங்களையுமித்யாதி). (நிற்கவேணுமோ) என்றநந்தரம், "சொன்னபோதுதப்பாதே வந்தாலாகாதோ" என்றுசேஷம். (ரு)

(க) ரா-யு-கஎ-கO.

வ்யா;—ஆறும்பாட்டு. (ஆனுயரும்) உம்மையொழியச் செல்லாதார்க்கன்றோநீர் உதவுவது. வ்யதிரேகத்தில் முடியும் பதார்த்தங்களையன்றோ நீர் ரக்ஷிப்பது. (கூனுயதோர் கொற்றவில்லொன்று கையேந்தி) நரம்புபடைத்து வளைந்து ஐஸ்வர்யஸூசகமான வில்லை ஏந்தி. ப்ரணயிநிபக்கல்ஆயுதங்களெல்லாம்கொண்டுவரவேண்டாவே.

(போனாரிருந்தாரையும் பார்த்து) உமக்கு முன்னடி தோற்றதிறே. இருந்தாரையும் போனாரையும் தெரியாதிறே. (ஏனோர்கள் முன்) சத்ருக்கள்முன்பே. உமக்காசையில்லையிறே. பழிவிளைக்கை

---

அரு;—ஆறும்பாட்டு. ( ஆனுயரித்யாதி ) கீழ்ப்பாட்டில் முறுவலாலே மிகவும் ஊடல் தலையெடுத்துநிற்க, "தம்குணம் காணாதாரையெல்லாம்வணங்கப்பண்ணுவது வில்லிறே" என்று, (க) 'चापमानय - சாபமாநய' என்று கைகண்டவராகையாலே, 'காலைப்பிடித்து உள்ளே புகக்கடவோம்' என்னும் சங்கையின்றிக்கே, இருந்தாரையும் போனாரையுமெண்ணாதே புகுகிற நீர் இங்கே ஆரைரக்ஷிக்கவருகிறீர்; ரக்ஷ்யவர்க்கம் உமக்கு அங்கேயிருக்க, புகுவானென்" என்று வெறுக்கிறாளென்று ஸங்கதி.

"ஆனுயரும் ஆநிரையும் உம்மையொழிய அங்குநிற்க" என்றந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (உம்மையித்யாதி). விவரணம் (வ்யதிரேகத்திலித்யாதி). நீ,சொன்னபோது வாராதிருக்கவும்பிழைத்திருந்த எங்களை ரக்ஷிக்கவந்தாயோ? என்று கருத்து. நரம்புடைத்தானவில்லை நாணேறிட்டுக் கையும் வில்லுமாய்நின்ற அழகில் ஈடுபடவேணுமென்று அவன்வர, இவளுக்கு அதுவே குற்றமாய், யுத்தரங்கத்தில் வேண்டின செயலை அந்தரங்கத்திலே செய்யாநின்றாய், அது என்னபிச்சென்கிறாளென்று தாத்பர்யம். (ப்ரணயீத்யாதி).

பழிவிளைக்கப்போனாரையும், மேல்நடக்கிறகார்யமாய் இருக்கிற நாத்தனார் முதலானாரையும் பார்த்துப்புகுகையாலே, உனக்குக்கண்ணும் நெஞ்சும்எங்கே ஓடுகிறதென்று சொல்லுகிறாளென்று விவக்ஷித்தருளுகிறார் (உமக்கித்யாதி). "தங்கள் தங்கள் கார்யங்களுக்குப் போவாரும் இருப்பாருமாயிரார்களோ; இதுவும் குற்றமாகவேணுமோ?. நீ அறியாயோ 'படிறன்படிறு செய்தான்' என்று பூசலிடுவாரை. இப்போது அவர்கள்முன்னேவருகை நல்லதுக்கோ? எங்களைப் பொடியவேணும் என்றன்றோவருவது" என்னும் பாவத்தாலே "ஏனோர்கள் முன்" என்கிறாளென்றருளுகிறார் (உமக்கித்யாதி). ... ... ... (சு)

---

(க) ரா-யு--உக-உஉ.

க்கு வேண்டுவதேயிறே உள்ளது. (என்னிதுவித்யாதி) வ்யதிரேகத்தில் முடிவார்க்கன்றோ நீ உதவுவது. ப்ரணயிநிபக்கல் ஆயுதத்தோடே வரவேணுமோ? இடமறிந்தன்றோவருவது. .... (சு)

மூ;—மல்லேபொருததிரடோள் மணவாளீர்
அல்லேயறிந்தோம் நும்மனத்தின்கருத்தைச்
சொல்லாதொழியீர் சொன்னபோதினுல்வாரீர்
எல்லேயிதுவென்னிது வென்னிதுவென்னோ. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மல் | மல்லர்களோடே | சொன்னபோதினுல் | அப்படி குறிப்பிட்டுச் சொன்னகாலம் கடவாதபடி |
| பொருத | போர்செய்த | வாரீர் | வருகிறீருமில்லை; |
| திரள் | திரண்ட | எல்லே | இதோராஸ்சர்யமே!; |
| தோள் | பு(பூ)ஜங்களையுடைய | இது என் | ஸ்வதந்த்ரரான நீர் பரதந்த்ரரைப்போலே காலம்குறிப்பிட்டுப் போகிறதென்? |
| மணவாளீர் | மணவாளப்பிள்ளாய்! | இது என் | குறித்த காலத்தில் வாராதொழிந்ததென்! |
| நும் | உம்முடைய | இது என்னோ | நிரபராதரைப் போலே நிர்ப்பயமாய் நிற்கிறபடியென்? (எ) |
| மனத்தின் | ஹ்ருதயத்திலுள்ள | | |
| கருத்தை | அபிப்ராயத்தை | | |
| அல்லே | நேற்றிரவு (ஸம்ஸ்லேஷிக்கும்போதே) | | |
| அறிந்தோம் | அறிந்துகொண்டோம்; | | |
| சொல்லாது | (இன்னபோது வருவேனென்றொரு குறிப்பிட்டுச்) சொல்லா | | |
| ஒழியீர் | போகிறீரில்லை; [மல் | | |

வ்யா;—ஏழாம்பாட்டு. (மல்லேயித்யாதி) முருடராயிருப்பாரன்றோ உம்முடைய செவ்விக்கு இட்டுப்பிறந்தவர்கள். ஆசையுடை

அந;—ஏழாம்பாட்டு. (மல்லேயித்யாதி) கீழ்ப்பாட்டிலே எங்களுக்கு அவத்யத்தை விளைக்கவேணுமென்று வந்தீரென்று குற்றம்சொல்ல, இனிஇதுக்கு மறுமாற்றமுண்டோவென்று கவிழ்ந்துகொடு, "நீங்கள் இத்தனை வெறுக்க நாம்செய்தகுற்றமென்" என்றுகேட்கமாட்டாமலிருக்க, அதுபொறுக்கமாட்டாதே வில்வழியே தோளழகிலே கண்வைத்து ப்ரணயம் விஞ்சின ரோஷகாரணத்தையும் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"மல்லரோடே பொருததிரண்டதோளையுடையமணவாளப்பிள்ளை" என்று சப்தார்த்தமாய், உபகாரதாத்பர்யமருளுகிறார் (முருடரித்யாதி). "அல்லே"-

யார்க்குக்கிடையாதிறே. (அல்லேயித்யாதி) இரவுகலக்கிறபோதே "நினைவொன்றும், செயலொன்றுமாயிருந்தது" என்னு மிடமறிந்தோம்.

(சொல்லாதொழியீர் சொன்னபோதினால் வாரீர்) உம்மை நீரறிந்தால் காலத்தைக் குறித்தோபோவது. எங்களையறிந்தால் சொன்னபோதிலேவரவேண்டாவோ?(எல்லே) உறவுமுறையாரைப் போலே நீர்கவிழ்ந்திருக்கிறதென். இங்கேவாரீர். (இதுவென்னிது) உம்மை நீர் அறியவேண்டாவோ ?, எங்களை அறியவேண்டாவோ?

மூ;—புக்காடரவம் பிடித்தாட்டும் புனிதீர்
இக்காலங்கள் யாமுமக்கேதொன்றுமல்லோம்
தக்கார்பலர்தேவிமார் சாலவுடையீர்
எக்கேயிதுவென்னிது வென்னிதுவென்னோ. (அ)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புக்கு | பொய்கையிலே ஏறப் பாய்ந்து, | ஏதொன்றும் அல்லோம் | ஒரு சரக்காகவு மெண்ணப்படுகிறிலோம்; |
| ஆடு அரவம் | படமெடுத்தாடா நின்றகாளிய நாகத்தை | தக்கார் | (உமக்குத்) தகுந்திருப்பவர்களாய் |
| பிடித்து | பிடித்து | பலர் | அளவற்றவர்களுமான |
| ஆட்டும் | (அதன் உயிர்வாடும்படி) ஆட்டின | தேவிமார் | மஹிஷிகளை |
| | | சால | பெரும்பாலும் |
| புனிதீர் | பா(ஞ)வசுத்தியை யுடையவரே! | உடையீர் | பட்டங்கட்டி வைத்திராநின்றீர்; |
| இக்காலங்கள் | இப்போது | எக்கே | இது என்ன கஷ்டம்!; |
| யாம் | நாங்கள் | இதுஎன்?, இதுஎன்?, இதுஎன்னோ?. | |
| உமக்கு | உமக்கு | | |

முன்பேகலக்கிற ராத்ரியிலே தானே, * நகரஸ்த்ரீ கலாலாபாம்ருத பானார்த்தமாக "முருடர்" என்றுபாராதே ஸுகுமாரமான திருத்தோள்களைக் கொண்டு அவர்கள்கண்டு மகிழவேணுமென்றுபோக ஒருப்பட்ட கள்ளத்தனமறிந்தோமென்கிறுளென்று விவக்ஷித்தருளுகிறுர் (இரவித்யாதி).

"உம்மைஅறிந்தால்" என்றதுக்கு நகரஸ்த்ரீகள் பக்கல்போகவேணுமென்று மறைத்துக்கொண்டிருக்கிற கபடந்தானறியிலென்றபடி. "எல்லே" என்றுஸம் போதிக்கைக்கு இத்தாத்பர்ய மருளுகிறுர் (உறவித்யாதி). (வாரீர்) வாராதே போனீரென்றபடி. ... ... ... ... ... (எ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (புக்காடரவம்) ப்ரமாதத்தாலே காலிலே தட்டுகையன்றிக்கே அதின்மேலேபாய்ந்து ஸாஹஸமான செயல்களன்றோ நீர் செய்யுமவை. இடையர்க்கும் இடைச்சிகளுக்கு முண்டான ரக்ஷணத்திலன்றோ நீர் சுத்த பா (ஶ)வராய்ப் பரிமாறுவது. (இக்காலங்கள்) எனக்கு உங்களை யொழியவும் வேறே சிலருண்டோவென்றான்; அதெல்லாம் பண்டைக்காலத்தில் வார்த்தையன்றோ என்கிறாள்.

நான் வேறேயும் சிலரைஅறிவேனோவென்ன; உமக்கு ஸத்ருஶராயிருப்பார் பலருமில்லையோ?. இது தன்னைக் கொண்டாடுமவர்களன்றோ அவர்கள். (எக்கே) இதுவென்ன கஷ்டமோ? ஸாஹஸங்களைச் செய்யக்கடவநீர் இங்குவந்தென்? குறைவற்ற நீர் இங்கு வந்தென்? மேன்மையுடையார் வரக்கடவதோ? .... .... (அ)

மூ;—ஆடியசைந் தாய்மடவாரொடு நீபோய்க்
கூடிக்குரவைபிணை கோமளப்பிள்ளாய்
தேடித்திருமாமகள் மண்மகள்நிற்ப
ஏடீயிதுவென்னிதுவென்னிது வென்னோ?. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருமாமகள் | பெரிய பிராட்டியாரும் | ஆடி அசைந்து | ஆடி அசைந்து |
| மண்மகள் | ஸ்ரீ பூமிப்பிராட்டியும் | குரவைபிணை | திருக்குரவைகோத்த |
| தேடிநிற்ப | தேடிக்கொண்டிருக்க, | கோமளப்பிள்ளாய் | அழகியபிள்ளாய்! (என்று மற்றும் சிலவார்த்தைசொல்வதற்கு முன்காலைப்பிடிக்க) |
| நீபோய் | நீ அவர்களை அகன்று போய் | ஏடீ | வாராய்தோழீ! |
| ஆய்மடவாரொடு | ப(ஶ)வ்யைகளான இடைப் பெண்களோடு | இது என் | இவரை உள்ளே புகரவிட்டதென்? |
| கூடி | ஸம்ஶ்லேஷித்து [டே | இது என்? இது என்? என்கிறாள். (௯) | |

அந;—எட்டாம்பாட்டு. (புக்காடரவமித்யாதி) "சொன்னபடியே வரப்போமோ? ப்ராமாதிகத்துக்குப் பொறுத்துக்கொள்ள வேண்டாவோ?நான் இத்தனைஸாஹஸத்திலே ஒருப்படுவேனோ? எனக்குவேறே சிலர்தானுண்டோ உங்களையொழிய" என்று சிலவிநயபாஷணங்களைப்பண்ண, அவ்வார்த்தைகள் ரோஷநிவர்த்தகங்களாகையாலே நொந்து கொள்ளுகிறுளென்று ஸங்கதி.

(இது தன்னை)எங்களைவிட்டிருக்கிறத்தை. விவரணம் (மேன்மையித்யாதி).

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (ஆடியசைந்து) (திருமாமகள் மண்மகள் தேடிநிற்ப) (௧) "அகலகில்லேனிறையும்" என்று அவர்கள் ஆசைப்பட்டுநிற்க. "ஆய்மடவாரோடேகூடி ஆடி அசைந்துகுரவை பிணைக்கோமளப்பிள்ளாய்" என்றதுக்குக்கருத்து - ஒருவார்த்தை சொல்லுவர்களாக நினைத்து, "வ்யதிரேகத்தால் தரியாதவர்களிருக்க, உன்னைக்கொண்டு கார்யமின்றிக்கே யிருப்பார்க்கன்றோ நீ உதவுவது". என்று சொல்லப்புக்காள்; "இவ்வார்த்தை சொல்வித் தலைக்கட்டினால் பின்னை தனக்கு அவகாசமறும்" என்று பார்த்து அதுக்கு முன்னே காலைப்பிடித்தான்; (ஏடீ) என்று - தோழியைப்பார்த்து "நீயன்றோ புகுரவிட்டுக்கொடுத்தாய்" என்கிறாள். அவன் அதுக்குமேலே சிலவிநயாதிப்ரஸங்கங்களைப் பண்ணினான். (இதுவென்) காலைப்பிடிக்கிறதென்? மார்வத்தெழுத்தென்கிறதென்? வாயிதுவிரலென்கிறதென்?. (௯)

மூ;—அல்லிக்கமலக்கண்ணனை யங்கோராய்ச்சி
எல்லிப்பொழுதூடியவூடல் திறத்தைக்
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை
சொல்லித்துதிப்பாரவர் துக்கமிலரே. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அல்லி | தாதுகளையுடைய | கண்ணனை | திருக்கண்களையுடைய |
| கமலம் | தாமரைப்பூப்போன்ற | | கண்ணபிரானை |

அரு;—ஒன்பதாம்பாட்டு. (ஆடியித்யாதி) கீழ்ப்பாட்டிலே "பலதேவிமார் சாலவுடையீர்" என்றவிதுக்கு வழியுண்டோ? நீங்கள்ரோஷத்தாலே கல்பிக்கிறவித்தனையிறே" என்றான்; அதுக்கு "நித்யாநபாயிநிகளையும்விட்டு எங்களை விரும்பினதில்லையோ? ராஸக்ரீடை பண்ணினதுபொய்யோ?" என்று மூதலித்துவிடவேணுமென்று அத்தைச்சொல்லி ஸம்போதிக்கிறாளென்று ஸங்கதி.

"குரவைபிணைந்த கோமளப்பிள்ளாய்" என்றுஸம்போதித்து, மேலொரு வார்த்தையும் சொல்லாதே, தோழியை ஸம்போதிக்கைக்கு ஸங்கதியருளுகிறார் (வ்யதிரேகத்தாலித்யாதி). விநயாதிப்ரஸங்கத்தை வெளியிடுகிறார் (மார்வத்தித்யாதி). "ஊரோ விந்யஸ்தமக்ஷரம் - உரோவிந்யஸ்த மக்ஷரம்' என்கிறபடியே எழுதிக்கொள்ளுகிறேன், காலில் பெருவிரலைக்கவ்வுகிறேன்" என்கிற உக்திகளென்று கருத்து. ... ... ... ... ... (௯)

(௧) தி-வாய்-௬-௰-௰.

| | | | |
|---|---|---|---|
| அங்கு | அங்கு | தோள் | திருத்தோள்களையுடையரான |
| ஓர்ஆய்ச்சி | ஓரிடைச்சி | கலியன் | ஆழ்வார் |
| எல்லிப்பொழுது | இராக்காலத்தில் [பேசின | சொன்ன | அருளிச்செய்த |
| ஊடிய | ப்ரணய கலஹமாகப் | மாலை | சப்தஸந்தர்ப்பரூபமான இப்பத்துப் பாட்டையும் |
| ஊடல் திறத்தை | வெறுப்புவார்த்தை விஷயமாக, | சொல்லி | (வாயாலே) சொல்லி |
| கல்லில் | மலையைக்காட்டிலும் | துதிப்பாரவர் | எம்பெருமானை ஏத்துமவர்கள் |
| மலி | அதிசயித்த (பலமுடைய) | துக்கம் இலரே | துன்பமற்று வாழப்பெறுவர்கள். (௧௦) |

வ்யா;—பத்தாம்பாட்டு. (அல்லிக்கமலக்கண்ணனை) அரைக்ஷணம் மாறிநிற்கில் கண்ணுஞ்சுழலை யிடும்படியான நோக்கையுடையவன். (அங்கோராய்ச்சி) அவன்தன்னை நூறுபட்டினி கொள்ளுமவளாயிற்று. (எல்லிப்பொழுதூடிய வூடல்திறத்தை) விலக்குவாரில்லாதகாலத்திலே ஈடுபட்டு உரைத்த மஹாபாரதப்பரப்பை. (கல்லின் மலிதோள்) விநயாதி ப்ரஸங்கங்களுக்கெல்லாம் பாடாற்றின தோள் வலியையுடையவர். (சொல்லித்துதிப்பார்) இவருடைய பா(ஞா)வவ்ருத்தி உண்டாகாதிறே. (துக்கமிலர்) அவன்தான்வந்து மேல்விழச்செய்தேயும் இவர்களுக்கு பா(ஞா)வபந்தம் க்னத்திருக்கச்செய்தேயும் ஏறிட்டுக்கொண்ட ஸங்கல்பம் குலையாதபடி நின்றதொரு நிலையுண்டிறே. இதுகற்றூர்க்கு அந்தமிறுக்கில்லை. .... .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## பத்தாம்பத்து எட்டாந்திருமொழி முற்றிற்று.

---

அரு;—பத்தாம்பாட்டு. (அல்லியித்யாதி) "ஓர்"என்றதுக்குத்தாத்பர்யம் (நூறுபட்டினியித்யாதி). "திறத்தை" என்றதுக்குத் தாத்பர்யம் (விலக்குவாரித்யாதி). *வாள்வலியால் மந்திரம் கொண்டவர் வார்த்தையாகையாலே, ஈஶ்வரனையும் பரதந்த்ரனுக்க வல்லமைதோற்ற விசேஷித்தாரென்று தாத்பர்யமருளுகிறுர் (விநயேத்யாதி). ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

# பத்தாம்பத்து ஒன்பதாந்திருமொழி

## புள்ளுருவின் ப்ரவேசம்.

வ்யா;—புள்ளுருவின் ப்ரவேசம். (௧) "ஊடல் கூடலுணர் தல்" என்கிறபடியே முன்பு விஸ்லேஷமாய், அநந்தரம் ஸம்ஸ்லேஷமாய், அது தான்விஸ்லேஷாந்தமாய் நின்றது. ஆற்றாமைகரைபுரண்டு அவன் வருமளவும் கண்டு ஆறியிருக்கவொண்ணாதபடி ஆசை மிகுத்து, இவர்க்ரமப்ராப்தி பற்றாதபடியாயிருக்கிற இவள் தசையை அநுஸந்தித்திருக்கிற திருத்தாயார் "இவளாபத்துக்கு இரையிடுவதோ? அவனை அழைப்பிப்பதோ? ஊரார் சொல்லுகிறபழியைப் பரிஹரிப்பதோ?" என்று பார்த்து, "இனி அவிருத்தமாகப் போகலாம் வழியென்" என்று நினைத்து, "மிடுக்கனல்லேனோ? நினைத்த கார்யங்கள்செய்து தலைக்கட்டுமவனல்லேனோ? குணவானல்லேனோ?

---

அரு;—புள்ளுருவின் ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே ஊடல் தலையெடுத்திருக்கையாலே காலைப்பிடித்து ஸம்ஸ்லேஷித்து, * அல்லிக்கமலக் கண்ணனாய் அவனிருக்க, மீளவும் இத்திருமொழி தொடங்கி "மன்றிலங்கு பாரதத்து" என்னுமளவும், விஸ்லேஷமான போதைக்கு ப்ரஸக்தியென்னென்ன வருளுகிறார் (ஊடல் கூடலித்யாதி). "மானமுடைத்து" என்றதிலே "அல்லில்தான் வந்தபின்னை" என்றத்தாலே ஸம்ஸ்லேஷம்நடந்து, அது ஸாத்மிக்க வேணுமென்று பிரிய, ஊடல் தலையெடுக்க, அத்தைத்தவிர்த்து ஸம்ஸ்லேஷிக்க, அது தானும் அதிமாத்ரமென்றறிந்து பிரிந்திருக்க, அநந்தரம் (௨) "பொன்னம் சேவடிமேல் போதணியப்பெற்றேனே" என்று இவர்வாய்விட்டு ஹர்ஷிக்கும்படி நடந்ததென்னும்படி திருவுள்ளம். (உணர்த)ல்ஸம்ஸ்லேஷம் ஸாத்மியாதென்றறிகை.

அதில் இத்திருமொழிக்கு ப்ரதிபாத்யத்தை அருளுகிறார் (ஆற்றாமையித்யாதி). (இவர் க்ரமப்ராப்தி)நாயகனுடைய க்ரமப்ராப்தி. (இரையிடுகை)நோவுபட வேண்டாவென்கை. அப்படி சொன்னால் ஆற்றாமை மிகுமிறே, (அவிருத்தமாக) என்றதுக்கு பா(வ)வம், நோவுபட வேண்டாவென்றால் அதிகமாய் படிகடந்து புறப்படுவள்; நோவுபடக்கடவையென்றாலும் படிறு விளையும்; அவனை அழைப்பித்தால்அஷ்டகர்ணமாகாமையாலேஅதுவும்பழிக்கு

---

(௧) நா-தி-௬-௧௧. (௨) ௧௧-௰-௯.

வடிவழகிலே துவக்கவல்லவனன்றோ?, என்று நினைத்திருக்கிறு யோ'' என்றுலோகத்தில் ஆற்றாமையுடையாரெல்லாரும் சொல்லிக் கூப்பிட்ட பாசுரத்தை இவளுடைய வ்யஸநத்துக்கு நிதர்ஸநமாகச் சொல்லி, "இவள் இப்பாடுபட நீ ஆறியிருப்பாயே?'' என்று இவள் தசையை அநுஸந்தித்த திருத்தாயார் பாசுரமாயிருக்கிறது. *

மூ;—

புள்ளுருவாகிநள்ளிருள்வந்த பூதனைமாளவிலங்கை
ஒள்ளெரிமண்டியுண்ணப்பணித்த வூக்கமதனைநினைந்தோ
கள்ளவிழ்கோதைகாதலுமெங்கள் காரிகைமாதர்கருத்தும்
பிள்ளைதன்கையில்கிண்ணமே யொக்கப் பேசுவதெந்தைபிரானே.

| பதம். | உரை. |
|---|---|
| எந்தை | எமக்குஸ்வாமியுமாய் |
| பிரானே | உபகாரகனுமானவனே! |
| எங்கள் | எங்களுடைய |
| கள் அவிழ் | மதுஸ்யந்தியான |
| கோதை | மயிர்முடியையுடைய பெண்ணின் |
| காதலும் | அபி(ஞ்)நிவேசத்தையும் |
| காரிகைமாதர் | அழகு மிக்க பெண்களுடைய |
| கருத்தும் | (இவள்காதலைப் பழிக்கையில்துணிவையும் (புத்தி பண்ணுதே) |
| பிள்ளைதன் | சிறுப்பிள்ளைகளுடைய |
| கையில் | கையிலுள்ள |
| கிண்ணமேஒக்க | கிண்ணியை நினைத்த போதுவாங்கக் கூடுமென்றுப் போலே (ஆறியிருப்பதுடன்,) |

| பதம். | உரை. |
|---|---|
| பேசுவது | அவ்விருப்புத்தோற்றப் பேசுகிறவிது, |
| புள் உருவு ஆகி | பிள்ளைகளை அனுங்கப் பண்ணும், சந்திக் காக்கைகள் வடிவுடையளாகி |
| நள்ளிருள் | மத்யராத்ரத்திலே |
| வந்த | (வஞ்சகம் செய்ய) வந் |
| பூதனை | பூதனையானவள் [த |
| மாள | முடியும்படியாகவும், |
| ஒள் எரி | ஒளிபொருந்திய அக்நி பகவான் |
| இலங்கை | லங்கையை |
| மண்டி | பொருந்தி |
| உண்ண | புஜிக்கும்படியாகவும் |
| பணித்த | செய்தருளின |
| ஊக்கமதனை | மிடுக்கை |
| நினைந்தோ | திருவுள்ளம்பற்றியோ? (௧) |

உடலாமென்று, தானே போய்ப் பெண்படியை அப்போது அறிவித்தமை. (ஆறியிருப்பாயே என்று) என்றவநந்தரம், "திருமுன்பே விண்ணப்பம் செய்தாராகையால்'' என்று கூட்டுவது; இல்லாவிடில் "திருத்தாயார்'' என்றதுக்கு க்ரியை இல்லையிறே. ... ... ... ... ... ... *

வ்யா;—முதற்பாட்டு. (புள்ளுருவித்யாதி) கண்காணவொண்ணாத ஆபத்தைப் பரிஹரித்த நமக்கு இதொன்றும் பழியாய்த்தலைக் கட்டப் புகுகிறதோ? என்று கொண்டிருக்கிறாயோ?. (புள்ளுரு) "புள்" என்று சிலவுண்டாயிற்று. அவை மேலேஸஞ்சரிக்க, பிள்ளைகள் அனுங்குவர்களாயிற்று. அப்படியே புள்ளினுடையப்ரகாரத்தையுடையளாய்க்கொண்டு மத்த்யராத்ரத்திலே வந்த பூதனையானவள் முடியும்படியாகப் பண்ணின. "ஊக்கமதனைநினைந்தோ" என்றுக்ரியை. (நள்ளிருள்) பிறரும் பரிஹரிப்பாரன்றிக்கே தானுமறியாத காலத்திலே யாயிற்றுவந்தது. (இலங்கையித்யாதி) அக்நியானது இவனுடைய தோளை அண்டைகொள்ளுமதுக்குமுன்பு ராவணனுக்கு அஞ்சி, சோற்றுக்குவேண்டுமளவும்ஸஞ்சரித்து உடம்பு வெளுத்தாயிற்றுத்திரிவது. இவன்தோளை அண்டைகொண்ட அக்நியானது தன் நிறம்பெற்றது. "வயிறுநிரம்ப புஜிப்பிற்றிலோமோ" என்று உன் மிடுக்கை நினைத்தோ நீ ஆறியிருக்கிறது.

(கள்ளவிழித்யாதி) இவள் மாலையையும், மயிர் முடியையும் கண்டு நீர்காதலிக்கக்கடவ வித்தையன்றோ இவள் காதலிக்கிறது. (காரிகையித்யாதி) "ப்ராப்தவிஷயத்தில் காதலன்றோ" என்றிராதே இத்தைப் பழியாகச் சொல்லுகிற ஊரில் ஸ்த்ரீகளுடைய துணிவையும்புத்திபண்ணாதே. (பிள்ளையித்யாதி) "பலவான்கள்கையில்கிண்ணியிறே வாங்கவரிது; பாலராயிருப்பார் கையிலது நினைத்தபோது வாங்குகிறோம்" என்றிருக்கிறப்போலே ஆறியிருக்கிறாயோ?. (க)

மூ;—

மன்றில்மலிந்துகூத்துவந்தாடி மால்விடையேழுமடர்த்தாயர்
அன்றுநடுங்கவாநிரைகாத்தவாண்மைகொலோவறியேன்நான்
நின்றபிரானேநீள்கடல்வண்ணா நீயிவள்தன்னைநின்கோயில்
முன்றிலெழுந்தமுருங்கையில்தேனும் முன்கைவளைகவர்ந்தாயே.

---

அரு;—முதற்பாட்டு. (புள்ளித்யாதி) ஸ்வாபதேச தாத்பர்யம் (கண்காணவித்யாதி). (இதொன்றும்) நாலுநாள் இவ்விபூதியிலே வைக்கை. (சில) சந்திக்காக்கைகள். "பணித்த" என்றதினர்த்தம் (பண்ணின) என்றது. "ஒள்ளெரி" என்றதுக்குத் தாத்பர்யம் (அக்நியித்யாதி). உட்கருத்தை விசேஷித்தருளுகிறார் (வயிறித்யாதி).

(இத்தை) என்றவநந்தரம் "மறந்துன்னை" என்று சேஷம், "எந்தைபிரானே" என்றத்தைக்கடாக்ஷித்து. "காரிகை மாதர்" ஸௌந்தரிகளான ஸ்த்ரீகள்; அவர்கள் கருத்து இன்னதென்றருளுகிறார் (ப்ராப்தேத்யாதி). (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நின்ற | (திருமலையிலே) நின்றருளின | ஆநிரை | பசுக்களின் திரளை |
| பிரானே | உபகாரகனே! | காத்த | ரக்ஷித்தருளின |
| நீள் | விசாலமான | ஆண்மைகொலோ | பௌருஷத்தைத் (திருவுள்ளம்பற்றியோ), |
| கடல் | கடல்போன்ற | நின் | உன்னுடைய |
| வண்ணா | வடிவையுடையவனே! | கோயில்முன்றில் | கோயில் முற்றத்திலேல் |
| நீ | க்ருஷ்ணவதாரம் பண்ணினநீ, | எழுந்த | உண்டான |
| மன்றில் | நாற்சந்தியிலே | முருங்கையில் | முருங்கை மரத்தின் |
| மலிந்து | பொருந்திநின்று | தேனும் | தேன் எளிதானுப் போலே |
| உவந்து | திருவுள்ளமுகந்து | இவள் தன்னை | இப் பெண்பிள்ளையையும் (எளியளாக நினைத்து) |
| கூத்து ஆடி | (குடக்கூத்துமுதலிய) கூத்துக்களையாடி, | முன் கைவளை | (இவளுடைய) முன் கையிலுள்ள வளையை |
| மால் | கறுத்தநிறத்தையுடைய | கவர்ந்தாய் | கைக்கொண்டருளினு |
| விடை எழும் | ரிஷபங்களேழையும் | நான் அறியேன் | (உன்கருத்தை) நான் அறிகிறிலேன். |
| அடர்த்து | நிரஸித்து, | | |
| அன்று | இந்த்ரன் கல்மாரிபொழியும் காலத்திலே | | |
| ஆயர் | இடையர்களுடைய | | |
| நடுங்க | வருந்திநிற்க, | | |

வ்யா;—இரண்டாம்பாட்டு. (மன்றிலித்யாதி). "ஒருவர் இருவரன்றிக்கே, ஊராக அநுபவிக்கும்படி குருகுலவாஸம் பண்ணினோர்க்கும் ஆடவொண்ணாத கூத்துக்களையன்றோ நாம் உபகரித்தது; ஆன பின்பு நமக்கு இதுவொன்றும்பழியாகப்புகுகிறதோ?" என்றிருக்கி

அரு;—இரண்டாம்பாட்டு. (மன்றிலித்யாதி)கீழ்ப்பாட்டிலே "பூதனையை முடித்துப் பஞ்சலக்ஷங்குடிப் பெண்களுக்கும் என்னைக் கொடுத்தேனே" என்னவே "அதுவே பெருமையாக என்பெண்ணையிட்டுப்பழியில்லை" என்றிருக்கிறாயோ? என்றாள். இத்தைக்கேட்டு "நான் இவ்வூரில் பெண்களுக்காகக் கூத்தும் ஆடவில்லையோ? விடைகொன்றது தானில்லையோ? மலைசுமந்ததில்லையோ? ஒருமலையேறி வருவாருண்டோ? என்று எதிர்பார்த்து நின்றதில்லையோ" என்று, இவற்றையெல்லாமறியும்படி நிற்க, அத்தாலேயோ இப்படி ஆறியிருக்கிறாயென்று சொல்லுகிறாரென்று ஸங்கதி.

ருயோ?. (உவந்தாடி) (௧) "ஶ்ரு ஶ்ரூஷா-பக்தாநாம்" என்கிறபடியே "இவர்களறிந்து கொண்டாடிற்றிலர்களேயாகிலும் நாம்தாம் இவர்களுக்காகப்பெற்றோமிறே" என்று உகந்தானுயிற்று. (மால்விடையித்யாதி) ஊருக்காக உபகரித்தபடி சொல்லிற்று. இனி ஒருத்திக்காக உபகரித்தபடி சொல்லுகிறது. "நப்பின்னைப்பிராட்டியோட்டை கலவிக்கு இடைச்சுவராயிருந்த வ்ருஷபங்களேழையும் அழியச்செய்த மஹாகுணத்திலே, இந்தகுணஹாநியொன்றும் நிரவிப்போகாதோ" என்றிருக்கிறுயோ? (ஆயரன்றுநடுங்க) (௨) "கோகோபீஜநஸங்குலம்-அதீவார்த்தம்" - கோகோபீஜநஸங்குலம் - அதீவார்த்தம்" என்கிறபடியே பசுக்களும் இடையரும் நோவுபடாதபடி ரக்ஷித்த ஆண்பிள்ளைத்தனத்தை நினைத்தோ? அறிகிறிலேன்.

(நின்றபிரானே) அவ்வவதாரத்திலே இழந்தார்க்கும் இழக்கவேண்டாதபடி திருமலையிலேவந்து நிற்கிறவனே! (௩) "குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன்" (௪) "நின்றவேங்கடம்" (௫) "வானவர்கள் சந்திசெய்யநின்றான்" என்னக்கடவதிறே. (நீள்கடல்வண்ணா) ஒருகடல் செவ்வேநின்றாப்போலேயாயிற்று எழுந்தருளிநிற்கும் நிலை. (நீ இவள்தன்னை) ரக்ஷகத்வத்தில் முற்பாடனாயிருக்கிற நீ உன்னுடைய ரக்ஷகத்வமும் போராதபடியான த்வரையையுடைய இவளை. கையும் வளையுமான சேர்த்தி கண்டு கொண்டாடும் நீயே அநுபவித்து விடப்புக்காயோ?. .... .... .... .... (௨)

---

கூத்துப்பார்ப்பாரன்றோ உகக்க ஆடுப்பது; ஆடுவார் உகக்கையைச்சொல்லுவானென்னென்ன வருளுகிறார் (பக்தாநாமித்யாதி).

"நின்ற பிரான்" என்றால், "திருமலை" என்கைக்கு ஜ்ஞாபகமென்னென்ன வருளுகிறார் (குன்றமித்யாதி), *மயர்வற மதிநலம்பெற்ற திருத்தாயாராகையாலே க்ருஷ்ணனை வேங்கடத்தானாகவும் சொன்னாளென்று திருவுள்ளம். "உன்னுடையகோயில், முன்னிலே-முற்றத்திலே, எழுந்தமுருங்கைமரத்தில் தேன் எளிதானாப்போலே, இவளையும் எளிதே வளைகழலப் பண்ணினாயோ" என்று சப்தார்த்தமாய் தாத்பர்யமருளுகிறார் (கையுமித்யாதி). (அநுபவித்துவிட) இவளை அநுபவிக்கவேண்டாவோ என்று கருத்து. ... ... (௨)

---

(௧) ஜிதந்தா-௧-௫. (௨) வி-பு-௫-௧௧-௧௩. (௩) தி-வாய்-௩-௩-அ. (௪) தி-வாய்-௬-௩-அ. (௫) அமலனா-௩.

மூ;—

ஆர்மலியாழிசங்கைகொடுபற்றி யாற்றலையாற்றல்மிகுத்துக்
கார்முகில்வண்ணாகஞ்சனை முன்னம் கடந்தநின் கடுந்திறல்தானே
நேரிழைமாதைநித்திலத்தொத்தை நெடுங்கடலமுதனையாளை
ஆரெழில்வண்ணா வங்கையில் வட்டாமிவளெனக்கருதுகின்றாயே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கார்முகில் | காளமேகம்போன்ற | நேர் | விலக்ஷணமான |
| வண்ணா | திருநிறத்தை யுடையவனே! | இழை | ஆபரணங்களையுடையவளாய் |
| ஆர் எழில் | மிக்க அழகையுடைய | நித்திலத்தொத்தை | முத்துமாலை போன்றவளாய் |
| வண்ணா | வடிவையுடையவனே! | நெடு | மிகவும்பரம்பின |
| முன்னம் | க்ருஷ்ணாவதாரத்திலே | கடல் | ஸமுத்ரத்திலுண்டான |
| ஆர்மலி | கூர்மைமிக்கிருந்துள்ள | அமுது அனையாளை | அம்ருதம் போன்றவளுமான |
| ஆழியொடு | திருவாழியோடே | மாதை | இப்பெண்பிள்ளையை |
| சங்கு | ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் | இவள் | "இவள் |
| பற்றி | (திருக்கைகளில்)ஏந்தி, | அங்கையில் | அழகிய கையிலுள்ள |
| ஆற்றலை | மிடுக்கை | வட்டாமென | கருப்புக்கட்டி போல் அநுபவிக்கவும் உபேக்ஷிக்கவும் தக்கவள்" என்று |
| ஆற்றல்மிகுத்து | மிகவும்ப்ரபலப்படுத்தி | கருதுகின்றாய் | நினைத்திருக்கிறாய்? |
| கஞ்சனை | கம்ஸனை | | |
| கடந்த | நிரஸித்துப்பொகட்ட | | |
| நின் | உன்னுடைய | | |
| கடு | பலிஷ்டமான | | |
| திறல்தானே | பராபிபவநஸாமர்த்யத்தை நினைத்தோ, | | |

வ்யா;—மூன்றாம்பாட்டு. (ஆர்மலியாழி சங்கொடுபற்றி) கூர்மை மிக்கிருந்துள்ள திருவாழியோடே ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் கூடப்பிடித்து. (ஆற்றலை) "ஆற்றல்" என்று - மிடுக்காகவுமாம்;

---

அரு;—மூன்றாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே நீயே இவளை அநுபவித்துக் கொண்டிருக்கிறிலை யென்றாள்; அத்தைக் கேட்டு "நான்கையும் திருவாழியுமாய், மற்றை ஆழ்வார்களுமாய் வந்து பிறந்து அநுபவ விரோதிகளைக் காற்கடை கொண்டதும்முன்பு உனக்காகவன்றோ" என்ன; "அத்தைநினைத்தோ பரமபோக்யதையை இப்படிப்பட விட்டு வைத்தது" என்று உபாலம்பநம் தோற்றச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

பொறையாகவுமாம். (ஆற்றல் மிகுத்து) ஒருஜகதுபஸம்ஹாரத்துக்குப் போந்திருக்கச்செய்தே கம்ஸனளவிலேயாம்படி அமைத்து. (கார்முகில்வண்ணா) கம்ஸனை அமுக்கி, மேலேஏறிநின்றபோதை வடிவழகு. (கஞ்சனித்யாதி) அவன்தான் நினைத்தசெயலை அவன்றன்னோடே போம்படியாகப் பண்ணின பராபிபவந ஸாமர்த்யத்தை நினைத்தோ?

(நேரிழைமாதை) விலக்ஷணமான ஆபரணத்தை யுடையவளை. (நித்திலத்தொத்தை) அணைத்தால் தாபமெல்லாம் ஆற்றவற்றாயிருக்கை. (நெடுங்கடலமுதனையாளை) பெறுதற்கரியளானவளை. (ஆரெழில்வண்ணா) இவளை இப்படிப்பண்ணவல்ல வடிவழகையுடையவனே! (அங்கையில் வட்டாம்) கையிலிருந்த கருப்புக்கட்டி-தின்னவுமாய், பொகடவுமாயிருக்குமிறே. அப்படியே நினைத்திருக்கிறாயோ இவளையும். .... .... .... .... .... .... (௬)

மூ;—

மல்கியதோளும் மானுரியதளு முடையவர்தமக்குமோர்பாகம்
நல்கியநலமோநரகனைத் துலைத்தகரதலைத்தமைதியின்கருத்தோ [ய்
அல்லியங்கோதையணிநிறங்கொண்டு வந்துமுன்னேநின்றுபோகா
சொல்லியென்நம்பி இவளை நீ யுங்கள்தொண்டர்கைத் தண்டென்றவாறே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மல்கியதோளும் | மிகுந்ததோள்களையும் | நல்கிய | (இருப்பிடமாகக்) கொடுத்த |
| மான்உரிஅதளும் | மானின் உடலில்உரிக்கப்பட்ட தோலையும் | நலமோ | சீலாதிசயத்தை (நினைத்தோ,) (அல்லது) |
| உடையவர்தமக்கும் | உடையவனை ருத்ரனுக்கும் கூட | நரகனை | நரகாஸுரனை |
| ஓர்பாகம் | (தன்திருமேனியில்) ஒரு பாக (த்தை) | துலைத்த | நிரஸித்த [டான |
| | | கரதலத்து | திருக்கையிலே யுண் |
| | | அமைதியின் கருத்தோ | மிடுக்கைநினைத்தோ; |

"ஆற்றலை-மிடுக்கை, ஆற்றல்மிகுத்து-பொறுமை மிகுத்து" என்று சப்தார்த்தமாய்த் தாத்பர்யமருளுகிறார் (ஒருவித்யாதி).

"நித்திலம்-முத்துக்களையுடைய, தொத்தை-மாலையை" என்றருளுகிறார் (அணைத்தாலித்யாதி). ... ... ... ... ... ... (௬)

| | | | |
|---|---|---|---|
| அல்லி | செவ்விமாலையாலே | போகாய் | போகிறாயில்லை ; |
| அம் | அழகிதான | நீ | நீ [த்திலே |
| கோதை | மயிர்முடியை யுடைய இப்பெண் பிள்ளை | இவளை | இப்பெண்பிள்ளை திற |
| | | உங்கள்தொண்டர் | உமது சேஷபூதர்க்குடைய |
| அணி | விலக்ஷமான [யின் | கை | கையிலுள்ள |
| நிறம் | நிறத்தை | தண்டு என்று | வில்லைப்போலே (வே |
| கொண்டு | அபஹரித்துக் கொண்டுபோனது மன்றி, | ஆறு | ண்டும்போது பெறலாம்) என்றப்ரகாரம் நினைத்திரா நின் |
| முன்னே | இவள்முன்னே | நம்பீ | பூர்ணனானவனே! [றாய்; |
| வந்துநின்று | (ஒருகால்) வந்துநின்று (உன்வடிவழகைக்காட்டி) | சொல்லிஎன் | பரக்கச்சொல்லிப் பயனென்? ; (௪) |

வ்யா;—நாலாம்பாட்டு. (மல்கியவித்யாதி) பலதோள்களையுடையனாய், மானினுடைய தோலென்னுதல்; அன்றிக்கே, மஹானான ஆனையினுடைய தோலையுடையனாய், “தன் தபோபலத்தாலே நான் என் கார்யம்செய்து கொள்ளவல்லேன்” என்றுகொண்டு துர்மாநத்தை யுடையனாயிருக்கிற ருத்ரனுக்கும் திருமேனியிலே இடம்கொடுத்த சீலாதிசயத்தை நினைத்திருக்கிறாயோ? (நரகனைத் துலைத்த) நரகனாகிறவஸுரனை நிரஸித்த கையில் மிடுக்கைநினைத்தோ?.

(அல்லியங்கோதை) செவ்விமாலையையுடைத்தான மயிர்முடியையுடைய இவள் விலக்ஷணமான நிறத்தைக் கொண்டு. (முன்னேநின்று போகாய்) உன்னுடைய வடிவழகை ஒருகால் காட்டிக்கொண்டு போகிறிலை. பாவநாப்ரகர்ஷத்தாலே உருவு வெளிப்பாட்

---

௮௫;—நாலாம்பாட்டு. (மல்கியவித்யாதி) “நிரதிசய போக்ய பூதையானவளை அங்கையில் வட்டாக நான் நினைத்தேன்” என்றாய் ; “நான், தோளும் தோலுமாயிருக்கிற ஓடெடுப்பானுக்கும் உடம்பு கொடுத்திருக்கும் குணவானன்றோ? பதினாறாயிரம் பெண்களுக்காக நரகாஸுரனை வென்றதில்லையோ? இப்படி பெண்பித்தனான என்னை இப்படி சொன்னால் கேள்வியுண்டோ” என்ன; ஓம், அத்தை நினைத்தோ என் பெண்ணை உருவுவெளிப்பாட்டிலே நின்று நலிகிறாயென்று வெறுக்கிறாளென்று ஸங்கதி.

“தமக்கும்” என்றதுக்குத் தாத்பர்யம் (துர்மாநத்தை யித்யாதி). (௪)

டாய் முன்னேநின்று போகிறிலே. (சொல்லியென்நம்பி) பரக்கச் சொன்னத்தால் என்னகார்யமுண்டு. (இவளை நீ உங்கள் தொண்டர்கைத் தண்டென்றவாறே) (௧) "சாபமாநய ஸௌமித்ரே - சாபமாநயஸௌமித்ரே" என்று-நினைத்தபோது வாங்கிக்கார்யம் கொள்ளலாம்படி உரியவடியார்கையில் ஆயுதத்தோபாதியாக நினைத்திரா நின்றாய். .... .... .... .... .... .... .... (௪)

மூ;—

செருவழியாதமன்னர்கள்மாளத் தேர்வலங் கொண்டவர்செல்லும்
அருவழிவானமதர்படக்கண்ட வாண்மைகொலோவறியேன்நான்
திருமொழியெங்கள்தேமலர்கோதை சீர்மையைநினைந்திலையந்தோ
பெருவழிநாவல்கனியிலுமெளிய ளிவளெனப் பேசுகின்றாயே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செரு | யுத்தரங்கத்திலே | தேன்மலர் | மதுஸ்யந்தியான மலர்களையுடைய |
| அழியாத | (இதற்குமுன்பு) தோல்வியடையாத | கோதை | மாலையையணிந்த இப்பெண்பிள்ளையின் |
| மன்னர்கள் | ராஜாக்களுடைய | சீர்மையை | வைலக்ஷண்யத்தை |
| மாள | முடியும்படியாக, (ஆயுதந்தரியோமென்ற ஸங்கல்பத்தால்) | நினைந்திலை | புத்திபண்ண மாட்டிற்றிலை; |
| தேர்வலம்கொண்டு | அத்தேரின் மிடுக்கையே கொண்டு, | இவள் | "இப்பெண்பிள்ளையானவள் |
| அவர் | அந்தராஜாக்கள் | பெருவழி | பெருவழிக்கரையில் விழுந்துள்ள |
| செல்லும் | போகும்படி, (வெகுநாள் போவாரில்லாமே புல்லெழுந்து கிடப்ப | நாவல்கனியிலும் | நாவற்பழத்திலும் |
| அரு | அரிதான [தறுவல்) | எளியள்என | எளியவளென்று (அபேக்ஷிக்கவும் உபேக்ஷிக்கவும்கூட அநர்ஹை என்று) |
| வழி | வழியையுடைத்தான | | |
| வானம் | வீரஸ்வர்கத்தை | | |
| அதர்பட | பெருவழியாம்படியாக | | |
| கண்ட | கடாக்ஷித்தருளின | பேசுகின்றாய் | பேசாநின்றாய்?; |
| ஆண்மை கொலோ | ஆண்பிள்ளைத்தனத்தை நினைத்தோ, | நான் | நான் |
| | | அறியேன் | (உன்கருத்தை) அறியமாட்டிற்றிலேன்; |
| எங்கள் | எங்களுக்கு பவ்யையாய் [ளாய் | அந்தோ | இப்படியுமொருபாபமே!. (௫) |
| திருமொழி | இனியபேச்சையுடைய | | |

(௧) ரா-யு-௨௧-௨௨.

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (செருவழியாத) இதுக்கு முன்பு பூசலில் முதுகுகாட்டிப்போகாத ராஜாக்களடைய முடியும்படியாக. (தேர்வலங்கொண்டு) ஆயுதமெடுக்க வொட்டாமே, அத்தேரின் மிடுக்கையே கொண்டு கேவலம்போகவரிய வீரஸ்வர்கத்துக்குப் போவாரில்லாமையாலே புல்லெழுந்து கிடந்தவற்றைப் பெருவழி யாம்படிகண்ட ஆண்பிள்ளைத் தனத்தை நினைத்தோ செய்தது.

(திருமொழி) (௧) "மதுராமதுராலாபா-மதுரா மதுராலாபா" என்னும்படியான பேச்சையுடையவளை. செவ்விமாறுத மாலையை யுமுடையவளை. (சீர்மையை நினைந்திலை) இவள்வாசி ஒன்றையும் புத்திபண்ணிற்றிலை. (அந்தோ) இதுக்கு நான் எத்தைச் செய்வேன். (பெருவழிநாவல்) பெருவழிக்கரையில் நாவலில் விழுந்தபழமானது குனிந்தெடுக்கவுமாய், தவிரவுமாயிருக்குமிறே. அவ்வோபாதியும் நினைத்திருக்கிறிலையாயிற்று இவளையும். .... .... .... (௫)

மூ;—

அரக்கியராகம்புல்லென வில்லாலணிமதிளிலங்கையார் கோனைச்
செருக்கழித்தமரர்பணிய முன்னின்றசேவகமோ செய்ததின்று
முருக்கிதழ்வாய்ச்சி முன்கைவெண்சங்கம்கொண்டு முன்னேநின்றுபோகாய்
எருக்கிலைக்காக வெறிமழுவோச்ச லென்செய்வதெந்தை பிரானே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அரக்கியர் | ராக்ஷஸஸ்த்ரீகளுடைய | மதிள் | மதிள்களாலே சூழப்பட்ட |
| ஆகம் | மார்பானது | இலங்கையார் | லங்கையிலுள்ள ராக்ஷஸர்களுக்கு |
| புல்லென | ஶூந்யமாய்த் தோற்றும்படியாக, (மங்கள ஸூத்ர ஹீகமா [௧) | கோனை | நிர்வாஹகனுன ராவணனை |
| அணி | அழகிய | | |

அரு;—அஞ்சாம்பாட்டு. (செருவித்யாதி). "சொல்லிஎன்நம்பி" என்று, நான் எத்தைச் சொன்னாலும், நீர் சொன்னத்தைச் சொல்லிற்றத்தனை போக்கி, என்னிடத்தில் குணக்ரஹணம் பண்ணிற்றிலை; நான் ஒருத்திக்காக மஹாபாரதமெல்லாம் நடத்தினது லோகப்ரஸித்தமன்றோ? நீஒருத்தி-குற்ற மாகக்கொள்ளில் நான் செய்வதென்னென்ன; இங்கே ஒருமஹாபாரதம் நடக்கவேண்டியிருக்க, இத்தை உபேக்ஷித்ததாலே †குறைப்பட்டிருக்கிறுயோ வென்கிறுளென்று ஸங்கதி.

தேமலர் - தேனையுடைய மலரென்றருளுகிறுர் (செவ்வியித்யாதி). (௫)

(௧) ரா-ஸு-௬௬-௧௫.  † அநந்விதம்.

| | | | |
|---|---|---|---|
| வில்லால் | ஒருவில்லாலே | வெண் | வெள்ளிதான |
| செருக்கு அழித்து | செருக்கற்றவனாக்கி (பின்பு பிராட்டிக் [காக) | சங்கம் | வளை |
| அமரர் | தேவஜாதிகள் | கொண்டு | கழற்றிக்கொண்டு போனதுமன்றி |
| முன் | திருமுன்பே | முன்னே நின்று | (ஒருகால்) இவள் முன்னே வந்து நின்று (வடிவைக் காட்டி) |
| பணிய | (எத்தாநின்று கொண்டு)தொழச்செய்தேயும் | போகாய் | போகிறிலை; |
| நின்ற | (அவர்களுக்கு முகங் காட்டாதே) நின்ற | எந்தை பிரானே | எங்களுக்கு உபகாரகனே! |
| சேவகமோ | வீரப்பாட்டையோ | எருக்கிலைக்காக | (தன்னடையே பழுத்து நெகிழ்ந்து விழுகிற) எருக்கிலைக்காக |
| இன்று செய்தது | இப்போது (இப்பெண் பிள்ளை பக்கலில்) செய்து போருவது; | எறி | எறியப் படும் தன்மையையுடைய |
| முருக்கிதழ் | முருக்கம்பூப்போலே (செவ்விதான) | மழு | கோடாலியை |
| வாய்ச்சி | அதரத்தையுடையளான இவளுடைய | ஓச்சல் | போட எடுக்குகை |
| முன்கை | முன்கையிலணியப்பட்டிருந்த | என் செய்வது | எதுக்காக? (௬) |

வ்யா;—ஆறும்பாட்டு. (அரக்கியராகம்) ராக்ஷஸஸ்த்ரீகளுடைய கழுத்திலே மாங்கல்ய ஸூத்ரமானது போக. (வில்லால்) ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கும் அழியாதவூரை வில்லாலே அழித்தான். (அணி மதிளிலங்கையார்கோனை) "அவ்வூருக்கு நான்கடவேன்" என்று அபிமாநித்திருக்கிறவனை. (செருக்கழித்து) முன்னடிதோற்றாதே மூலையடியே வர்த்தித்தசெருக்கை அழித்து. (அமரர்பணிய முன்னின்ற)

---

அரு;—ஆறும்பாட்டு. (அரக்கியரித்யாதி) "சீர்மையை நினைந்திலையந்தோ" என்று மிகவும் குற்றம்சொல்லாநின்றாய்; உன்பெண், கருத்தறிந்து பரிமாறவல்லளோ" என்று அச்சமுறுத்த; உன்கருத்தை நித்யாநபாயிநியானவள் அறிந்தாளோ? அவள்மேலே சீறினாப்போலே, சீறுகைக்குப் போராது கிடாயென்கிறாளென்று ஸங்கதி.

"அரக்கியருடைய ஆகம் - சரீரமானது, புல்லென-க்ஷுத்ரமாகத் தோற்றும்படி" என்று சப்தார்த்தமாய், பலிதார்த்தமருளுகிறார் (ராக்ஷஸேத்யாதி).

ராவணவதாநந்தரம் பிராட்டி எழுந்தருளிவர, பெருமாள் முகங் கொடாதேயொழிய, தேவஜாதிவந்து (க) "भवान्नारायणो देवः - பவாந்நாராயணோதேவ:" என்றும், (உ) "सीता लक्ष्मीर्भवान्विष्णुः-ஸீதா லக்ஷ்மீர் பவாந்விஷ்ணு:" என்றும் உணர்த்த, முகம்கொடாதே நின்ற அச்சேவகம்போலேயிருந்ததி இச்சேவகமும்.

(முருக்கிதழ்வாய்ச்சி) முருக்கம்பூப்போலேயிருக்கிற அதரத்தையுடையளாயிருக்கிறவள் கையில் வளையைக்கொண்டு. (முன்னே நின்றுபோகாய்) ஒருகால் வடிவைக்காட்டிப்போகிறிலையென்னுதல்; உருவு வெளிப்பாட்டாலே முன்னே நின்றுபோகிறிலையென்னுதல். (எருக்கிலைக்காக) தன்னடையே பழுத்து நெகிழ்ந்து விழுகிறத்தை எறிமழுவைக்கொண்டு வ்யாபரிக்கவேணுமோ?. .... .... (சு)

மூ;—

ஆழியந்திண்டோரரசர் வந்திறைஞ்ச வலைகடலுலகுமுனுண்ட
பாழியந்தோளோராயிரம்வீழப் படைமழுப்பற்றியவலியோ [ய்
மாழைமென்னோக்கிமணிநிறங்கொண்டுவந்துமுன்னேநின்றுபோகா
கோழிவெண்முட்டைக்கென்செய்வதெந்தாய் குறுந்தடிநெடுங்கடல்வண்ணா.

(முகங்கொடாதே) என்றவநந்தரம் "நின்றார்" என்று சேஷம். இல்லாவிடில் "பெருமாள்" என்கிறது அந்வயியாதிறே.

"எறி-எறியப்படும், மழு-பரசுவை, ஓச்சல்-போட எடுக்கை" என்று சப்தார்த்தமாய், விஶ்லேஷத்தாலே க்ருஶையாயிருக்கிறவள்மேலே "கருத்தறியாதவள்" என்று குற்றம் சொல்லவேணுமோவென்று தாத்பர்யமருளுகிறார் (தன்னடையேயித்யாதி). ... ... ... ... ... (சு)

அ௫;—ஏழாம்பாட்டு. (ஆழியித்யாதி) எருக்கிலைக்குக் கோடாலிவேணுமோ என்றாய், உன்னுடைய பெண்ணினுடைய மேன்மையும், "எனக்கெதிருண்டோ" என்கிற கர்வமும் குறைவற்று, "லோகத்தில் என்னைப்போலே அழகியாரில்லை" என்று நான் வந்தபோது முகம்கொடாதே, "பெண் என்னைப் படுத்தினபாடு நீ அறியாய்" என்றுகொண்டு, மழுகொண்டு எனக்கெதிரில்லையென்று உலகமெல்லாம் கொண்டவலியை அறியாயோ? என்ன; மிகவும் அஞ்சி, என் பெண்பிள்ளை ஒன்றுமறியாப்பெண்; அதிஸுகுமாரி, பவ்யமான நெஞ்சுஉடைந்துபோகவித்தனை நீ சொல்லவொண்ணுமென்றுப்ப்ரார்த்திக்கிறாளென்று ஸங்கதி.

(க) ரா-யு-க௨௦-கங. (உ) ரா-யு-க௨௦-உஅ.

| பதம். | உரை. |
|---|---|
| திண் | வலிமை பொருந்திய |
| ஆழி | உருளையோடு கூடின |
| அம் தேர் | அழகிய தேரை நடத்தி |
| அரசர் | ராஜாக்களுடைய[வல்ல |
| வந்து | (பராஜிதர்களாய்)வந்து |
| இறைஞ்ச | காலிலே விழுந்துபணிய, |
| அலை | திரைக்கிளப்பத்தை யுடைய |
| கடல் | கடலாலே சூழப்பட்ட |
| உலகம் | உலகத்தை |
| முன் | முன்னே |
| ஆண்ட | அரசாண்ட ( கார்த்த வீர்யார்ஜுநனுடைய) |
| பாழியம் | மிக்க வலியையுடைய |
| ஓராயிரந்தோள் | ஆயிரந்தோள்களும் |
| வீழ | துணியும்படி |
| மழுப்படை | 'பரசு' என்னுமாயுதத்தை [ற |
| பற்றிய | கையிலே தரிக்கப்பெற் |
| வலியோ | மிடுக்கை நினைத்தோ? |
| மென் | முக்த( ) மான [ன்ற |
| மாழை | மானினது நோக்குபோ |

| பதம். | உரை. |
|---|---|
| நோக்கி | நோக்கையுடையளான இவளுடைய |
| மணிநிறம் | அழகியமேனிநிறத்தை |
| கொண்டு | அபஹரித்துக்கொண்டு (போனதுமன்றி) |
| வந்து | ( ஒருகால் ) வந்து (உருக்காட்டி) |
| முன்னேநின்று | ( இப்பெண் பிள்ளைக்கெதிரில்) முன்னடிதோற்ற நின்று |
| போகாய் | போகிறிலை?! |
| நெடுங்கடல் | பரம்பினகடல்போன்ற |
| வண்ணா | வடிவையுடையவனும் |
| எந்தாய் | எமக்கு ஸ்வாமியுமானவனே ! |
| கோழி வெண் முட்டைக்கு | (தன்னடையே உடைந்து போகக்கடவ ) கோழிமுட்டைக்கு |
| குறுந்தடி | சிறியதொரு தடியெடுக்கை |
| என் செய்வது | என்னபயன்பெறும்.? |

வ்யா;—ஏழாம்பாட்டு. (ஆழியந்திண்டேரரசர்) எங்குமொக்க ஸஞ்சரிக்கும்படி மிடுக்கையுடைத்தான உருளையோடே கூடின தேரையுடைய ராஜாக்கள் காலிலே வந்துபணிய. (அலைகடல்) கடல் சூழ்ந்த பூமிப்பரப்புக்கெல்லாம் தானே கடவனும்படியான தோள் வலியையுடைய ராஜாவினுடைய தோள்கள் துணியும்படி மிடுக்குடைத்தான மழுவைக்கையிலே யுடையராயிருக்கிறத்தாலுள்ள வலியோ?.

(மாழைமென்னோக்கி) முக்த( )மான மானினுடையநோக்கோடொத்த நோக்கையுடையளாய், விலக்ஷணமானநிறத்தையுடை

"மணிநிறங்கொண்டு - அழகியநிறத்தைக் கொண்டுபோன நீ வந்து" என்றர்த்தமாய் பலிதார்த்தம் (விலக்ஷணேத்யாதி). ... ... (எ)

யளாயிருக்கிற இவளுடையமுன்னே உன்னுடைய வடிவை ஒருகால் காட்டிப்போகிறிலை. (கோழி வெண்முட்டைக்கென் செய்வது) தன்னடையே உடைந்துபோகிறவித்தைத் தடியையிட்டுத் தகர்க்க வேணுமோ? .... .... .... .... .... .... (எ)

மூ;—

பொருந்தலனுகம்புள்ளுவந்தேற வள்ளுகிரால் பிளந்தன்று [ன்று
பெருந்தகைக்கிரங்கி வாலியைமுனிந்தபெருமைகொலோசெய்தி
பெருந்தடங்கண்ணி சுரும்புறுகோதைபெருமையை நினைந்திலைபேசில்
கருங்கடல்வண்ணா கவுள்கொண்டநீரா மிவளெனக்கருதுகின்றாயே.

| பதம். | உரை. |
|---|---|
| பொருந்தலன் | பொருந்தாமையையே ப்ரக்ருதியாகவுடைய ஹிரண்யனுடைய |
| ஆகம | சரீரத்திலே [ய |
| புள் | கழுகு, பருந்து முதலான பக்ஷிகள் |
| உவந்து | மிகுந்த ப்ரீதியோடே |
| ஏற | ஏறி வர்த்திக்கும்படியாக (அந்தச்சரீரத்தை) |
| வள்ளுகிரால் | கூர்மையான நகங்களாலே |
| பிளந்து | இருதுண்டமாகக் கிழித்து, (அதுவுமன்றி) |
| அன்று | ஸுக்ரீவன் ரிச்ய மூக பர்வதத்தில் வருந்தினவன்று |
| பெருந்தகைக்கு | கம்பீர ஸ்வபாவனை (அந்த) ஸுக்ரீவனுக் |
| இரங்கி | திருவுள்ளமிரங்கி [கு |
| வாலியை | (அவனுக்கு)சத்ருவான வாலியை |
| முனிந்த | நிரஸிக்கையினாலுண்டான |
| பெருமை கொலோ | மிடுக்கைநினைத்தோ? |
| இன்றுசெய்தது | இப்போது (இவள் திறத்தில் இப்படி) செய்து போந்தது?; |
| பெருந்தடம் | மிகவும் விசாலமான |
| கண்ணி | கண்களை யுடையளாய் |
| சுரும்பு உறு | வண்டுகள் மாறாதே படிந்து கிடக்கிற |
| கோதை | மயிர் முடியையுடையளான இவளுடைய |
| பெருமையை | வைலக்ஷண்யத்தை |
| நினைந்திலை | புத்திபண்ணிற்றிலை; |
| | கருங்கடல் வண்ணா!—; |
| பேசில் | (உன்கருத்தைப்) பேசப்புக்கால், |
| இவள் | "இப்பெண்பிள்ளையானவள், |
| கவுள்கொண்ட | வாயில் பொகட்ட |
| நீர் ஆம் என | நீர் போலே அபேக்ஷிக்கவும் உபேக்ஷிக்கவும் தக்கவள்" என்று |
| கருதுகின்றாய் | நினைத்திருக்கிறாயத்தனை.

வ்யா;—எட்டாம்பாட்டு. (பொருந்தலன்) மநுஷ்யஜந்மமாய் ஆஸுர பா (வ)வத்தையுடையனாயிருக்கையன்றிக்கே, பொருந்தாமையை ப்ரக்ருதியாக வுடையனாயிருக்கை. (ஆகம்புள்ளுவந்தேற) ஸ்த்ரீகள் பேணிப்போந்த சரீரத்திலே கழுகும்பருந்தும் உகந்தேற. (வள்ளுகிரால்) கூரிய உகிராலே நிரஸித்து. (அன்று பெருந்தகைக்கிரங்கி) என்றுமொக்கப்†பொருந்திப்போருகிற ஸுக்ரீவமஹாராஜர்க்கு ராஜ்யத்தைக்கொடுத்து வாலியை அம்பாலே வேண்டோமென்றாயிற்று. (பெருமைகொலோ) அன்று ஆஶ்ரித விஷயத்தில் பண்ணின பக்ஷபாதமெல்லாம் இங்கேகண்டோமிறே.

(பெருந்தடங்கண்ணி) போர(ஶ்ரவ)தாக்களளவல்லாதபடி மிக்கப் பரப்பை யுடைத்தானகண். (சுரும்புறுகோதை) வண்டுகள்மாறாத மாலையோடுகூடின மயிர்முடியையுடையவள். (பெருமையைநினைந்திலை) இவளுடைய வைலக்ஷண்யமொன்றையும் புத்திபண்ணிற்றிலை. (கருங்கடலித்யாதி) வாயில் பொகட்டினநீர் இழிச்சவுமாய் கொப்பளிக்கவுமாயிருக்கும். அவ்வோபாதியாக நினையாநின்றாய் இவளையும்.

மூ;—
நீரழல்வானாய் நெடுநிலங்காலாய் நின்றநின்நீர்மையை நினைந்தோ
சீர்கெழுகோதை யென்னலதில வென்றன்னதோர் தேற்றன்மைதானோ
பார்கெழுபவ்வத் தாரமுதனைய பாவையைப் பாவம்செய்தேனுக்கு
ஆரழலோம்புமந்தணன்தோட்டமாக நின்மனத்து வைத்தாயே.

---

அந;—எட்டாம்பாட்டு. (பொருந்தலனித்யாதி) "நீ உன்பெண்ணைக் கோழிவெண்முட்டையாகவெண்ணியிருக்கிறாய்; அவளென்னை எப்போதும் மறந்தேனென்று சொல்லத்தக்கதெல்லாம் சொல்லிவேண்டப்பண்ணினாளன்றோ? சிறுக்கனுக்கு*ஸமயஸமுத்பவனாய் உதவினதில்லையோ? ஒருகுரங்குக்கு நானேபோய் உதவினதில்லையோ" என்றுசொல்ல, அப்படி ஆஶ்ரிதபவ்யனாகில் நான் வேண்டும்படி இப்படி யிருக்கவடுக்குமோ? உனக்குத்தக்க வைலக்ஷண்யமுடையவளாகையாலே (க)" இறையுமகலகில்லேன்" என்று ஊடினால், அதுவெல்லாம் ஏற்றமன்றோ? உபேக்ஷிக்கப்படாதென்கிறாளென்றுஸங்கதி.

இரணியன் என்றாதே "பொருந்தலன்" என்றதுக்குக் கருத்தருளுகிறார் (மநுஷ்யேத்யாதி). "பெருந்தகை" பேரளவுடையவர் என்றுசப்தார்த்தமாய், "பொருந்தலன்" என்றதுக்கு எதிர்த்தட்டாக வருளுகிறார்(என்றுமித்யாதி).
"பேசில் பெருந்தடங்கண்ணி" இத்யாத்யந்வயः. ... ... ... (அ)

---

† (பா) பெருத்திருக்கிற. (க) தி-வாய்-௬-௧0-௧0.

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீர் | ஜலத்தையும் | பாவம்செய் | இவளையிழக்கைக்கீடா |
| அழல் | அக்கிநியையும் | தேனுக்கு | ன மஹாபாபத்தைப் பண்ணின என்னு டைய, |
| வாஞய் | ஆகாசத்தையும் சரீர மாகவுடையனுகவும் | | |
| நெடுநிலம் | மஹாப்ருதிவியையும் | பார்கெழு | பூமியைச்சுற்றிச் சூழ்ந் து கிடக்கிற |
| காலாய் | வாயுவையும் சரீரயாக வுடையனுகவும் | பௌவத்து | கடலிலுண்டான |
| நின்ற | நிற்கப்பெற்ற | ஆரமுதுஅனை ய | அருமையான அம்ரு தம்போலே போக் ய பூதையான |
| நின் | தேவரீருடைய | | |
| நீர்மையை | ஸ்வபாவத்தை | பாவையை | இப்பெண்பிள்ளையை, |
| நினைந்தோ | திருவுள்ளம் பற்றி யோ? (அல்லது,) | ஆரழல் ஓம்பும் | அக்நிபரிசர்யைக்கே காலம்போந்திருக் கிற |
| சீர்கெழு | "கல்யாண குணங்க ளால் குறைவற்ற | அந்தணன் | ப்ராஹ்மணனவன் |
| கோதை | இப்பெண்ணனவள் | தோட்டமாக | அஹோராத்ரம் ஶ்ரம ஸாத்யமான சோலையை உபே க்ஷையாலே பாழ் படுத்துமாபோலே |
| என்அலதுஇலள் | நம்மையொழிய வே றொருஆஶ்ரயமுடை யளல்லள்" | | |
| என்றன்னதோர் | என்றிப்படிப்பட்ட தொரு நினைவாலுண் டான | நின்மனத்து | (உபேக்ஷிப்பதாக)தேவ ரீர் திருவுள்ளத்தி லே |
| தேற்றன்மை தானோ | திருவுள்ளத்தில்தெளி வை நினைத்தோ? | வைத்தாய் | நினைப்பிட்டாய்? (கூ) |

அ.ரூ;—ஒன்பதாம்பாட்டு. (நீரழலித்யாதி) "கவுள்கொண்டநீராக உபே க்ஷித்தாயென்னவேண்டா; நாம் ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் பண்ணும் ஸ்வபாவ ராயிருப்புதோம்; நம்மையொழிய இவளுக்கு வேறு கதியில்லாதிருந்தால் அப்படியே இருக்கிறோம். நீர் போக அடுக்கும்" என்ன; போக்யபூதையான இவளை இப்படி வைத்து, ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணி நீர் ஸாதிக்கிற ப்ர யோஜநமென்? இவளுடைய போக்யதையை வ்யர்த்தமே யாக்காதே என்று சொல்லி, "ஒருத்தரைச் சொல்லுவதென்" என்று தன்னைவெறுத்துக் கொள் ளுகிறுளென்று ஸங்கதி,

வ்யா;—ஒன்பதாம்பாட்டு.(நீரழலித்யாதி) ப்ருதி (ஃதி) வ்யாதி பஞ்ச பூதங்கள் நாம் இட்டவழக்காகில், இப்படி இருப்பதொருவ்யக்தியை நாம்உண்டாக்கிக்கொள்ளுகிறோமென்றிருக்கிறாயோ? விசித்ர ஸ்ருஷ்டிபண்ணவல்லோமென்றோ நினைத்திருக்கிறது. (சீர்கெழு கோதை) கல்யாணகுணங்களால் குறைவற்றிருந்தவள். அதாகிறது- நாண், மடம், அச்சம், பயர்ப்பு என்றுப்போலேசொல்லப்படுகிற ஸ்த்ரீத்வாதிகளால் குறைவற்றிருக்கிற இவளுக்கு நம்மையொழிய ஓராபாஶ்ரயமில்லை; அநந்யகதி, அபலை என்றுகொண்டு இத்தாலே வருகிற நெஞ்சில் தெளிவோ நீ ஆறியிருக்கிறது.

(பார்கெழுபவ்வமித்யாதி) பூமியைச்சூழ்ந்த கடலைக் கடைந்து வாங்கினவதில் ப்ரயோஜநரூபமான அம்ருதம்போலே நிரதிசய போக்யையாயுள்ளவனே. (பாவஞ்செய்தேன்) இவளுடைய ஸ்லாக்யதையில் குறையுண்டாய் இழக்கிறேனல்லேன். இதுக்கடி நான் பண்ணினபாபமிறே. (ஆரழலித்யாதி) அக்நிபரிசர்யை பண்ணவே காலம் போந்திருக்கிற ப்ராஹ்மணன் தோட்டமாக நினைத்தாயே. (உன்மனத்துவைத்தாயே) வேறேயும் ஒருகர்தவ்யமுண்டாக நினைத்திராநின்றாய். .... .... .... .... .... (௯)

மூ;—

வேட்டத்தைக்கருதாதடியிணைவணங்கி மெய்ம்மைநின்றெம்பெருமான்திறல்தானை மங்கையர்தலைவன் மானவேல் கலியன்வாயொலிகள் [ யானைதோட்டலர்பைந்தார்சுடர்முடியானைப்பழமொழியால்பணிந்துரைத்த பாட்டிவைபாடப்பத்திமை பெருகிச்சிந்தமும் திருவொடுமிகுமே.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேட்டத்தை | அபிநிவேஶ விஷயமானபகவத்விஷயத்தை | மெய்ம்மைநின்று | பாரதந்த்ர்யத்திலே நிலைநின்று |
| கருதாது | (இப்போதேபெறவேணுமென்று) ஆசைப்படாதே | அடியிணைவணங்கி | ப்ரபத்திபண்ணியிருக்கிற |
| | | எம் | எமக்கு |
| | | பெருமானை | உபகாரகனாய், |

விவரணம் (விசித்ரேத்யாதி). "பாவம் செய்தேனுக்காக பார் கெழு வித்யாதி வைத்தாய்" என்றந்வயம். ... ... ... ... ... (௯)

| | |
|---|---|
| தோடு | தொடுக்கப்பட்ட |
| அலர் | அலரையுடைத்தாய் |
| பைந்தார் | பசுமையான திருத்துழாய் மாலையாலே |
| சுடர் | விளங்காநின்ற |
| முடியானை | திருவபிஷேகத்தையுடையனான ஸர்வேஶ்வரனை, |
| பணிந்து | அடிபணிந்து |
| வாள் | வாளால்வந்த |
| திறல் | மிடுக்கையுடைய [ய் |
| தானை | ஸேனையையுடையரா |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார் |
| தலைவன் | நிர்வாஹகராய் [க்கு |
| மானவேல் | இலையகன்றவேலையுடையரான |

| | |
|---|---|
| கலியன் | ஆழ்வார் |
| பழமொழியால் | முன்புள்ளார் சொன்ன பாசுரத்தாலே |
| உரைத்த | அருளிச்செய்த |
| வாய்ஒலிகள் | திருவாய் மொழியான |
| இவைபாட்டு | இப்பத்துப் பாட்டுக்களையும் |
| பாட | பாடப்பெறில (அவர்களுடைய) |
| சித்தமும் | மநஸ்ஸும் |
| பத்திமை பெருகி | பரமபக்திதலையெ( |
| திருவொடு மிகும் | கைங்கர்ய லக்ஷ்மியையும் பெற்று விஸ்த்ருதமாம். (௰) |

வ்யா;—பத்தாம்பாட்டு. (வேட்டத்தையித்யாதி) மேன்மேலே பெருகிவருகிற அபிநிவேசாதிசயத்தை அமைத்து, உபாஸநத்தில் தப்பாதபடி ஆஶ்ரயிக்குமவர்களுக்கு உபகாரகனாயிருக்குமவனை. (வாள்திறல்தானை) வாளால்வந்தமிடுக்கையுடையஸேனையையுடையராய் திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார். (மான

அரு;—பத்தாம்பாட்டு. (வேட்டத்தையித்யாதி) "வேட்டத்தை-அபிநிவேஶவிஷயத்தை; அதாவது-பகவத் விஷயத்தை, கருதாது-இப்போதே பெறவேணுமென்று ஆசைப்படாதே, மெய்ம்மைநின்று-(௧) "[illegible]-தத்தஸ்ய ஸத்ருஶம்" என்று ஸ்வபாரதந்த்ர்யத்திலே நிலைநின்று, அடியிணைவணங்கி-ப்ரபத்தி பண்ணியிருக்கிற எமக்கு, எமபெருமானை" என்று சப்தார்த்தமாய் தாத்பர்யமருளுகிறார் (மேன்மேலே இத்யாதி): (உபாஸநத்தில்தப்பாதபடி.) என்றது - பக்திகார்யமான ப்ரபத்தியிலும் ஸ்வரூபவிரோதம் வாராதபடி என்கை. இங்ஙனன்றாகில் திருத்தாயாரான உபாயாத்யவஸாயத்தின்படியைச்சொன்ன இத்திருமொழியில், பெண்ணுக்காகத்தான் ப்ரயத்நம்பண்ணியும் கார்யமாகாதே, "பாவியேனுக்கு" என்றுதான் கைவாங்கினஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தியைச் சொன்னது கூடாதிறே. "தானை" என்றது-ஸேனை என்றது;

(௧) ரா-ஸு-[illegible]

வேல் ) இலை அகன்றவேலென்னுதல்; அங்ஙனன்றிக்கே, ஆரேனும் பிடிக்கிலும் தம்மைப்போலேஆக்கும். அதாகிறது-வைஷ்ணவாபிமா நமிறே.

( தோட்டலர்பைந்தார் சுடர்முடியானை ) மிக்க செவ்வியை யுண்டைத்தாய் குளிர்ந்ததிருத்துழாய்த்தாரையுடைய ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தை யுடையவனை. (பழமொழியால் பணிந்துரைத்த) தான் ஒன்று கண்டு சொல்லுகையன்றிக்கே முன்புள்ளார் சொன்னபாசுரத்தையாயிற்றுச் சொல்லிற்று. (௧) "యస్యార్థేశం సుపర్ణస్యవినతాకల్పయత్పురా। అమృతంప్రార్థయానస్యతత్తేభవతుమఙ్గళమ్- யங்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதாகல்பயத்புரா। அம்ருதம் ப்ரார்த்தயாநஸ்யதத்தேபவதுமங்களம்." என்னக்கடவதிறே. (பாட்டிவைபாடப் பத்திமை பெருகிச்சித்தமும்)(சித்தம் பத்திமைபெருகி)அதாகிறது-பரமபக்தியிருந்த படியைச் சொன்னபடி. (திருவொடுமிகும்) அதுக்கநந்தர முண்டாம் கைங்கர்ய லக்ஷ்மியைப் பெற்று விஸ்த்ருதமாம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

## பெரியதிருமொழி
## பத்து ஒன்பதாம்திருமொழி முற்றிற்று.

---

†தொடுத்த அலருண்டை பசுத்தமாலை யென்றுதல்; அலர்ந்ததோடுகளை-இதளையுடைய பசுத்த புஷ்பமென்றுதல் சப்தார்த்தம் விவக்ஷித்துப்பலிதார்த்த மருளுகிறார் (செவ்வியித்யாதி). முந்தினபக்ஷத்தில் கலப்பில் "தோட்டலர்என்று" நீட்டிக்கிடக்கிறது ; இரண்டாம்பக்ஷத்தில் வல்லொத்தென்று கொள்ளவேணும். எடுத்ததுக்கு அந்வயம், (சித்தம்பத்திமை பெருகி) என்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அநு;—திருத்தாயின் ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே திருத்தாயார் அவன் வார்த்தையை விஸ்வஸித்துத், தான் கைவாங்கி வந்து பெண்பிள்ளை யோடே "வருகிறேனென்று சொன்னான்"என்று சொல்லியிருக்க, அநந்தரம்

---

† (பா) தோட்டத்திலிருப்பதே அலருடைய பசுத்தத்தார் என்றுதல், அலர்ந்ததோடு-தேனையுடைய பசுத்தத்தாரென்றுதல்.

---

(௧) ரா-அ-௨௫-௫௫.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## பத்தாம்பத்து பத்தாம்திருமொழி
### திருத்தாயின் ப்ரவேசம்.

அவ;—திருத்தாயார் ஓரளவிலே கூப்பிட்டுக்கைவாங்கினளாய் நின்றது கீழ்த்திருமொழியில்; இதில்இப்பிராட்டிதான் தன்னுடைய ஆற்றாமையாலே அவனை என்னோடேசேர்க்கவேணுமென்று, கண்ணால் கண்ட பக்ஷிகளின் காலிலே விழுகிறாள். இனி இவை தான் ஸூசகமாகை யன்றிக்கே காரகமாகவும் வற்றென்றிருக்கிறாள் காணும்.

மூ;—திருத்தாய் செம்போத்தே
திருமாமகள்தன் கணவன்
மருத்தார் தொல்புகழ் மாதவனைவரத்
திருத்தாய் செம்போத்தே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம்போத்தே | ஓ! செம்போத்துப் பறவையே! | மாதவனை | இத்தனைக்குமடியான மாதவனென்ற திருநாமத்தையுடையனான ஸர்வேஶ்வரனை |
| திருமாமகள்தன் | பெரியபிராட்டியாருக்கு | | |
| கணவன் | வல்லபனாய் | வர | (என்னளவு மொருகால்) வரும்படியாக |
| மரு | மணம்மாறாத [னாய் | | |
| தார் | மாலையை யணிந்தவ | திருத்தாய் | அநுகூலிக்கவேணும்; |
| தொல் | அநாதிஸித்தமான | | செம்போத்தே! திருத்தாய். |
| புகழ் | ஆஶ்ரிதரக்ஷகத்வப்ரதையையுடையனாய் | | [ஆதராத்புநருக்தி.] (க) |

வ்யா;—முதற்பாட்டு. (திருத்தாய்) போத்துத் திருத்துகையாவது - அநுகூலிக்கை - (திருமாமகள் தன்கணவன்) உனக்

---

வரவுக்கு சகுநங்களைப் பார்க்கிறாளென்று ஸங்கதியருளுகிறார் (திருத்தாயாரித்யாதி). ஸூசகங்களாமித்தனை யொழிய அவை சேர்க்கவற்றோ, அதின்காலில் விழுவானென்னென்ன வருளுகிறார் (இனியித்யாதி). ... ... ...

அரு;—முதற்பாட்டு. (திருத்தாயித்யாதி) திருத்தாயார் வந்து 'க்ருஷ்ணன் வருகிறான்'' என்று சொன்னபின்பு இவள் புறப்பட்டுப்போகவேண்டுவதில்லையே; செம்போத்தை வலமாகச் சொல்லுகிறதென்னென்னவருளுகிறார் (போத்தித்யாதி). இருக்கிறவிடத்திலிருந்து வலமாகப் போனால் அவன் வருவனென்று குறித்துக்கொள்ளுகிறாளென்று கருத்து. உன் குற்றம் [illegible]

ருத் திருத்துகையென்றொரு வருத்தமில்லை. இத்தலையில் அபராத ஸஹத்வத்துக்கு அடியான லக்ஷ்மீபதித்வத்தையு முடையனாயிருக்கும். (மருத்தார்) ரக்ஷணத்துக்கு உறுப்பாகத் தனிமாலையிட்டுக் கொண்டிருக்கிறவன். தேன்மாருதத்தாரென்றபடி. (தொல்புகழ்)என்று மொக்க இவற்றினுடைய ரக்ஷணமே பண்ணிப்போருகையாலே வந்த குணவத்தாப்ரதை(ு)யையுடையவன். (மாதவனைவர) லக்ஷ்மீபதி யென்கையன்றிக்கே, இது தானே தனக்குப் பேராயிருக்கை. (திருத்தாய் செம்போத்தே) ஒருகால் சொன்னால் ஆதரம் மட்டமென்றிருக்கிறதாய்க்கொண்டு இருகால் மட்டுச்சொல்லுகிறாள். (௧)

மூ;—கரையாய் காக்கைப் பிள்ளாய்
கருமாமுகில்போல் நிறத்தன்
உரையார் தொல்புகழுத்தமனை வரக்
கரையாய் காக்கைப்பிள்ளாய். (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காக்கைப் பிள்ளாய் | மஹோபகாரகனானகாக்காய்!; | தொல் | நித்யமான |
| கருமாமுகில் போல் | காளமேகம்போன்ற | புகழ் | புகழையுடையனாய், |
| நிறத்தன் | திருநிறத்தை யுடையனாய் | உத்தமனை | நிரோதாத்த நாயகனான சக்ரவர்த்தித் திருமகனை |
| உரைஆர் | சப்தபூர்த்தியையுடைத்தாய் | வர | (என்னளவும்) வரும்படியாக |
| | | கரையாய் | கூப்பிடவேணும்; |
| | | காக்கைப்பிள்ளாய்!கரையாய், | (௨) |

வ்யா;—இரண்டாம்பாட்டு. (கரையாய்க் காக்கைப்பிள்ளாய்)

---

வராவிடில் வலயானது வ்யர்த்தமாகாதோ என்று நிற்கிறதாகச் சொல்லுகிறாளென்றருளுகிறார் (உனக்கித்யாதி). கீழே "திருமாமகள் தன்கணவன்" என்று சொல்லிவைத்து "மாதவன்" என்றால்புநருக்தியாமே என்னவருளுகிறார் (லக்ஷ்மீபதீத்யாதி), ... ... ... ... ... ... ... (௧)

அரு;—இரண்டாம்பாட்டு. (கரையித்யாதி)செம்போத்தானது "நீ என்னைத் திருத்தச்சொன்னாய்; அத்தாலே நீ புறப்பட்டுப்போக ஒருப்பட்டாப் போலே யிருக்கிறது. அத்தால் எனக்கும் கூடப்பழிவிளையும்" என்று இருக்கிறதாகக்கொண்டு, அருகிருக்கிற காக்கையின் கட்டுரை கேட்கிறாளென்று ஸங்கதி

காக்கையை "பிள்ளை" என்று கொண்டாடவேணுமோ வென்னவருளுகி

பகவத் விஷயத்தில் உபகாரகராயிருப்பாரை ஸ்தோத்ரம் பண்ணக் கடவதாயிறே இருப்பது. (௧) "ப்ரஶம்ஸமஹாகபிம்- ப்ரஶம்ஸமஹாகபிம்'' என்னக்கடவதிறே. (கருமாமுகில்போல் நிறத்தன்) கரைந்து கூட்டிற்றில்லையாகிலும் இழக்கவொண்ணாதபடியான வடிவுபடைத்தவன். (உரையார் தொல்புகழ்) சப்த பூர்த்தியை யுடைத்தாய் நித்யமான புகழையுடையவனாயிருக்கிறவனை. "உரை" என்கிறது- ஸ்ரீ ராமாயணத்துக்கு ப்ரதிபாத்யனாயிருக்கிறவனை. (புகழ்) ரக்ஷிக்கையால் வந்த புகழையுடையவனை. (உத்தமனை) பிராட்டிக்காகத் தன்மார்விலே அம்பேற்ற தீரோதாத்த நாயகனை, (வரக்கரையாய்).

மூ;—கூவாய் பூங்குயிலே
குளிர்மாரி தடுத் துகந்த
மாவாய்கீண்ட மணிவண்ணனை வரக்
கூவாய் பூங்குயிலே. .... .... .... .... (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூ | தர்ஶநீயமான | வாய் | வாயை |
| குயிலே | கோகிலமே!, | கீண்ட | கிழித்துப் பொகட்டவனாய் |
| குளிர் | (பசுக்களுக்கு மிடையர்க்கும்) மிக்க குளிரையுண்டாக்கக் | மணி | ஸ்ப்ருஹணீயமான |
| | | வண்ணனை | வடிவையுடையனான கண்ணபிரானை |
| மாரி | கல்வர்ஷத்தை [கடவ | | |
| தடுத்து | (கோவர்த்தநத்தால்) தடுத்து (அதனால்) | வர | வரும்படியாக |
| | | கூவாய் | கூவவேணும்; |
| உகந்த | ஸந்தோஷித்தவனாய், | | பூங்குயிலே! கூவாய். (௬) |
| மா | ப (ஶ) காஸுரனுடைய | | |

ரார் (பகவத்விஷயத்திலித்யாதி). (சப்தபூர்த்தியையுடைத்தாய்) என்றதுக்கு, அவனுடைய புகழுக்கு வாசகங்களான சப்தங்கள் பூர்ணமாயிருக்கையென்று கருத்து. அர்த்தாந்தரம் (உரையித்யாதி). (ஸ்ரீ ராமாயணத்துக்கு) என்றவநந்தரம் "பேர்;அதுக்கு'' என்று கூட்டுவது,(ரக்ஷிக்கையால்வந்த)என்றது- *ஸபித்ராசேத் யாதிப்படியே, உன்வம்சத்தானான காக்கையை ரக்ஷிக்கையாலுண்டான வென்கை. காக்கையைக்குறித்துச் சொல்லுகிற பாசுரமாகையாலே "உத்தமன்'' என்றதுக்கு -காக்கையை ரக்ஷித்த காகுஸ்த்தனே யாக வேணுமென்று திருவுள்ளம். ... ... ... ... ... (உ)

(௧) ஸா-

வ்யா;—மூன்றும்பாட்டு. (கூவாய்) தர்மநீயமான உன்படியைக்காட்டி கண்ணுக்கிரையிட்டாப் போலே செவிக்கும் இரையிடப்பாராய். (குளிர்மாரி தடுத்துகந்த) பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே தலையப்புக, கைக்கெட்டிற்றொரு மலையை எடுத்து அவற்றை ரக்ஷித்து "இவை நோவுபடாதொழியப் பெற்றோமே" என்று அத்தாலே தானேஉகந்தானாயிற்று. (மாவாய் கீண்ட) பகாஸுரனுடைய வாயைக்கிழித்த. (மணிவண்ணனை) விரோதியைப் போக்கிற்றிலனேயாகிலும் விடவொண்ணாதபடியாயிற்று வடிவழகு. (௩)

மூ;—கொட்டாய் பல்லிக்குட்டி
குடமாடி யுலகளந்த
மட்டார்பூங்குழல் மாதவனைவர
கொட்டாய் பல்லிக்குட்டி. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பல்லிக்குட்டி | ஓ பல்லிக்குட்டீ! | பூ | பூக்களை அணிந்த |
| குடம்ஆடி | குடக்கூத்தாடி | குழல் | திருக்குழலையுடையனாய் |
| உலகுஅளந்த | (த்ரைவிக்ரமாபதானத்திலே) லோகங்களையெல்லாமளந்தருளினவனாய் | மாதவனை | ஸ்ரியஃபதியான ஸர்வேஸ்வரனை |
| | | வர | வரும்படியாக |
| | | கொட்டாய் | கொட்டவேணும்; |
| மட்டுஆர் | தேன்மாறாத | பல்லிக்குட்டீ! | கொட்டாய். (௪) |

---

அரு;—மூன்றும்பாட்டு. (கூவாயித்யாதி). * பிண்டத்திரளையும் பேய்க்கிட்ட நீர் சோறும் உண்டற்கு வேண்டி ஓடித்திரிகிறதாகையாலே அது பறந்துபோக, அருகில் பூங்குயில்களைப்பார்த்துக் கூவச்சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"பூம்" என்றதுக்குத் தாத்பர்யம் (தர்மநீயேத்யாதி). ஆபத்திலே உதவுமவன் என்னும் தாத்பர்யமருளுகிறார் (பசுக்களித்யாதி). ... (௩)

அநு;—நாலாம்பாட்டு. (கொட்டாயித்யாதி) (௧) "వసన్తకాలే సంప్రాప్తే కాకః కాకః పికః పికః - வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காகஃ காகஃ பிகஃ பிகஃ" "தான் கூவினால், தன்னைப் போஷிக்கிறகாக்கைக்கும் தனக்கும் வைஜாத்யம் தோற்றி வாயில் சோறு இழக்கவேண்டிவரும்" என்றுஇருந்ததாகக்கொண்டு, தனக்குஅடிக்கடி சுபஸூசகமான தக்ஷிணகௌளியை ஆசைப்படுகிறாளென்று ஸங்கதி.

வ்யா;—நாலாம்பாட்டு. (கொட்டாய் பல்லிக்குட்டி) என்று மொக்கப் பரஹிதமே பண்ணிப்போருகை உனக்கு ஸத்தாப்ரயுக்த மன்றோ? (க) "ஜாஸ்ரூ்ப்ருதிஸுஸ்நூத: - பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த்த:" என்னுமாபோலே இருக்கிறது. (குடமாடியுலகளந்த) ஒரு ஊரில் மன்றுபாழ் தீரும்படியாகக் குடக்கூத்தாடினன். ஒருலோகத்தில் பாழ்தீருப்படியாகவும் ஒருகூத்தாடினனாயிற்று. (மட்டார்பூங்குழல்) தேன்மாறாத பூமலரையுடைத்தான திருக்குழலையுடையவனை. (மாதவனை) பரமப்ராணயியானவனை. .... .... (ச)

மூ;—சொல்லாய் பைங்கிளியே

சுடராழி வலனுயர்த்த

மல்லார்தோள் வடவேங்கடவனை வரச்

சொல்லாய் பைங்கிளியே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பை | பசுமைநிறம் மாறாத | தோள் | திருத்தோள்களையுடையனாய் |
| கிளியே | ஓ கிளிப்பிள்ளாய்!, | வடவேங்கடவனை | வடக்குத் திருமலையிலே நின்றருளுமவனை ஸர்வேஶ்வரனை |
| சுடர் | ஒளிமிக்க | வர | வரும்படியாக[வேணும்; |
| ஆழி | திருவாழியாழ்வானை | சொல்லாய் | ஒருவார்த்தை சொல்ல |
| வலன் | வலதுதிருக்கையிலே | பைங்கிளியே! சொல்லாய். (ரு) | |
| உயர்த்த | ஏந்தாநின்றுள்ளவனாய், | | |
| மல் ஆர் | மிக்கவலியையுடைய | | |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (சொல்லாய் பைங்கிளியே) உன் வடிவைக் காட்டி ரக்ஷித்தாப்போலே, உன்னுடைய பேச்சாலும் ரக்ஷிக்கப்பாராய். (சுடராழி வலனுயர்த்த) ஒருவிரோதி வந்தபோதாக ஏந்துகையன்றிக்கே, ஏற்கவேகோலித்திருவாழியைவலவருகே

---

நன்மைசொன்னால் செய்யவும், தீமை சொன்னால் தவிரவுமாயிருக்கையாலே அருளுகிறார் (என்று மொக்கவித்யாதி). ... ... ... (ச)

அரு;—அஞ்சாம்பாட்டு. (சொல்லாயித்யாதி) பல்லியானது பலிசமானதாகையாலே "நினைத்தபோது கொட்டவேணுமென்றுநமக்கு நிர்பந்தமென்" என்றிருந்ததாகக்கொண்டு, கூட்டிலிருந்தகிளியைப்பார்த்துப் பேச்சுக்கொள்ளுகிறாளென்று ஸங்கதி.

பசுமைசொன்னதுக்குத் தாத்பர்யம் (உன்னித்யாதி). ... ... (ரு)

---

(க) ரா-பா-கஅ-உஎ.

ஏந்திக்கொண்டிருக்கிறனாயிற்று. (மல்லார்தோள்) ஆயுதம் தானும் மிகையாம்படியான திண்ணிய தோளையுடையவன். (வடவேங்கடவனைவர) ரக்ஷணத்துக்குறுப்பாக முதலடியிட்டுக்கொண்டு நிற்கிறவனை. .... .... .... .... .... .... (ரு)

மூ;—கோழி கூவென்னுமால்
தோழி நானென்செய்கேன்
ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்றுக்
கோழி, கூவென்னுமால். (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தோழி | வாராய் தோழி! | கோழி | (உடனே)விஸ்லேஷ ஸூசகமான கோழி யானது |
| கோழி | (வரவைஸூசிப்பிக்கும்) சாமக்கோழியானது | கூஎன்னும் | "கூ" என்று கூவா நிற்கும். |
| கூ என்னும் | 'கூ' என்று கூவாநின்றது; | ஆல் | கஷ்டம்; (இனி அவன் பிரிந்துபோமாகையால்,) |
| ஆல் | ஸந்தோஷம். | | |
| ஆழி | கடல்போன்ற | | |
| வண்ணர் | திருநிறத்தை யுடைய ஞனகண்ணபிரான் | | |
| வரும்பொழுது | வரக்கடவ காலமானது | நான்என்செய்கேன் | நான்என்னசெய்வேன். (௬) |
| ஆயிற்று | அணுகப்பெற்றது; | | |

வ்யா;—ஆறும்பாட்டு. (கோழியித்யாதி) "தோழி" என்று ஸமாநதுக்கையாய் உடன்கேடியானவளை ஸம்போதித்து "கோழி கூவென்னுமால், ஆழிவண்ணர் வரும்பொழுதாயிற்று, கோழி

அரு;—ஆறும்பாட்டு. (கோழியித்யாதி) கிளியைப்பார்த்து "சொல்லாய்" என்று சொல்லுவது-(௧)"கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்" என்கிற பாசுரத்தை நினைக்கிற இத்தசையிலே நாம் பேசவொண்ணாதென்றிருக்க, கோழியானது காலஜ்ஞாநியாகையாலே வரவுக்கு ஸூசகமாக "கூ" என்ன; திடுக்கிட்டெழுந்திருந்து கோழியருகேவந்து "இனிவந்தால் உடனே கோழிகூவென்னுமே? மேல் வரும்பிரிவுக்கு என்செய்வேன்" என்கிறாளென்று ஸங்கதி.

க்ருஷ்ணன் பசுமேய்த்துவந்து குளித்து ஒப்பித்துஉண்டு உறங்கஒருசாமமும், பெண்களிருந்தவிடம்தேடி வர ஒருசாமமும், ஒருவரறியாதபடி மீண்டு போய் பசுவின் சிறுவீடுமேய்க்க ஒருசாமமுமாய், த்ரியாமா இப்படி கழியுமாகையால், நடுச்சாமத்தில் கோழிகூவிற்றன, கோழிகூவிற்று வந்தானென்று உகந்து, உடனே கூவுகிறபடியாலே சாமம் க்ஷணமாய்கூவுதலால்க்லேசமும்

(௧) தி-வாய்-கூ-ரு-அ.

கூவென்னுமால், என்செய்கேன்'' என்கிருள். இதுக்குப் பொருளாக ஜீயர் அருளிச்செய்தாராகப் பிள்ளை அருளிச்செய்யும்படி; - ''க்ருஷ்ணன் கோழிகூவினவாறே வருமாய், மீண்டு கோழிகூவினவாறே போமாய், வரவைஸூசிப்பிக்கிற கோழி கூவாநின்றது. பிரிவில் தரிக்கவொண்ணுதபடி கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவர் வருங்காலமாயிற்று; மீண்டு கோழிகூவப் போவர். நடுவுஸம்ஶ்லேஷத்துக்குக் காலமில்லை. நான் என் செய்கேன் என்கிருள்'' என்று. ''க்ருஷ்ணன் கோழியை மடியிலே இட்டுக்கொண்டுவரும் போலேகாணும்'' என்று பட்டர் அருளிச்செய்தாரென்று ப்ரஸித்தமிறே. .... .... .... .... .... .... .... (சு)

மூ;—காமற் கென் கடவேன்

கருமாமுகில் வண்ணற் கல்லால்
பூமே லைங்கணைகோத்துப் புகுந்தெய்யக்
காமற் கென்கடவேன்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கருமாமுகில் | காளமேகம்போன்ற | ஐங்கணை | பஞ்சபாணங்களை [த்து |
| வண்ணற்கு | திருநிறத்தையுடைய கண்ணபிரானுக்கு | கோத்து | (கருப்புவில்லில்)தொடு |
| | | புகுந்து | உள்ளேபுகுந்து |
| | | எய்ய | ப்ரயோகியாநிற்க, |
| அல்லால் | கடமைப்பட் டிருக்கையொழிய[னமந்மதன்) | காமற்கு | (அப்படிப்பட்ட)மன்மதனுக்கு [ன்?; |
| மேல் | அதற்குமேலே (புத்ரனு | என்கடவேன் | என்னசெய்யவல்லேன் காமற்கு என்கடவேன்?. (எ) |
| பூ | புஷ்பங்களாகிற | | |

நடக்கிறதென்றுஅதுக்கு ஒருஸம்வாதமருளுகிருர் (இதுக்கித்யாதி), (க்ருஷ்ணன் கோழியையித்யாதி). ... ... ... ... ... (சு)

அந;—ஏழாம்பாட்டு. (காமற்கித்யாதி). தோழியானவள் நீ''வரும்பொழுதானல் உகந்ததுக்கநுகுணமாக ஒப்பித்திருக்கவிறே அடுப்பது. மேல்வரும் பிரிவை நினைத்தஞ்ச, அடுக்குமோ''என்ன, ''ஸாக்ஷாந்மந்மதமந்மதனுனவன் வடிவாகையாலே உடனே ஆற்றாமையைவிளைவிக்கும், அதுக்குமேலே (தாய்) என்று பாராதே காயன்கணைதொடுப்பனே; நான் அஞ்சாதேயிருக்க வழிஎன் தோழி''என்கிருளென்று ஸங்கதி.

வ்யா;—ஏழாம்பாட்டு. ( காமனித்யாதி ) வயிற்றில்பிறந்த காமனுக்குஎன்கடவேன்; மாமணவாளரான கறுத்துப்பெரிய முகில் வண்ணற்கொழிய. "கருமாமுகில் வண்ணர்" என்கையாலே, இதர விஷயத்துக்கிறே அவன் ப்ரேரகன். இவ்விஷயத்துக்கு அவன் ப்ரேரிக்கவேண்டா; அவன் வடிவுதானேயிறே ப்ரேரகம். (க) "பேரமர்காதல் கடல்புரையவிளைவித்தகாரமர்மேனி" என்னக்கடவதிறே. கருப்புவில்லிலே புஷ்பபாணங்களைந்தையும் தொடுத்தெய்ய. (எ)

மூ;—இங்கே போதுங்கொலோ
இனவேல் நெடுங்கண் களிப்பக்
கொங்கார்சோலைக் குடந்தைக் கிடந்தமால்
இங்கே போதுங்கொலோ. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொங்கு ஆர் | தேன்நிறைந்த | வேல் | வேல்போலே |
| சோலை | சோலைகளையுடைய | நெடு | நெடிதாயிருந்துள்ள |
| குடந்தை | திருக்குடந்தையிலே | கண் | (என்) கண்களானவை |
| கிடந்த | பள்ளி கொண்டருளும வனுன | களிப்ப | களிக்கும்படியாக |
| | | இங்கே | இவ்விடமேற |
| மால் | ஸர்வேஶ்வரன், | போதும்கொல்லு | எழுந்தருளுவனே? |
| இனம் | ஒன்றுக்கொன் றெப் பாய் | | |
| | | இங்கே போதுங்கொலோ? | (அ) |

ருக்மணிப்பிராட்டி வயிற்றிற்பிறந்த முறைமையாலே அருளுகிறுர் (வயிற்றிலித்யாதி).(மாமணவாளரான) என்றது-பர்த்ருநாமக்ரஹணம் பண்ணுதே வ்யவஹரிக்கும் லோகஸயாதியைப்பற்ற. "மேல் பூவைங்கணை கோத்து" என்றந்வயமாய், அவன்திருமேனி ஆற்றுமையை விளைவிக்கு மென்றதுக்குமேல் பூக்களாகிற பாணங்களைக்கோத்து என்று தாத்பர்யமாய், கறுப்பு வில்லியாகையாலே அருளுகிறுர் ( கறுப்பித்யாதி). ... ... ... ... (எ)

அ௫;—எட்டாம்பாட்டு. ( இங்கேயித்யாதி ) "கோழிகூவின மாத்ரம் கொண்டு அவன் வந்தானாகவும், அவன்திருமேனி ஆற்றுமையை விளைவிக்குமென்று விசாரப்படுகிருய்; இன்னம்தானே வருகிருனே? ஆள்வரவிடுகிருனே? இரண்டுக்கு மொக்கும் இக்கோழி கூவுதல்" என்ன; "நீ நல்லவிருபகையிறே. எனக்கும் அத்தை நிஶ்சயித்துத் தரவேணும்" என்று ப்ரார்த்திக்கிறுளென்று ஸங்கதி.

(க) தி-வாய்-மு-௩-௪.

கஅகூச. பெரியதிருமொழி, க0-ப, க0-தி, கூ-பா, இன்னாரென்று.

வ்யா;—எட்டாம்பாட்டு. (இங்கேபோதுங்கொலோ) இரண்டு தலைக்கும் ஸ்வரூபஹாநியாக நான் அங்கே செல்லாமே, தான் இங்கே வரவல்லனேயோ? வந்தால் கொள்ளும் ப்ரயோஜநமிருக்கிறபடி, ஒன்றுக்கொன்று ஒப்பாய், வேல்போலே நெடிதாயிருந்துள்ள கண்கள் களிப்ப; தேனார்ந்த சோலையை யுடைத்தான திருக்குடந்தையிலே சாய்ந்தருளின வ்யாமுக்த(ஃ)ன். .... .... .... (அ)

மூ;—இன்னா ரென்றறியேன்
அன்னே யாழியொடும்
பொன்னார் சார்ங்கமுடையவடிகளை
இன்னா ரென்றறியேன். (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்னே | அம்மே! | உடைய | திருக்கையிலேயுடைய |
| ஆழியொடும் | திருவாழி யாழ்வானையும் | அடிகளை | ஸ்வாமியை [ரான |
| பொன் ஆர் | ஸ்ப்ருஹணீயமான | இன்னார்என்று | இன்ன ஜாதீயரென்று |
| சார்ங்கம் | சார்ங்கமென்னும் தநுஸ்ஸையும் | அறியேன் | அறிகிறிலேன்; |
| | | | இன்னார் என்று அறியேன். (கூ) |

வ்யா;—ஒம்பதாம்பாட்டு. (இன்னாரித்யாதி). தேவனோ? மநுஷ்யனோ? அறிகிறிலேன். தேவத்வ ஸூசகமான திருவாழியையும், மநுஷ்யத்வைகாந்தமாய், ஸ்ப்ருஹணீயமான ஸ்ரீஸார்ங்கத்தையுமுடைய ஸ்வாமிகளை. அடையாளம் சொல்லாநிற்கச்செய்தே "அறியேன்" என்னப்பண்ணுகிறதிறே. அவன் வைலக்ஷண்யம். .... (கூ)

---

அன்றிக்கே, பின்னையும் வரக்காணாமையால் நாமேஆற்றாமைவிஞ்சிப்புறப்படவேண்டி வருமோவென்று ஸங்கதியாகவுமாம். ... ... ... (அ)

அநு;—ஒன்பதாம்பாட்டு, (இன்னாரித்யாதி) திருக்குடந்தையில் கிடந்தவர் சார்ங்கபாணியின் படியும், ஆராவமுதாழ்வாரையும் அநுபவித்தாராகையாலே, அவருடைய போக்யதை நெஞ்சில் ஊற்றிருந்து முன்னிலையாக வந்தாப்போலே தோற்றக்கண்டு உகக்கிறாளென்று ஸங்கதி.

மநுஷ்யத்வே பரத்வம் இவருக்கு அடையாளமென்று சொல்லிக்கொண்டும் ஆஶ்சர்யப்படுகிறாள், போக்யதையாலே என்றுகருத்தருளுகிறார் (அடையாளமித்யாதி). ... ... ... ... ... ... ... (கூ)

மூ;—தொண்டீர் பாடுமினோ

சுரும்பார்பொழில் மங்கையர்கோன்
ஒண்டார்வேல் கலியனொலிமாலைகள்
தொண்டீர் பாடுமினோ. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டீர் | ஓ பாகவதர்களே! | தார் | மாலையையும் |
| சுரும்பு ஆர் | வண்டுகள்மாறுதே கிடக்கிற | வேல் | வேலையும் உடையரா[ன |
| பொழில் | சோலையையுடைய | கலியன் | ஆழ்வார் |
| மங்கையர் | திருமங்கையி லுள்ளார்க்கு | ஒலி | அருளிச்செய்த |
| கோன் | நிர்வாஹகரராய், | மாலைகள் | சொல் மாலையான இப்பாசுரங்களை |
| ஒண் | அழகிய | பாடுமின் | (வாயாரப்) பாடுங்கோள்!; |
| | | | தொண்டீர்! பாடுமினோ—. (௰) |

வ்யா;—பத்தாம்பாட்டு. (தொண்டீரித்யாதி) பகவத்விஷயத்தில் சாபலமுடையாரெல்லாரும் பாடுங்கோள். வண்டுகளார்ந்த பொழிலையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான அழகிய மாலையையுடைய வேலை நிரூபகமாகவுடைய ஆழ்வாரருளிச்செய்த மாலைகள். ப(ஃ)லஶ்ருதி சொல்லாதொழிந்தது இது தானேப்ரயோஜநமாகையாலே. .... .... .... .... .... .... (௰)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி

## பத்தாபத்து பத்தாந்திருமொழி முற்றிற்று.

---

அரு;—பத்தாம்பாட்டு. (தொண்டீரித்யாதி) "சுரும்பு" என்றதினர்த்தம் (வண்டுகள்) என்றது. ... ... ... ... ... ... (௰)

ஜீயர்திருவடிகளே சரணம்.



ஆழ்வார் திருவடிகளேசரணம்.

# பெரியதிருமொழி
## பதினோராம்பத்து முதல்திருமொழி
### குன்றம் ப்ரவேசம்.

வ்யா;—குன்றம்ப்ரவேசம். பக்ஷிகளின் காலிலே விழுந்து என்னையும் அவனையும் சேரவிடவேணுமென்றாள் கீழ்த்திருமொழியில்; அவை இது செய்தனவில்லை. அதுக்குமேலே தென்றல் துடக்கமான பாத (ஃஃ) கபதார்த்தங்களின் கீழே ஜீவிக்கப் போகாமையாலே, ஜீவநத்தில் நசையற்று நோவுபட்டுச் சொல்லுகிற பிராட்டி பாசுரத்தாலே தத்தசையைப் பேசுகிறார். .... .... .... .... *

மூ;—குன்றமொன் றெடுத்தேந்தி மாமழை
அன்றுகாத்த வம்மா னரக்கரை
வென்றவில்லியார் வீரமேகொலோ
தென்றல்வந்து தீவீசு மென்செய்கேன். (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | பசுக்களுமிடையரும் கல்வர்ஷத்தால் நோவுபட்டவன்று | வென்ற | ஜயித்த |
| குன்றம்ஒன்று | ஒருகோவர்த்தந பர்வதத்தை | வில்லியார் | வில்லையுடையரான பெருமாளுடைய |
| எடுத்து | ஃமூலமாகக் களைந்தெடுத்து, | வீரமேகொலோ | வீரப்பாட்டைப் பின் சென்றோ, |
| ஏந்தி | குடையாகத்தரித்து, | தென்றல் | தென்றல்காற்றானது |
| மாமழை | பெருத்த மழையில் | வந்து | நானிருக்குமிடமேற வந்து |
| காத்த | (அவர்களைரக்ஷித்தரு) | தீ | எரியை |
| அம்மான் | ஸ்வாமியாய், [ளினை | வீசும் | வீசாநின்றது?; |
| அரக்கரை | ராக்ஷஸஜாதியரையடைய | என்செய்கேன் | (இதற்குநான்) என்ன செய்யக்கடவேன்? |

வ்யா;—முதற்பாட்டு. (குன்றமொன்றெடுத்து) வர்ஷத்துக்குப் பரிஹாரமாகவெடுப்பது - குடையாயிருக்க, மலையை ஏடுத்தா

அரு;—குன்றம்ப்ரவேசம். (சேரவிடுகை) வருகைக்குஸூசகமாகை.

அரு;—முதற்பாட்டு. (குன்றமித்யாதி) (பரிஹாரமாக) - நிவர்த்தகமாக,

யிற்றுப் பரிஹரித்தது. ஒருவரால் சலிப்பிக்க வொண்ணுதாய், அத்விதீயமாயிருக்கிற மலையை எடுத்து. (ஏந்தி) மலையைத்தரித்துக்கொண்டு நிற்கிறவிடத்தில் பரார்த்தமான செயலாகையாலே வருத்தமற்று, இதுதானே போதுபோக்காக நின்றநிலை. (மாமழை) ப்ராப்தகாலத்தில் மழையன்றிக்கே, அகாலத்திலே வர்ஷத்துக்கு நிர்வாஹகனை இந்த்ரன் குபிதனாய் வர்ஷிப்பிக்கவந்ததாயிற்று. (அன்றுகாத்த) (க) "ஸீதார்த்தம் ... ம்ருதம் - கோகோபீஜந ஸங்குலம் - அதீவார்த்தம்" என்கிறபடியே பசுக்களும் இடையரும் நோவுபடுகிறவன்று பரிஹரித்த ஸர்வேஶ்வரன்.

(அரக்கரைவென்ற வில்லியார்) ஒருத்தன் அபகாரம்பண்ண, ராக்ஷஸஜாதியாக நிரஸித்தான். (வீரமேகொலோ தென்றல்வந்து தீவீசும்) பசுக்களும் இடையரும் நோவுபட அத்தைப் பரிஹரித்தான். ஒருவன் அபகாரம் பண்ண, ஜாதியாக அழியச்செய்தான்; அப்படியிருக்கிறவனுடைய வீரம் நமக்குப் பலித்தபடியோ, இத்தென்றல் இப்படி பாத(ஃ)கமாகிறது. (தீவீசும்) நெருப்புச்சுடப்புக்கால் (உ) "ஶீதோ பவ" என்று குளிரும்படிபண்ணவல்லவன் தன்பக்கலிலே குளிர்த்தியையுடைத்தான தென்றல் நெருப்புத்தூவும்போது அவர்பண்ணிவிட்டதாகவேணும். (என்செய்கேன்) பசுக்களும் இடையரும் வர்ஷத்தைப் பரிஹரித்துக்கொள்ளுதல்; பிராட்டி "அதார்மிகனை ராவணன் நஷ்டனுவான்" என்றுசபித்துப்போருமன்றுயிற்று, இவளுக்குத் தென்றல் பரிஹரித்துக் கொள்ள ப்ராப்தியுள்ளது. .... .... .... .... .... .... (க)

---

"ஒன்று" என்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (ஒருவரித்யாதி). "எடுத்து" என்று சொல்லியிருக்கவும் "ஏந்தி" என்பானென்னென்ன வருளுகிறார் (மலையித்யாதி). "மா" என்று விசேஷித்ததுக்குக் கருத்து (ப்ராப்தேத்யாதி).

(ஒருத்தன்) ராவணன். விரஹிணிகளுக்குத் தென்றல் தீயாயிருக்கை ஸித்தமாயிருக்க, அவர் வீரத்தை இதுக்கு ஹேதுவாகச் சொல்லுவானென்னென்ன வருளுகிறார் (நெருப்பித்யாதி). அவன் வாசியாலே தானே ஸந்நிதியிலேபோய் பரிஹரிக்கப் போருகிறதில்லை என்றுகருத்து. பாத (ஃ) கமானல் நெருப்பையும் குளிரப்பண்ணுகிறவன், குளிர்ந்ததைக் குளிரப்பண்ணுகைக்கு விசாரப்படவேணுமோவென்னென்ன வருளுகிறார் (பசுக்களுமித்யாதி). (க)

---

(க) வி-பு-ரு-கக-கக. (உ) ரா-ஸு-ரு-ருக-ருo.

மூ;—காரும் வார்பனிக்கடலு மன்னவன்
தாரு மார்வமும் கண்டதண்டமோ
சோரு மாமுகில் துளியினூடுவந்து
ஈரவாடைதா னீருமென்னையே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காரும் | காளமேகத்தையும் | சோரும் | வர்ஷியாநின்ற |
| வார் | குறைவறநிறைந்து | மாமுகில் | மேகங்களினுடைய |
| பனி | குளிர்ந்திருந்துள்ள | துளியின் ஊடு வந்து | துளிகளுள் குளிர்ச்சியை யூட்டிக்கொண்டு வந்து(அத்தாலே) |
| கடலும் | ஸமுத்ரத்தையும் | | |
| அன்னவன் | ஒத்திருந்துள்ளஸர்வேஶ்வரனுடைய[யும் | ஈரம் | மிகவும் சைத்யத்தை விளைக்கக்கடவ |
| தாரும் | திருத்துழாய்மாலையை | | |
| மார்வமும் | திருமார்பையும்[ததற்கு | வாடைதான் | கார்றானது |
| கண்ட | ஆசைப்பட்டுப் போந் | என்னை | ( விரஹக்ருசையான ) என்னை |
| தண்டமோ | (அவன்) தண்டம் செய்தபடி என்தான்!; | ஈருமே | நலியாநின்றதே. (௨) |

வ்யா;—இரண்டாம்பாட்டு. (காரும்) மேகமும். (௧) "மேகஶ்யாமம் - மேகஶ்யாமம்" என்னும்படியாயிறே வடிவுதானிருப்பது. (வார்பனிக்கடலும்) குறைவற நிறைந்து குளிர்ந்திருக்கிறகடலும். (அன்னவன்) ஒன்றொப்பாக மாட்டாமையாலே கதிர்பொறுக்கிப்பல வற்றையுமொப்பாகப் பிடிக்கிறது. (தாரித்யாதி) தோளும் தோள் மாலையுமான மார்வும்கண்டு ஆசைப்பட்டுவந்த தண்டமோ? இதர விஷயப்ரவணர்பட்டது படாநின்றோம். (௨) "புத்திநாஶாத்ப்ரணஶ்யதி- புத்திநாஶாத் ப்ரணஶ்யதி" என்கிறபடியே விநாஶத்தைப்பலிப்பித்தான். இதரவிஷயப்ரவணர்பட்டது படாநின்றோம், இப்ப்ராப்த

அரு;—இரண்டாம்பாட்டு (காருமித்யாதி) அந்தி தென்றல் நெருப்பைச்சொரிவதுக்குமேல், குணதிசைமாருதமான வாடை ஈரும்படியைச் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

"தண்டமோ"என்று யமதண்டமென்று தோற்றுகையாலே, இதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (இதரேத்யாதி).

(௧) ரா-அயோ-௮௫-௮ (௨) கீ-௨-௬௩-

விஷயத்தை ஆசைப்பட்டநாங்களும்.

(சோருமித்யாதி) வர்ஷிக்கிற மஹாமேகங்களினுடைய துளிக்குள்ளிட்டுக்குளிர்த்தியைஊட்டிக்கொடுவருகிற ஈரவாடையானது விரஹத்தாலே க்ருஶமாயிருக்கிற என்னுடலை ஈர்ந்து போகடாநின்றது. நற்கொலையாகாதே உயிர்க்கொலையாக்கி நலியாநின்றது.(௨)

மூ;—சங்குமாமையும் தளருமேனிமேல்
திங்கள்வெங்கதிர் சீறுமென்செய்கேன்
பொங்குவெண்டிரைப் புணரிவண்ணனார்
கொங்கலர்ந்ததார் கூவுமென்னையே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சங்கும் | கையில் வளையும் | வண்ணனார் | வடிவை யுடையனான |
| மாமையும் | நிறமும் | | ஸர்வேஶ்வரனுடைய |
| தளரும் | தளராநின்றுள்ள | கொங்கு அலர் | பரிமளப்ரசுரமான |
| மேனி மேல் | என் உடம்பின்மேலே | ந்த | |
| திங்கள் | சந்த்ரனுடைய | தார் | திருத்துழாய்மாலையான |
| வெம்கதிர் | வெவ்விய கிரணங்களா | | து |
| சீறும் | சீறுநின்றன; [னவை | என்னை | (ஸ்த்ரீத்வத்தை நோக் |
| என் செய்கேன்?-; | | | கிக்கொண்டிருக்கி |
| பொங்கு | கிளரா நின்றும் | | ற) என்னை |
| வெண் | வெளுத்துமிருக்கிற | கூவும் | ( இங்ஙனே புறப்படா |
| திரை | அலைகளையுடைய | | யோ என்று)அறை |
| புணரி | கடல் போன்ற | | கூவாநின்றது. (௩) |

வ்யா;—மூன்றாம்பாட்டு. (சங்கித்யாதி) நிறமும் வளையும் தொங்குகைக்கு ஆஶ்ரயமின்றிக்கேயிருக்கிற உடம்பின்மேலே. (திங்களித்யாதி) நிலா உடம்பிலே படாநின்றால், பெண்பிறந்தார் எங்ஙனே ஜீவிக்கும்படி. (பொங்கித்யாதி) ஓதம் கிளர்ந்தகடல்போலே

கொல்லும் என்னாதே "ஈரும்" என்றதுக்குபா(வ)வம்(நற்கொலையித்யாதி).

அ௩;—மூன்றாம்பாட்டு. (சங்குமித்யாதி) " கண்ணுக்குத்தோற்றாதே ஓடித்திரிகிற காற்று எவ்வளவு " என்று, " எம்பெருமான் " என்கிற நல்திங்கள் கண்ணுக்கிலக்காய் கைகளாலே நெருப்பை இறைக்கிறதென்று க்லேசிக்கிறாளென்று ஸங்கதி.

என்செய்கேனென்கிறதென்? நீ நிலாமுற்றத்தை விட்டு உள்ளே புகுரலாகாதோ? என்னும் சங்கையிலே "பொங்கித்யாதி" என்று தாத்பர்யமருளுகிறார் (ஓதமித்யாதி). ... ... ... ... (௩)

ப்ரமஹரமான வடிவையுடையராயிருக்கிறவருடைய பரிமளப்ரசுரமாயிருக்கிறதாரானது உள்ளேபுக்கு "ஸ்த்ரீத்வத்தை நோக்கிக் கொண்டு மறையவிருக்கிறதென்? இங்ஙனே புறப்படாயோ" என்று அறைகூவாநின்றது. .... .... .... .... .... (௩)

மூ;—அங்கோராய்க்குலத்துள் வளர்ந்துசென்று
அங்கோர்தாயுருவாகி வந்தவள்
கொங்கைநஞ்சுண்ட கோயின்மைகொலோ
திங்கள்வெங்கதிர் சீறுகின்றதே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அங்கு | கம்ஸபயமும் இருளுமாய்க்கிடந்த ஸமயத்திலே | வந்தவள் | வந்தவளான பூதனையின் |
| ஓர் ஆய்ச்குலத்துள் | திருவாய்ப்பாடியேற | கொங்கை | ஸ்தநத்திலே தடவிக்கிடந்த |
| சென்று | எழுந்தருளி | நஞ்சு | விஷத்தை |
| வளர்ந்து | வளர்ந்தருளாநிற்க | உண்ட | அமுது செய்த |
| அங்கு | அவ்விடத்திலும் | கோயின்மை கோலோ | ஆராய்ச்சியில்லாத செயலைப்பின்சென்றோ, |
| ஓர் | க்ருத்ரிமத்தில் ஒப்பற்றவளாய் | திங்கள் | சந்த்ரனுடைய |
| தாய் உரு ஆகி | தாயின் வடிவைக்கொண்டு | வெம்கதிர் | வெவ்விய கிரணங்களானவை |
| | | சீறுகின்றதே | சீறுகின்றனவே. (௪) |

வ்யா;—நாலாம்பாட்டு. (அங்கோராய்க் குலத்துள்வளர்ந்து சென்று) அவ்வளவிலே ஒதுங்குகைக்கு ஒரு ஊருண்டாயிற்று. கம்ஸபயமும் இருளுமாய் ஸ்ரீவஸுதேவரும் தேவகியாரும் நோவுபடுகிற ஸமயத்திலே அது, ஒரு அஞ்சினான் புகலிடமுண்டாயிற்று. கம்ஸனுக்குக் குடிமக்களாய் இவரை இருநிற்கச்செய்தே அவனுக்கஞ்சாதே பிள்ளைகளைநோக்கிக் கொடுக்கவல்ல ஊரிறே.

---

அரு;—நாலாம்பாட்டு. (அங்கோரித்யாதி) போது விடியாதோ? தானே மதி கெட்டுப் போகிறாளென்று தோழிசொல்ல, "ஒரு நிலையாக நின்றன்றோ இவன் பாதிக்கிறான்; எனக்கு விடிவது எப்போதோ" என்று மீளவும் அதுக்க நோவு படுகிறாளென்று ஸங்கதி.

கீழ்வாக்ய விவரணம் (கம்ஸேத்யாதி). அஞ்சினான் புகலிடமானபடியென்னென்ன (கம்ஸனுக்கித்யாதி). ... ... ... (௪)

(அங்கித்யாதி) போனவிடத்திலே நலியவேணுமென்று தாய் வடிவுகொண்டு வந்தவளை, அநுகூலையென்று புத்திபண்ணாதே, அவளை ப்ரதிகூலையென்றே அறிந்து, அவள்முலையைஉண்டு முடித்த ஆராட்சியில்லாத செயலோ? (திங்களித்யாதி) சந்த்ரன் இங்ஙனே பாதகனாகிறது, தனக்குக் குளிர்ச்சியையும் தர்ஶநீயதையையும் கொடுத்துவிட்டு, அவன் கருத்தைப் பின்சென்றே இவன் நம்மை இப்போது நலிகிறது; (க)“த்ருஷ்டிம் ஸூர்ய-பீக்ஷாதேதி ஸுஹ்ருத:” என்றவனைப் பின்செல்லவேணுமிறே அவற்றுக்கு. .... .... (௪)

மூ;—அங்கோ ராளரி யாயவுணனைப்
பங்கமா விருகூறு செய்தவன்
மங்குல் மாமதி வாங்கவேசொலோ
பொங்குமாகடல் புலம்புகின்றதே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அங்கு | ப்ரஹ்லாதாழ்வானுடைய ப்ரதிஜ்ஞா ஸமகாலத்திலே | மாமதி | சந்த்ரனை |
| ஓர் ஆளரியாய் | அத்விதீயமான நரஸிம்ஹரூபியாய்(தூணிலே தோன்றி) | மங்குல் | ஆகாஶத்திலே (வர்த்திகைச்சும்படியாக) |
| அவுணனை | ஹிரண்யனை | வாங்கவே கொலோ | (கடலைக் கடைந்து உள்ளினின்றும்) வெளிக்கிளப்பினனென்ற வருத்தத்தினாலேயோ |
| பங்கமா | மாநபங்க(பங்க)ம்பண்ணி | பொங்கு | திரைக்கிளப்பத்தையுடைய |
| இருகூறுசெய்தவன் | இருதுண்டமாகக் கிழித்துப்பொகட்ட ஸர்வேஶ்வரன் | மாகடல் | ஸமுத்ரமானது |
| | | புலம்புகின்றது | கோஷியாநின்றது. (ரு) |

அந;—அஞ்சாம்பாட்டு. (அங்கோரித்யாதி) தான் இப்படி மதிக்கொடுங்கி மதிகெட்டுக் கூப்பிட்டுக் கொண்டிருக்கச்செய்தே, கடல் தான் கோஷிக்கக்கேட்டு, இதுவும் என்ன மதி இழந்ததோ வென்கிறளென்று ஸங்கதி.

நான் * சந்த்ரகாந்தாநநத்தைக் காணாதே மதிகெடுவது, இது சந்த்ரனைக்கண்டுவைத்தேயொட்டாதே கூப்பிடுகிறதாக என்னுகிறளென்று கருத்து; சந்த்ரனைக்கண்டால் கடல் மிகவும் கோஷிக்குமிறே. ... ... (ரு)

(க) தை-ஆந-அ.

வ்யா,—அஞ்சாம்பாட்டு. (அங்கித்யாதி) ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே நரஸிம்ஹமாய்) ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யனையும் மதிப்பறுத்து அநாயாஸேந கிழித்துப் பொகட்டான். அவனை எதிரியாக்கி ஆயுதமெடுக்கையன்றிக்கே வெறுங்கையே புறப்பட்டுத் திருவுகிராலே கிழித்துப் பொகட்டான்.

(மங்குலித்யாதி) இப்படி அரியவற்றை வருத்தமறச் செய்து தலைக்கட்ட வல்லவன், தன்னை நெருக்கிக்கடைந்து உள்ளுண்டான மதியை வாங்குகையோ இக்கடல் இங்ஙனே கிடந்து கூப்பிடுகிறது, என்னைப்போலே மதி இழந்தோ இக்கடலும் கூப்பிடுகிறது.*(க)மதியெல்லா முள்கலங்கியிறே இவளும் கிடக்கிறது. ஒன்றுக்கும்விக்ருதையாகாத நான் கலங்கிக் கூப்பிடுகிறப்போலேயிருந்தது இக்கடலும்தன் காம்பீர்யமெல்லாம் அழிந்துகூப்பிடுகிறபடியும். (மங்குல்) ஆகாசம். .... .... .... .... .... .... (ரு)

மூ;—சென்றுவார்சிலை வளைத்திலங்கையை
வென்றவில்லியார்வீர மேகொலோ
முன்றில் பெண்ணைமேல் முளரிகூட்டகத்து
அன்றிலின்குர லடருமென்னையே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சென்று | எதிரிகளிருக்குமிடமே றப்போய் | முன்றில் | வாசலிலே நிற்கிற |
| வார் | நெடிதான | பெண்ணைமேல் | பனைமரத்தின்மேலே |
| சிலை | தனுஸ்ஸை | முளரி | தாமரைப்பூவாலும் தாதாலும் தண்டாலும்(பிணைக்கப்பட்ட) |
| வளைத்து | (நாணேற்றி)வளைத்து, | | |
| இலங்கையை | லங்கையிலுள்ள ராக்ஷஸர்களை | கூட்டகத்து | கூட்டிலே கிடக்கிற |
| வென்ற | அழித்த | அன்றிலின் | அன்றில் பக்ஷியின் |
| வில்லியார் | பெருமாளுடைய | குரல் | த்வநியானது |
| வீரமேகொலோ | ஆண்பிள்ளைத் தனத்தைப்பின்சென்றோ, | என்னை | என்னை |
| | | அடரும் | வருத்தாநின்றது?.(சு) |

அவ;—ஆறாம்பாட்டு. (சென்றித்யாதி) திங்கள் தீவீச, ஸமுத்ரத்தைப்போலே தான் புலம்புகிறபடியைக் கண்டு, அன்றில் அருகே நெருப்பை உருக்கிவார்த்தாப்போலே செவிபடக்கூப்பிட, அதுக்கும் நொந்துபடுகிறாளென்று ஸங்கதி.

(க) தி-வாய்-க-சு-ரு.

வ்யா;—ஆரும்பாட்டு (சென்று)எதிரிகள் வரப்போர விருக்கை யன்றிக்கே(க) "ஶத்ரூணாம் - அபியாதா" என்கிறபடியே அவர்கள் இருந்த விடங்களிலே சென்று (உ) "அவஷ்டப்ய மஹத்தநு: - அவஷ்டப்யமஹத்தநு:" என்கிறபடியே, ஒருவர்க்கு அடக்கவொண்ணாதே நெடிதாயிருக்கிற வில்லை வளைத்து லங்கையை அழியச்செய்தவருடைய ஆண்பிள்ளைத்தனமோ. (மூன்றிலித்யாதி) வாசலிலே நிற்கிற பெண்ணையின்மேலே, தாமரைப்பூவாலும் தாதாலும் தண்டாலும் செய்த கூட்டிலே கிடக்கிற அன்றிலினுடைய த்வநி எனக்கு பாத (ஸ்ய)கமாகாநின்றது. நான் இதுக்கு எத்தைச்செய்வேன். நான் இதுக்குமார்விலே அப்பேற்கவோ? .... .... (௬)

மூ;—பூவைவண்ணனார் புள்ளின்மேல்வர
மேவிநின்று நான் கண்டதண்டமோ
வீவிலைங்கணைவில்லி யம்பு கோத்து
ஆவியே யிலக்காக வெய்வதே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஐங்கணைவில்லி | பஞ்சபாணனான மந்மதன் | வண்ணனார் | திரு நிறத்தையுடைய ஸர்வேஶ்வரன் |
| வீவு இல் | க்ஷணகாலமும் ஒழிவில்லாமல் | புள்ளின்மேல் | பெரிய திருவடியின் மேலே |
| அம்பு கோத்து | பாணங்களைத் தொடுத்து | வர | எழுந்தருளாநிற்க, |
| ஆவியே | என்னுடைய மர்மஸ்தாநத்தையே | நான் | நான் |
| இலக்காக | லக்ஷ்யமாகக்கொண்டு (அது துடிக்கும்படி) | மேவி நின்று | ஶிதிலையாகாதேநின்று |
| எய்வது | ப்ரஹரிக்கையாகிறவிது, | கண்ட | ஸேவித்ததற்கு |
| பூவை | காயாம்பூப்போன்ற | தண்டமோ | தண்டம் செய்தபடியோ; (எ) |

(போர) யுத்தம் பண்ண. "வார்" என்றுநீட்சியைச்சொல்லுகையாலே பலிதார்த்தமருளுகிறார்(அவஷ்டப்யேத்யாதி). "பெண்ணை" பனை. "முளரி" தாமரையாகையாலே அருளுகிறார் (தாமரையித்யாதி). "ஏ" என்கிறது-விஷாதஸூசகமான அவ்யயமாயருளுகிறார் (நானிதற்கித்யாதி). அம்பேற்கை) யுத்தம் பண்ணுகை; அதாவது - வில்லியார் வீரங்கொண்ட விதத்தைக்கண்டு, ஓட்டிறேல் அது ஒழிமோவென்று கருத்து. (௬)

(க) ரா-அ-யோ க-உ-௬- (உ) ரா-யு-க௦௦-கக-

வ்யா;—ஏழாம்பாட்டு. (பூவைவண்ணனார்) வைத்தகண்மாறாதே கண்டுகொண்டிருக்க வேண்டும்படி ஆகர்ஷகமான வடிவையுடையவர், ஒரு மேகமிவைக் கிரீபமேகம படிக்தாப்போலே பெரிய திருவடி திருத்தோளிலே வர. (மேவியித்யாதி) சிதிலையாகாதே நின்று நான் கண்டதுக்குத் தண்டமோ?. (வீவிலித்யாதி) காமனானவன் தன்னுடைய புஷ்ப பாணங்களாலே தோல் புரையேயன்றியே மர்மத்திலே எய்கிறவிது. .... .... (எ)

மூ;—மாலினம் துழாய்வரு மென்னெஞ்சகம்
மாலினந்துழாய் வந்தென்னுள் புகக்
கோலவாடையும் கொண்டுவந்ததோர்
ஆலிவந்ததாலரிது காவலே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என் | என்னுடைய | கோலம் | பரிமளப்ரசுரமான |
| நெஞ்சகம் | நெஞ்சானது | வாடையும்கொண்டு | வாடைக்காற்றையுங் கூடக்கொண்டு |
| மால் | (எனக்கவன்பக்கலுண்டான) வ்யாமோஹ | வந்தது ஓர் | (நிலம் பார்த்துப்போகைக்கு) முன்பே வந்ததொரு |
| இனம் | அநுரூபமாக [த்துக்கு | ஆலி | சிறுதுளியானது |
| துழாய்வரும் | இங்குமங்கும் தேடித் திரிந்து வாராநின்றது. | வந்தது | (மீண்டும்) வாராநின்றது; |
| மாலின் | ஸர்வேஶ்வரனுடைய | ஆல் | கஷ்டம்; |
| அம் துழாய் | அழகிய திருத்துழாய்த்தாரானது | காவல் | (இதற்குத்தப்பி) உயிரைக் காத்துக்கொள்ளுகை [தகி. |
| என்னுள்வந்துபுக | எனக்கு ஸ்ம்ருதி விஷயமாக, | அரிதே | அஸாத்ய(ஸ)மாயிருந் |

அ;—ஏழாம்பாட்டு. (பூவையித்யாதி) தோல் புரையே பாதிக்கிற காற்றும், கண்ணுக்குத்தோற்றின மாத்ரமானமதியும், செவியிலே நோவுபடுத்தின அன்றிலும், பாதித்தாலும் இவற்றால் இவள் ஈடுபடவில்லை. இப்படி பரிகரங்களுக்கும் இடையாத இவளை நீயே போய் நெஞ்சிலேபட எய்யச்சொல்லிவிட, வந்த காமனுக்கு அஞ்சி நோவுபடுகிறாளென்று ஸங்கதி.

" ஐங்கணைவில்லி - வீவில்லாதே, அம்பு கோத்து" என்றந்வயம் திருவுளம் பற்றியருளுகிறார் (காயனித்யாதி). ... ... ... (எ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (மாலித்யாதி) என்னுடைய நெஞ்சானது எனக்கு அவன்பக்கலுண்டான மாலுக்குஇனமாகத்துழாவி வாராநின்றது. (மாலித்யாதி) ஸர்வேஸ்வரனுடைய திருமேனியின் ஸ்பர்ஶத்தையுடைய திருத்துழாயானது வந்து எனக்கு ஸ்ம்ருதிவிஷயமாக,பரிமளத்தை யுடைத்தான வாடையைக்கொண்டு. (வந்ததோராலி வந்ததால்) பண்டே நிலம் பார்த்துப்போன சிறு துளியானது வாராநின்றது. (அரிது காவலே) தேசிகனான ஸ்ரீ விபீஷணாழ்வானே நின்று வழியிட்டுக் கொடுக்கையாலே ராக்ஷஸர்கள் வெல்லமாட்டிற்றிலர்களிறே. அப்படியே நிலவரே வழிகாட்டிக்கொடுவந்து நலியாநிற்க நம்மால் பரிஹரிக்கப்போமோ? (அ)

மூ;—கெண்டையொண்கணும் துயிலுமென்னிறம்
பண்டு பண்டுபோ லொக்கும்மிக்கசீர்
தொண்டரிட்டபூந் துளவின் வாசமே
வண்டுகொண்டு வந்தூது மாகிலே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சீர் | (அநந்யப்ரயோஜநதையாகிற) கல்யாணகுணத்தாலே | என் | என்னுடைய |
| | | கெண்டை | கெண்டை மத்ஸ்யம் போல் |
| மிக்க | சிரியர்களான | ஒண் | தர்ஶநீயமான |
| தொண்டர் | ஸ்ரீவைஷ்ணவர்கள் | கண்ணும் | கண்களும் |
| இட்ட | ஸமர்ப்பித்த | துயிலும் | உறங்கப்பெறும்; |
| பூந்துளவின் | திருத்துழாயலரின் | நிறம் | (என்னுடைய) மாமை நிறமும் |
| வாசம் | பரிமளத்தை | | |
| கொண்டுவந்து | கொண்டுவந்து | பண்டு பண்டு | பழைய படியே அவி |
| வண்டு | வண்டானது [ல் | போல் ஒக்கும் | கலமா யிருக்கப் பெறும். (கூ) |
| ஊதுமாகில் | (என்னருகில்) ஊதினு | | |

அரு;—எட்டாம்பாட்டு. (மாலித்யாதி). கீழ்ப்பாட்டிலே காமன் சரங்களாலே எய்ய, அவற்றாலே நெஞ்சு சிதிலமாய் மாலேறிவர, கீழே கூவுகின்ற கொங்கலர்ந்திருக்க அவகாசமுண்டாய் உள்ளே புக்கது, எதிராளின் நெஞ்சு அஞ்சும்படியாலே முன்னே வந்தவாடையும்துளியும் மீளவந்தபடியைச்சொல்லி மிகவும் அருசுகிறாளென்று ஸங்கதி.

(மாலுக்கு) வ்யாமோஹத்துக்கு. (இனமாக) ஒத்ததாக; இனத்தார் என்னக்கடவதிறே ஸதிக்த்தரை. "வந்ததோராலி" என்கையாலே முன்னே நிலவரமுண்டானதென்று தோற்றுகையாலேஅருளுகிருர் (தேசிகரித்யாதி). ... ... ... ... ... ... (அ)

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (கெண்டையித்யாதி) முக்த(ஃ)மாய் தர்ஸநீயமாய் உறக்கத்தாலல்லது போதுபோக்குகையரிதான கண்ணுமுறங்கப் பெறலாம். (என்னிறம்) அவன் வாய் புலற்றும் நிறம், அறப்பண்டுபோலேயாம். கலக்கையாகிறது பிரிவிக்கு அங்குரமிறே. கலந்து பிரிந்து லாபாலாபங்களறியாதே பூர்ணையாயிருந்தபோதை நிறம் போலேயாம்.

கண்ணுமுறங்கி நிறமும் வருவது தானென்செய்தாலென்னில்; (மிக்க வித்யாதி) அநந்ய ப்ரயோஜனரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இட்ட திருத்துழாயில் பரிமளத்தை வண்டு கொண்டுவந்து ஊதுமாகில், திருத்துழாயில்பரிமளம் உத்தேஸ்யமாகில், "தொண்டரிட்ட" என்ன அபேக்ஷையாரோ? "மிக்கசீர் தொண்டரிட்ட" என்றானென்னென்னில்; "அங்குத்தைக்குப் பரிவருண்டு" என்றறிந்தாலாயிற்று இவளுக்குக்கண் உறங்குவதும், பழைய நிறம் வருவதும். (௧) "ஆத்வாரமநுவவ்ராஜ-ஆத்வாரமநுவவ்ராஜ" என்றிருக்குமவளாகையாலே அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அங்குத்தைக்குப் பரியாநின்றார்கள்" என்றுகேட்டவாறே, இனி நமக்கொரு குறையில்லை என்று கண் உறங்கா நிற்கும்; நிறமும் பழையபடியேயாம். .... .... .... .... .... (௯)

மூ;—அன்று பாரதத்தைவர் தூதனாய்ச்
சென்றமாயனைச் செங்கண்மாலினை
மன்றிலார் புகழ் மங்கைவாள் கலி
கன்றிசொல் வல்லார்க் கல்லலில்லையே. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

அரு;—ஒன்பதாம்பாட்டு. (கெண்டையித்யாதி) "அரிது சாவலே" என்றுமிகவும் க்லேசிக்கக்கண்ட தோழியானவள் பொறுக்கமாட்டாதே உனக்கு து:க்கமெழுமின்றிக்கே கண்ணுறங்கி யிருக்கைக்கு நானென்ன செய்கேன், நாயகன் - ஸ்வதந்த்ரன்; நீ பொறுக்கவல்லையல்லை; இனி நானும் இங்ஙனே உன்னைக்கண்டு து:கிக்கிக்குமத்தனை யன்றோ? என்று க்லேசிக்க, அது - பொறுக்கமாட்டாதவளாகையாலே எங்கேயிருந்தாலும் அவனுக்குப் பரிவருண்டென்றுமது தோற்ற, * மிக்கசீர் தொண்டரிட்ட மாலையின் மணத்தைக்கொண்டு வரும்படி பண்ணுமாகில், நான் கன்னியா யிருக்கும்போலே யிருக்கிறேனென்று சொல்லுகிறாளென்று ஸங்கதி.

(அறப்பண்டுபோலே)வன்பானென்னென்ன வருளுகிறார்(கலக்கையித்யாதி).

(௧) ரா-அ-௧௯-௨௧.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | பாண்டவர் நோவுபடுகிறவன்று | ஆர் | வ்யாபித்துக்கிடக்கிற |
| பாரதத்து | பாரதயுத்தத்திலே | புகழ் | புகழையும் |
| ஐவர் | அவ்வைவர்களுக்கும் | மங்கை | திருமங்கை யென்னும் திருநகரியையும் |
| தூதனாய் | தூதனாய் | வாள் | வாளையுமுடையரான |
| சென்ற | எழுந்தருளின | கலிகன்றி | ஆழ்வார் (அருளிச்செ |
| மாயனை | ஆஸ்சர்ய சீலனாய், | சொல் | இப்பாசுரங்களை [ய்த |
| செம்கண் | செவ்விய திருக்கண்களை யுடையனான | வல்லார்க்கு | ஓதவல்லார்களுக்கு |
| மாலினை | ஸர்வேஸ்வரன் விஷயமாக, | அல்லல் | பகவத் விஸ்லேஷவ்யஸநமானது. |
| மன்றில் | நாற்சந்திகள் தோறும் | இல்லை | உண்டாக மாட்டாது. |

வ்யா;—பத்தாம்பாட்டு. (அன்றித்யாதி) புண்டரீகாக்ஷனை ஸர்வேஸ்வரனாய் தன்னை யொழிந்ததுக்கடங்கலும் தான் நியாமகனாயிருந்து வைத்துப் பாண்டவர்கள் நோவுபடுகிறவன்று. பாரத ஸமரத்திலே "இன்னார் தூதன்" எனனும்படி தன்னைத் தாழவிட்டு தூதனாய் நின்ற ஆஸ்சர்யத்தையாயிற்றுக் கவிபாடிற்று. (மன்றிலார் புகழ்) நால்வர் திரண்டவிடமெங்கும் திருமங்கையாழ்வார் வார்த்தையே. ஆழ்வார் அருளிச்செய்த வித்தை அப்யஸிக்க வல்லவர்களுக்கு பாத (ஸ்ப்ரு)கபதார்த்தங்களால் நோவுபடவேண்டாதே நித்யஸம்ஸ்லேஷத்தோடே காலம்செல்லப் பெறுவர். அல்லலாகிறது - இத்திருமொழியில் பட்டக்லேசம் .... .... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரிய திருமொழி
## பதினோராம்பத்து முதல் திருமொழி முற்றிற்று.

அரு;—பத்தாம்பாட்டு. (அன்றித்யாதி) "செங்கண்மாலினை - அன்றித்யாதி கலி கன்றி சொல்" என்றந்வயித்துத் தாத்பர்ய மருளுகிறார் (புண்டரீகேத்யாதி). தன்னை இப்படி காற்றுக்கும் காமனுக்கும் இலக்காக்கிவைத்ததுக்கு, நங்கொடுமையாலே அவன் விரவிட்டதாகச் சொல்லுமித்தனைபோக்கி தத்வமன்றிறே. நான் ஊடினபோது கையைக்காலைப் பிடித்துச் சேரவிட்டுக்கொண்டவன் இப்படி செய்யானிறே. இனிவாராமைக்குஹேது ஆஸ்ரிதர்

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பதினோராம் பத்து இரண்டாந் திருமொழி
## குன்றமெடுத்து ப்ரவேசம்.

அவ;—குன்றமெடுத்துப்ரவேசம். "என்செய்கேன்" என்ற விடத்திலும்இரங்காதே பாதக (ஞஷ்) பதார்த்தங்கள் மிகைத்தன; ரக்ஷகனானவன் கைவிட்டான்; என் கார்யம் ஸ்வயத்ந ஸித்தமாயிருந்தது. எனக்கு இனி ரக்ஷகராக வல்லாருண்டோ என்கிறார் *.

மூ;—குன்றமெடுத்து மழை தடுத்திளையாரோடும்
மன்றில் குரவை பிணைந்தமாலென்னை மால்செய்தான்
முன்றில் தனிநின்ற பெண்ணைமேல் கிடந்தீர்கின்ற
அன்றிலின் கூட்டைப் பிரிக்ககிற் பவரார்கொலோ. (க)

| பதம். | உரை. |
|---|---|
| குன்றம் | கோவர்த்தன பர்வதத்தை |
| எடுத்து | குடையாக எடுத்து |
| மழை | (இந்த்ரன்பெய்வித்த கல்வர்ஷத்தால் வந்த நலிவை |
| தடுத்து | நிரஸித்து, |
| மன்றில் | நாற்சந்தியிலே [டே |
| இளையாரொடும் | இடைப்பெண்களோ |
| குரவைபிணைந்த | திருக்குரவைகோத்தருளின |
| மால் | ஸர்வேஶ்வரன் |
| என்னை | என்னை |
| மால்செய்தான் | மதி மயங்கப் பண்ணிவிட்டான்; |
| முன்றில் | வாசலிலே |
| தனிநின்ற | ஒப்பற்று நின்ற |
| பெண்ணைமேல் | பனைமரத்திலே |
| கிடந்து | (அஞ்சாதே) கிடந்து |
| ஈர்கின்ற | (ஶஸ்த்ரம்போலே) உயிரை நலியாநின்ற |

சொல்விற்றுச்செய்வானுகையாலே, அதிலே அந்யபரனுகையிருக்கவேணுமென்று நினைத்து துளவின் வாசமே வண்டு கொண்டுவந்து ஊதிளுலமையுமென்றுளாசையாலே, இவ்வாஶ்ரித பாரதந்த்ர்யத்தைச்ய கவிபாடினுரென்னலாமென்று திருவுள்ளம். (சுo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அநு;—குன்றமெடுத்தின் ப்ரவேசம், கீழ்த்திருமொழியிலே சில பாதகங்களுக்கஞ்சி, அவன் துளவின் வாசத்தைஆசைப்பட்டிருந்தாள். அதுவே ஹேதுவாகப் பின்னையும் அன்றில் முதலானவை நலிய, பொறுக்கமாட்டாதே தானே யத்நம்பண்ணுகைக்கு ஒருப்படுகிறுளென்று ஸங்கதியருளுகிறுர் (என் செய்கேனித்யாதி). தூமலரித்யாதியைப் பற்ற (ஸ்வயத்ந ஸித்தமாய்)என்றது. ... ... ... ... ... ... ... ... *

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| அன்றிலை | அன்றில் பக்ஷிகளை | கிற்பவர் | ஸமர்த்தராகக் கடவார் |
| கூட்டின் | கூட்டில்நின்றும் | ஆர்கொலோ | எந்த மஹாநுபாவரோ |
| பிரிக்க | பிரித்துவிட | | தான்! (க) |

வ்யா;—முதற்பாட்டு. (குன்றமித்யாதி) அரிய செயலைச்செய்து தன்னை எல்லாரும் காணும்படியாக மன்றிலே இட்டவன், அச்செயலாலே என்னை மன்றிலே நிறுத்தினான். (மூன்றிலித்யாதி) பழையதாக நலிந்துப்போருகிற இத்தைப் பரிஹரிப்பாரரென்கிறாள். ஏலக்கோலி நலிவுதாக மன்றிலேபெரிய ஆர்ப்பரவத்தோடே நின்றபெண்ணை மேலேகிடந்து ஈருகின்ற. பெண்ணை-பனை. சஸ்த்ரம் போலே கடுக முடித்துவிடாதேசார்ந்து நலியாநின்றதாயிற்று. பிரிப்பனபிரித்து கூடுவன கூட்டித்திரிகிறாளன்றிறே. இனி இத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்றால், இவ்வன்றிலின் த்வநி பாதகமாகாதபடி அவனை என் முலையோடே கொடுவந்து சேர்க்க வல்லாரில்லையோ வென்கிறாள். .... .... .... .... .... (க)

மூ;—பூங்குருந்தொசித்தானை காய்ந்தரிமாச்செகுத்து
ஆங்கு வேழத்தின் கொம்புகொண்டுவன் பேய்முலை
வாங்கியுண்ட வவ்வாயன்நிற்க விவ்வாயன்வாய்
ஏங்குவேய்ங்குழ லென்னோடாடு மிளமையே. (உ)

---

அரு;—முதற்பாட்டு. (குன்றமித்யாதி) மால் செய்தானென்றதுக்குத் தாத்பர்யம் (அச்செயலாலே யித்யாதி). "முளரிக்கூட்டத்து" என்று கீழ்த்திருமொழியிலும் சொன்னதாகையாலே அருளுகிறார் (பழையதாக வித்யாதி). (ஏலக்கோலி) முந்துற உத்யோகித்து. கூட்டைப் பிரிக்கையாவது-தான் முற்றத்திலேநில்லாதே உள்ளேநாயகனோடே கண்ணுறங்கிக்கிடந்தால், இந்த கூண்டுக்கும் தனக்கும் பிரிவுண்டாமென்றே சொல்லவேணுமென்று, யதாஶ்ருதம் கூடாதென்று அருளுகிறார் (பிரிப்பனவித்யாதி). ... (க)

அரு,—இரண்டாம்பாட்டு. (பூமித்யாதி) கீழே அன்றிலின் குரலுக்கு நொந்து கூட்டவல்லராரோவென்று இருக்க, அவ்வளவிலே மாமணிவண்ணர் வாராமையாலே பெண் இப்படி பெண்ணைமேல் அன்றிலின்கையிலே அகப்பட்டு நொந்தாளென்று உடம்புவெளுத்து பண்டலந்தவனைப்போலே குழலூதினேமாகில் வந்தானென்று அறியிருப்பாளென்று குழலூத; இவள் குழல் வாசியறிந்தவளாகையாலே இதுக்கு நோவுபடுகிறாளென்று ஸங்கதி.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூ | (தர்ஶநீயமாகப்) பூத்துக்கிடந்த | வாங்கி | (ஸாதரமாகக்) கையில் வாங்கி |
| குருந்து | குருந்தமரத்தை | உண்ட | சுவைத்து (அவளை முடித்த) |
| ஒசித்து | முறித்து, | அவ்வாயன் | அப்படிப்பட்ட வாயையுடையனான கண்ணபிரான் |
| ஆனை | வ்ருஷபங்களை | நிற்க | விப்ரக்ருஷ்டனாய் நிற்க |
| காய்ந்து | நிரஸித்து, | இவ் ஆயன் | (நம்பி மூத்த பிரானாகிற) இந்த இடையனானவன் |
| அரிமா | ஸாத்ரவமே வடிவாய் வந்த கேஸியை | வாய் | வாயிலே (வைத்து) |
| செகுத்து | (வாயைக்) கிழித்து | ஏங்கு | ஏங்கி ஊதுகிற |
| ஆங்கு | அங்கே (பயங்கரமாய் வந்து தோற்றின) | வேய்ங்குழல் | வேய்ங்குழலானது |
| வேழத்தின் | குவலயாபீடத்தின் | என்னோடு | என்னிடையாட்டத்திலே (அணுகி) |
| கொம்பு | தந்தங்களை | இளமை ஆடும் | சிலபாலிஶசேஷ்டைகளைப்பண்ணுகின்றது. |
| கொண்டு | முறித்தெறிந்து, | | |
| வன் | நெஞ்சில் க்ரௌர்யத்தையுடைய | | |
| பேய் | பூதனையின் | | |
| முலை | (விஷதிக்த(௧)மான) முலைகளை | | |

வ்யா;—இரண்டாம்பாட்டு. (பூங்குருந்தித்யாதி) அடியேபிடித்துத் தலையளவும் செல்ல தர்ஶநீயமாம்படி பூத்து நின்ற குருந்தை முறித்து ருஷபங்களை நிரஸித்து கேசிவாயை அநாயாஸேந கிழித்து, அங்கே பயாவஹமாம்படி வந்துதோன்றின குவலயாபீடத்தை நிரஸித்து, அதின் கொம்பை வாங்கி, அவனைக்கண்டுவைத்தும நலிய வேணுமென்று வந்த நெஞ்சில் திண்மையையுடைய பூதனை முலையை ஸாதரமாக உண்டு, அவ்வழியே அவள் ப்ராணனை முடித்தவன் நிற்க, இந்த இடையனானவன் வாயிலே வைத்து ஸ்தாநேஸ்தாநே நின்று ஏங்கி ஊதுகிற குழலானது என்னோடே பாலிசமான வ்யாபாரங்களைப் பண்ணுகின்றது. .... .... .... .... (௨)

(௧) "ஸ்நேஹஸ்யமதுரைஃ- ஸங்கீதவசஸ்ஸாமதுரைஃ" என்கிற நம்பி மூத்தபிரானிருப்பது. (பாலிசமான வ்யாபாரங்களை) என்றதுக்கு, மாமணிவண்ணனுக்காக நான் நேர்பட்டபோது ஸாதிக்க ஆமையாதென்றோதே, மூத்தனாயிருக்கவும் இளமையாலே இப்படி ஊதுகிறது பாலிசக்ருத்யமிறே என்று கருத்து. ... ... ... ... ... ... ... ... (௨)

(௧) வி-பு-௫-௨௪-௨௧.

மூ;—மல்லொடு கஞ்சனும் துஞ்ச வென்றமணி வண்ணன்
அல்லிமலர்த் தண்டுழாயை நினைந்திருந்தேனையே
எல்லியின் மாருதம் வந்தடு மதுவன்றியும்
கொல்லை வல்லேற்றின் மணியும் கோயின்மை செய்யுமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மல்லொடு | (கம்ஸன் ஏவி வந்த) மல்லவர்க்கமும் | மாருதம் | தென்றலானது |
| கஞ்சனும் | கம்ஸனும் | வந்து | நானிருக்குமிடமே வந்து |
| துஞ்ச | உயிர்மாள | அடும் | நலியாநின்றது; |
| வென்ற | வெற்றிபெற்ற | அதுவன்றியும் | அதுவுமன்றிக்கே |
| மணிவண்ணன் | எம்பெருமானுடைய | கொல்லை | வெளிநிலங்களிலே (ஸஞ்சரிக்கிற) |
| அல்லி | இதழ்களை யுடைத்தாய் | வல் | வல்லிய |
| தண் | குளிர்ந்திருந்துள்ள | ஏற்றின் | வ்ருஷபங்களின் |
| துழாய்மலரை | திருத்துழாய்மாலையை (விரும்பி, அத்தையே) | மணியும் | (கழுத்தில் கட்டப்பட்டுள்ள) மணியின் ஓசையும் |
| நினைந்திருந்தேனை | நெஞ்சில் நினைத்துக் கொண்டிருக்கிறவன்னை | கோயின்மைசெய்யும் | ஆராச்சியில்லாத செயலைச் செய்யாநின்றது. (ரு) |
| எல்லியில் | ஸந்த்யாகாலத்திலே | | |

வ்யா;—மூன்றாம்பாட்டு (மல்லித்யாதி) அவன் வரவிட்ட மல்லவர்க்கத்தோடே கம்ஸன் முடியும்படி வென்று விரோதிபோகப்பெற்றதாலே ஸ்ரமஹரமான வடிவும் தானுமாயிருக்கிறவன், அப்போதிட்ட வெற்றிமாலையைப் பெறவேணுமென்று ஆசைப்பட்டத்தையே நினைத்துக்கொண்டிருக்கிற வென்னை, ஸந்த்யாஸமயத்திலே தென்றலானது வந்து நலியாநின்றது. அதுக்கமேலே வெளிநிலத்திலே நாகைத்தொடர்ந்து அது கைபுகுந்தாலல்லது மீளாதபடியிருக்கிற வ்ருஷபத்தினுடைய கழுத்தில் மணியோசையானது ஆராட்சியில்லாதவிடத்தல் செயலைச்செய்யாநின்றது. .... .... (ரு)

---

ஈடு;—மூன்றும்பாட்டு. (மல்லித்யாதி) நம்பி மூத்தபிரான் குழலோசையோயன்றிக்கே காற்றுகொடுக்கின என்னை அவர் மேய்க்கிற பசுக்களில் விடைகளும் பாதிக்கிறன வென்கிறாளென்று ஸங்கதி.

"மல்லொடு" என்று ப்ராதாந்யம் சொன்னதுக்குக் கருத்து (அவன் வரவிட்ட) என்றது. (ஆராட்சியில்லாதவிடத்திலே) அராஜகமாகையாலே விசாரிப்பாரில்லாத விடத்திலே. ... ... ... ... ... ... (ரு)

மூ;—பொருந்து மாமரமேழுமெய்த புனிதனார்
திருந்து சேவடி யென்மனத்து நினைதோறும்
கருந்தண் மாகடல் கங்குலார்க்கு மதுவன்றியும்
வருந்த வாடை வருமிதற்கினி யென்செய்கேன். (௪)

| பதம். | உரை. |
|---|---|
| பொருந்து | தன்னிலே பொருந்து நின்ற |
| மாமரம் ஏழும் | ஸால வ்ருக்ஷங்க ளேழையும் |
| எய்த | முறித்தெறிந்த |
| புனிதனார் | பரமபாவநரான பெருமானுடைய |
| திரு உந்து | ஐஶ்வர்ய ப்ரகாஶகமா |
| சேவடி | திருவடிகளை [ன |
| என்மனத்து | என் மனஸ்ஸிலே |
| நினைதொறும் | அநு ஸந்திக்கும் போதெல்லாம், |
| கரு | கறுத்த |

| பதம். | உரை. |
|---|---|
| தண் | ஶ்ரமஹரமாயிருந்துள் [ள |
| மாகடல் | ஸமுத்ரமானது |
| கங்குல் | இராமுற்றும் |
| ஆர்க்கும் | கோஷியாநிற்கும்; |
| | அதுவன்றியும்-; |
| வாடை | வாடைக்காற்றானது |
| வருந்த | (நான்) க்லேஶிக்கும்படி |
| வரும் | வந்து வீசாநிற்கும்; |
| இதற்கு | இதற்குப்(பரிகாரமாக) |
| இனி | இனிமேல் |
| என்செய்கேன் | (நான்)என்னசெய்யக் கடவேன். (௪) |

வ்யா;—நாலாம்பாட்டு. (பொருந்தித்யாதி) அடிகுறிக்கவொண்ணாதபடி குவிபாநிற்கிற மராமரங்களேழையும் எய்து ஆஶ்ரிதவிஷயத்தில் தமக்குண்டான ஓரம் தரைகாணவொண்ணாதபடி யிருக்கிற அவருடைய ஐஶ்வர்ய ப்ரகாசகமான திருவடிகளை அநுஸந்திக்கும்போதெல்லாம் கறுத்த தன்மையை உடைத்தா யிருக்கிற கடல், ராத்திரியிலே என் எளிமை கண்டு மிசைத்துக் கூப்பிடாநிற்கும். அதுக்குமேலே நான் வருந்தும்படியாக பலவானாயிருக்கிற வாடையானது வாராநின்றது. (இதற்கினி யென்செய்கேன்) ஓரபலை இதுக்குக்கடவேனோ? .... .... .... .... (௪)

---

அரு;—நாலாம்பாட்டு. ( பொருந்தித்யாதி ) கீழ்ப்பாட்டில் அந்தியில் தென்றலும் மணியோசையும்போய் ராத்ரியுமாய் கடலாலே நோவுபட்டவென்னை ஸந்த்யாகாலத்திற்குளிர் காற்றும் நலிகிறதென்கிறுளென்றுஸங்கதி.

ஆஶ்ரித விஷயத்தில் பக்ஷபாதமில்லாமை - அபாவகத்வமாய், அதில்லாதவரென்றருளுகிறார் ( ஆஶ்ரிதேத்யாதி ) திருவுந்து என்றது - குறைந்து, "திருந்து" என்று கிடக்கிறதாய், திருவை உந்துகை - முன்னே தள்ளுகையாய், ப்ரகாசிப்பிக்கைஎன்றருளுகிறார் ( ஐஶ்வர்யேத்யாதி ) (வருந்துமபடியாக) க்லேசிக்கும்படியாக.... ... ... ... ... ... ... (௪)

மூ;—அன்னை முனிவது மன்றிலின் குரலீர்வதும்
மன்னு மறிகடலார்ப்பதும் வளைசோர்வதும்
பொன்னங்கலையல்கு லன்னமென்னடைப்பூங்குழல்
பின்னை மணாளர் திறத்தமாயின பின்னையே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| அன்னை | பெற்ற தாயானவள் |
| முனிவதும் | சீறுவதும், |
| அன்றிலின் | அன்றில் பக்ஷியின் |
| குரல் | த்வநியானது |
| ஈர்வதும் | நலிகிறதும், |
| மன்னு | பூமியைச்சுற்றி வேலியாகப் போரக் கடவதாய் |
| மறி | ரக்ஷகமுமான |
| கடல் | ஸமுத்ரமானது |
| ஆர்ப்பதும் | கோஷிக்கிறதும், [வை |
| வளை | கையில் வளைகளான |
| சோர்வதும் | கழலுவதும் (ஆகிற இவையெல்லாம்), |
| அம் | அழகிதான [ந்த |
| பொன்கலை | பீதாம்பரத்தை யணி |
| அல்குல் | அல்குலையும் [று |
| அன்னம் | ஹம்ஸத்தினதுபோன் |
| மென் | விலக்ஷணமான |
| நடை | நடையையும் |
| பூ | தர்ஶநீயமான |
| குழல் | கூந்தலையு முடையளான [கு |
| பின்னை | நப்பின்னைப்பிராட்டிக் |
| மணாளர் | வல்லபரான பெருமாளுடைய |
| திறத்தம் | இடை யாட்டத்தில் |
| ஆயினபின்னையே | ஈடுபட்டோமான பின்பிறே (நமக்கு நேர்ந்தன). (ரு) |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (அன்னையித்யாதி) அவன் ஊர்பகை விளைத்து விட்டானாகில் நாம்இவற்றைவெறுக்கிறதென்? பரிவுடைய தாய் முனிகிறதும், நானும் அவனுமாயிருந்தபோது அநுகூலமான அன்றிலுடைய த்வநி பாதகமாகிறதும், பூமிக்கு வேலியாக ரக்ஷகமாயிருக்கிற கடல் கூப்பிடுகிறதும், ஆபரணமான வளைகழலுகிறதும், பொன்னாலே செய்யப்பட்டு தர்ஶநீயமாயிருக்கிற பரியட்டத்தை யுடைத்தான அல்குலையுடையளாய், அன்னம்போலே யிருக்கிற நடையையுடையளாய், வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படி தர்ஶநீயமான திருக்குழலையுடையளான நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபரான வவ ரிடையாட்டத்தோமான

---

அரு;—அஞ்சாம்பாட்டு. (அன்னையித்யாதி) ஒருகாலே பாதகபதார்த்தங்களையெல்லாம் அடுக்கினதுக்குத்தாத்பர்யகதநமுகேந ஸங்கதியையும் ஸூசிப்பிக்கிறார் (அவனித்யாதி), ச(ஞ)காரங்கள்-விரோதஸூசகங்களென்றுவிவக்ஷித்து அதுக்கதுக்குத்த[illegible]னைதைக்கூட்டி அருளுகிறார் (பரிவித்யாதி). இப்பா

பின்பிறே இவை நமக்கு இப்படியாகப் புக்கது. அவருடைய ப்ரணயித்வங்கண்டு நாம் அகப்பட்டபின்பிறே இவை நமக்கு பாதகமாகப்புக்கது. பூர்வாபரங்களுக்குச் சேர்த்திபோராதாகிலும், பிள்ளையுறங்காவில்லி தாஸர் "பின்னை மணாளன் திறத்தோமான பின்பன்றோ இவை இப்படியாயிற்று; ஸாமாந்யனென்று ஈடுமீடெல்லாம் இடவமையும் என்பாரைப்போலே, அவளோடே ஒருஸம்பந்தம் சொல்லி நலிகிறவை நலிந்தாலென்" என்பராம். .... (ரு)

மூ;—ஆழியும் சங்குமுடைய நங்களடிகள் தாம்
பாழிமையான கனவில் நம்மைப் பகர்வித்தார்
தோழியும் நானு மொழிய வையம் துயின்றது
கோழியும் கூகின்றதில்லைக் கூரிருளாயிற்றே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆழியும் | திருவாழி யாழ்வானையும் | தோழியும் | (ஸமதுக்க ஸுகைகளான) தோழிமார்களும் |
| சங்கும் | ஸ்ரீ பாஞ்சஜந்யாழ்வானையும் | நானும் ஒழிய | நானும் தவிர, |
| உடைய | (நிரூபகமாக) உடையராய் | வையம் | (மற்றை) உலகத்தாரனைவரும் |
| நங்கள் | நமக்கு | துயின்றது | உறங்காநின்றார்கள்; |
| அடிகள்தாம் | ஸ்வாமியுமான ஸர்வேஸ்வரன் | கோழியும் | கோழியும் |
| நம்மை | நம்மை | கூகின்றதில்லை | (விடிவுக்கு ஸூசகமாகக்) கூவுகின்றதில்லை; |
| பாழிமையான | (கரைகாணவொண்ணாதபடி) பரம்பியிருந்துள்ள | கூர் இருள் | காடா([illegible])ந்தகாரமானது |
| கனவில் | ஸ்வப்நத்தின் அபரபர்யாயமான ஸம்ஶ்லேஷத்தில் | ஆயிற்றே | விடிந்த பின்பும் கால் வாங்கப் பெற்றதில்லையே. (சு) |
| பகர்வித்தார் | கூப்பிடுவித்தான்; | | |

ட்டுக்கு க்ரியை காட்டுகிறார் (இவையித்யாதி). உத்தரார்த்தத்தை அநுஸந்தித்து பூர்வார்த்தமநுஸந்திப்பது அந்வயமென்று திருவுள்ளம்பற்றி, தொகுத்தபா(ஞ)வம்(அவருடையவித்யாதி).(பூர்வாபரங்களுக்கு)பாதகங்களாகநோவுபடுகிற கீழ்மேல்பாட்டுக்களுக்கு. இப்பக்ஷத்திலே சகாரங்களெல்லாம் "வந்து நலியப்பெறும்" என்றுகருத்து. "சோர்வதுமாகத்தக்கதே" என்றுக்ரியையைக்கூட்டிக்கொள்வது. "பின்னையே" பின்னையன்றோவென்று சப்தார்த்தம்.... (ரு)

வ்யா;—ஆறும்பாட்டு. (ஆழியித்யாதி) ஸர்வேஶ்வர லக்ஷண மாயிற்றுத் திருவாழி யாழ்வானும் ஶ்ரீபாஞ்சஜந்யமும். (பாழிமை யான கனவில் நம்மைப் பகர்வித்தார்) பெரிய மேன்மையையுடைய வர் கையைக்காலைப் பிடித்துத் தாழாநின்று பரிமாறின பரிமாற்ற மாகையாலே, அநுஸந்திக்கப் புக்கால் கரைகாண வொண்ணுதபடி யாயிருக்கிற அபர்யாப்த ஸம்ஶ்லேஷ ஸுகத்தாலே நம்மைக்கூப் பிடுவித்தார். (நம்மை) ராஜ்யநிமித்தமாக †சக்ரவர்த்தித் திருமகனை ச்சொல்லாததில்லை. (க) "தேநதுக்கேந - தேநதுக்கேந" என்கிறப டியே ஒரு படியாலும் வாய்திறவாதே, பெருமாள் தாபஸவேஷத் தைப் பார்த்துக் கவர்ந்து நின்று கண்ணநீரை விழவிட்டாளிறே. இப்படியிருக்கை ப்ராப்தமாயிருக்க, நம்மைக்கூப்பிடுவித்தார். (தோ ழியித்யாதி) ஸமாநஸுக துக்கைகளான எங்களை யொழிய எல்லா ரும் உறங்கிற்று. விடிவுக்கு ப்ராப்தமான இதுவுங்கூட அரிதாகா நின்றது. (கூரிருளாயிற்றே) விடிந்த பின்பும் இருள் கால் வாங்கு கிறதுமில்லை. .... .... .... .... .... .... (சா)

மூ;—காமன்றனக்கு முறையல்லேன் கடல்வண்ணனார்
மாமணவாளரெனக்குத்தான் மகன் சொல்லில்
யாமங்கள்தோ றெரிவீசு மென்னிளங்கொங்கைகள்
மாமணிவண்ணர் திறத்தவாய் வளர்கின்றவே. (எ)

அநு;— ஆறும்பாட்டு. (ஆழியித்யாதி) பகலெல்லாம் அன்னை முனிவ தும், ஸந்த்யையில் அன்றில்முதலானவைபாதிப்பதும், ராத்ரியெல்லாம் கடல் நலிவதும், விடியுங்காலத்தில்காலால் துகையுண்கிறதுமாயிருக்கிறவற்றையெ ல்லாம் சொல்லிக் கூப்பிட்டாள். அது பொறுக்கமாட்டாதே புறப்பட்டுலோக யாத்ரையைப் பார்க்க ஒருப்படவும் "த்ருடியுகாயதே - த்ருடியுகாயதே" என்கிற கணக்கிலே இருள்விரியாமையாலே அதுக்கும் நோவுபடுகிறுளென்று ஸங்கதி.

"பாழிமை" என்றது-பாப்பாய், "கனவில்" என்றது - ஸ்வப்ந மென்ன லாம்படியான ஸம்ஶ்லேஷமாய்த்தாத்பர்யமருளுகிறுர் (பெரியவித்யாதி). என் னை என்னுதே, "நம்மை" என்று ஆத்மநி பஹுவசநமாகச் சொல்லுகைக்குத் தாத்பர்ய மருளுகிறுர் (ராஜ்யமித்யாதி). கோழிகூவென்னும் என்று வெளிப்போம். "கோழியும் கூகின்றதில்லை" என்கிறது-விடிவைஸூசிப்பிக்கிற கோழியை என்று தாத்பர்யமருளுகிறுர் (விடிவுக்கித்யாதி).... ... (சா)

(க) ரா-

† (பா) சக்ரவர்த்திமகன்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காமன்தனக்கு | மந்மதனுக்கு | யாமங்கள்தோறு | சாமங்கள்தோறும் |
| முறையல்லேன் | (நான் நலியப் படுகைக்கு) ப்ராப்தி யுடையேனல்லேன்; | எரி | காமாக்நியை |
| | | வீசும் | தூவாநின்றான்; |
| கடல் | கடல் போலே (ஶ்ரமஹரமான) | என் | என்னுடைய |
| வண்ணனார் | வடிவை யுடைய கண்ணபிரான் | இளங்கொங்கைகள் | இளமுலைகளானவை |
| மாமணவாளர் | (எனக்கு) ஶ்லாக்யரான வல்லபர், (இவ்வழியாலே) | மாமணி | நீலமணிபோன்ற |
| | | வண்ணர் | திருநிறத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய |
| தான் | அந்த மந்மதனானவன் | | |
| எனக்கு | எனக்கு | திறத்த ஆய் | திறத்தில் படுகையையே பயனாக வுடையனவாய் |
| மகன் | மகனாகப்பெற்றான்; | | |
| சொல்லில் | (இவன் என்னை நலிகிற படியைச்)சொல்லப்புக்கால் | வளர்கின்ற | வளராநின்றன. (௭) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (காமன்றனக்கு முறையல்லேன்) காமனுக்கு நான்பாத்ய(ஸம்பந்த)கோடியிலே யாகைக்கு ஒருப்ராப்தியில்லை. (கடலித்யாதி) எனக்கு ஶ்லாக்யரான வல்லபராய் ஶ்ரமஹரமான வடிவையுடையவர். அவ்வழியாலே தான் எனக்கு நன்மகன். மாதாபிதாக்களைச்சேரவைத்து ரக்ஷிக்குமதிறே புத்ரக்ருத்யமாகிறது. அரியன வெல்லாம் செய்தாகிலும் மாதாவை நோக்க வேணுமே? (சொல்லில்) இப்படி ரக்ஷிக்கை முறையாயிருக்க, அதுக்கு விபரீதமாக நலிகிறபடியைச் சொல்லப்புகில் அதுக்கு இவனோடு எனக்கு ஒருப்ராப்தியில்லை.

இவன் இப்படி விபரீதமாகச்செய்கிற செயலேதென்னில்? (யாமங்கள்தோறெரிவீசும்) சாமங்கள்தோறும் காமாக்நியைத்

அரு.—ஏழாம்பாட்டு. (காமனித்யாதி) முறைமையில்லாத அன்றில் முதலானவற்றையும் பருவம்கழிந்ததாயையும் சொல்லுகிறதென்? வயிற்றில் பிறந்தாரும், இணைபிரியாதே உரமேறியிருக்குமவையும் அவன் பக்ஷத்தையே பற்றி என்னை நலிகிறபடி வாசாமகோசரமென்றதைச்சொல்லி நோவுபடுகிறாளென்று ஸங்கதி.

(அரியன) என்றது-பிதாவாகிலும் அவர்மேலே அம்பைத் தொடுக்கை. (மாதாவைநோக்குகை), அவளைஅழைத்துக்கொண்டு சேர்க்கை. அவனுக்குப்

தூவாநின்றான். தனக்கு நான் அநுவர்த்தநீயையான ஆகாரங்கிடக்கச்செய்தே, என்னுடைய இம்முலைகள் தான் அவனுக்கென்றேயாயிற்று வளருகிறது. .... .... .... .... .... (எ)

மூ;—மஞ்சுறு மாலிருஞ்சோலை நின்ற மணாளனார்
நெஞ்சுநிறைகொண்டு போயினார்நினைக்கின்றிலர்
வெஞ்சுடர் போய் விடியாம லெவ்விடம்புக்கதோ
நைஞ்சுடலம் துயின்றால் நமக்கினிநல்லதே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சு உறு | மேகபதத்தளவு மோங்கின | விடியாமல் | உதியாமல் |
| மாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலை மலையிலே | எவ்விடம் | எவ்விடத்திலே |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற | போய்புக்கதோ | சென்றொளித்தானோ?; |
| மணாளனார் | எம்பெருமான் | இனி | இப்படி பாத(?)க ஸாமக்ரிகள் மிகைத்தபின்பு |
| நெஞ்சில் | (என்னுடைய) நெஞ்சிலுள்ள | உடலம் | (நம்முடைய) ஶரீரமானது |
| நிறை | அடக்கத்தை | | |
| கொண்டு | அபஹரித்துக் கொண்டு | நைஞ்சு | ஶிதிலமாய் |
| போயினார் | எழுந்தருளிவிட்டார் | துயின்றால் | முடியப்பெறில் |
| நினைக்கின்றிலர் | (இத்தலையை ஒருகாலும்) நினைக்கிறிலர்; | நமக்கு | நமக்கு |
| வெஞ்சுடர் | ஸூர்யனானவன் | நல்லதே | நல்லவாழ்ச்சியே. (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மஞ்சித்யாதி) மேகபதத்தளவும் செல்லவோங்கின சிகரத்தையுடைத்தான திருமலையிலே, தமக்குக்கலவிருக்கையான ஸ்ரீவைகுண்டத்தைவிட்டு, இங்கே நம்முடையசெவ்வி

---

பிள்ளையான முறைமையால் பிள்ளையென்னலாம்படியான காமனேயோ? என்மார்விலே வளர்ந்த இவையும் எனக்கு அடங்காதே படுத்துகிற பாடென்னென்கிறாளென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (என்னுடைய வித்யாதி).

அந.—எட்டாம்பாட்டு. (மஞ்சுறுவித்யாதி) வயிற்றில்பிறந்தாரை வெறுக்கவேணுமோ? கைப்பற்றின கணவனுக்குக் கண்ணோட்டமில்லை; நாட்டுக்குக் கண்காட்டியான லோக சக்ஷுஸ்ஸும் போனவிடம் தெரிந்ததில்லை. இனி நான் செய்வதென்னென்று விசாரப்பட்டு, விரஹம் தின்ற உடம்பு இனி இருக்கப்புகுகிறதோ? தானேபோமே; அதுபோனால் இனி நமக்கு துக்கமே இல்லை என்று உடம்பில் நைராஶ்யத்தைச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

யறிந்து புஜிக்கைக்கு அவஸர ப்ரதீக்ஷரா யிருக்கிறவர், நெஞ்சிலடக்கத்தைக் கொண்டுபோனார். "இத்தலையை இப்படி ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினோமாகாதே" என்று நெஞ்சில் இத்தனை இரக்கமுமின்றிக்கே இராநின்றார்.

(வெஞ்சுடரித்யாதி) ரக்ஷகன் பாதகனானவாறே, அவன் பரிகரமும் பாத (ஃத) கமாமத்தனையாகாதே?; அவன்பாதகமாகப்புக்கவாறே அவனை அநுவர்த்தித்த அவன் பரிகரமும் பாத(ஃத)கமாகப்புக்கது. இவள் ஸந்நிதியிலே வர்த்திக்கில் இவளை அநுவர்த்தித்துக்கொண்டு †ப்ராப்தகாலத்திலே விடியவேணுமென்று நினைத்தது செய்யாதே போனவிடம் தெரியாதபடிபோனான். (எவ்விடம்-புக்கதோ?) இவன் ஆஜ்ஞைநடையாடாததோரிடம் தேடிப்போனானே அவன். அவன்பாதகனானபின்பு பரிகரமும் பாதகமாயிற்று. இனி இருந்தபடியாலே சரீரமானது சிதிலமாய் முடிந்து பிழைக்குமித்தனை போக்கி, இனிநமக்கொரு ஜீவிக்கையென்றொரு பொருளில்லையாகாதே?. .... .... .... .... .... .... (அ)

மூ;—காமன்கணைக்கோரிலக்கமாய் நலத்தின்மிகு
பூமருகோல நம்பெண்மை சிந்தித்திராதுபோய்
தூமலர்நீர்கொடு தோழீ நாம்தொழுதேத்தினால்
கார்முகில்வண்ணரைக் கண்களால்காணலாங்கொலோ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தோழீ, | வாராய் தோழீ!; | கோலம் | ஒப்பனை யழகாலும் |
| காமன் | மந்மதனுடைய | மிகு | மிக்கவைலக்ஷண்யத்தையுடைய |
| கணைக்கு | பாண மென்று பேர் பெற்ற வற்றுக் கெல்லாம் | நம் | நம்முடைய |
| | | பெண்மை | ஸ்த்ரீத்வத்தை |
| ஓர் இலக்கமாய் | ஓர் லக்ஷ்யமாய் (நோவுபடுவதிற்காட்டில்) | சிந்தித்து | புத்திபண்ணி |
| நலத்தில் | ஆத்ம குணங்களாலும் | இராது | "தத்தஸ்ய ஸத்ருசம்" என்றிருக்குமிருப்பு தவிர்ந்து |
| பூமரு | ஸ்ப்ருஹணீயமான | | |

விடியாதென்னலாயிருக்க, "எவ்விடம்புக்கதோ" என்பானென்னென்ன வருளுகிறார் (இவனித்யாதி). ஸ்வாமி ஸந்நிதியிலிருந்தால் ஸ்வாமிநியான தான் சொன்னது செய்யவேண்டிவருமென்று, உபயவிபூதியைவிட்டு எங்கே போயிற்றோவென்று கருத்து. ... ... ... ... ... (அ)

† (பா) ப்ராதஃகாலத்திலே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| போய் | அவனிருக்குமிடமே றப்போய் | வண்ணரை | வடிவை யுடைய எம்பெருமானை |
| தூ | பரிசுத்தமான | தொழுது | வணங்கி [றால், |
| மலர் | புஷ்பங்களையும் [ம் | எத்திறால் | ஸ்தோத்ரம் பண்ணி |
| நீர் | புண்ய தீர்த்தத்தையு | கண்களால் | (அவரைக்) கண்களாலே |
| கொடு | கையில் கொண்டு புக்கு | | |
| நாம் | நாமிருவருமாக | காணலாம்கொலோ | ஸேவிக்கப் பெறுவோமோ?. (௯) |
| கார்முகில் | காளமேகம்போன்ற | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (காமனித்யாதி) அவன் முறை தப்பிநின்றான். அவன் பரிகரமும் முறைதப்பி நின்றது. இனி நாமும் முறைதப்பி நின்றாகிலும் ஜீவிக்குமத்தனையென்கிறாள்.

"காமனுடையஅம்பு" என்று பேர்பெற்றவற்றுக்கெல்லாம் ஓரிலக்காய். அவன்றன்னை (க) "ஐங்கணைவில்லி" என்னக்கடவதிறே. ஓரம்பை விடும்போதும் ஐந்தும்போடும்கூடியிறேயிருப்பது. காமனுடையசரவர்ஷத்துக்கு இலக்காய் நோவுபடாநிற்க. (நலமித்யாதி) நலம் மிக்க வாத்மகுணங்களோடும் மிக்க ஒப்பனையோடும் கூடியிருக்கிறநாம், அவன்றானே வரும்படி யிருக்கையொழிய, அவனிருந்தவிடத்தேற நாமே புறப்பட்டுப்போகையாகிறவிது, நம்முடையநாண் மடம் அச்சம் துடக்கமான ஆத்மகுணங்களுக்குப்போராது. ஒப்பனையழகுக்

---

அரு;— ஒன்பதாம்பாட்டு. (காமன்கணைக்கித்யாதி) கீழேஉடம்பில்நைராஶ்யம் பிறந்தாலும், ஆசை முடிய வொட்டாமையாலே முறையழித்தாகிலும் பெறுவோமென்கிறாளென்ற ஸங்கதியை உட்கொண்டு தோழியின் சித்தஸமாதாநம் பண்ணும் முகத்தாலே அருளுகிறார் (அவனித்யாதி).

"கணை" என்றத்தை ஜாத்யபிப்ராயமாக்கி அருளுகிறார்(காமனுடையவித்யாதி). இவனுக்குள்ளபாணங்களெல்லாம்கூடி ஐந்தேயன்றோ? ஜாத்யேகவசநமாக பஹுவாகச்சொல்லுவானென்னென்னவருளுகிறார் (ஐங்கணையித்யாதி). இவனுக்கு இதுவே நிரூபகமாக விருக்கையாலே, ஓரம்புபொகட்டாலும் ஐங்கணையோடு கூடியே யிருக்கும்படி, அரவிந்தாதிகள் கனத்திருக்கையாலே, அவை யெல்லா வற்றுக்கும் இலக்கானே னென்கிறாளென்று விவக்ஷித்து எடுத்த பாசுரத்துக்குத் தாத்பர்ய மருளுகிறார் (ஓரித்யாதி). பலிதார்த்தம் (காமனுடையவித்யாதி).

---

(க) தி-மொ-௯-ரு-எ.

கும்போராது. நம்முடையநிருபாதிக ஸ்த்ரீத்வத்துக்கும்போராது. என்றுஇவற்றை மறைத்துக்கொண்டிராதே,(போய்) அவன்வரவிருக்கை தவிர்ந்து இனி நாய்போய்.

(தூமலரித்யாதி) உபாஸநத்தைவிதிக்கிற சாஸ்த்ரத்தில் சொல்லுகிறக்ரமம்தப்பாதபடி நாம் உபாஸித்தால், (நாம்) அவன்செய்யக்கடவற்றை நாமும் செய்தால், அவன்தொழுமத்தை நீ கொள்ளவேணுமென்று என்னைஇசைவிக்கைக்கு நீபடும்பாடறிதியே? ப்ரணயிநியான ஏற்றத்தோடேயிருந்து பெறுமது தவிர்ந்தாலும், பக்திமான்கள் பெறும்பேறு பெறத்தட்டில்லையே. முந்துற (க)"భక్త్యాత్వనన్యయాశక్యః - பக்த்யா த்வநந்யயாசக்ய:" என்றுமே; (உ)"నమే మోక్షంవచో భవేత్-நமேமோக்ஷம் வசோபவேத்"என்றுமுண்டே. அவன்பக்கலிலே, ஸ்ரமஹரமான வடிவை யுடையவரைக் காணவேணுமென்று விடாய்த்துப் பட்டினிவிடுகிற கண்களாலே காணலாமாகில்ஒருமுறைபார்த்திருக்கிறது தானென்? .... .... (கூ)

மூ;—வென்றிவிடையுட னேழடர்த்தவடிகளை
மன்றின்மலிபுகழ் மங்கைமன்கலிகன்றிசொல்
ஒன்றுநின்றவொன்பது முரைப்பவர்தங்கள்மேல்
என்று நில்லாவினையொன்றும் சொல்லிலுலகிலே. (க0)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வென்றி | ஜயிஷ்ணுவாய், | ஒன்று நின்ற ஒன்பதும் | இப் பத்துப் பாட்டுக்களையும் |
| விடை ஏழ் | வ்ருஷபங்களேழையும் | உரைப்பவர் தங்கள்மேல் | அநுஸந்திப்பார் பக்கலில் [மும் |
| உடன் அடர்த்த | ஸமூலமாக நிரஸித்தருளின | வினைஒன்றும் | ஒரு விதமான துன்ப |
| அடிகளை | எம்பெருமான் விஷயமாக, | என்றும் | என்றைக்கும் |
| மன்றில் | நாற்சந்திகள் தோறும் | நில்லா | இருக்கப்பெறாது ; (இவ்வளவேயன்றிக்கே,) |
| மலி | நிறைந்த | சொல்லில் | (மேல் பெறப் புகுகிற பேற்றின் பெருமையைச்) சொல்லப்புக்கால் |
| புகழ் | புகழையுடையராய் | | |
| மங்கை | திருமங்கைக்கு | | |
| மன் | நிர்வாஹகரான | உலகிலே | அவர்களிருந்த தேசத்திலுங்கூட |
| கலிகன்றி | ஆழ்வார் | | |
| சொல் | அருளிச்செய்த | | [வினை ஒன்றும் நில்லா-.] (க0) |

(க) கீ-கக-ருச. (உ) பாரத.

வ்யா.—பத்தாம்பாட்டு. (வென்றியித்யாதி) மிக்கசெயலையுடையவாய், புக்ககார்யத்தில் பிற்காலிக்கையன்றிக்கே யிருக்கிற வ்ருஷபங்களேழையும் ஊட்டியாகநிரஸித்துத் தன்னைக்கொண்டு தப்பினவ்வாமியை. (மன்றிலித்யாதி) நால்வர் இருவர் திரண்டவிடமெங்கும் "இவ்வாழ்வார், பாத(ர்)க பதார்த்தங்களின்கையிலேபட்டபாடே?" என்று இவர் வார்த்தையேயாயிருக்கும். கீழ் ஒன்பதுபாட்டாலும் பட்டநலிவும், இதொருபாட்டில் நலிவுமானுல் இதுவே மிக்கு வாசாமகோசரமாயிருக்கையாலே சொல்லிற்றில்லை.

(என்றுநில்லாவினையொன்றும்) ப்ராப்திப்ரதிபந்தகமான கர்மங்கள் சிலநாள்போய் சிலநாள்நிற்கையன்றிக்கே ஒருநாளும் ஒன்றும் நில்லாது. (சொல்லில்) இவ்வளவன்றிக்கேமேல் பெறப்புகுகிற பேற்றின்கனத்தைச் சொல்லப்புகில். (உலகிலே) வருந்தி பனைநிழல் போலேதங்களளவில் போகையன்றிக்கே இவர்கள் இருந்ததேசத்திலும் கூடவின்றிக்கே ஒழியும். பாதகபதார்த்தங்களின் கையிலே நோவுபடாதே, அவைதானே அநுகூலமாம்படி அவனோடேநித்யஸம்ஶ்லேஷம் பண்ணப்பெறுவர். .... .... .... .... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



## பெரியதிருமொழி
## பதினோராம்பத்து இரண்டாந்திருமொழி
## முற்றிற்று.

---

அரு;— பத்தாம்பாட்டு. (வென்றி யித்யாதி). "பத்தும்" என்று கூட்டிச் சொல்லாதே, பிரித்துச்சொல்லுவா னென்னென்ன வருளுகிறுர் (கீழேயித்யாதி). கீழெல்லாம் அவனைத்தாம்பெருமையாலேபாத(ர்)கபதார்த்தங்கள் கையிலேநோவுபட்டு வ்யஸநத்தைச் சொல்லிக்கூப்பிட, கண்ணன் மர்மஜ்ஞனகையாலே நப்பின்னைக்காகத் தான் கருமாரிபாய ஒருப்பட்டத்தை நினைப்பூட்டத்திடுக்கிட்டுவா, ளேறுகாணத்தேளேறிமாயுமாபோலே நோவுபட்டிருக்க, அநந்தரம்விடைகள்வென்றபடியை, க(ர்)தஞ்சித்ப்ரதிஸந்தாநம் பண்ணி, பலஶ்ருதி சொல்லித் தலைக்கட்டுகிருரென்று திருவுள்ளம். (சொல்லிற்றில்லை) பத்தென்று கூட்டிச்சொல்லிற்றில்லை. ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பதினோராம்பத்து மூன்றாந் திருமொழி

## மன்னிலங்கு ப்ரவேசம்.

வ்யா;—மன்னிலங்கு ப்ரவேசம். பிரிந்தவன்று தொடங்கி பாதக பதார்த்தங்களாலே நோவுபட்டு, அத்தாலே மிகவும் அவஸந்நையாய், நம்மை உபாஸ்யகோடியிலே நினைத்து, அவன் தான் "வேணுமாகில் நம்மை உபாஸித்துவந்து பெறுகிறான்" என்று நாம் தலைமைகொண்டாடி யிருந்தது அமையும்; அவனை உபாஸ்யனாகக் கொண்டு நாம் உபாஸித்துப் போருமித்தனையென்று அதிலேஒருப்பட்டார் கீழ்.

(க) "'காமன்கணைக்கோரிலக்கமாய்' என்கிறபடியே இத்தனை பொறுப்பாளொருவனல்லனே அவன், அநந்தரம் வந்துமுகம்காட்டி அரைக்ஷணம் தாழ்க்கும் காட்டில் இத்தனை ஸாஹஸத்திலே ஒருப்படக்கடவதோ? இத்தலை பெறுகைக்கு எதிர் சூழல் புக்குத் திரிந்தேன் நானல்லேனோ? என்னதன்றோக்லேசம்; ஜந்மவ்ருத்தாதிகளால் குறையநின்றார்களேயாகிலும் நம்மையொழியச் செல்லாமையுண்டானால் பின்னை அவர்களையொழிய ஜீவிப்பனோ நான். ஆஶ்ரித ஸ்பர்ஶமுள்ளத்ரவ்யமொழிய எனக்குத் தாரகமுண்டோ" என்று அவன் செல்லாமை யடங்கலும்காட்ட, அவற்றையடைய அநுஸந்தித்து, பிபாஸிதனுக்குக் குடித்ததண்ணீர் தாஹசாந்திக்கு உடலாகை தவிர்ந்து மேன்மேலென விடாய்க்குடலாமாபோலே, அவ்வநுஸந்தாநந்தான் மேலே விடாயைப் பிறப்பிக்க, அத்தாலேபோர நோவுபட்டுப்பின்னையும் அவனைக்கிட்டி நித்யாநுபவம் பண்ணப்

---

அரு;— மன்னிலங்கின் ப்ரவேசம். கீழிரண்டு திருமொழிக்கும் ஸங்கதி யருளுகிறார் (பிரிந்தவித்யாதி).

(இத்தனை) என்றது-மஹிஷி ஸ்வரக்ஷணத்திலே தானே ஒருப்படுகையை. கீழ், போது விடியாதே "கண்களால் காணலாங்கொலோ" என்றவள் இத்திருமொழியிலே "மன்னிலங்கு" இத்யாதியாலே, "காணீர்" என்று எல்லாரையும் பார்த்துத் தான் ஆவன் குணங்களுக்குத் தோற்றபடியைச் சொல்லும்போது, போது விடிந்ததாக வேண்டுகையாலே அவன் வாராதே இவளுக்குப் போதுவிடியாதென்று அவன் வந்து சேரவிட்டுக்கொண்ட படிகளை,மேற்பாட்டுக்களை அடைவேகடாக்ஷித்தருளுகிறார் (அநந்தரமித்யாதி). (*)

---

(க) கக-உ-கூ-

பெற்றிலோமேயாகிலும் "இவ்விடாயும் த்வரையுமெல்லாம் இவ்விஷயத்திலாகப் பெற்றோமிறே" என்னுமிவ்வளவால் வந்தத்ருப்தியோடே தலைக்கட்டிற்றாயிருக்கிறது. .... .... .... ....

மூ;— மன்னிலங்கு பாரதத்துத் தேரூர்ந்து மாவலியைப்
பொன்னிலங்கு திண்விலங்கில் வைத்துப் பொருகடல்சூழ்
தென்னிலங்கை யீடழித்த தேவர்க்கிது காணீர்
என்னிலங்கு சங்கோ டெழில் தோற்றிருந்தேனே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மன் | ராஜலோகத்தாலே | சூழ் | சூழப்பட்டதாய் |
| இலங்கு | விளங்காநின்றுள்ள | தென் | தக்ஷிண திக்கிலுள்ள |
| பாரதத்து | பாரதயுத்தத்திலே | இலங்கை | லங்கையின் |
| தேர் | (அர்ஜுநனுடைய) தேரை | ஈடு | பெருமையை |
| | | அழித்த | அழித்தருளின |
| ஊர்ந்து | (ஸாரதியாய் நின்று) நடத்தி, | தேவர்க்கு | எம்பெருமானுக்கு |
| | | என் | என்னுடைய |
| மாவலியை | மஹாபலியை | இலங்கு | ஒளிமிக்க |
| பொன்னிலங்கு | ஹிரண்யமயமாய் | சங்கோடு | கைவளையோடு |
| | | எழில் | மேனிநிறத்தையும் |
| திண் | திண்ணிதான | தோற்றிருந்தேன் | இழந்திராநின்றேன்; |
| விலங்கில் | விலங்கிலே | | |
| வைத்து | சிறையிட்டுவைத்து | இது காணீர் | (அவன் ஆஶ்ரித ரக்ஷணம் பண்ணும்பரிசு) இதுகிடிகோள். (க) |
| பொரு | அலையெறிகிற | | |
| கடல் | கடலாலே | | |

வ்யா;— முதற்பாட்டு. (மன்னிலங்கு பாரதத்துத் தேரூர்ந்து) துரியோதனரும் எல்லாம் அதிரதரான ராஜாக்களேயாயிற்று. ராஜலோகத்தாலே உஜ்ஜ்வலமான பாரதஸமரத்திலே ரதியாய் நிற்கையன்றிக்கே ஸாரதியானானாயிற்று. தான் ரதியாய் நின்றால் ஆஶ்ரிதன்தலையில் வெற்றிகிடவாதென்று, அதுக்காக அவனை ரதியாக்கித் தான்தாழநின்று ஸாரத்யம் பண்ணினானாயிற்று (க) "ஸர்வலோகைகநாதம்

அ௩;— முதற்பாட்டு. (மன்னித்யாதி) "இப்படி ஆஶ்ரித விஷயத்தில் தன்னைத் தாழவிட்டபடியால் இனிநமக்கு ஜயம் வருவதில்லை" என்று த்ருத

(க) கீதாபாஷ்யம்.

ர்-ஸர்வலோகஸாக்ஷிகஞ்சகார'' என்றும் (க) "தேசமறியவோர்ச் சாரதியாய்ச் சென்று" என்றும் சொல்லுகிறபடியே "இவன் இப்படி ஒரு விஷயத்திலே பக்ஷபதித்தா னென்றறிந்தால் நம் கார்யமும் முடிந்ததன்று" என்றுகைவாங்கவிறே அடுப்பது. (உ) "ஏவம்ஜ்ஞாத்வாபி ஸர்வாத்மநாந்த:- ஏவம்ஜ்ஞாத்வாபி ஸர்வாத்மநாந்த:'' பாஹ்யசக்ஷுஸ்ஸுபோன மாத்ரமேயன்றிக்கே ஆந்தர த்ருஷ்டியும் போயிற்று.

(மாவலி யித்யாதி) ஆஶ்ரிதார்த்தமாகத் தன்னைத் தாழவிட்டு ஸாரத்யம்பண்ணினனென்றுமிவ்வளவேயோ தனக்கு; ஔதார்யம் பண்ணினவனைச் சிறையிட்டுவைப்பதும் செய்திலனோ? ஔதார்யம் பண்ணினனாகில் சிறையிட்டு வைத்ததென் னென்னில்; அவன் பண்ணின ஔதார்யத்திலும் இந்த்ர னிரப்பே திருவுள்ளத்திலே பட்டுக் கிடந்தது. (௩) "கொண்டானை யல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார்" என்றார்களிறே அடியறிவார்; தன்னதல்லாதத்தைத் தன்னதாக்கிக் கொடுத்தவனிருக்க, தன்னுடைமை தன்னையே அவனதாக்கி நீர்வார்க்கத்தன்னதல்லாததொன்றுபெற்றானைக்கொண்ட அந் நீர்மை யுடையவனைப் பழிசொல்லாநிற்பர்கள்; நிரூபித்தால் மஹாபலியையன்றோ நெல்லிலே வைத்துத் தெறிக்கவேண்டுவது. நம்முடைய ஆத்மஸமர்பணம்போலே இருப்பதொன்றிறே அவ

ராஷ்ட்ரன் கைவாங்கி யன்றோ இருக்க வடுப்பது, என்னும் சங்கையிலே அருளுகிறார் (ஸர்வேத்யாதி போயிற்றென்னு மளவும்).

ஔதார்யம் ஸந்நிஹிதமாயிருக்கவும், இரப்பு அதீதமாயிருக்கவும் திருவுள்ளத்திலே தோன்றுமைக்கு அடியென்னென்னவருளுகிறார் (கொண்டானை யித்யாதி). (ஆர் பழிப்பார்) பழிப்பாரைக் காணுமே லோகத்தி லென்றபடி. எடுத்த பாசுரத்துக்குத் தாத்பர்ய மருளுகிறார் (தன்னதித்யாதி). தன்னதல்லாதத்தைத் தான் பெற்றானும்படி அவனிருந்தால், இவன் கொடுத்தால் குற்றமோ? (௪) "உதாராஸ் ஸர்வ ஏவைதே - உதாராஸ் ஸர்வஏவைதே" என்கிற விடத்திற்போலே அவன் நீர்மை குணத்தைக் கொடுத்தானென்னலாமே யென்ன; அங்ஙன் சொல்லலாமென்றதுக்கு ஒரு த்ருஷ்டாந்தம் காட்டுகிறார் (நம்முடைய வித்யாதி). இத்தால் நம்முடைய ஆத்ம ஸமர்பணத்தால் தன் உபாய பாவம் நிலைநின்று அவன் கார்யம் செய்கிறாப்போலே, அவ்வளவைக்கொண்டு தலையறாதே சிறையிட்டு வைத்தான், மேலேராஜ்யம்கொடுக்க வேண்டி என்று கருத்து.

(க) தி-வாய்-எ-௫-௬- (உ) பார- (௩) க-திருவ-எக- (௪) கீ-எ-க௮.

னுடைய ஔதார்யமும். இவன் ராஜ்யம் பண்ணாநிற்கச் செய்தேயிறே அத்தைத் தவிர்ந்தது; அதுக்காக இவனை ஒரு காலத்திலே பழையபடியே ராஜ்யத்தில் வைக்கிறோமென்று அவ்வளவுஞ் செல்ல ஶ்லாக்யமான விலங்கில்வைத்தான்.

(பொருகடலித்யாதி) கடலை அகழாக வுடைத்தாய் உறுதி பண்ணிக் கொடுத்த ப்ரஹ்மாதிகளுக்கும் பேர்கேட்க அஞ்சவேண்டுமூரை. (ஈடழித்த தேவர்க்கு) ப்ரணயிநிகார்யம் செய்தாராய், நிறம்பெற்றிருக்கிறவர்க்கு. நான் வந்தேறியாயும் ஸ்வாபாவிகமாயுமுண்டான என்னுடைய ஆபரணங்களை இழந்திருக்கிறவிப்போது கிடிகோள், அவர் ஆஶ்ரிதார்த்தமாகத் தம்மைத்தாழவிட்டு ஸாரத்யம் பண்ணியும், இரப்பாளனாயும், தம்மைப்பேணாதே அம்பேற்றும் பண்ணின வ்யாபாரங்களுடைய நமக்குப்பலித்தபடி இதுகிடிகோள்.

மூ;— இருந்தா னென்னுள்ளத் திறைவன் கறைசேர்
பருந்தாள் களிற்றுக் கருள்செய்த செங்கண்
பெருந்தோள் நெடுமாலைப் பேர்பாடி யாட
வருந்தா தென்கொங்கை யொளிமன்னு மன்னே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்னே | —தாய்போன்றஸகியே! | தோள் | திருத் தோள்களையுடையனாய், |
| என்உள்ளத்து | என்னுடைய ஹ்ருதயத்திலே | நெடு | ஸர்வஸ்மாத்பரனான |
| இருந்தான் | ஸர்வதா ஸந்நிஹிதனாய், | மால் | எம்பெருமானுடைய |
| இறைவன் | (எனக்கு) ப்ராப்தசேஷியாய், | பேரை | திருநாமங்களை |
| கறைசேர் | உரல்போன்று | பாடி | வாயாரப் (பாடி) |
| பரு | பருத்திருந்துள்ள | ஆட | (அதற்கேற்க) நர்த்தநம்பண்ண, |
| தாள் | காலையுடைய | என் கொங்கை | என் முலைகளானவை |
| களிற்றுக்கு | ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு | வருந்தாது | வருத்தமற்று |
| அருள்செய்த | க்ருபை பண்ணினவனாய், | ஒளி மன்னும் | தன்னிறம் பெற்று வாராநின்றன. (௨) |
| செங்கண் | புண்டரீகாக்ஷனாய் | | |
| பெரு | (ஸர்வ நிர்வாஹகத்வ ஸூசகமாய்) பெருத்த | | |

---

பாட்டுக்கெல்லாம் தொகுத்தபாவம் (அவராஶ்ரிதேத்யாதி). தன்னோடு தாழநின்று பரிமாறினதும், தன்னுடைய ஆத்மாத்மீயங்களைத் தனக்காக்கிக் கொண்டதும், தென்றல் முதலான விரோதிகளெல்லாவற்றாலுமுண்டான நோவுதீர்த்ததும் தனக்குப்பலிக்கையாலே இவ்வபதாநங்களை, அநுஸந்தித்து ஹ்ருஷ்டையாயிருந்தாளென்று கருத்து.... ... ... (௧)

வ்யா;— இரண்டாம்பாட்டு. (இருந்தானென்னுள்ளத்து)இனி விட்டுப்போவானு யிருக்கிறிலன். (இறைவன்) என்னிசை வின்றி க்கே யிருக்க என்ஹ்ருதயத்திலே புகுருகைக்குப்ராப்தி. (கறை யித்யாதி)(க) "கறையடி" என்னக்கடவதிறே. உரல்போலே பெரிய காலே யுடைத்தா யிருக்கிற பெரிய வடிவையுடைத்தாய், அத்தாலே வந்த க்லேசத்தைப் பாடாற்ற மாட்டாதே, யாதநா சரீரம்போலே நோவு படுகிற ஆனைக்கு, அது அகப்பட்ட மடுவின்கரையிலேதன்னைப் பேணுதே அரை குலையத் தலை குலைய வந்து விழுந்து அதின் பக்க விலே அருள் பண்ணின அகவாயில் வாத்ஸல்யப்ரகாசகமான திருக் கண்களை யுடையனுய், எல்லாம் பட்டுக் காண வேண்டும்படியான தோளழகை யுடைய ஸர்வேஸ்வரனை. அவனுடைய திருநாமங்களைச் சொல்லிப் பாடுவதாடுவதாக ஒரு க்லேசமின்றிக்கே என் முலைகள் ஸம்ஸ்லேஷ ஸமயத்திற்போலே தன் நிறம் பெற்று வாரா நின்றது. இப்படி யிருக்கிற நீ எங்ஙனே வாய் புதைக்கப் பார்க்கிறபடி.....(௨)

மூ;— அன்னே யிவரை யறிவன் மறைநான்கும்
முன்னே யுரைத்த முனிவ ரிவர்வந்து
பொன்னேய் வளைகவர்ந்து போகார் மனம் புகுந்து
என்னே யிவரெண்ணு மெண்ண மறியோமே. (௩)

---

அரு;— இரண்டாம்பாட்டு. (இருந்தானித்யாதி). " 'இருந்தான்' என்று க்ருதார்த்ததாது ஸந்தாநம் பண்ணு நின்ருய்; நீ நேற்றுப் பட்டபாடு எது; இன்று இப்படி தேறுகை என்" என்று துணுக்கிட்டுத் தோழியானவள் கேட்க, முலையில் தன் நிறத்தைக்காட்டி "நீஅஞ்சாதே; இனி என்னை விட்டுப்போகான், என் நோவு கண்டு வந்தான்" என்கிருளென்று ஸங்கதி.

கறை-வர்த்துலதையாய், அத்தாலே உரலைச்சொல்லிற்ருய், அத்தோடே, சேர்-ஸத்ருஶமான, பெரியதாளென்று அருளுகிருர் (கறையடி யித்யாதி). (வாய்புதைக்க) என்றது-கீழே அவன்வாராமையாலே ஸ்வயத்நத்தில் மூண்டவள் இப்போது திருநாமம் சொல்லுகிருளென்று நீ நிஷேதிக்க வேண்டிவந்து கலந்தான்; போக்யதையாலே பாடி யாட ஒருப்பட்டேனென்கிருளென்று கருத்து. ... ... ... ... ... ...(௨)

அரு;— மூன்ரும்பாட்டு. (அன்னேயித்யாதி) "நீ வந்தானென்னு நின்ருய், அவரை நீ அறிந்தாயோ? அவர்க்கடையாளம் சொல்லாய், என்றும் இவன் இருந்தானென்ருய், இன்ன மிருக்கக் கார்யமென்?" என்று தோழி கேட்கச் சொல்லுகிருளென்று ஸங்கதி.

---

(க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | அன்னே—; | வந்து | (ஒருகால் என்னிடம்) வந்து |
| இவரை | இந்த மஹாநுபாவரை | பொன் எய் | ஹிரண்மயமான |
| அறிவன் | (நான்நன்கு) அறிவேன்; | வளை | கையில் வளைகளை |
| இவர் | இவரானவர் | கவர்ந்து | விரும்பி |
| முன்னே | ஸப்தராசியு மகப்பட அழிந்து கிடந்தப்ரளயகாலத்திலே | மனம்புகுந்து | என்னெஞ்சி னுள்ளே புகுந்து |
| மறைநான்கும் | நான்குவேதங்களையும் | போகார் | விட்டுப்போகிறிலர்; |
| உரைத்த | (சதுர்முகனுக்கு)அருளிச்செய்த | இவர் | இவர் [நெஞ்சில் நினைத்திருக்கிற |
| மனிவர் | வேதாநு பூர்வியில் மநநசீலரான எம்பெருமான்; (இப்படிப்பட்ட இவர்,) | எண்ணும் | |
| | | எண்ணம் | நினைவு |
| | | என்னே | எதுவாயிருந்ததோ?; |
| | | அறியோம் | அறிகிறிலோம். (௩) |

வ்யா;— மூன்றும்பாட்டு. (அன்னே யிவரை யறிவன்) நெருங்கக் கலந்தபோதாக "இன்றென்றறியேன்" என்னிலு மென்னும். காதாசித்கமாக ஸம்ஸ்லேஷித்தபோது ஸ்வாபாவிக சேஷித்வத்தாலும், முகத்தில்தண்ணளியாலும் அறிவே னென்னிலு மென்னும். (மறையித்யாதி) ப்ரளயகாலத்திலே ஸப்தராசியுமகப்படஅழிய.ஒரு பதார்த்த மின்றிக்கே யிருக்கிற ஸமயத்திலே இவ்வாநுபூர்வியை ஸ்மரித்துக்கொண்டிருந்து, பின்னை அத்தை உபதேசித்து ஹிதாநுசாஸநம்பண்ணினவர். இதாயிற்று இதினுடைய நித்யத்வ அபௌருஷேயத்வங்கள். உபாத்யாயன் உறங்கா நின்றாலும் ஸம்ஸ்காராத்மா வாய்க்கிடக்குமிறே.

(முன்னே) அவர் நம்மை அகப்படுத்த ஏற்கவே கோலினார். நாம் அறிந்திலோ மித்தனைகாண். தாம் ஹிதப்ரவர்த்தகரா யிருக்கிற இருப்பைக்காட்டி நெஞ்சை நெகிழ்ந்து அது பலிக்குமளவான வாறே ஸ்ப்ருஹணீயமான வளையை அபேக்ஷித்துக் கால் வாங்கிப் போகாதே த்வார ஹ்ருதயத்திலே வந்து புகுந்துநித்யமான ஆத்ம

---

முன்னே "இன்றென்றறியேன்" என்றவள், "அன்னேஇவரை அறிவேன்" என்று எப்படி சொல்லுகிறளென்னவருளுகிறார் (நெருங்கவித்யாதி).

வஸ்துவையும் தமக் காக்கிக் கொள்வாரைப் போலே இரா நின்றார். இவர்மனோரதம் நமக்குநிஸ்சயிக்கலாயிருக்கிறதில்லை, உடைமை நாமிட்டவழக்கான தற்குப்பின்பு உடையவரும் நாமிட்டவழக்கன்றோ என்று இருக்கமாட்டுகிறிலர். .... .... .... .... (ங)

மூ;— அறியோமே யென்றுரைக்கலாமே யெமக்கு
வெறியார்பொழில்சூழ் வியன்குடந்தைமேவிச்
சிறியானோர்பிள்ளையாய் மெள்ளநடந்திட்டு
உறியார்நறுவெண்ணெ யுண்டுகந்தார்தம்மையே.(ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெறி ஆர் | பரிமளப்ரசுரமான | உறி ஆர் | உறிகளிலே சேமித்து வைத்த |
| பொழில் | சோலைகளாலே | நறுவெண்ணெய் | மணம் மிக்க வெண்ணெயை |
| சூழ் | சூழப்பட்டு | உண்டு | அமுதுசெய்து |
| வியன் | ஆஸ்சர்யா வஹமாயிருந்துள்ள | உகந்தார்தம்மை | திரு வுள்ள முகக்கப் பெற்றவரை |
| குடந்தை | திருக் குடந்தையிலே | அறியோம் என்று உரைக்கல் | "அறிகிறிலோம்" என்றுசொல்லுகை |
| மேவி | சாய்ந்தருளி | எமக்குஆமே | எமக்குக்கூடுமோ?.(ச) |
| சிறியான் ஓர் பிள்ளையாய் | முக்த்தமானபிள்ளையின் நிலைமையை உடையனாய், | | |
| மெள்ளநடந்திட்டு | பொய்யடியிட்டுப்போய் | | |

வ்யா;— நாலாம்பாட்டு. இவரை அறிவேனென்றபடி எங்ஙனே என்ன; (அறியோமேயித்யாதி)ஆஸ்ரிதஸ்பர்ஸமுடைய த்ரவ்யமொழிய, தமக்கு தாரகமில்லையாம்படி யிருக்கிறவரை - எங்ஙனே "நாமறியோம்"என்னும்படி தான். (அறியோமே யென்றுரைக்கலாமே

---

"இவரை அறிவேன்" என்றவள் "எண்ணுமெண்ண மறியோம்" என்கிறதென்னென்னவருளுகிறார் (உடைமையித்யாதி). (உடையவரும்) ஆத்மாவும். ... ... ... ... ... ... (ங)

அரு;— நாலாம்பாட்டு. (அறியோமேயித்யாதி) கீழ் அடையாளம் சொல், என்றால் ஒருவருமில்லாத வேளையிலே "ஓதி யிருந்த வென்னையன்" என்றாய்;அதுநீ அறியவிரகுண்டோ?என்றுஅதல்ல; வேறறிந்தவழிசொல்லென்னச் சொல்லுகிறாள் என்னு மவதாரிகையை ஸமசிப்பிக்கிறார் (இவரை யித்யாதி). நா மறிய ஆய்ப்பாடி வளர்ந்த நமபியன்றோ வென்கிறாளென்று தாத்பர்ய மரு

யெமக்கு) ஸ்வயத்நத்தாலே அறிய இழிந்தவர்கள் (க) "யதோ வாசோ நிவர்த்தந்தே-யதோவாசோநிவர்தந்தே" (உ) "யஸ்யாமதம் தஸ்ய மதம்-யஸ்யா மதம் தஸ்யமதம்" என்னுங் காட்டில், அவன் காட்டின வழியே அறிய விழிந்த நமக்கு அறியப் போகாதென்று சொல்லலாமே. (வெறியாரித்யாதி) பரிமள ப்ரசுரமாயிருந்துள்ளபொழிலாலே சூழப்பட்டுவிஸ்மயநீயமாயிருக்கிற திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தருளி.

(சிறியானித்யாதி) "இவன் இதுகளவுகண்டான்" என்றுசொல்லவொண்ணுதபடியான மௌக்த்யத்தை யுடையனுய், பொய்யடியிட்டுப்போய்ப்புக்கு, உறிகளிலே சேமித்துவைத்த வெண்ணெயை அமுது செய்து "ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தை புஜிக்கப்பெற்றோம்" என்று ஹ்ருஷ்டரான வவரை, அறியோமேயென்றுஉரைக்கலாமே எமக்கு. .... .... .... .... (ச)

மூ;— தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத்
தம்மையே யொக்க வருள்செய்வ ராதலால்
தம்மையே நாளும் வணங்கித் தொழுதிறைஞ்சித்
தம்மையே பற்று மனத்தென்றும் வைத்தோமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தம்மையே | தம்மையே | நாளும்வணங்கித்தொழுது இறைஞ்சி- | |
| நாளும் | ஸர்வகாலமும் | தம்மை | அவர் தம்மையே |
| வணங்கி | விநயபூர்வகமாக | என்றும் | எந்நாளும் |
| தொழுவார்க்கு | ஸேவிக்குமவர்களுக்கு | பற்று | ப்ராப்யராய்க்கொண்டு பற்றப் படுமவராக |
| தம்மையேஒக்க | (அவர்கள்) தம்மைப்போலேயாம்படி [ர்; | | |
| அருள்செய்வர் | க்ருபைசெய் தருளுவ | மனத்து | எங்கள்மநஸ்ஸிலே |
| ஆதலால் | ஆகையினுலே | வைத்தோம் | அறுதியிட்டு வைத்தோம். (ரு |
| தம்மையே | அவர் தம்மையே | | |

ளுகிறுர் (ஆஶ்ரிதேத்யாதி). "எமக்கு" என்றதுக்கு வ்யாவர்த்யம் (ஸ்வயத்நத்தாலேயித்யாதி). ... ... ... ... ... (ச)

அ௩;— அஞ்சாம்பாட்டு. (தம்மையேயித்யாதி) களவிலே வெண்ணெய் திருடித்தின்ற பரமபுருஷனை அறிந்தோமென்றத்தாலே, நாம்பெற்றதென்? என்ன; "அவரையே ப்ராப்ய ப்ராபகபாவேந பற்றினுர்க்கெல்லாம் பரமஸாம்யா

(க) தை-ஆ        (உ) கேந-உப-உ-௩,

வ்யா;— அஞ்சாம்பாட்டு. (தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்கு) அளாவின ஸத்வமாய், ரஜஸ்தமஸ்ஸுக்களாலே அபிபூ(பூ)தராய்க்கொண்டுவேறேப(பு)ஜநீயவஸ்து உண்டென்று இருத்தல், வேறே ஒருப்ரயோஜநமுண்டென்றிருத்தல் செய்யாதே, அவை இரண்டும் தாமேயாக நினைத்திருப்பார்க்கு. (தம்மையேயொக்க வருள்செய்வர்) பா(பா)வநாத்ரயராஹித்யம் ஸ்வதஏவ உள்ள தம்மைப்போலேயாம்படி க்ருபை பண்ணுவர். இப்படியிருக்கையாலே தம்மையே பஜநீயராகவும் ப்ரயோஜநமாகவும் பற்றி.

(தம்மையேபற்று) உபாஸநவேளையில் இப்படி புத்தி பண்ணின பின்பு வேறொருபடியாகையன்றிக்கே உபாஸநாநுகுணம் ப(ப)லமாகையாலே அவ்வளவும்போறால் பெறும் பரமப்ரயோஜநமாய்க்கொண்டு பற்றப்படுவதும் தாமேயாக மநஸ்ஸில் வைத்தோம். .... (௫)

மூ;— வைத்தா ரடியார் மனத்தினில் வைத்தின்பம்
உய்த்தா ரொளிவிசும்பி லோரடிவைத் தோரடிக்கும்
எய்த்தாது மண்ணென் றிமையோர் தொழுதேத்தி
கைத்தாமரைகுவிக்கும் கண்ணனென் கண்ணனையே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒளி | (தேஜ:பதார்த்த ஸஞ்சாரத்தாலே) விளங்காநின்றுள்ள | இமையோர் | ப்ரஹ்மாதி தேவதைக[ள் |
| விசும்பில் | ஆகாசத்திலே (த்ரைவிக்ரமாபதாநத்தில்) | தொழுது | ஸேவித்து |
| ஓர் அடி வைத்து | ஒரு திருவடியை ஓங்க வைக்க, | ஏத்தி | ஸ்தோத்ரம்பண்ணி |
| ஓர் அடிக்கும் மண் | "மற்றொருதிருவடிக்கு பூமியானது | கை | (தங்களுடைய) கைத்தலங்களை |
| எய்த்தாது | என் போரா தொழிவதே" என்று (அதிலேவித்த(த)ரான) | தாமரை | கமல முகுளம்போலே |
| | | குவிக்கும் | குவிக்கப்பெறுகின்றவனாய் |
| | | என் | எனக்கு |
| | | கண்ணன் | ஸுகப்ரதனான |

பத்தியைக்கொடுக்கு மவர்கிடாய்; நாமும் அப்படியே, 'ப்ராப்யப்ராபகங்கள் அவரே' என்று இருக்கப்பெற்றோமே" என்கிறானென்று ஸங்கதி.

(அளாவின)மிஸ்ரமான, (பாவநாத்ரயம்) கர்மபாவனை, ப்ரஹ்மபாவனை, உபயபாவனை. ... ... ... ... ... (௫)

| | |
|---|---|
| கண்ணனை | கண்ணபிரானை |
| அடியார் | அஸாதாரண சேஷ பூதர்கள் |
| மனத்தினில் | (தங்கள்) மநஸ்ஸிலே |
| வைத்தார் | நாட்டினார்கள்; |
| வைத்து | நாட்டி (அதனால்) |
| இன்பம் | பரமாநந்தத்தை |
| உய்த்தார் | அடையப் பெற்றார்கள். (கூ) |

வ்யா;— ஆறும்பாட்டு. (வைத்தாரித்யாதி) அஸாதாரணரான சேஷபூதரானவர்கள் தந்தாமுடைய ஹ்ருதயங்களிலே கொண்டு புகுந்து வைத்தார்கள். வைத்துச்செய்ததென்னென்னில்: (இன்ப முற்றார்) வைத்தது ஸமஸ்த கல்யாண குணாத்மகனை யாகையாலே (க) "ஏஷ ஹ்யேவாநந்தயாதி-ஏஷஹ்யேவ வாநந்தயாதி" என்கிறபடியே நிரதிசயாநந்த யுக்தரானார்கள்.

அல்லாதார்க் கின்றிக்கே யிருக்க, இவர்கள் அவனை ஹ்ருதயத்திலே வைத்து நிரதிசயாநந்த யுக்தராகைக்கு அடியென்னென்னில்; (ஒளிவிசும்பித்யாதி) அவன் தானே ப்ரதமஸுக்ருதமாய் நின்று வ்யாபரிக்கையாலே பூம்யந்தரிக்ஷாதிகளை அளந்துகொள்கிற விடத்தில் "ஆகாசமானது எட்டுத் தெட்டாதாகப் போந்தது "பூமியானது திருவடிகளுக்குப் போராதொழிவதே" என்று இதிலேவித்தராய் ப்ரஹ்மாதிகள் எழுதிக்கொடுத்து கைத்தாமரை குவிக்கும். ஸுகப்ரதனை என்னுடைய க்ருஷ்ணனை வைத்தா ரடியார் மனத்தினில் வைத் தின்பமுற்றார். .... .... .... .... (கூ)

மூ;— கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் கைவளைகள்
என்னோ கழன்றவிவை யென்னமாயங்கள்
பெண்ணானோம் பெண்மையோம் நிற்கவவன்மேய
அண்ணல்மலையு மரங்கமும் பாடோமே. (எ)

அரு;— ஆறும்பாட்டு. (வைத்தாரித்யாதி) தம்மையே ஒக்க வருள்செய்த பின்பன்றோ நமக்கு ஸுகமுள்ளது, ஜ்ஞாநலாபமே பேறென்றிருக்க வடுக்குமோ வென்ன ; அதுவே நிரதிசய ஸுகமாகவிறே இங்கிருக்கும்படி ஆறியிருப்ப தென்கிறாரென்று ஸங்கதி.

(ப்ரதம ஸுக்ருதம்.)என்றது- இவர்கள் அபேக்ஷியா திருக்கத்தானே திருவடிகளை வைத்துத் தன் சேஷித்வத்தை உணர்த்துகை. "கண்ணன்" என்றத்தால்-க்ருஷ்ணன் என்றபடியாகையாலே (உ) "க்ருஷிர்பூவாசகச் சப்தோ ணச்ச நிர்வ்ருதிவாசக: - க்ருஷிர்பூவா சகஶ்ஶப்தோ ணஶ்சநிர்வ்ருதி வாசக:" என்கிறபடியே (ஸுகப்ரதன்) என்றருளிச்செய்கிறார். ... ... (கூ)

(க) தை-ஆ-எ-க

| பதம். | உரை. |
|---|---|
| கண்ணன் | கண்ணபிரான் |
| மனத்துள்ளே | (என்)ஹ்ருதயத்திலே |
| நிற்கவும் | வீற்றிருக்கச் செய்தேயும் |
| கைவளைகள் | (என்) கையில் வளைகளானவை |
| என்னோ | என்னகாரணத்தினாலே |
| கழன்ற | கழன்றுபோயினவே!, |
| இவை | இவையெல்லாம் |
| என்னமாயங்கள் | என்ன ஆஶ்சர்யச்செயல்களோ (அறிகிறிலேன்); |
| பெண்ஆனோம் | பெண்குடியிலே பிறக்கப்பெற்ற நாம் |
| பெண்மையோம் | ஸ்ரீத்வத்தை அழகிதாகக் காத்தோமானோம்! |
| நிற்க | இது நிற்க; |
| அவன் | அந்த எம்பெருமான் |
| மேய | விரும்பி வர்த்திக்குமிடமாய் |
| அண்ணல் | ஸர்வபர்வதோத்க்ருஷ்டமான |
| மலையும் | திருவேங்கடமலையையும் |
| அரங்கமும் | திருவரங்கத்தையும் |
| பாடோமே | பாடுகையில் ஒரு தட்டுடையராயிருந்தோமோ? (௭) |

வ்யா;— ஏழாம்பாட்டு. (கண்ணனித்யாதி) நம்முடைய விடாய்-அவனை ஹ்ருதயத்திலே வைத்து அநுஸந்தித்து ஆநந்தித்தவரானவர்களளவின்றிக்கே யிராநின்றதி. ப்ரத்யாஸத்தியன்றோ ஶைதில்யத்துக்குப்பரிகாரம். நான் கேட்டிருந்தபடியொழியக்கிட்டக்கொள்ள மற்றைப்படியேயா யிருந்தது. ஒருவசநமாத்ரத்தாலே

---

அரு;— ஏழாம்பாட்டு. (கண்ணனித்யாதி) "மனத்து" என்றும் "வைத்தோம்" என்றும், "அடியாரின்பமுற்றார்" என்றும் சொல்லாநின்றாய்; அங்ஙனேயாகில் கைவளை தொங்காதோவென்று தோழிகேட்க, தானும், அதுவும், அவன்பிரியாதிருக்குமதுவும் கண்டுவிஸ்மயப்படுகிறாளென்றுஸங்கதி.

"நிற்கவும்" என்ற ச(ஶ)காரம் விரோதஸூசகமாகையாலே அதின் தாத்பர்யமருளுகிறார்(நம்முடையவித்யாதி). "விடாய்-இராநின்றதி" என்றந்வயம் இத்தால் இவனைப் பிரிந்து ஆநந்திக்கிறவர்ஆநந்தத்தளவன்றிக்கே விடாய் மிகவுமுண்டானதென்கை. அவனிருக்கவிடாய்வருமோவென்ன வருளுகிறார் (ப்ரத்யாஸத்தித்யாதி).இனிஶைதில்யத்துக்குப்பரிகாரந்தானேதென்னவருளுகிறார் (நானித்யாதி). ஶ்ரவண ஸமயத்தில் ஆநந்தாவஹமாயிருக்கும், குணாநுபவத்தாலே; ஸாக்ஷாத்கரித்தால் "இவ்விலக்ஷண விஷயம் நமக்குத் தொங்கப்புகுகிறதோ" என்று ஶைதில்யத்தை விளைக்குமென்று கருத்து. ஸாக்ஷாத்காரத்தாலும் ஆநந்தாவஹத்வமன்றோ, ஶாஸ்த்ரம் ஸர்வாஶ்ரயமாக எம்பெருமானுக்கு சொல்லுவதென்ன வருளுகிறார் (ஒருவித்யாதி). (விஷயாதிஶம்

பிறக்கு மவைபோ லன்றியே விஷயாதீநமாகப்பிறக்குமவையா யிரு ப்பது. இவை என்ன வாஶ்சர்யங்கள்.

"அவன் ஹ்ருதயத்தில் நித்யவாஸம்பண்ணுநிற்கச்செய்தேயும் கையில் வளைகழலும்படி யிருக்கிற நமக்கு, இனி ஒரு ஸ்த்ரீத்வமுண் டோ? அது கிடக்கிடீர்" என்று அத்தை உபேக்ஷித்து அவன் நித்யவாஸம் பண்ணுகிற ஸ்வாமி ஸ்த்தாநமான திரு மலையையும் கோயிலையும் பாடுதுமே. அந்தஉபேக்ஷா கார்யமிருக்கிறபடி. அன் றிக்கே (பெண்மையித்யாதி) அடலைகளான நம்முடைய ஸ்த்ரீத்வம் நிற்கைக்காக ஸத்தை கிடக்கைக்காக அவனுகந்தருளினநிலங்களைப் பாடுவோமென்னுதல். .... .... .... .... .... (எ)

மூ;— பாடோமே யெந்தை பெருமானைப் பாடிநின்று
ஆடோமே யாயிரம் பேரானைப் பேர்நினைந்து
சூடோமே சூடும் துழாயலங்கல் சூடிநாம்
கூடோமேகூடக் குறிப்பாகில் நன்னெஞ்சே. (அ)

---

என்றதுக்கு-பெண்ணான நம்மிடத்தில் பிறப்பு வேறாயிராதோ வென்று கரு த்து. ஆக அவனும் அதி விலக்ஷணனாய், நாமும் பெண்ணாய் நின்றால் அதி சங்கையாலே ஸௌஹார்தம் வரக் குறையுண்டோ வென்றதாயிற்று. அந்வய முகேந சப்தார்த்த மருளுகிறார் (இவையித்யாதி).

(ஸ்த்ரீத்வமுண்டோ) என்றது-பெண்ணானமையாலே இப்படி அவனிரு க்கச்செய்தே கைவளை கழலும்படியானால் இனி, "நாண், மடம்" என்கிற ஸ்த்ரீத் வம்பார்த்திருக்கக்கூடுமோ வென்கை. (அத்தை) நாண்-மடம்-அச்சம்பார்த்தி ருக்கையை. (க)"ಗಿರೀಣಾಂ ಮಹಾಗಿರಿಃ-கிரீராஜோபயோகிரிஃ" என்றாப்போலே மலைகளுக்கெல்லாம்அண்ணலான மலையென்றுசப்தார்த்தமாயருளுகிறார்(ஸ்வா மிஸ்த்தாநமித்யாதி). (ஸ்வாமிஸ்த்தாநம்) -ஸ்வாமியான ஸ்தாநம். "பெண்ணா னோம்பெண்மை" என்று கூட்டி "நிற்க" வென்றது-நிலைநிற்க வென்றாக்கி, வ்ரஹ்மாஉஸ ஹிஷ்ணுதையாகிற பெண்மை நிலைநிற்க வேண்டினால், விபவங்க ளிலேபோய்அலையாதே அதிலேதேங்கினமடுக்கள்போன்றதிவ்யதேசங்களிலே நின்றுவாசிகமானகைங்கர்யம்பண்ணுவோ மென்கிறாளென்றுபாட்டுக்கு யோஜ நாந்தரமருளுகிறார்(அன்றிக்கேயித்யாதி). 'இப்பக்ஷத்திலே "கண்ணனை-நெஞ் சாலே அநுஸந்திக்கையாலே மனட்பால் போலே யாயிற்று" என்று அதுக்கு ஆஶ்சர்யப் பட்டாளாகக் கீழுக்குத் தாத்பர்யம் கண்டுகொள்வது. ... (எ)

---

(க) ரா-அ-கூஅ-கஉ

| பதம், | உரை. |
|---|---|
| நல் | நன்மைபொருந்திய |
| நெஞ்சே | மநஸ்ஸே ! |
| எந்தை பெருமானை | எமக்குஸ்வாமியான ஸர்வேஶ்வரனை |
| பாடோமே | பாடமாட்டோமோ?! |
| ஆயிரம்பேரானை | ஆயிரம்திருநாமங்களை யுடைய அவனை |
| பாடி | வாயாரப்பாடி |
| நின்று | த்ருடாத்ய வஸாயத்தோடே நின்று |
| ஆடோமே | (ப்ரீதிக்குப் போக்குவீடாக) நர்த்தநம்பண்ணமாட்டோமோ?; |
| பேர் | (அவனுடைய) திருநாமங்களை |
| நினைந்து | மநஸ்ஸினால் சிந்தித்து |
| சூடும் | (அவன்) சாத்திப் போருகிற |
| துழாய் அலங்கல் | திருத்துழாய் மாலையை |
| சூடோமே | ஶிரஸாவஹிக்க மாட்டோமோ? |
| சூடி | (அந்த மாலையைச்) சூடி [கைக்கு |
| கூட | (அவனோடே) கூடு |
| குறிப்புஆகில் | (அவனுக்குத்) திருவுள்ளமுண்டாகில் |
| நாம் | (ஸம்ஶ்லேஷத்தை விரும்புகிற) நாம் |
| கூடோமே | கூடமாட்டோமோ? |

வ்யா;— எட்டாம்பாட்டு. (பாடோமே யித்யாதி) பரமப்ராப்ய பூதனானவனைக் கிட்டுகையில் அருமை யுண்டோ? அவன் நினையாமையாலே யன்றோ வென்னுதல், நமக்கு அவன் பக்கல் ருசிபோராமையன்றோ வென்னுதல்; எம் குலநாதனானஸர்வேஶ்வரனை ப்ராபித்து அநுபவித்தால்அந்தப்ரீதிக்குப்போக்குவிட்டு(௧)"ஏதத்ஸாம காயந்நாஸ்தே" என்றுபாடுகையில் நமக்குஒரு

அரு;— எட்டாம் பாட்டு. (பாடோமே யித்யாதி) தோழியைப்பார்த்து நாம் இனி திவ்யதேசங்களைப்பாடுவோமென்று சொல்ல, தோழி ப்ரியபரையாகையாலே இசைந்துநிற்க, தன்னுடைய நெஞ்சானது இசையாதேயிருக்க, அத்தைப்பார்த்து நீ ஏதுக்குஸம்ஶயிக்கிறாய், அவனைக்கூடுவோமென்று ஸமாதாநம் பண்ணுகிறாளென்றும் திவ்யதேசங்களைத்தான் பெண்மைநிற்கப் பாடவல்லோமோவென்ற நெஞ்சைக் குறித்து, நீ இரங்கினால் நமக்குத் தட்டுண்டோ வென்கிறாளென்றும், இரண்டு விதமாக ஸங்கதி கண்டுகொள்வது.

"கூடக்குறிப்பாகில்" என்கிற பதம் பொதுவாகையாலே, இவனுக்குக் குறிப்புண்டாகிலென்றும், நமக்குக் குறிப்புண்டாகிலென்றும் சொல்லுமாகையாலே இப்பாட்டுக்குத் தொகுத்த பாவ மருளுகிறார் (பரமேத்யாதி).

(௧) தை-ப்ருகு-௧௦-௫.

தட்டுண்டோ? இப்படிப்பாடி "ஸாமகாயந்நாஸ்தே" என்கிறபடியே களித்து நின்று ஆடோமோ?

* நாம ஸஹஸ்ரவாசுனவனை அவனுடைய திருநாமத்தை ஸ்மரியா நின்றுகொண்டு, அவன் சாத்திக் கழிக்கையினாலே சூடப் படுவதான திருத்துழாயை நாம் சிரஸா வஹியோமோ? (சூடிநாம் கூடோமே) இப்படி சூடி நாம் அவனைக் கிட்டுகையில் ஒரு தட்டுண் டோ? (கூடக்குறிப்பாகில்) அவனுக்குத் திருவுள்ள முண்டாகிலெ ன்னுதல்; நமக்கு ருசியுண்டாகிலென்னுதல். .... .... (அ)

மூ;— நன்னெஞ்சே நம்பெருமான் நாளுமினிதமரும்
அன்னம்சேர்கான லணியாலி கைதொழுது
முன்னம்சேர் வல்வினைகள் போக முகில்வண்ணன்
பொன்னம்சேர் சேவடிமேல் போதணியப்பெற்றோமே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | நல்நெஞ்சே!—; [ன் | சேர் | சேர்ந்திருந்துள்ள |
| நம்பெருமான் | நமக்கு ஸ்வாமியானவ | வல்வினைகள் | கொடிய பாபங்களெல் |
| நாளும் | எப்போதும் | | லாம் |
| இனிது | திருவுள்ளமுகந்து | போக | நீங்குகைக்கு |
| அமரும் | வர்த்திக்கு மிடமாய், | முகில் | காளமேகம்போன்ற |
| அன்னம் | ஹம்ஸங்களானவை | வண்ணன் | திருநிறத்தை யுடைய |
| சேர் | பொருந்திவர்த்திக்கிற | | |
| கானல் | நெய்தல் நிலங்களை யு | | ஸர்வேஶ்வரனுடைய |
| | டைத்தாய் | பொன்னம்சேர் | ஸ்ப்ருஹணீயமான |
| அணி | (ஸம்ஸார விபூதிக்கு) | சேவடிமேல் | திருவடிகளின்மேலே |
| | ஆபரணமாயிராநின்ற | போது | புஷ்பங்களைக் கொண் |
| ஆலி | திருவாலியை | | டு |
| கைதொழுது | ஸேவித்து, | அணியப்பெற் | அலங்கரிக்கப் பெற் |
| முன்னம் | அநாதிகாலமாக | றோம் | றோம். (கூ) |

கீழ்ப்பாட்டுக்கு இரண்டாம்யோஜனை சேரும் "அவள்குறிப்பு" என்றது முதல்யோஜனைக்குச்சேரும் "அவன்குறிப்பு" என்றது. அது எங்ஙனே என்னில்; ஸ்வயத்ந பரையாய் ஸ்த்ரீத்வத்தை உபேக்ஷிக்கும்போது நமக்கு ப்ராப்ய ருசி கண்ணழிவறவுண்டாக வேணுமென்றும், திவ்யதேசங்களில் வாசிகமான கைங்கர்யம் பண்ணுவோமென்கிற பக்ஷத்தில் அவன் ஸங்கல்ப முண்டாக வேணுமென்றும் சொல்லுகை உசிதமிறே. ... ... ... (அ)

அரு;— ஒன்பதாம்பாட்டு. (நன்னெஞ்சேயித்யாதி) ப்ராப்யருசி கண்ணழிவறவுண்டானதாகையாலே நாம் கிட்டுகையில் ஒரு தட்டு

வ்யா;— ஒன்பதாம்பாட்டு. (நன்னெஞ்சே யித்யாதி) "அவன் திருவடிகளிலே நித்யகைங்கர்யத்திலே அந்வயிக்கப் பெற்றிலோமே யாகிலும், காதாசித்கமான கைங்கர்யத்திலேயாகிலும் அந்வயிக்க லாம்படி அவனிங்கே ஸந்நிஹிதனாகப் பெற்றோமே. இதுதான் முந்துறமுன்னம் உண்டாகப் பெற்றோமே" என்று இவ்வளவாலுண்டான த்ருப்தியோடே தலைக்கட்டுகிறது.

(நன்னெஞ்சே) பகவத்விஷயமென்றால் "காட்டு" "காட்டு" என்று முற்பட்டு வருகிற நெஞ்சே! நமக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்தாலே ஆதரித்துக்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற, அந்நிலத்துக்கடைத்த திர்யக்குக்கள் மருவிவர்திக்கிற நெய்தல் நிலத்தை யுடைத்தாய், ஸம்ஸாரவிபூதிக்கு ஆபரணமாயிருக்கிற திருவாலியைத்தொழுது, அநாதிகாலம்சேர்ந்திருந்துள்ளவல்வினைகள் போம்படிக்கீடாக ஶ்ரமஹரமான வடிவை யுடையவனுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளிலே புஷ்பாத் யுபகரணங்களை அணியப்பெற்றோம். .... .... .... .... .... .... (௯)

மூ;— பெற்றாராராயிரம் பேரானைப்பேர்பாடப்
பெற்றான் கலியனொலி செய்தமிழ்மாலை
கற்றாரோ முற்றுலகாள்வரிவைகேட்க
உற்றார்க்குறு துயரில்லை யுலகத்தே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

——( * )——

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆயிரம்பேரானை | ஸஹஸ்ர நாமவானான எம்பெருமானுடைய | ஒலிசெய் | அருளிச்செய்த |
| | | தமிழ் | தமிழ்பாஷையாலான |
| பேர் | திருநாமங்களை | மாலை | சொல்மாலையாகிய இப்பாட்டுக்களை |
| பாடப்பெற்றான் | பாடப்பெற்றவரான | | |
| கலியன் | ஆழ்வார் | கற்றார் | அப்யஸித்தவர்கள் |

ண்டோ வென்று க்ருதார்த்தரா யிருக்கிறீர்; உண்டாவிறே விடாய் தீருவது, மனப்பால்குடித்துத் தேக்குவாருமுண்டோவென்ன; ஆகாசம்பாராதே, ஆறுங் கடவாதே, மலையுமேறாதே நாமிருந்த திருவாலி நாட்டிலே நித்யவாஸம்பண்ணுமவனுக்கு ருசி பிறந்தபோது கைங்கர்யம் செய்யப்பெற்றோமே ? கைப்பட்டபொருளைக் கணிசியாதே, கைக்கெட்டாப்பொருளை ஆசைப்பட்டு உடம்பு வெளுப்பானென்னென்று திருவுள்ளத்துக்குச்சொல்லியருளுகிறாரென்றுஸங்கதி. இந்த ஸங்கதிதன்னை ஸூசிப்பிக்கிறார் (அவனித்யாதி).

"கானல்" என்றதினர்த்தம், (நெய்தல் நிலம்) என்றது. ... (௯)

| | | | |
|---|---|---|---|
| ஆயிரம்பே ரானை பேர்பாடப் பெற்று) | (ஸஹஸ்ர நாமவானான எம்பெருமானுடைய திருநாமங்களைப் பாடு கைக் கீடான பாக்யத்தை) லபித்து | முற்று உலகு | உலகங்களை யடங்கலும் |
| ஆரார் | த்ருப்தரன்றிக்கேயிருப்பர்கள்; | ஆள்வர் | ஆளப்பெறுவர்கள் |
| ஓ | இதோ ராஶ்சர்யமே!; | இவை | இப்பாட்டுக்களை |
| | | கேட்கலுற்றார்க்கு | ஶ்ரவணம் பண்ணப் பெற்றவர்களுக்கு |
| | | உலகத்தே | உலகமெங்கும் [கம் |
| | | உறுதுயர் | அநுபாவ்யமான துக்க |
| | | இல்லை | உண்டாகமாட்டாது. |

வ்யா;— பத்தாம்பாட்டு. (பெற்றாராராயிரம்பேரானை) ஆயிரம் பேரானைப் பேர்பாடப் பெற்று ஆரார். (பேர்பாடப் பெற்றான் கலியனொலிசெய் தமிழ்மாலை) கற்றார்கள் பூமியடங்கலும் ஆள்வர்கள். கற்கவேண்டா; இவை கேட்போமென்று செவிதாழ்த்தார்க்கு அநுபவிக்கவேண்டுவது ஒரு துயரில்லை. .... .... .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி பதினோராம் பத்து மூன்றாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

## பதினோராம்பத்து நாலாந்திருமொழி

### நிலையிடமெங்கும் ப்ரவேசம்.

வ்யா;— "கார்முகில் வண்ணரைக் கண்களால் காணலாங்கொலோ" என்றும், "நெஞ்சுடலம் துயின்றால் நமக்கினி நல்லதே" என்றும் இவர் வெறுக்க, "நமக்குள்ள வெறுப்புண்டோ உமக்கு, உம்மைச்சுட்டி நாம் பிறக்கபிறப்பு அறியீரோ?" என்ன; (௧)"பரித்ராணாய ஸாதூநாம்- பரித்ராணாய ஸாதூநாம்" என்கிறபடியே "நமக்காக விறே வந்து பிறந்தது" என்று ஹ்ருஷ்டராய் "அவனை ஆஶ்ரயிக்கப்பார்" என்று திருவுள்ளத்தை நோக்கி அருளிச்செய்கிறார்.

அரு;— பத்தாம்பாட்டு. (பெற்றாராரித்யாதி) "ஆயிரம் பேரானைப் பேர் பாடப்பெற்றான் கலியனொலிசெய் தமிழ் மாலை கற்றார் ஆயிரம் பேரானைப்பேர் பாடப்பெற்று, ஆரார்-த்ருப்தரன்றிக்கேயிருப்பர்கள், ஓ- இதோ ராஶ்சர்யம், முற்றுலகுமாள்வர்" இத்யாத்யந்வயம்திருவுள்ளம்பற்றியருளுகிறார்(பேர்பா—) இத்யாதியாலே. ... ... ... ... ... (௧௦)

ஜீயர்திருவடிகளே சரணம்.

(௧) கீ- ௪-அ.

அங்ஙனன்றிக்கே, "திருவாலியிலேவந்து ஸந்நிஹிதனுகப் பெற்றோம், அங்கே புஷ்பாதிகளைக்கொண்டு ஆஸ்ரயிக்கப்பெற்றோம்" என்று-இவர் † ஆஸ்வஸித்தபடியைக்கொண்டு, "நம்முடைமையான இஜ்ஜகத்தை விடமாட்டாமை வந்திருக்கிற இந்த அர்சாவதாரமேயோ? நாம், விபூதிரக்ஷணார்த்தமாகவும் ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாகவும் அவர்கள் விரோதிகளை நிரஸித்து அவர்களுக்குக்காட்சி கொடுக்கைக்குமாகவன்றோ நாம் அவதரித்தது; அந்த அவதாரங்களையும் அநுஸந்தித்துத் தரிக்கமாட்டீரோ" என்று தன் அவதாரங்களைக் காட்டிக்கொடுத்தான் ஈஸ்வரன்; அவற்றை அநுஸந்தித்து ஹ்ருஷ்டராய், அந்த ஹர்ஷம் தம்மளவிலடங்காமையாலே பரோபதேசத்திலே ப்ரவ்ருத்தராகிறார்; அவன் தன்னை அழியமாறியும் விபூதியை நோக்குமவனுயிருந்தான்; ஆஸ்ரிதரைக்கைவிடாதவனுயிருந்தான்; இனி நமக்கொரு குறையுண்டோ வென்கிறார். *

மூ;—நிலையிடமெங்குமின்றி நெடுவெள்ளமும்பர்
வளநாடு மூட விமையோர்
தலையிடமற்றெமக்கோர் சரணில்லையென்ன
அரணுவ னென்னு மருளால்
அலைகடல்நீர் குழம்ப வகடாடவோடி
அகல்வா னுரிஞ்ச முதுகில்
மலைகளை மீதுகொண்டு வருமீன மாலை
மறவாதிறைஞ்சென்மனனே. (௧)

| பதம், | உரை. |
|---|---|
| | என்மனனே!—; |
| எங்கும் | எவ்விடத்திலும் |
| நிலையிடம் இன்றி | நிலைத்து நிற்கைக்கு இடமில்லாமல் |
| நெடு | நெடிதாகப் பெருகி வருகிற |
| வெள்ளம் | (மஹாப்ரளயத்தில்) நீர்வெள்ளமானது |
| உம்பர் | தேவதைகளுடைய |
| வளம் | செழிப்புற்றிருந்த |
| நாடு | லோகத்தை |
| மூட | வ்யாபிக்க, |
| இமையோர் | தேவர்கள் |
| தலையிடம் அறு | மேலானதொரு இருப்பிடம் பெருமல் |
| எமக்கு | "எங்களுக்கு |
| ஓர்சரண் | ஒருரக்ஷகரும் |

† (பா) ஆஸ்ரயித்தபடி.

| | | | |
|---|---|---|---|
| இல்லை | (உன்னையொழிய வேறு) இல்லை" | அகல்வான் | விசாலமானஆகாசத்திலே |
| என்ன | என்றுமுறையிட, | ஓடி | (ப்ரஹ்மாதிகள் குடியிருப்பிலே) சென்றேடி |
| அரண்ஆவன் | "நான் உங்களுக்கு ரக்ஷகனாகக் கடவேன்" | உரிஞ்ச | வீசும்படியாகவும் |
| என்னும் அருளால் | என்னும்படியான க்ருபையாலே, | முதுகில் | (தன்) திருமுதுகிலே |
| அலை | திரைக்கிளப்பத்தாலே (க்ஷுபிதமாய் வருகிற) | மலைகளை | மலைகளை |
| கடல்நீர் | ஸமுத்ரஜலமானது, | மீதுகொண்டு | எறிட்டுக்கொண்டு |
| குழம்ப | குழம்பாம்படியாகவும், | வரும் | வருகிற |
| அகடு | (தன்) கீழ்வயிற்றிலே | மீனை | மத்ஸ்யரூபியான |
| ஆட | அலையெறியும்படியாகவும், | மாலை | ஸர்வேஶ்வரனை |
| | | மறவாது | (ஒருகாலும்) மறவாமல் |
| | | இறைஞ்சு | வணங்கிப்போரு. (க) |

வ்யா;— முதற்பாட்டு. (நிலையிடம்) நிலைகொள்ளலாவதோரிடமுமின்றிக்கே ஆழங்காலாயிருக்கிற வென்னுதல்; ஓரிடத்தில் நில்லாதே அலைந்துவருகிறவென்னுதல்; "இதுகீழ், இதுநடுவு,இதுமேல்" என்று பரிச்சேதிக்கவொண்ணாதமஹாப்ரளயம்,லோகத்துக்குரக்ஷகரானதேவர்கள் குடியிருப்பையுங்கூட மேலிட, "நாம் ரக்ஷகராமெல்லைகழிந்தது" என்று தேவர்கள் கவிழ்தலையிட. அன்றிக்கே, (தலையிடமற்று) மேலாயிருப்பதொருஇருப்பிடமற்று, எங்களுக்கு ரக்ஷகரில்லை யென்ன;

"நான் உள்ளேயிருக்க நீங்கள் அஞ்சவேணுமோ? நான் ரக்ஷகனாகிறேன்" என்னும்படியான க்ருபையாலே, க்ஷுபிதமாய் வருகிற கடல்,குழம்பாம்படியாகத்தன் கீழ்வயிற்றிலே அலை எறியும்படியாக

---

அரு;—முதற்பாட்டு. (நிலையித்யாதி) "வளநாடுமூட" மூன்றத்தால் நெடுமைஅர்த்தஸித்தமாயிருக்கவும், நெடுமைசொன்னதுக்கு பாவம் (இதுவித்யாதி). (ப்ரளயம்)ப்ரளயஜலமென்றபடி. "தலைகாட்ட விடமற்று" என்றுசப்தார்த்தமாயருளுகிறார் (நாமித்யாதி).

வும், ஆகாசத்திலே ப்ரஹ்மாதிகள் குடியிருப்பிலே வீசும்படியாகத் தன் திருமுதுகிலேமலைகள் அழிஞ்சுபோகாதபடி தரித்து ஏறிட்டுக் கொண்டுவருகிற ஜலம்தாரகமான வஸ்துவை; ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனை. அவன் அப்படித் தன்னுருக்கொடுத்து வேற்றுருக்கொண்டு அரியன செய்து ரக்ஷியாநின்றான், உனக்குச் செய்யவேண்டுமருந்தேவை அவனை மறவாதிருக்கை; இத்தனையும்செய்யப்பாராய், மறக்கவொண்ணாத செயல்களை அவன் செய்யாநின்றால் நீ மறவாதிருக்கவேண்டாவோ? .... .... .... .... (௧)

மூ,—செருமிகு வாளெயிற்ற வரவொன்று சுற்றித்
திசைமண்ணும் விண்ணு முடனே
வெருவர வெள்ளை வெள்ளமுழுதும் குழம்ப
இமையோர்கள் நின்று கடைய
பருவரையொன்று நின்று முதுகில்பரந்து
சுழலக் கிடந்து துயிலும்
அருவரையன்னதன்மை யடலாமையான
திருமால் நமக்கோரரணே. (௨)

| பதம். | உரை. |
|---|---|
| செருமிகு | வலிமிக்கிருப்பதாய் |
| வாள் | ஒளியையுடைத்தான |
| எயிற்ற | பற்களையுடைய |
| அரவுஒன்று | வாஸுகியை |
| சுற்றி | (கடையிறாகச்) சுற்றி, |
| திசை | திக்குக்களிலுள்ளாரும் |
| மண்ணும் | பூமியிலுள்ளாரும் |
| விண்ணும் | ஸ்வர்க்காதிலோகங்களிலுள்ளாரும் |
| உடனே | துல்யயோகக்ஷேமமாக |
| வெருவர | நடுங்க, |
| வெள்ளை | ஸ்வச்சமான |
| வெள்ளம் முழுதும் | க்ஷீராப்தியடங்கலும் |
| குழம்ப | குழம்பாம்படியாக |
| இமையோர்கள் | தேவர்கள் |

| பதம். | உரை. |
|---|---|
| நின்றுகடைய | நின்று கடையும்படி, |
| பருவரைஒன்று | பெரியதொரு மலையா |
| முதுகில் | (தன்)முதுகிலே[னது |
| பரந்துநின்று | பரம்பிநின்று |
| சுழல | சுழலும்படியாக |
| கிடந்து | (அந்த மலையின்கீழே) கிடந்து, |
| துயிலும் | சாய்ந்துகிடவாநின்ற |
| அருவரை அன்ன தன்மை | பெரியதொரு மலை சாய்த்துக்கிடக்கிறப் போலிருக்கிற |
| அடல் | வலியையுடைய |
| ஆமையான | கூர்மரூபியான |
| திருமால் | ஶ்ரியःபதி |
| நமக்கு | நமக்கு |
| ஓர் அரண் | ஒப்பற்றரக்ஷகன். (௨ |

"உரிஞ்ச" என்ற தினர்த்தம் (வீசும்படியாக) என்றது. (தன்னுருக் கொடுத்து) என்றது (௧) "பக்தாநாம்" என்று தன்னுபயையாக்கியென்றது. (வேற்றுருக்கொள்ளுகையாவது)-விஜாதீயவேஷங்கொள்ளுகை.

வ்யா;—இரண்டாம்பாட்டு. (செருமிகு) வலிமிக்கிருப்பதாய் ஒளியை யுடைத்தாய் எயிற்றையுடைத்தான வாஸுகியைச்சுற்றி, திக்குக்களும் பூமிலுள்ளவர்களும் "சிறியார பெரியார்" என்றன்றிக்கே நடுங்க,தெளிந்திருக்கிற பாற்கடல் குழம்பாம்படியாக, தேவர்களும் நின்று கடையலாம்படியாக, அந்தக்கடலைக் கண்செறியிட்டாப் போலேபெருத்தமலை முதுகிலே தன்பாரப்பெல்லாங் கொண்டுசுழன்றுவர, தொடைகுத்த உறங்குவாரைப்போலே ஒரு மலை சாய்ந்து க்கிடக்கிறப்போலே யிருக்கிற வலியையுடைய ஆமையான ஸர்வேச்வரன் பதி இனி ஒரு ரக்ஷகம் வேண்டாதவரண். .... .... (௨)

மூ;—தீதறுதிங்கள் பொங்குசுட ருமபரும்ப
ருலகேழினோடு முடனே
மாதிர மண்சுமந்து வடகுன்று நின்ற
மலையாறு மேழுகடலும்.
பாதமர்சூழ் குளம்பி னகமண்டலத்தி
னொருபா லொடுங்கவளர்சேர்
ஆதிமுனேனமாகி யரணாய மூர்த்தி
அதுநம்மையாளுமரசே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தீது அறு | குற்றமற்று (தர்சநீயமான | மண் சுமந்து | பூமிக்கு தா(தா) ரகமாக |
| திங்கள் | சந்த்ரனும் | | |
| பொங்கு | ஜ்வலியாநின்றுள்ள | வட | வடக்குதிக்கிலுள்ள |
| சுடர் | ஸூர்யனும் | குன்று | மேருபர்வதமும் |
| உம்பர் | தேவர்களும் | நின்ற | ப்ரோக்ஷித்து நின்ற |
| உம்பர் உலகு | தேவர்களுடைய ஊர் | மலை ஆறும் | (மற்ற) குலபர்வதங்களாறும் |
| ஏழினோடு | த்தவலோகங்களே | ஏழ்கடலும் | ஸப்தஸாகரங்களும் |
| முடனே | ழும் | | (ஆகிய இவையெல்லாம்) |
| மாதிரம் | திக்குக்களும் | | |

அநு;—இரண்டாம்பாட்டு. (செருவித்யாதி) கீழ்ப்பாட்டில் இமையோர்க்குக் குடியிருப்புக்கொடுக்க அரியனசெய்தானென்றார்; இதில் அவர்களுக்கு தாரகம்வார்க்க வேணுமென்று அரியனசெய்ய ஆமையானபடியை அநுஸந்திக்கிறரென்று ஸங்கதி.

"உடனே" என்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (சிறியாரித்யாதி). (கண்செறியிட்டாப்போலே)குழாய் மூடியிட்டாப்போலே ... ... (௨)

| | | | |
|---|---|---|---|
| பாதம் | திருவடிகளிலே | சேர் | தகுதியான |
| அமர் | சேர்ந்திருப்பதாய் | ஆதி | காரணபூதனாய் |
| சூழ் | பரப்பையுடைத்தான | முன் | வராஹகல்பாதியிலே |
| குளம்பின் | திருக்குளம்பின் | ஏனம் ஆகி | மஹாவராஹமாய் |
| அகமண்டலத்தின் | அந்தர்வலயத்தினுடைய | அரணுய | ரக்ஷகமாய்நின்ற |
| ஒருபால் | ஏகதேசத்திலே | மூர்த்தி அது | அந்த மூர்த்தி விக்ரஹமான்து |
| ஒடுங்க | அடங்கும்படி | நம்மை | நம்மை |
| வளர் | வளராநிற்பானாய் | ஆளும் | அடிமைகொள்ளும் |
| | | அரசு | நிர்வாஹகவஸ்து. (ங) |

வ்யா;— மூன்றாம்பாட்டு. (தீதறு) தர்ஶநீயமுமாய், கண்ணுக்குக் குளிர்ந்திருக்கும் சந்த்ரன், கண்வைக்கவொண்ணாத ஸஹஸ்ரகிரணனான ஆதித்யன், தேவர்கள், உபரிதந லோகங்களோடே. "மாதிரம்" என்று-திக்கு, பூமிக்கு தாரகமான மேரு, அதுபோக்கி சேஷித்துநின்ற குலகிரிகளாறும், ஏழுகடலும், இவையடையத்திருவடிகளிலே சேர்ந்து பரப்பையுடைய திருக்குளம்பில் அந்தர்வலயத்தினேகதேசத்திலே அடங்கும்படி வளராநிற்பானாய். (சேராதி)(க) "అనురూపస్సవై నాథః- அநுரூபஸ்ஸவைநாதः" என்னுமாபோலஇதுக்கடையத்தகுதியான காரணம்; வராஹகல்பாதியிலே மஹாவராஹமாய்ரக்ஷித்த திருமேனி; அது நம்மை அடிமைகொள்ளும்நிர்வாஹகவஸ்து. .... .... .... .... .... .... (ங)

மூ.—தளையவிழ்கோதை மாலை யிருபால்தயங்க
வெரிகான் றிரண்டுதறுகண்
அளவெழ வெம்மைமிக்க வரியாகியன்று
பரியோன்சினங்களவிழ

அநு;—மூன்றாம்பாட்டு. (தீதித்யாதி) கீழ்ப்பாட்டில் தாரகம் கொடுத்தாரகச் சொன்னர்; அவ்வளவிலே பர்யாப்தரல்லரிறே. மண்ணுசை மிகுத்திருக்குமே தேவர்களுக்கு. ஆகையாலே அவர்களுக்கு விளை நிலமான்து வெள்ளம்கொள்ள, உருவழியாமே காணியை உத்தரித்தகட்டளையை நினைத்து, மஹாவராஹத்தின்படியை அநுபவிக்கிறரென்று ஸங்கதி.

இரண்டாம் பாதத்தினர்த்தம் (உபரிதநம்) என்றது. ... ... (ங)

(க) ரா-அ-உ-கஉ.

வளையுகிராளி மொய்ம்பில் மறவோனதாகம்
மதியாது சென்றொருகிரால்
பிளவெழ விட்டகுட்டமதுவைய மூடு
பெருநீரில் மும்மை பெரிதே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | ப்ரஹ்லாதாழ்வான் ப்ரதிஜ்ஞை பண்ணினவன்று, | சினங்கள் | பகவத்பாகவத விஷயங்களிலுள்ள மாத்ஸர்யமெல்லாம் |
| தளை அவிழ் | கட்டு அவிழாநின்றுள்ள | அவிழ | குலையும்படியாக, |
| கோதை | தொடைகொள்மாலையும் | வளை | வளைந்த |
| மாலை | பூமாலையும் (ஆகிய இவையிரண்டும்) | உகிராளி | திருவுகிர்களையுடையனாய், |
| இருபால் | இரண்டுபக்கத்திலும் | மொய்ம்பில் | மிக்கவலியுடையனாய் |
| தயங்க | அசைந்துவர, | மறவோனது | விஞ்சின வீர்யத்தையுடையனான அந்த ஹிரண்யனுடைய |
| எரிகான்று | அழலை உமிழாநின்றுள்ள | ஆகம் | ஶரீரத்தை |
| இரண்டு தறுகண் | க்ரூரமான வட்டணித்த இரண்டு திருக்கண்களும் | மதியாதுசென்று | ஒருசரக்காகமதியாதே போய்ப்புக்கு |
| | | ஒரு உகிரால் | ஒருதிருவுகிராலே |
| | | பிளவெழ இட்ட | இரண்டு பிளவாம்படி இட்ட |
| அளவு எழ | விஸ்த்ருதமாக, | குட்டம்அது | ரக்தமடுவானது |
| வெம்மைமிக்க | விஞ்சின பாருஷ்யத்தையுடைய | வையமூடு | பூலோகத்திலே (வ்யாபியாநின்ற) |
| அரி ஆகி | நரஸிம்ஹ ரூபியாய், | பெருநீரில் | மஹாப்ரளயத்திற்காட்டில் |
| புரியோன் | (வரபலங்களாலே) பருத்த ஹிரண்யனுடைய | மும்மைபெரிதே | மும்மடங்கு பெரிதாயிருந்ததீ! (௪) |

அரு.—நாலாம்பாட்டு. (தளையித்யாதி). விளை நிலத்தை உத்தரித்த வளவன்றிக்கே, அதின் களை பிடுங்கிவிடுறே அது விளைவது; ஆகையாலே, ஏனமானவநந்தரம், அரியாய் - அரியை அழித்தபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி திருவுள்ளம்பற்றி, ப்ரமாணகதநமுகேந அத்தை ஸங்க்ஷேபிக்

ஷ்யா;— நாலாம்பாட்டு. (தளையவிழ்) "மத்ஸ்ய: கூர்மோ வராஹஶ்ச நாரஸிம்ஹ: மத்ஸ்ய: கூர்மோவராஹஶ்ச நாரஸிம்ஹ:" இறே. கட்டுநெகிழாநின்றுள்ளதொடைகொள்மாலைபூமாலைஎன்றுர்; இவை இரண்டருகும் அசைந்துவர, அந்தத்தோளின் மாலைகளோடு கண்ணில்புறப்படுகிறநெருப்போடு வாசியில்லைகாணும்இவர்க்கு, இரண்டு வட்டணித்தகண், (அளவெழ) விஸ்த்ருதமாக,ஹிரண்யன் அஞ்சும்படியாகப் பெரிய வெம்மையையுடைய நரஸிம்ஹமாய், ஆஶ்ரிதன் ப்ரதிஜ்ஞை பண்ணினவன்று, வரபலங்களாலேபருத்த ஹிரண்யனுடைய, ஈஶ்வரவிஷயத்திலும் ஸாமாந்யஜகத்விஷயத்திலும் ஆஶ்ரிதவிஷயத்திலுமுள்ள த்வேஷங்களடைய நெகிழும்படியாக வளைந்த திருவுகிர்களையுடையவன்.

வலிமிக்க பெரியமறத்தையுடைய ஹிரண்யன் வடிவைக்கண்டு அத்தை ஒன்றாக மதியாதே கிட்டித்திருவாழிக்கு இரைபோராதென்று ஒரு உகிராலே இரண்டு பிளவாம்படி யிட்டகுழி-மஹாப்ரளயத்தில் முமடங்கு பெரிது. .... .... .... (௪)

மூ.—வெந்திறல் வாணன் வேள்வியிடமெய்தி
யங்கோர் குறளாகி மெய்ம்மையுணர
செந்தொழில் வேதநாவில் முனியாகிவைய
மடிமூன் றிரந்து பெறினும்
மந்தரமீதுபோகி மதிநின்றிறைஞ்ச
மலரோன் வணங்க வளர்சேர்
அந்தரமேழினூடு செலவுய்த்தபாத
மது நம்மையாளுமரசே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெம்திறல் | வெவ்விய வலியையுடைய | வேள்வி இடம் | யஜ்ஞவாடத்திலே |
| | | எய்தி | எழுந்தருளி [போது |
| வாணன் | மஹாபலியினுடைய | அங்கு | எழுந்தருளுகிற வப் |

கிறுர் (மத்ஸ்யேத்யாதி). "கோதை" என்றதினர்த்தம்(தொடைகொள்மாலை) என்று. விஶேஷங்களென்கை. "மாலை" என்றதினர்த்தம். (பூமாலை) என்றது; அதாவது-நெருக்கத் தொடுத்த திருமாலைஎன்கை. (என்றும்) என்றவநந்தரம் "பேதம் கொள்ளுவது" என்று சேஷம். (குழி) என்கிறது-ரக்தவெள்ளமுடைய மடுவென்கை. ... ... ... ... ... ... (௪)

| | | | |
|---|---|---|---|
| ஓர் | (ஆகர்ஷகத்வத்தில்) ஒப்பற்ற | போகி | போய் அளாவி |
| குறளாகி | வாமநவேஷத்தை யுடையனாய், | மதி | சந்த்ரனானவன் |
| மெய்ம்மை உணர | யதார்த்த ஜ்ஞாநத்தை யுடையனாய், | நின்று | தன் ஸ்த்தாநத்தளவிலே நின்று |
| செம் தொழில் | ப(ஃ)ல காமனையில்லாத அநுஷ்டாநத்துக்கு (ச்சேஷமான) | இறைஞ்ச | தொழும்படியாகவும் |
| | | மலரோன் | ப்ரஹ்மாவானவன் |
| | | வணங்க | வணங்கும்படியாகவும் |
| | | வளர்சேர் | ஓங்கிவளராநிற்பதாய் |
| | | அந்தரம் ஏழின் ஊடு — | உபரிதநலோகங்களேழினுள்ளும் |
| வேதம் | வேதவாக்யத்தை | செல உய்த்த | போம்படி நடத்தப்பெற்ற |
| நாவில் | வாயாலே (உச்சரியாநின்றுள்ள) | பாதம் அது | அந்தத்திருவடியானது |
| முனி ஆகி | ரிஷியாய் | | |
| மூன்று அடி வையம் | மூன்றடி மண்ணை | நம்மை | (அப்போதை இழவாலே வருந்துகிற) நம்மை |
| இரந்து | யாசித்து | | |
| பெறினும் | பெற்றவாறே, | | |
| மந்தரம்மீது | மந்தரத்துக்குமேல் | அரசு ஆளும் | ரக்ஷிக்கக்கடவது. |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (வெந்திறல்) உதாரனென்று ப்ரஸித்தனாயிருக்கச்செய்தேயும்தேவர்கள் குடியிருப்பைஅழிக்கும்படியான ப(ப)லம்,இத்தையுடைய மஹாபலியஜ்ஞ பூமியிலேசென்று; கண்டார்க்கடைய ஆகர்ஷகமான வாமநவேஷத்தைக் கொண்டு யதார்த்தஜ்ஞாநத்தையுடையனாய், அநபிஸம்ஹிதபலமான அநுஷ்டாநத்துக்குச் சேஷமாய், நாட்டார்க்கு ஹிதாநுசாஸநம் பண்ணும்

அரு.—அஞ்சாம்பாட்டு. (வெந்திறலித்யாதி) விளைநிலத்திலகளைகழற்றுவது பல பர்யந்தமாகப் புக்கவாறே. முன்கை மிடுக்கான குறும்பர் வந்து மேலிட்டு "எங்களது" என்று அபிமாநித்துப் பறித்துக்கொள்ள, விரகனாய்ப்போய், பொற்கையால் நீரேற்றும் எல்லைநடந்து மீட்டுக்கொடுத்த, குறளின்படியை அடியொற்றி அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

மெய்ம்மையுணர்வதினர்த்தம் (யதார்த்தேத்யாதி). செம்மையின் தாத்பர்யம் (அநபிஸம்ஹிதேத்யாதி). ... ... ... ... ... (ரு)

வேதத்தை வாயாலே உச்சரியாநின்றுள்ள ருஷியாய், ஓரடிக்குச் சிறை யிட்டு வைப்பானாக மூன்றடியை வேண்டிப் பெற்றவாறே மந்தரத்துக்கு மேல் போய், சந்த்ராதித்யர்கள் ஸ்தாநத்தளவிலே நின்று ஆதரிக்க, ப்ரஹ்மா "நம் இருப்பிலே திருவடிகள் வந்தது" என்று புறப்பட்டு ஆஶ்ரயிக்கும்படி வளரா நிற்பதாய், சேரக்குடியேறியிருக்கிற உபரிதநலோகங்களெல்லாம் நடுவே போம்படி நடத்தின திருவடிகள் நமக்கு ரக்ஷகம். .... .... .... (ரு)

மூ;— இருநிலமன்னர்தம்மை யிருநாலுமெட்டு
மொருநாலு மொன்றுமுடனே
செருநுதலூடு போகி யவராவிமங்க
மழுவாளில் வென்றதிறலோன்
பெருநிலமங்கைமன்னர் மலர் மங்கைநாதர்
புலமங்கை கேள்வர் புகழ்சேர்
பெருநிலமுண்டுமிழ்ந்த பெருவாயராகி
யவர்நம்மையாள்வர் பெரிதே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| இரு | பரப்பையுடைத்தான |
| நிலம் | பூமிக்கு (நிர்வாஹகரா யிருந்த) |
| மன்னர்தம்மை | ராஜாக்களை |
| இருநாலுமெட்டும் ஒருநாலுடனே ஒன்றும் | இருபத்தொருகால் |
| செருநுதலூடு போகி | யுத்தகளத்தின் நெற்றியிலே நடந்து |
| அவர் | அந்தராஜாக்களுடைய |
| ஆவி | ப்ராணனானது |
| மங்க | மறுகும்படி |
| மழுவாளில் | கோடாலியாலே |
| வென்ற | ஜயித்த |
| திறலோன் | மிடுக்கையுடையனாய் |

| பதம். | உரை. |
|---|---|
| பெருநிலமங்கை | ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு |
| மன்னர் | வல்லபராய் |
| மலர்மங்கை நாதர் | ஸ்ரியப்பதியாய் |
| புலம் | (ஈஶ்வரனுடைய) ஸர்வேந்த்ரியங்களையும் (ஆகர்ஷிக்க வல்ல) |
| மங்கை | நீளாதேவிக்கு |
| கேள்வர் | நிர்வாஹகராய் |
| புகழ்சேர் | மஹாயஶஸ்வியாய் |
| பெருநிலம் | மஹாப்ருதிவியடங்கலும் |
| உண்டு | (ப்ரளயத்தில்) திருவயிற்றிலே வைத்து நோக்கி |

| | | | |
|---|---|---|---|
| உமிழ்ந்த | (பின்பு வெளிநாடு காண) உமிழ்ந்தருளின | பெரிதே | மேலுள்ள மஹாகாலமெல்லாம் |
| பெருவாயராகி | பெரிய வாயையுடையவரானவர் | நம்மை | (ஆஶ்ரயணருசியுடைய) நம்மை |
| | | ஆள்வர் | அடிமை கொள்ளுவர். (௬) |

வ்யா;— ஆரும்பாட்டு. (இருநிலமன்னர்) பரப்பையுடைய பூமிக்குநிர்வாஹகரானராஜாக்களை, இருபத்தொருபடிகால் ஒருவர் தப்பாதபடி பூசலிலே நெற்றியிலே நடந்து,மழுவாகிறஆயுதத்திலே மூலையின்நடுவே போய்,அவர்கள் ப்ராணன்கள் மறுசும்படி வென்றமிடுக்கர்.

"ஶ்ரீபூமிப்பிராட்டிக்கு வல்லபர், ஶ்ரியஃபதி; ஈஶ்வரனுடைய ஸர்வேந்த்ரியங்களையும் அபஹரிக்கவல்ல நீளைப்பிராட்டிக்குவல்லபர், (க)"யஸ்ய" யஶ்யஶ" என்னும்படி "இவளையுடையவர்" என்னும் பெரியபுகழையுடையவர்; ஸர்வலோகங்களையும்வயிற்றிலே வைத்து ரக்ஷித்து, ரக்ஷ்யத்தினளவல்லாதரக்ஷகத்வ ப்ராப்தியையுடையராய், இப்படிக்கொத்தவர் நம்முடைய ஆஶ்ரயணத்தின் சிறுமைபாராதே யாவதாத்மபாவியாக நம்மை அடிமைகொள்வர். (௬)

மூ;— இலைமலிபள்ளியெய்தி யிது மாயமென்ன
இனமாயமான்பின் னெழில்சேர்
அலைமலிவேற்கணாளை யகல்விப்பதற்
கோருருவாய மானையமையாக்
கொலைமலிவெய்துவித்த கொடியோனிலங்கை
பொடியாக வென்றியமருள்
சிலைமலிசெஞ்சரங்கள் செலவுய்த்தநங்கள்
திருமால் நமக்கோரரணே. (எ)

அரு.—ஆரும்பாட்டு. (இருநிலமித்யாதி) எல்லைநடந்து மீட்டுக் கொண்ட நிலந்தன்னிலே தோள்விஞ்சின மன்னரைக் கைவிஞ்சி நெருக்க, அவர்கள் சரத்துக்கஞ்சாதே, கரம் கழித்துவிட்ட மழுவாளியின் மிடுக்கை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

(நெற்றியிலே) வெட்டி வீழ்ந்த மன்னர் நெற்றியிலே. ... ... (௬)

(க) ரா-ஆ-௱௭-கஅ.

| பதம், | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இலைமலிபள்ளி | பர்ணஶாலையினருகே | அமையா | ப்ரஸித்து, |
| எய்தி | வந்து, | கொலை | பரஹிம்ஸையையே |
| எழில்சேர் | மிக்க அழகையுடையளாய் | மலிஎய்துவித் | (தன்னிடத்தில்) பூர்ணமாக வளர்த்து வைப்பானுய் |
| அலைமலி | (தன் நோக்குக்கு இலக்கானாரை) அலைத்துப் பிணிப்புண்ணப் பண்ணவற்ருய் | கொடியோன் | மஹாக்ரூரனை ராவணனுடைய |
| வேல் | வேல்போன்ற | இலங்கை | லங்கையானது |
| கண்ணுளை | கண்களையுடைய பிராட்டியை | பொடிஆக | பொடியாம்படியாக |
| அகல்விப்பதற்கு | (பர்த்ரு ஸகாஶத்தில் நின்றும்) பிரிப்பதற்காக | வென்றி | வெற்றியை விளைக்கக் கடவ |
| இது | "இந்த மானுனது | அமருள் | யுத்தபூமியிலே |
| மாயம் | ஆஶ்சர்யமாயிராநின்றதீ" | சிலைமலி | தநுஸ்ஸிலே நிறைந்த |
| என்ன | என்னும்படிக்குடலாக | செம்சரங்கள் | செவ்வியபாணங்களை |
| இனமாய் | திரளாகவந்த | செலஉய்த்த | செலுத்தியருளினவனுய், |
| மான்பின் | மான்களின் பின்னே | நங்கள் | நமக்கு (புருஷகாரபூதையான) |
| ஓர் | விலக்ஷணமான | திரு | பெரியபிராட்டியார் திறத்திலே |
| உருஆய | ரூபத்தையுடைத்தாய்க்கொண்டுவந்த | மால் | வ்யாமுக்த (X) னை ஸர்வேஶ்வரன், |
| மானை | (மாரீசனுகிற) மாயமானை | நமக்கு | நமக்கு |
| | | ஓர் | ஒப்பற்ற |
| | | அரண் | ஶரண்யன். (எ) |

வ்யா;— ஏழாம்பாட்டு. (இலைமலிபள்ளி.) பர்ணசாலையிலே "யிருந்தும் இதொருவாஶ்சர்ய மிருந்தபடியென்?" என்னும்படி

---

அரு.—ஏழாம்பாட்டு. (இலைமலியித்யாதி) கைவிஞ்சின மன்னர்கரம் கழியவிட்டவுடனே தலைபத்துப் படைத்தாருமாய் மாயாவியுமான இராக்கதர் மீதுகொள்ளப்புக்கு பாதிக்க, கையும் வில்லுமாய்க்காத்த காகுத்தன் கதையில் ஈடுபடுகிருரென்று ஸங்கதி.

"மான்பின்-மான்களுக்குப் பின்னே" என்ருய், அதுக்குக்கருத்தருளுகிருர்

யாக "இனத்தின்மான்களோடே கூடிவரில் அவை ிவருவும்" என்று அவற்றின்பின்னே, (க) "[illegible]-ஆச்ரமத்வாரமாகம்ய" இத்யாதி. எழிலையுடையளாய் இலச்சாறுரை அலைத்துப்பிணிப்புண்ணப்பண்ணவற்ருய், ஓராளுமொரு நோக்கும் நேராம்படியிருக்கிற †பிராட்டியைப் பிரிக்கைக்கு ஈடாயிருப்பதொரு வடிவைக்கொண்டு வந்த மாயாம்ருகத்தை நிரஸித்து, பரஹிம்ஸையே யாத்ரையாகத்திரியும் அதிக்ரூரனை யையனுடைய லங்கைபொடியாம்படியாக வெற்றியை விளைப்பதான ஸமரபூமியிலே ஆயிரமும் இரண்டாயிரமுமாக ஒரு தொடையிலே தொடையுண்ணும் செவ்விய அம்புகளை நடத்தின. இதடையச்செய்தது-பிராட்டிபக்கல் பிச்சாலேயிறே. இப்படித் தன்மார்பிலே அம்பை ஏற்று ரக்ஷிக்குமவர் நமக்கு ரக்ஷகர்; நமக்குமேலொரு குறையுண்டோ?. .... (எ)

மூ,—மூன்னுலகங்களேழு மிருள்மண்டியுண்ண<br>
முதலோடு வீடுமறியாது<br>
என்னிதுவந்ததென்ன விமையோர்திசைப்ப<br>
எழில் வேதமின்றி மறையப்<br>
பின்னையும்வானவர்க்கும் முனிவர்க்கும்நல்கி<br>
யிருள்தீரந் திவ்வையமகிழ<br>
அன்னமதாயிருந் தங்கறநூலுரைத்த<br>
அது நம்மை யாளுமரசே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மூன் | முன்பொருகாலத்திலே | வீடும் | விடுகிறபோதையும் |
| உலகங்கள் ஏழும் | ஸர்வலோகங்களையும் | அறியாது | அறியமாட்டாமல் |
| இருள் | அஜ்ஞாநாந்தகாரமானது | என் இது வந்தது என்ன | "நமக்கு வந்தவிதுவென்?" என்று |
| மண்டி உண்ண | வ்யாபிக்கத் தொடங்கின வளவிலே, | திசைப்ப | திகைத்துக்கிடக்க, |
| இமையோர் | தேவதைகளானவர்கள் | எழில் | அழகுமிக்க |
| முதலோடு | இவ்விருள் துடங்கினபோதையும் | வேதம் | வேதமானது |
| | | இன்றிமறைய | (அஸுராபஹ்ருதமாய்) மறைந்து கிடக் |

(இனத்தினித்யாதி) "அமையா" என்றது-அமைந்தென்ருய், அதினர்த்தம் - (நிரஸித்து) என்றது. ... ... ... ... ... ... (எ)

† (பா) கண்ணையுடைய பிராட்டி.   (க) ரா-ஆ-சஉ-உசு.

| | | | |
|---|---|---|---|
| பின்னையும் | திரியட்டும் | அன்னமதாயி | ஹம்ஸரூபியாய் திருவ ருந்து வதரித்து |
| வானவர்க்கும் | தேவதைகளுக்கும் | அங்கு | அப்போது |
| முனிவர்க்கும் | ரிஷிகளுக்கும் | அறநூல் | தர்மசாஸ்த்ரங்களை |
| கல்கி | ப்ரஸாதத்தைப்பண் ணி | உரைத்த | அருளிச்செய்த |
| இவ்வையம் | இவ்வுலகானது | அது | அந்த பரஞ்சோதியே |
| இருள்தீர்ந்து | இருளால் விடுபட்டு | | நம்மை அரசு ஆளும். (அ) |
| மகிழ | ஆநந்திக்கும்படியாக | | |

வ்யா;—எட்டாம்பாட்டு. (மூன்னுலகங்களேழும்) முன் பொரு காலத்திலே ஸர்வலோகங்களும் அஜ்ஞாநாவ்ருதங்களாக, "தொடங்கிற்று இது, விடுகிறது இது" என்றறியாதே, "அஸ்த்காநே நமக்குவந்தவிதுவென்னோ?" என்று லோகத்துக்கு வெளிச்செறிப்பைப்பண்ணும் தேவதைகளுமகப்பட அறிவுகெட, (க)"யோ வை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி" என்றுதான் முதலிலே அறிவிக்கக் கைம்முதலான இவ்வேதங்களும் அபஹ்ருதமாக, "கொடுத்த நாம் இருக்கோமாகில் இவை இப்படிப் படுகிறதென்" என்று திரியட்டும் அவர்களளவிலே ப்ரஸாதத்தைப் பண்ணி, லோகத்தில் அஜ்ஞாநம் தீர்ந்து தன்னைக் கண்டாரெல்லா ரும் ஆநந்த நிர்ப்பராம்படியாகக், கேட்டார் உபஸத்திபண்ணமாட் டாமையாலே இழக்கவேண்டாத திர்யக்காய்த் தானே தாழ

அ;—எட்டாம்பாட்டு. (மூன்னித்யாதி) இப்படி முதற்பாட்டுத் தொடங்கி இமையோருக்குக் குடியிருப்புமுதல் தாரகப்ரதாநமும் அவர்கள் பூமி அழியாமல் நோக்கினத்தையும் அநுஸந்தித்தார். இவ்வளவின்றிக்கே, ஓதுவித்தும் உபகரித்தான் கிடாய் என்று அன்னத்தை அநுபவிக்கிறரென்று ஸங்கதி.

மத்ஸ்யாதிகளை அடைவே அநுஸந்தித்தவர் (உ)"மீனோடாமைகேழலரி குறளாய், முன்னுமிராமனாய், தானாய்ப் பின்னுமிராமனாய்த் தாமோதரனாய் கற்கியுமானான்" என்றாப்போலே அநுஸந்திக்கவிறே அடுப்பதென்னில்; உப காராநுஸந்தாந விசேஷங்களை அநுஸந்திக்கிற ஹர்ஷத்தாலே அடைவற்று அடையைப் பிடித்து ஹம்ஸத்தை அநுஸந்தித்த வநந்தரம் தாமோதரன் படி யையும் அநுஸந்தித்து, தலைக்கட்டுகிறரென்று கொள்ளக்கடவது. "முத லோடு வீடுமறியாது" என்றதனர்த்தம் (தொடங்கிற்றித்யாதி;) ... ... (அ)

(க) ஶ்வேதா-௬-௧௮. (உ)

நின்று ஸாரதியாய் உபதேசித்தாப்போலே ஹிதாநுசாஸநம் பண்ணக்கடவ அவனை நமக்கு ரக்ஷகன். .... .... .... (அ)

மு.—துணைநிலைமற்றெமக்கோ ருளதென்றிராது
தொழுமின்கள் தொண்டர் துலைய
உணமுலைமுன்கொடுத்த வுரவோளதாவி
யுகவுண்டு வெண்ணெய்மருவிப்
பணைமுலையாயர்மாத ருரலோடுகட்ட
வதனோடு மோடியடல்சேர்
இணைமருதிற்றுவீழ நடைகற்றதெற்றல்
வினைபற்றறுக்கும் விதியே. (௯)

| பதம். | உரை. |
|---|---|
| தொண்டர் | பகவத்விஷயத்திலே ருசியுடையவர்களே! |
| எமக்கு | "நமக்கு |
| மற்று ஓர் | வேறொரு |
| துணைநிலை | ஆஸ்ரயம் |
| உளதுஎன்று | உண்டு" என்று |
| இராது | புத்திபண்ணாமல் |
| தொழுமின்கள் | (எம்பெருமானை) வணங்குங்கோள். |
| முன் | முன்பொருகாலத்திலே |
| துலைய | (கண்ணன்) முடியவேணுமென்று கருதி |
| உண்ண | (அவன்) உண்ணும்படியாக |
| முலைகொடுத்த | (விஷதிக்தமான ஸ்தநத்தை) வாயில் கொடுத்த |
| உரவோளது | (நெஞ்சில்) வன்மையையுடையளான பூதனையின் |
| ஆவிஉக | ப்ராணன் முடியும்படிக்கீடாக |
| உண்டு | ஸ்தந்யபாநம்பண்ணி, |

| பதம். | உரை. |
|---|---|
| வெண்ணெய் | வெண்ணெயை |
| மருவி | விரும்பி (அதற்காகக் களவுகள்செய்ய) |
| பணைமுலை | பணைத்த முலையையுடையளான |
| ஆயர்மாதர் | யசோதையானவள் |
| உரலோடுகட்ட | (சலிக்கவொண்ணாதபடி உரலோடே கட்டிவைக்க, |
| அதனோடும் ஓடி | அவ்வுரலையுமிழுத்துக்கொண்டோடி, |
| அடல்சேர் | மிடுக்கையுடைத்தாய் |
| இணை | இரட்டையாய்ச் சேர்ந்து நின்ற |
| மருது | மருதமரங்கள் |
| இற்றுவீழ | முறிந்துவிழும்படி |
| நடைகற்ற | நடந்தருளினவனும் |
| தெற்றல் | தெள்ளியவனுமான எம்பெருமான் |
| வினை | நம்பாபங்களை |
| பற்று அறுக்கும் | ஸவாஸநமாகப் போக்கியருளுவன்; |
| விதியே | இது நிஸ்சிதம். (௯ |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (துணையித்யாதி) நமக்கு வேறே ஒருதுணை உண்டென்றிராதே தொழுங்கோள், பகவத்விஷயத்தில் ருசியுடையீர்! முடியவேணுமென்று நினைத்து உண்ண முலை கொடுத்த வன்னெஞ்சியான பூதனையுடையப்ராணன் முடியும்படிக் கிடாகவுண்டு, வெண்ணெயை ஆசைப்பட்டுப்பணைத்த முலையையுடைய யசோதைப்பிராட்டி உரலோடேகட்ட, அத்தைக் கொண்டோடினமிடுக்கையுடைத்தாய், ஒன்றென்னலாம்படி நின்ற மருதுகள் முறிந்து விழும்படியாக, நடைகற்ற தெள்ளியவன் நம்முடைய பாபத்தை ஸவாஸநமாகப் போக்கும். இது நிச்சிதம். .... (கூ

மூ.—கொலைகெழு செம்முகத்த களிறொன்றுகொன்று
கொடியோ னிலங்கை பொடியா
சிலைகெழுசெஞ்சரங்கள் செலவுய்த்தநங்கள்
திருமாலை வேலைபுடைசூழ்
கலிகெழுமாடவீதி வயல்மங்கைமன்னு
கலிகன்றி சொன்னபனுவல்
ஒலிகெழுபாடல் பாடி யுழல்கின்றதொண்ட
ரவராள் வரும்பருலகே. (க௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொலைகெழு | கொலையில் உத்யுக்தமாய் | கொடியோன் | மஹாக்ரூரனை ராவணனுடைய |
| செம்முகத்த | சிவந்தமுகத்தை யுடைத்தாய்க் கொண்டுவந்த | இலங்கை | லங்கையானது |
| களிறு ஒன்று | குவலயாபீடமென்னு மோர்யானையை | பொடியா | பொடியாம்படி |
| கொன்று | முடித்து, | சிலைகெழு | வில்லிலே பொருந்தின |
| | | செம்சரங்கள் | நெருப்புப்போன்ற அம்புகளை |

அரு.—ஒன்பதாம்பாட்டு. (துணையித்யாதி) நெஞ்சும் தாமுமாயநுபவித்தார்; அவ்வநுபவம் உள்ளடங்காதே பரோபதேசத்திலே ப்ரவ்ருத்தராய், அறநூலுரைத்தவன் கிடீர் தங்களுக்கு அறமென்று, தாமோதரன் சேஷ்டிதங்களை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"எமக்கொருதுணை நிலமற்றுளதென்றிராதே" என்றந்வயித்து அர்த்தமருளுகிறார் (நமக்கித்யாதி) "வேறே" என்கிற அவதாரண தாத்பர்யம் - (இது நிச்சிதம்) என்றது. ... ... ... ... ... ... (கூ)

| | | | |
|---|---|---|---|
| செலஉய்த்த | எவியருளினவனும் | சொன்ன | அருளிச்செய்த |
| நங்கள் | நமக்குச் சேஷியான | பனுவல் | அருளிச்செயலாய், |
| திருமாலை | ஶ்ரியஃபதியை, | ஒலிகெழு | சப்தங்கள் நிறைந்துள்ளதான |
| வேலைபுடை சூழ் | நாற்புறமும் காவேரியாலே சூழப்பட்ட | பாடல் | பாசுரங்களை |
| கலிகெழு | வலிமைமிக்க [தாய் | பாடி | வாயாரப்பாடி |
| மாடவீதி | மாடவீதிகளாலும் | உழல்கின்ற | இதுவேயாத்ரையாயிரா நின்றுள்ள |
| வயல் | கழனிகளாலும் (அலங்க்ருதமான) | தொண்டர் | பாகவதர்கள் |
| மங்கை | திருமங்கையிலே | அவர் | |
| மன்னு | பொருந்திவர்த்திக்கிற | உம்பர்உலகு | பரமபதத்தை |
| கலிகன்றி | ஆழ்வார் | ஆள்வர் | ஆளப்பெறுவர்கள் (கo) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கொலையித்யாதி) கொலைசேர்ந்து சிவந்த முகத்தையுடைத்தான குவலயாபீடத்தைக்கொன்று, கொடியோனுடைய இலங்கைபொடியாம்படிக்கீடாக வில்லிலே பொருந்தி அக்நிகல்பமான சரங்களை நடத்தின நம்முடைய ஸர்வேஶ்வரனை. திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த பாடலை நெஞ்சாலே தரித்தும், இதுவேயாத்ரையாக உழலுகிறவர்கள் பரமபதத்தைப்பெற்றநுபவிப்பார்கள். (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

## பெரியதிருமொழி
## பதினோராம்பத்து நாலாந்திருமொழி
## முற்றிற்று.

---

அரு.—பத்தாம்பாட்டு. (கொலைகெழுவித்யாதி) கற்கியின் சரித்திரம் மேலே வரப்புகுகிறதத்தனை என்று அத்தைவிட்டு, இவ்வவதாரங்களிலே கண்ணனும்இராமனுமேஆழ்வார்களைத் துவக்கவல்லாராகையாலே, அதிலேஈடுபட்டமைதோற்ற அவை இரண்டையும் சேர்த்து அநுபவிக்கிறுரென்று திருவுள்ளம்பற்றி வாக்யார்த்த மருளுகிறுர் (கொலைசேர்ந்தித்யாதி). ... (கo)

ஜீயர்திருவடிகளே சரணம்.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

# பதினோராம்பத்து அஞ்சாந்திருமொழி
## மானமரும் ப்ரவேசம்.

வ்யா;—கீழில்திருமொழியிலேஆஸ்ரிதார்த்தமாகஅநேகாவதாரங்களைப் பண்ணினத்தை அநுஸந்தித்து, அவ்வாஸ்ரிதபாரதந்த்ர்யத்திலே ஈடுபட்டுத் தாமானதன்மையழிந்து, வேறே இரண்டு பிராட்டிமார் பேச்சாலே, ஒருத்தி-மேன்மையை அநுஸந்திக்க, ஒருத்தி ஸௌலப்யத்தைஅநுஸந்தித்துஇவனுடையதாழ்வுகளைச்சொல்ல, "அப்படிதாழ்வுகள்செய்தானாகிலும்நித்யஸூரிகளுக்குமேலானவன்கிடாய் இப்படிச்செய்கிறான்" என்று இருவர்பேச்சாலுமாக அவனுடைய மேன்மையையும் ஸௌலப்யத்தையும் பேசுகிறார்.

"இரண்டு பிராட்டிமார்தசை ஏககாலத்திலேகூடும்படி என்?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க, தேசவிசேஷத்திலே அநேகசரீர பரிக்ரஹம் ஏககாலத்திலே கூடும்படி எங்ஙனே? அப்படியே இவரையும் பார்த்தருளினால் கூடும்.

(க) "నతేరూపంనచాకారో నాయుధాని నచాస్పదమ్। తథాపిపురుషాకారో

அரு.—மானமருமென்னுேக்கிப்ரவேசம். (ஈடுபட்டு) என்ற வநந்தரம் "இவர்" என்று சேஷம். பாரவஶ்யத்தாலே தாமான தன்மை அழிந்தால், ஒரு பிராட்டியாய், பரத்வ ஸௌலப்யங்களை அநுபவிக்கலாமோவென்னும் ஆகாங்க்ஷையை ஸம்வாதமுகேந பரிஹரிக்கிறார் (இரண்டித்யாதி). பகவதிச்சாநுகுணமாக முக்தர்க்கு பஹுப(ஃ)வநம் வருமாபோலே பகவத் ஸங்கல்பத்தாலே உண்டாயிற்றென்று கருத்து.

(பார்த்தருளினால்)-எம்பெருமான் கடாக்ஷித்தருளினால்.

கேவலம் பகவத்கடாக்ஷத்தாலே இரண்டு பிராட்டிதசை பிறந்ததென்றால் போருமோ? கீழெல்லாவிடங்களிலும் தாமானதன்மை அழிந்ததில்லையோ? அங்கெல்லாம் "தோழி" "தாயார்" "மகள்" என்கிறபேதமுண்டித்தனைபோக்கி, இரண்டுநாயகியானதில்லைஎன்னுமாசங்கையிலே, ஸர்வேஶ்வரன், தன் ஸ்வரூபரூபகுணங்களெல்லாம் ஆஶ்ரிதர்க்கிட்ட வழக்காக்கினத்தாலுண்டான ப்ரீதிப்ரகர்ஷம் இப்படி இரண்டுவடிவை எடுக்கப்பண்ணிற்றென்றும், அந்த ஆஶ்ரிதார்த்ததையை, ப்ரமாணபூர்வகமருளுகிறார் (நதேரூபமென்று தொடங்கி-அநுபவிக்கிறுரென்னுமளவும்).

(க) ஜிதந்தா-க-ரு.

భక్తానాంత్వం ప్రకాశసే - நதேரூபம்நசாகாரோநாயுதாநி நசாஸ்பதம்। ததாபிபுருஷாகாரோ பக்தாநாம் த்வம்ப்ரகாஶஸே'' உன்ஸ்வரூப ரூபகுணவிபூதிகளடைய உனக்கில்லையாய்த் தோற்றுவதியென்ன; இப்படி இதடையத்தனக்கின்றிக்கேயிருந்தால் இதடைய ஆருக்கென்னுமபேக்ஷயிலே,[பக்தாநாம்]ஆஶ்ரிதார்த்தமாயிருக்கும்இப்படி ஆஶ்ரிதர்க்காயிருக்கு மென்னுமிடம் எங்கே கண்டோமென்ன; [த்வம்ப்ரகாசஸே] ஸாத்யஸாரத்யாதிகளிலே நீயேகாட்டுவுதி. இதடைய ஆஶ்ரிதார்த்தமாகப்பெறுகையாலே நீ உஜ்ஜ்வலனுகா நிற்புதி. என்னுமாம்,

"இப்படிபரத்வத்தையும், அவதாரங்களையும்,அவதரித்துப்பண்ணும் வ்யாபாரங்களையும், இவ்விடத்தேயுண்டான மநுஷ்யத்வேபரத்வத்தையும்அநுஸந்தித்துத்தனக்காக்கிக்கொண்டிருக்குமிவ்விருப்பையும்தனக்குஉதவுகைக்கும், உறுப்பாகவந்தவதரிக்கும் அவதாரத்தையும் அநுஸந்தித்து, இப்படி அவதரித்து வ்யாபரிக்கிறதும் ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக. அவன் பராவஸ்தனு யிருக்கிறதும் ஆஶ்ரிதர் குறை தீர்க்கைக்காக. இப்படி இதடைய ஆஶ்ரிதார்த்தமானபின்பு நமக்கொருகுறையுண்டோ?''என்றநுஸந்தித்த வித்தால் பிறந்தப்ரீதிப்ரகர்ஷம்ஓராஶ்ரயத்தில் அடங்காதாயிருக்கையாலே, அந்தஃபுர பரிகரமாய் தங்களில் தோழமையாயிருப்பார் ஒருவர்க்கொருவர் பரத்வாவதரங்களிரண்டிலேயும்தனித்தனி ஊன்றி,அவற்றை அநுஸந்தித்துக்களித்துப்பேசுகிற விவர்கள் பேச்சாலே தாம் அவற்றையேபேசி அநுபவிக்கிறுர்.

---

( தனக்காக்கிக்கொண்டு ) நாயகியான தனக்காக்கிக்கொண்டென்கை. இது "மன்னிலங்கு பாரதத்து" என்கிற திருமொழியிலே (க) "அண்ணல் மலையுமரங்கமும் பாடோமே" என்றத்தைப்பற்ற. ( தனக்கு உதவுகைக்கு ) இத்யாதியும், அதிலே "அணியாலிகை தொழுது" என்கிறத்தைப்பற்ற. "போதணியப்பெற்ருேமே" என்று களிப்புப்பிறந்தது அங்கேயிறே.

ஆகக்கீழிரண்டு திருமொழியோடு ஸங்கதி சொல்லிற்றுயிற்று. (உ)"స్వరూపం స్వాతన్త్ర్యం భగవతః- ஸ்வரூபம்ஸ்வாதந்த்ர்யம்பகவதஃ'' என்றிருக்க இவ்வாஶ்ரித பாரதந்த்ர்யாநுஸந்தாநம் ப்ரீதிப்ரகர்ஷத்தைஉண்டாக்கக்

---

(க) கக-ந-எ.    (உ) ஶ்ரீகுணரத்நகோ-

இவ்வாத்மாவின்ஸ்வரூபத்தை அநுஸந்தித்தால், தனக்காயிருக்கை-ஸ்வரூப விரோதியாய், அவனதாயிருக்குமிருப்பு-ஸ்வரூபாநுரூபமாயிருக்குமாபோலே, அவன்ஸ்வரூபத்தை அநுஸந்திக்கப்புக்காலும் அதுடைய ஆஶ்ரிதார்த்தமாக விருக்கிறவிருப்பை அநுஸந்தித்தால், ஆநந்தநிர்பரராய்க் களிக்கும்படியாய் இருக்குமிறே. இப்படிபரத்வஸௌலப்ப்யங்களிரண்டையும் மாறிமாறி அநுபவிக்கிறார்.

மூ;—மானமருமென்னோக்கிவைதேவி யின்துணையாக்
கானமரும் கல்லதர்போய்க் காடுறைந்தான் காணேடீ
கானமரும் கல்லதர்போய்க்காடுறைந்த பொன்னடிக்கள்
வானவர்தம்சென்னிமலர்க் கண்டாய்சாழலே.

| பதம். | உரை. |
|---|---|
| ஏடீ | தோழீ!, |
| மான்அமரும் | மானினது போன்று |
| மென்நோக்கி | முக்த (X)மான நோக்கை யுடையளான |
| வைதேவி | பிராட்டியை |
| இன்துணையா | இனியதுணையாகக் கொண்டு, |
| கான்அமரும் | காடுகள் நிறைந்த |
| கல் அதர்போய் | கல்வழியேபோய் |
| காடு | நீருநிழலுமற்ற வநங்களிலே |
| உறைந்தான் காண்! | வஸித்திருந்தான்; (என்று ஒருத்தி இகழ்ந்து பேச;) |

| பதம். | உரை. |
|---|---|
| சாழலே | தோழீ! |
| கான்அமரும் கல்அதர்போய்-; | |
| காடு | காடுகளிலே |
| உறைந்த | ஸஞ்சரித்த |
| பொன்அடிக்கள் | திருவடிகளானவை |
| வானவர்தம் | தேவதைகளுடைய |
| சென்னி | முடியிலணியக்கடவ |
| மலர்கண்டாய் | பூக்களாயிராநின்றன காண்; |
| [என்று மற்றொருத்தி புகழ்ந்து பேசினபடி]. (௧ | |

கூடுமோவென்ன வருளுகிறார் (இவ்வாத்மாவினித்யாதி). இவனுடைய ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநம் ப்ரீதிஜநகமானாப்போலே, அவனுடைய ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமும் ப்ரீதிப்ரகர்ஷஜநகமென்று கருத்து; ஆக, ஸ்வாதந்த்ர்யகார்யமே இப்பாரதந்த்ர்யமென்றதாயிற்று. ... ... ... ...

அ௫;—முதற்பாட்டு. ( மானமருமித்யாதி ). "கொடியோனிலங்கை பொடியாச் சிலைகுழ செஞ்சரங்கள் செலவுய்த்தநங்கள் திருமால்" என்று பாரதந்த்ர்ய ஸூசகமான ஶ்ரிய:பதித்வத்தையும் அநுஸந்தித்தவுடனே *மானமருமித்யாதியை அநுஸந்திக்கையாலே ஸௌலப்ப்யம் ஈடுபடுத்துமெ

வ்யா;—முதற்பாட்டு (மானமருமித்யாதி) (க) "ஒண்டொடியாள்திருமகளும் நீயுமேநிலாநிற்ப," என்கிறபடியே தனக்கும் அவளுக்கும் யோக்யமான நிலத்திலே நிரதிஶயாநந்தயுக்தனாயிருக்கக் கடவவன், அங்கு நின்றும் போந்துஅவதரித்துத்திருவயோத்யையும், அவ்விடத்தோபாதி காற்கடைகொண்டு, தங்களுக்கு அயோக்யமான காட்டிலே, மானோடொத்திருப்பதாய் ம்ருதுவான நோக்கையுடைய விதேஹராஜன் புத்ரியைத் தனக்கு இனியதுணையாக, காட்டிலே, முளைத்தாப்போலே யிருக்கிற கல்வழியேபோய், இவ்வெய்யில் வெம்மைக்கும் பாலைநிலத்தின் வெம்மைக்கும் பரிஹாரமான நீரும் நிழலுமெல்லாம் இவளேயாய்ப் போனார்.

(காணேடீயித்யாதி) தோழமையாலே "ஏடீ" என்கிறதாதல்; பிராட்டியைக் கண்டப்ரீதியாலே ததிமுகனைக் குத்தினாப்போலே ஹர்ஷத்தாலே சொல்லுகிறாளாதல். விநயமேஸ்வரூபமாயிருக்கக் கடவதிருவடியிறே (உ)"అహమావారయిష్యామి-அஹமாவாரயிஷ்யாமி" என்றான்; நீங்கள் வேண்டினபடி மதுபாநத்தைப் பண்ணுங்கோள். நான் காத்திருந்த ததிமுகாதிகளைத்தொட்டுத்தருகிறேனென்றான்.

(காடுறைந்தான்) ரிஷிகளுடைய ரக்ஷணத்துக்காகக்காட்டிலே வர்த்தித்தான் காண். (ங) [రక్షితవ్యాస్త్వయాశశ్వద్గర్భభూతా స్తపోధనాః-

---

கைக்காக அடியேபிடித்துக் கூட்டித்தாத்பர்யமருளுகிறார் (ஒண்டொடியாளித்யாதி).

ஒருபிராட்டிஸம்போதிக்கும்போது விநயமாகச்சொல்ல வேணுமொழிய, இப்படி ஏகவசநமாக ஒருகாலைப்போலே பத்துத்தரமும் சொல்லக்கூடுமோ வென்கிற சங்கைக்காக பத்துப்பாட்டுப் பதங்களை உபாதாநம்பண்ணுகிறார் (காணேடீஇத்யாதி) என்று.இதுக்கு இரண்டுவிதமாகப்பரிஹரிக்கிறார்(ஏடீயித்யாதி). ஸாபத்ந்யகந்தமில்லாதபடி ஸௌஹார்தாதிசயமாதல், ஸௌலப்யாது ஸந்தாநஜநிதஹர்ஷப்ரகர்ஷமாதல் இப்படிசொல்லப் பண்ணிற்று,என்று கருத்து. ஹர்ஷத்தாலே விநயத்தைவிட்டவருண்டோ வென்ன வருளுகிறார் (விநயமேயித்யாதி).

"காடுறைந்தான்" என்றது-ஈடுபாட்டுக்குஉறுப்பாவானென்னென்னவருளுகிறார் (ருஷிகளித்யாதி). பித்ருவசநத்தாலேயன்றோபோனது;ரக்ஷணார்த்தமென்கைக்கு நியாமகமென்னென்ன ; ( ரக்ஷிதவ்யாஇத்யாதி ). அதுவ்யாஜம், இதுவேப்ரதாநஹேது வென்று கருத்து. தவ்யப்ரத்யயார்த்தம்

---

(க) தி-வாய்-ச-கூ-கo (உ) ரா-ஸு-கூஉ-உ. (ங) ரா-ஆ-க-உக.

ரக்ஷிதவ்யாஸ்த்வயாஸஶ்வத்கர்பபூதாஸ்தபோதநா:] எங்களுடைய ரக்ஷணம் - உமக்குத்தவிர வொண்ணாது. உமக்குத் தலையோட்டில் பொறி. "உங்கள்தபஸ்ஸாம்ப்ரபாவமும்கிடக்க, நான்ரக்ஷிக்கவேண்டு கிறதென்?" என்ன; [கர்ப்பபூதா:]எங்களுக்குக்கைம் முதலுண்டானாலும்ரக்ஷணத்தில் ப்ராப்தியில்லைகாணும். ராஜமஹிஷியானவள்சக்தியுண்டென்று, அவகா(ஹ்ந) தம் பண்ணுளிறே. ஜநநிதானே கைச்சதும் புளித்ததும் தவிர்ந்து நோக்குமத்தனையன்றோ? இவ்வாத்மாவின் ஸ்வரூபத்தை உணர்ந்தாலும் உம்மைக்குறித்து நித்யஸ்தநந்தயமாய்க்காணுமிருப்பது. இப்படிச்சொன்ன வார்த்தைக்கு ஒருமறுமாற்றமில்லாமையிறே(க) "ப்ரஸீதந்து-ப்ரஸீதந்து" என்றது.

"பூர்ணராயிருக்கிற நீங்கள் குறைவாளரளவில்இரங்குமத்தனையன்றோ? நாங்களும் பிறர்கையிலே நோவுபட்டு நிற்கையாலே குறைவாளரன்றோ" என்ன; உங்களுக்கு நோவுவந்தது உங்களாலன்றே. நோவுபட்ட உங்களளவல்ல நோவுக்கு ஹேதுபூதரான நம்முடையலஜ்ஜை;(க)"யதீத்ருஶைரஹம்விப்ரை:"; "யதீத்ருஶைரஹம்விப்ரை:" ஈத்ருஶமான விலக்ஷண புத்தியை யுடையவர்களாலே "நெருப்பைக்குளிருக" என்றவாயைக்கொண்டு ராவணனை "நஷ்டமாவாய்" என்று சொல்லமாட்டாமையன்றிறே இருந்தது. நம்முடையரக்ஷணத்திலேநமக்குப்ராப்தியில்லை. உ"தத்தஸ்ய-தத்தஸ்ய"என்றிருந்தவளைப்போலேயிறேஇவர்களும்சிலர். நோவுபட்டால்அங்கே

(எங்களித்யாதி). ருஷிகள் சொன்னவார்த்தைகொண்டோரக்ஷணம்ப்ரயோஜநமென்று ஸாதிப்பதென்ன; பெருமாளுக்கும் அதுவே நினைவென்றதுக்கு ப்ரமாணம்காட்டக்கோலி அவதாரிகை (இப்படியித்யாதி).

(க) "ஹ்ரீரேஷாஹிமமாதுலா-ஹ்ரீரேஷாஹிமமாதுலா" என்றதுக்குத் தாத்பர்யம் (நாங்களுமித்யாதி). "தாத்ருஶை:-தாத்ருஶை:" என்னாதே "ஈத்ருஶை:-ஈத்ருஶை:" என்றதுக்கு அபிப்ராயம் பிராட்டியைப்போலே யாமவர்களென்று தாத்பர்யமாக்கி, அத்தைஉபபாதிக்கிறார் (நெருப்பையித்யாதி). "உபஸ்தேயைருபஸ்தித:-உபஸ்த்தேயைருபஸ்த்தித:'இதியத்" என்றதுக்குபாவம்(சிலரித்

(க) ரா-ஆ-௪௭-௧. (உ) ரா-ஸு-௩௧-௩0.

வந்துஅவர்கள் குறைதீர்க்கை ரக்ஷணத்துக்கு ஸ்வரூபமாயிருக்க, நோவுபடுவதிகோளும் நீங்களாய், பட்டகுறை அறிவிப்பிகோளும் நீங்களாம்படி நாம் பிற்பாடராளுமென்பது யாதொன்று.

பின்பு (௧)"ஸஹா-பாபாகாம்" என்கிற பிராட்டி, "காட்டிலே வர்த்திக்கிறநாளிலே, ஆயுதம் வேண்டா; நீர்ஸாயுதராய்த் திரியப் புக்கவாறே நிழல்மரமாய்த் தோற்றுவீர். ஆர்த்தராய் சரண்யன் தேட்டமாய்த் திரிகிறவர்கள், உம்மை "நிழல் மரம்" என்றுஒதுங்கு வர்கள்; சரணாகதரைக் கைவிடாமைஉமக்கு ஸ்வபாவமாயிருக்குமா கையாலே, ராக்ஷஸரை அழியச்செய்வீர்; அதுதானே ஸத்தைக்குக் கைம்முதலாகநினைத்திருக்கிறஉம்முடையஸத்தையுமழியும்படி, தலை க்கட்டவடுக்கும், ஆனபின்பு காட்டில்வர்த்திக்கும் நாளித் தனையும் ஆயுதத்தைப் பொகட்டுக் கண்டார் இரங்கும் படி தாபஸவேஷத்தோடே திரிய அமையாதோ?" என்று அவள் ப்ரஜைகளுடைய ரக்ஷணத்தில் நிற்கும் ஊற்றத்தினெல்லை அறிகைக் காகச்சொல்ல;(௨)[அப்யஹம்-த்வாம்வா-அப்யஹம், த்வாம்வா]அஸாதா ரணராய்த்தங்களோடு அநந்யராயிருப்பாரைவைத்தோ தந்தாமை விடுவார்விடுவது. உண்டாமன்று ஒக்கவுண்டாய், இல்லையாமன்று ஒக்கவில்லையாம்படியன்றோவிருப்பது [நது-நது]நான் துடங்கினவற் றில் தவிரமாட்டாதது, ஈதொன்றுமே. அதுதன்னில் ஸாயுதராய் ஸ்வரக்ஷணத்தில் அயோக்யதை யுடையராயிருக்கையன்றிக்கே,

யாதி). (யாதொன்று) என்றவநந்தரம் "அத்தர்லே என்லஜ்ஜை அதிலே யென்கிறார்" என்று பூரிப்பது.

காடுறைந்தது-ரக்ஷணார்த்தமாகில், *வைதேவி, இன்துணையாகப்போவா னென்னென்ன; "அவளும்அவருடைய ரக்ஷணத்தை * ஸ்த்தாணுநிகநங் யாயே நஸ்த்திரீகரிக்கிறாளாகையாலே,"இன்துணையாளள்" என்றதைப்பர க்க உபபாதிக்கிறார் (பின்பித்யாதி-தவிரமாட்டோம்) என்னுமளவும்.

(ஸத்தையுமழியும்) என்றது - திருமேனிக்கு வாட்டம் வருமென்கை. "திருமேனிக்கு வாட்டமென்றுகையில்வில்லைபொகடு"என்றோநின்றாய், (௩) "ப்ராணேப்யோபிகரீயஸீ- ப்ராணேப்யோபிகரீயஸீ" என்னும்படியான உன்னை யும் விடவேண்டிவரிலும், ஆஸ்ரிதரக்ஷண ப்ரதிஜ்ஞையை விடுவதில்லை யென்னும் தாத்பர்யமருளுகிறார் (அஸாதாரணராயித்யாதி).

(௧) ரா-யு-௧௧௩-௪௪. (௨) ரா-ஆ-௧௦-௧௯. (௩) ரா-ஆ-௧௦-௨௨.

நம்மைபார்த்திருக்கும் ப்ராஹ்மணரை ரக்ஷிக்கிறோமென்று சொல்லிவைத்துத் தவிரமாட்டோம்.

(கானித்யாதி) காட்டில் கல்வழியேபோய் காடுறைந்த ஸ்லாக்ய்யமான திருவடிகள்-அமரர் சென்னிப்பூக்கிடாய். (மானமருமித்யாதி)இப்படிதன்ஸ்வரூபத்தைஅழியமாறிஆஸ்ரிதரக்ஷணத்துக்காக க்லேசப்படக்கடவனானால் இவ்வாத்மாவுக்கு ஒருகுறையுண்டோ? (கானமருமித்யாதி) அவன் நிரதிசயாநந்த பரிபூர்ணனாயிருக்கிறது நமக்காகவாயிருந்த பின்பு, இவ்வாத்மாவுக்கு ஒருகுறையுண்டோ?.

மூ;—தந்தைதளைகழலத் தோன்றிப்போயாய்ப்பாடி
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்காணேடீ
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்நான்முகற்கு
தந்தை காணெந்தைபெருமான் காண்சாழலே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தந்தை | பிதாவான வஸுதேவருடைய | வளர்ந்தான்காண் | (இப்படி தாயும் தந்தையும் மாற) வளர்ந்தான் காண்; |
| தளை | விலங்கானது | | சாழலே;— |
| கழல | கழன்று விழும்படியாக | | நந்தன்குலமதலையாய்;— |
| தோன்றி | அவதரித்து, | வளர்ந்தான் | வளர்ந்தருளினவன் |
| போய் | அவ்விடத்தினின்றும் பெயர்ந்து போய் | நான்முகற்கு | ப்ரஹ்மாவுக்கு |
| ஆய்ப்பாடி | திருவாய்ப்பாடியில் | தந்தைகாண் | உத்பாதகன்காண்; |
| நந்தன் | ஸ்ரீ நந்தகோபருடைய | எந்தை | எமக்கு ஸ்வாமியாகப் போரும்படிக்கீடான |
| குலம் | குலத்துக்கு (உத்தாரகனான) | பெருமான் காண் | பெருமை பொருந்தியவன் காண். (௨) |
| மதலையாய் | | | |

வ்யா;—இரண்டாம்பாட்டு. (தந்தைதளைகழல) நெடுநாள் பட்ட ஸ்ரீவஸுதேவர் காலில் தளை, அவதரித்த தத்க்ஷணத்திலே

“சாழலே” என்று தோழியை ஸம்போதிக்கிறதாகத் திருவுள்ளம்பற்றியருளுகிறார் (காட்டிலித்யாதி). ஸ்வாபதேசம் (இப்படியித்யாதி), (க)

அரு;—இரண்டாம்பாட்டு. (தந்தையித்யாதி) கீழ்ப்பாட்டில் சக்ரவர்த்தித் திருமகன் ஸௌலப்யத்தை அநுஸந்தித்து ஈடுபட்டார்கள். அதிலும் விஞ்சினது கண்ணனுடைய ஸௌலப்யமாகையாலே, அவதாரம்துடங்கி ஸாரத்யம்பண்ணினவளவும் க்ருஷ்ணாவதாராபதானங்களைப்பேசி ஈடுபடுகிறார்கள் என்று, இப்பாட்டுத்தொடங்கி எட்டாம்பாட்டளவும் ஸங்கதி.

கழன்றதாயிற்று. அவருடைய கம்ஸபயத்துக்குப் பரிஹாரமாக விரஹதாபத்தைப் பண்ணுதே வழியில் அழாதேபோய், பின்பு பருவம் நிரம்புமளவும்செல்ல, “தானேஉடன்படவிருந்தானாகில் வரி இறுத்தியிருக்கிறோம். அன்றாகில் உழக்கோலாலே அடித்துப் பொகடுகிறோம்” என்கிறஊரிலே ஸ்ரீநந்தகோபர் குலத்துக்கு உத்தாரகனாய் வளர்ந்தான் காண். இப்படி ஓரிடத்திலேபிறந்து ஓரிடத்திலே போய் வளருகிறவன், பிறப்புமோரிடத்திலே வ்யவஸ்த்திதமாய், நாட்டார் “அஜன்” என்று சொல்லும்படியிருக்கிற ப்ரஹ்மாவுக்கும் ஜநகன்காண். இஸ்ஸ்வபாவத்தை அநுஸந்தியா என் குலநாதனென்கிறாள். அவன் அகர்மவஶ்யனாயிருந்துவைத்து கர்மவஶ்யருடைய ரக்ஷணத்துக்குவந்து பிறக்குமவனாகையாலும், அவன்தான் ஸர்வகாரண பூதனாகையாலும் நமக்கொரு குறையுண்டோ வென்கிறது. .... .... .... .... .... .... .... (௨)

மூ;—ஆழ்கடல்சூழ் வையகத்தாரேசப் போயாய்ப்பாடித்
தாழ்குழலார் வைத்ததயி ருண்டான்காணேடீ
தாழ்குழலார்வைத்த தயிருண்டபொன்வயிறிவ்
வேழுலகுமுண்டு மிடமுடைத்தால் சாழலே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | ஏடீ | வைத்த | சேமித்துவைத்த |
| ஆழ் | ஆழ்ந்த | தயிர் | தயிரை |
| கடல் | கடலாலே | உண்டான்காண் | அமுதுசெய்தான் காண்; |
| சூழ் | சூழப்பட்ட | | சாழலே!—; |
| வையகத்தார் | பூமியிலுள்ளாருடைய | | தாழ்குழலார் வைத்ததயிர்;— |
| ஏச | ஏசும்படியாக | உண்ட | அமுதுசெய்த |
| ஆய்ப்பாடிபோய் | திருவாய்ப்பாடியிலே போய் | பொன் | ஶ்லாக்யமான |
| தாழ் | தாழ்ந்த | வயிறு | திருவயிறானது |
| குழலார் | கூந்தலையுடைய ஆய்ப்பெண்கள் | | |

(பரிஹாரமாக) என்றதுக்கு (வளர்ந்தான் காண்) என்றத்தோடே அந்வயம். (விரஹதாபத்தைப்பண்ணுதே)என்றது முன்புபிறந்தமக்கள் அறுவரும் கம்ஸன்கையிலே அகப்பட்டுப் புத்ரவிரஹத்தைப் பண்ணினாப்போலாகாதபடியென்கை. (தானே) என்றது-கம்ஸனே. நான்முகனுக்கு என்னாதே,“நான்முகற்கு” என்று பூஜித்தருளிச்செய்ததுக்குத் தாத்பர்யம் (பிறப்புமித்யாதி). (௨)

| பதம். | உரை. |
|---|---|
| இவ்வேழுலகும் | இவ்வுலகங்களேழையும் |
| உண்டும் | அமுதுசெய்தவளவிலும் |
| இடம் உடைத்து | (இன்னும் பல உலங்களடங்குகைக்கீடான) அவகாசத்தை யுடைத்தாயிருக்கும்; |
| ஆல் | இவ்வாஶ்சர்யமிருந்தபடி கண்டாயே. |

வ்யா;—மூன்றும்பாட்டு. (ஆழ்கடல்சூழ்) சிசுபாலாதிகளேயன்றிக்கே "நீ இடையன், எனக்குப்பூசல்போரத் தாம்போராய்," என்றுனிறே ஜராஸந்தன். (தாழ்குழல்) தங்கள் குழலைப்பேணுதே தேடிவைத்த தயிரையுண்டான். அத்தயிரை அமுதுசெய்த ஸ்லாக்யமான வயிறும் ரக்ஷணத்தில் பர்யாப்தமாகவிராது காண். ஆக அவன் ஆஶ்ரித ஸ்பர்ஶமுள்ள த்ரவ்யம் நேரேகிடையாவிட்டால் களவுகண்டாகிலும் ஜீவிக்குமவனுகையாலும், ரக்ஷணத்தில் பர்யாப்தி பிறந்திராதவனுகையாலும் நமக்கொருகுறையுண்டோ? (௩)

மூ;—அறியாதார்க்கானுயனுகிப் போயாய்ப்பாடி
உறியார்நறுவெண்ணெ யுண்டுகந்தான் காணேடீ
உறியார்நறுவெண்ணெயுண்டுகந்த பொன்வயிற்றுக்கு
எறிநீருலகனைத்து மெய்தாதால்சாழலே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| | ஏடீ!—; |
| அறியாதார்க்கு | மநுஷ்யத்வேபரத்வமென்றறியாதவர்களுக்கு |
| ஆன்ஆயனுகி | கோ (?) பகுலாவதீர்ணனுய் |
| ஆய்ப்பாடி | திருவாய்ப்பாடியேற |
| போய் | எழுந்தருளி |
| உறி | உறிகளிலே |
| ஆர் | சேமித்திருந்த |
| நறு | பரிமளிதமான |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| உண்டு | (களவிலே) அமுதுசெய்து |
| உகந்தான் காண் | ஸந்தோஷிக்கப் பெற்றுன் காண் (என்ன;) |
| | சாழலே!—; |
| உறி ஆர் நறுவெண்ணெய் உண்டு உகந்த;— | |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான |
| வயிற்றுக்கு | திருவயிற்றுக்கு |
| எறிநீர் | கடல்சூழ்ந்த |
| உலகு அனைத்தும் | லோகங்களெல்லாம் |
| எய்தாதால் | போதாதுகாண் என்கிருள். (௪) |

அரு;—மூன்றும்பாட்டு. (ஆழித்யாதி) தயிர்கடைகிற வாஸனையாலே தாழ்குழலென்கிற தென்றருளுகிருர் (தங்களித்யாதி). ... (௩)

வ்யா;—நாலாம்பாட்டு. (அறியாதார்க்கு) க்ருஷ்ணாவதாரத்திலே ப்ரவணராகையாலே அதுபின்னாட்டுகிறபடி.

மநுஷ்யத்வே பரத்வமறியாதார்க்குத் தயிரை வருந்திக்கடைந்து உறியிலே சேமித்துவைத்தவன்று கடைந்த வெண்ணெயை உண்டுகந்தான். ஸம்ஸாரிக்கு பகவல்லாபம்போலே அவனுக்கு இது; அவ்வயிற்றுக்குக் கடல் சூழ்ந்தலோகமடையப்போராதுகாண். (ச)

மூ;—வண்ணக்கருங்குழ லாச்சியால் மொத்துண்டு
கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான்காணேடீ
கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும்
எண்ணற்கரிய னிமையோர்க்கும் சாழலே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| | ஏடீ!—; |
| வண்ணம் | அழகியதாய் |
| கரு | கருத்திருந்துள்ள |
| குழல் | கூந்தலையுடைய |
| ஆய்ச்சியால் | யசோதைப்பிராட்டி கையாலே |
| மொத்துண்டு | அடியுண்டு |
| கண்ணி | முடிகளையுடைத்தாய் |
| குறு | (எட்டம்போராதபடி) குறிதான |
| கயிற்றால் | கயிற்றினாலே |
| கட்டுண்டான் | கட்டுண்டு கிடந்தான் |
| காண் | காண். (என்ன;) |
| | சாழலே!—; |
| கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும்;— | |
| இமையோர்க்கும் | தேவதைகளுக்கும் |
| எண்ணற்கு | "இப்படிப்பட்டவன்" என்று நினைக்கவும் கூட |
| அரியன் | அஸாத்யன்என்கிறாள். |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (வண்ணக்கருங்குழல்) "அவனைப் பெற்றவள்" என்னுமத்தாலே அவளுடைய அவயவங்களில் அழகும் உத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கும். (மொத்து) எடுத்தது அடியாக மோதினளாயிற்று. இவனகப்பட்டவப்போதாக ஒரு

---

அரு;—நாலாம்பாட்டு. (அறியாதார்க்கித்யாதி) இப்படியே இப்பாட்டாலும் க்ருஷ்ணனை அநுபவிக்கைக்கு ஹேதுவைக்காட்டுகிறார் (க்ருஷ்ணேத்யாதி). ... ... ... ... ... ... ... (ச)

அரு;—அஞ்சாம்பாட்டு. (வண்ணமித்யாதி) அங்கேயிருந்து மோதலும் கண்ணியால் கட்டுகிறதுமான இவளை வர்ணிப்பானென்னென்ன வருளுகிறார் (அவனையித்யாதி). ... ... ... ... (ரு)

நெடுங்கயிறு தேடப்போகாதே, பல பிணைகளையுடைய குறள் கயிற்றாலே. கயிறு குறுத்தால் உரலில் இடம்காணவொண்ணாதே, அவன் உடம்பிலே இடம்கண்டு நெருங்கிக்கட்டினாள். (கட்டுண்டானாகிலும்) (க) "யஜஶக்தீஶ:யதிசக்ரோஷி" என்னும்படியிருந்தானாகிலும். "இவனுக்கு சக்தியில்லை" என்று தோற்றும்படி பரிச்சின்னனாயிருந்தானாகிலும். இடைச்சிக்கு பரிச்சின்னனாயிருந்தானாகிலும், ஸ்வயத்நத்தாலறியும் ப்ரஹ்மாதிகளுக்கு அபரிச்சின்னனாயிருக்கும். .... .... (ரு)

மூ.—கன்றப்பறை கறங்கக் கண்டவர்தம் கண்களிப்ப
மன்றில் மரக்கால்கூத் தாடினான்காணேடீ
மன்றில் மரக்கால்கூத் தாடினானாகிலும்
என்றுமரியனிமையோர்க்கும் சாழலே. (சா)

| பதம். | உரை. |
|---|---|
| | ஏடீ!;— |
| கன்ற | (உகவாதார் நெஞ்சு) கன்றும்படி |
| பறை | பறைகளானவை |
| கறங்க | த்வ (ध्व) நிக்கவும், |
| கண்டவர்தம் | பார்த்த பார்த்த ஜநங்களுடைய வெல்லாம் |
| கண் | கண்களானவை |
| களிப்ப | களிக்கவும், |
| மன்றில் | நால்சந்தியிலே |
| | மரக்கால்கூத்து ஆடினான் காண் சாழலே!—; (என்ன;) |
| | மன்றில்மரக்கால்கூத்தாடினானாகிலும்;- |
| இமையோர்க்கும் | தேவதைகளுக்கும் |
| என்றும் | என்றைக்கும் |
| அரியன் | துர்லபன் என்கிறாள். |

வ்யா.—ஆறும்பாட்டு. (கன்றப்பறை) (பறைகறங்க) கேட்டார் நெஞ்சு ஈரும்படி த்வநிக்க, இடையர் மநஸ்ஸு களிப்ப, மன்றிலே மரத்தைக்காலிலே கட்டி ஆடினான்காண். இப்படி இடையர்கண் வட்டத்திலே நிற்கிற வஸ்துவை ப்ரஹ்மாதிகள் கண்வட்டத்திலே கண்டறிவாரில்லை. .... .... .... .... .... (சா)

மூ;—கோதைவேலைவர்க்காய் மண்ணகலம் கூறிடுவான்
தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான்காணேடீ
தூதனாய் மன்னவனால் சொல்லுண்டானாகிலும்
ஓதநீர்வையகம் முன்னுண்டுமிழ்ந்தான்சாழலே. (எ)

அரு;—ஆறும்பாட்டு. (கன்றவித்யாதி) "உகவாதார் நெஞ்சுகன்றும்படி பறையானது கறங்க" என்றாய் அதுக்குத்தாத்பர்யம் (கேட்டாரித்யாதி)(சா.)

(க) வி-பு-ரு.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | ஏடீ!—; | சொல்லுண்டா அதி(க்ஷ)க்ஷேபிக்கப் | |
| கோதை | (ராஜசிஹ்நமான) மாலையையும் | ன்காண் | பெற்ருன்காண்; |
| | | | (என்ன;) |
| வேல் | வேலையுமுடைய | | சாழலே!—; |
| ஐவர்க்காய் | பஞ்ச பாண்டவர்களுக்கு விதே (தே) யனாய் | தூதனாய்மன்னவனால்சொல்லுண்டானாகிலும்;- | |
| மண் அகலம் | பூமிப்பரப்பை | முன் | முற்காலத்திலே |
| கூறிடுவான் | (அவர்களுக்கு) விபஜித்துத்தருகைக்காக | ஓதநீர் | கடல்சூழ்ந்த |
| | | வையகம் | உலகத்தையெல்லாம் |
| | | உண்டு | திருவயிற்றிலே வைத்து நோக்கி (பின்பு) |
| தூதனாய் | தூதக்ருத்யத்திலே அதிகரித்தவனாய் | உமிழ்ந்தான் | (வெளிநாடுகாண) உமிழ்ந்தான் என்கிருள். |
| மன்னவனால் | துர்யோதநனால் | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கோதைவேல்) ராஜசிஹ்நமாக மாலையையும் வேலையுமுடைய அவர்கள் சேஷிகளாய், தான் சேஷபூதனாய், பூமிப்பரப்பைக்கூறிட்டு அவர்களுக்குக் கூறுகொடுக்கைக்காக தூத்யத்திலே அதிகரித்துத் தன்னை ராஜாவாக அபிமாநித்திருக்கிற துர்யோதநனாலே "வ்ருஷலபோஜநம் பண்ணினான்" என்று சொல்லப்பட்டு அவ்தயனாயிருந்தான்காண். [யத்ர ஸூக்தம் - யத்ரஸூக்தம்] இத்யாதி "என்னைஆஶ்ரயித்தவர்களை ஏதேனுமொருபடிஇதிலேஅந்வயிப்பித்தல்லதுவிடேன். அவர்களுக்கு ப்ராப்தாம்ஶத்தைப் பெறவேணும்"என்றுநீர் சொல்லுகிறசீரியவார்த்தையும்,"என்பந்துக்கள் ஜீவிக்க ஜீவியேன்" என்று அவன் சொல்லுகிற புல்லியவார்த்தையுமொத்து"அவனுக்குச்சிலசொன்னான். இவனுக்குச்சிலசொன்னான்" என்று ஒத்துவிடும் யாதோரிடத்தில் [ப்ரலபேத் - ப்ரலபேத்] அர்த்தமில்லாதவார்த்தையோடொத்து விட்டதிறே. (தூதனாயித்யாதி) இப்படி துருக்திபண்ணுவதற்கொருவருமில்லாத ஸமயத்திலே துர்

அரு.—ஏழாம்பாட்டு. (கோதையித்யாதி) வாசியறியாத கோஷ்டியில் தூது நிஷ்ப்ரயோஜநமான மாத்ரமன்றிக்கே, அவத்யாவஹ மென்னுமதுக்கு ப்ரமாணம் காட்டுகிருர் (யத்ரேத்யாதி). ப்ரமாணார்த்தம் (என்னையித்யாதி), (இதிலே) ராஜ்யத்திலே. ... ... ... ... ... (எ)

யோதநனில் குறைந்தாரில்லாத இஜ்ஜகத்தை வயிற்றிலேவைத்து ரக்ஷித்தான் காண். .... .... .... .... .... (௭)

மூ.—பார்மன்னர்மங்கப் படைதொட்டுவெஞ்சமத்துத்
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தான்காணேடீ
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தானாகிலும்
தார்மன்னர்தங்கள் தலைமேலான்சாழலே. (௮)

| பதம். | உரை. |
|---|---|
| | ஏடீ!— |
| அன்று | பாரதஸமரம் விளைந்த காலத்திலே |
| பார் | பூமியிலுள்ள |
| மன்னர் | ராஜலோகமடைய |
| மங்க | மாளும்படியாக |
| வெம்சமத்து | யுத்த (ரு) பூமியிலே |
| படைதொட்டு | ஆயுதமெடுத்து, |
| தேர் | ரதி(கு)யாய் நின்ற |
| மன்னற்கு | அர்ஜுநனுக்கு |
| ஆய் | துணையாய் |
| தேர் | தேரை |
| ஊர்ந்தான்காண் | நடத்தினான் காண்; |
| | சாழலே!— |
| தேர்மன்னற்காய்அன்றுதேர் ஊர்ந்தான் ஆகிலும்;— | |
| தார் | (ஜயஸூசகமான) தோள் மாலையையுடைய |
| மன்னர்தங்கள் | அரசர்களின் |
| தலைமேலான் | தலைமேலே வீற்றிரா நின்றான் காண். (௮) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பார்மன்னர்) தாமல்லாதார் பண்ணின துருக்திகளைப் பொறுத்தமாத்ரமேயோ? தாமல்லாத தாழ்ந்த செயலைச்செய்தானென்கிறது. பூமியடைய நெளியும்படிவந்த ராஜலோகமடையத்தரையாம்படி "ஆயுதமெடேன்" என்றுவைத்து ஆயுதத்தை யெடுத்து, எல்லாரும் காணும்படி யுத்தபூமியிலே அவன் ரதியாய்த்தான் ஸாரதியாய், அவ்விழிதொழிலைச்செய்தான்காண். சல்யன் ஸாரத்யம்பண்ணவிறுய்க்க; "தாழ்ந்தார்க்கும் உயர்ந்தார் செய்வர்கள்காண்; ப்ரஹ்மாவன்றோருத்ரனுக்குஸாரதியானான்" என்றதிறே. இப்படி தாழ்வு செய்தவன், லோகத்தில் ராஜாக்களானார்

---

அரு;—எட்டாம்பாட்டு. (பாரித்யாதி) மன்னர் என்னவமைந்திருக்க, "பார்" என்றதுக்குத் தாத்பர்யம் (பூமியித்யாதி). (இருய்க்க) என்றதுக்கு, (செய்தான் காண்) என்று கீழ்வாக்யத்தோடந்வயம். சல்யன் "இழிதொழில்" என்று, "மாட்டோம்" என்ன, துர்யோதநன் நிர்பந்தித்துச் செய்வித்துக் கொண்டானென்னுமத்தை யருளுகிறார் (தாழ்ந்தார்க்கித்யாதி). ... (௮)

முடிமேல் மாலையிலே காண் திருவடிகளை வைத்துக்கொண்டிருப்பது. (க) "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம் - ராஜாதி ராஜஸ்ஸர்வேஷாம்" இத்யாதி. .... .... .... .... .... .... (அ)

மூ;—கண்டாரிரங்கக் கழியக்குற ளுருவாய்
வண்டாரான் வேள்வியில் மண்ணிரந்தான் காணேடீ
வண்டாரான் வேள்வியில் மண்ணிரந்தா னாகிலும்
விண்டேழுலகுக்கும் மிக்கான் காண் சாழலே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | ஏடீ!—; | மண் | (மூவடி) மண்ணை |
| கண்டார் | பார்த்தவர்களுடைய | இரந்தான் | யாசித்தான்காண்; |
| இரங்க | மனமிரங்கும்படி | காண் | |
| கழிய | மிகவும் | | சாழலே!—; |
| குறள்உருஆய் | ஹ்ருஸ்வமான வடிவை யுடையனாய் | வண்டாரான் வேள்வியில் மண் இரந் தானாகிலும்;— | |
| வண் | ஔதார்யஸூசகமான | விண்டு | விபு(பூ)வாய் |
| தாரான் | தோள்மாலையையுடைய மஹாபலியின் | ஏழ்உலகுக்கும் | லோகங்களுக்கெல்லாம் |
| வேள்வியில் | யஜ்ஞவாடத்திலே | மிக்கான்காண் | விஞ்சினவன்காண். |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (கண்டாரிரங்க) வடிவழகாலும் வரையாதே தீண்டும்படியாலும், ஆஸ்ரிதர்க்குத் தாழ்வுசெய்யும்படியாலும், க்ருஷ்ணாவதாரத்தோடு போலியாயிறே ஸ்ரீவாமநாவதாரமிருப்பது. சுக்ராதிகள் வார்த்தைக்கும் கேளாதே இரங்கும்படியாக "நாட்டில் வாமநர்கள் வளர்ந்தவிடத்தோ பாதி" என்னும்படி அறக்குறளாய், ராஜாவாய் மாலையிட்டு உதாரனாயிருக்கிற மஹாபலியஜ்ஞபூமியிலே, அவன் கண் வட்டத்துக்குள்ளே நின்று மூன்றடி மண்ணை இரந்தான் காண்; அவன் கண்வட்டத்தே நின்ற இவனை நாட்டில் கண்டவரில்லை கிடாய். .... .... .... (கூ)

அரு;—ஒன்பதாம்பாட்டு. (கண்டாரித்யாதி) தன்னைத் தாழவிட்டு ஸாரத்யம் பண்ணினது போலே, தன்னை இரப்பாளனாக்கினதும் ஈடுபடுத்துகைக்காகையாலே, அத்தையும் சொல்லுகிறார்களென்னும் ஸங்கதியருளுகிறார் (வடிவழகாலுமித்யாதி). "கழிய"லோகத்தில் குறளெல்லாமொவ்வாதே கழியவென்று சப்தார்த்தமாயருளுகிறார் (நாட்டிலித்யாதி). "விண்டு-விரிந்து-விபுவான, மிக்கான் - விஞ்சினான்" என்று சப்தார்த்தமாய்த் தாத்பர்யமருளுகிறார் (நாட்டிலித்யாதி). ... ... ... ... ... ... (கூ)

க) பார-உத்யோ.

மூ;—கள்ளத்தால் மாவலியை மூவடிமண் கொண்டளந்தான்
வெள்ளத்தான் வேங்கடத்தானென்பரால் காணேடீ
வெள்ளத்தான் வேங்கடத்தானேலுங் கலிகன்றி
உள்ளத்தினுள்ளே யுளன்கண்டாய் சாழலே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| | ஏடீ! |
| கள்ளத்தால | க்ருத்ரிமவேஷத்தாலே |
| மாவலியை | மஹாபலிபக்கலிலே |
| மூவடிமண் | மூன்றடிமண்ணை |
| கொண்டு | (யாசித்தும்) பெற்று |
| அளந்தான் | (த்ரிலோகத்தையும்) அளந்தவன் (ஒருவர்க்கும் எளியனுகாதபடி) |
| வெள்ளத்தான் | திருப்பாற்கடலிலே கிடவாநின்ருன்; |
| வேங்கடத்தான் | திருவேங்கடமலையில் நில்லாநின்ருன், |
| என்பர்காண் | என்று சொல்லா நிற்பர்காண்; |
| | சாழலே!—; |
| வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் | |
| கலிகன்று | ஆழ்வாருடைய |
| உள்ளத்தினுள்ளே | ஹ்ருதயத்திலே (நின்று) |
| உளன்கண்டாய் | (நீக்கினும் நீங்காதபடி) கிடக்கிருன் காண். (கo) |

வ்யா;—பத்தாம்பாட்டு. (கள்ளத்தால்) க்ருத்ரிமவேஷத்தைக்கொண்டு சிலர்க்குச் சென்று "கிட்டவொண்ணுதபடி திருப்பாற்கடலிலே காண் அவன் கிடப்பது, சடக்கெனச் சென்று காணவொண்ணுதபடி திருமலையிலே காண் அவன் நிற்பது" என்பர்கள் காண்; அப்படியிருக்கிறவன் காண், ஆழ்வார் ஹ்ருதயத்தில் நின்றும் புறப்படத் தள்ளினுலும் புறப்படாதே கிடக்கிருன். .... (கo)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## பதினோராம்பத்து அஞ்சாந்திருமொழிமுற்றிற்று.

அரு.—பத்தாம்பாட்டு. (கள்ளத்தாலித்யாதி) ப்ரீதிப்ரகர்ஷத்தால் பிறந்த வநுபவம் உந்மஸ்தகமாகையாலே, பலம் சொல்லுகையும் மறந்து அந்யாபதேசமாய் விட்டது. கீழ்ச்சொன்ன ராமக்ருஷ்ணவாமநாவதாரங்களுக் கடியான வ்யூஹத்திலும், பலஸாதநீயமான திருவேங்கடத்திலுமிருந்தவன், (க) "பொருப்பிடையே நின்றும் புனல்குளித்தும்" என்கிறபடியே தபஸ்ஸைப்பண்ணி ஆழ்வார் திருவுள்ளமாகிற கலங்காப் பெருநகரத்தைப் பெற்றுனென்று அநுஸந்தித்து, இக்குணுதிக்யத்திலே ஈடுபடுகிருர்களென்று ஸங்கதி.

"உள்", என்றத்தாலேபலிதம் (புறப்படவித்யாதி). ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

# பதினோராம்பத்து ஆறாந்திருமொழி

## மைந்நின்ற ப்ரவேசம்.

வ்யா;—ஸர்வேஶ்வரனுடைய வைலக்ஷண்யத்தையும் ஸௌலப்ப்யத்தையும் சேர ஒரொன்றே கரைகாணவொண்ணாத இரண்டையும் சேர அநுபவித்தார்; அநந்தரம் (௧)"* బోధయన్తః పరస్పరమ్ - போதயந்தஃ பரஸ்பரம் பண்ணுகைக்குச் சிலர் தேட்டமாயிற்று. அதுக்கு ஆவாரார்" என்று லோகத்திலே ஆராய்ந்தார்; அவர்களுடைய ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வாதிகளாலே, தங்களோட்டையாரான இதர தேவதையை ஆஶ்ரயிப்பாரும் ஸ்துதிப்பாருமாய்ச் செல்லாநின்றது; "இவர்கள் இப்படிச் செய்கிறது-ஸர்வேஶ்வரனுடைய ஸர்வேஶ்வரத்வ விஷயமாயும், ஸௌலப்ய விஷயமாயும், ப்ராப்தி விஷயமாயுமுள்ள ஜ்ஞாநமில்லாமை" என்று பார்த்து, "கெடுவிகாள்! நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகளோடு உங்களோடு வாசியில்லை காணுங்கோள் அவனுக்குக் குழைச்சரக்காமிடத்தில்; ஆனபின்பு அவனையே ஆஶ்ரயிக்கப் பாருங்கோள்" என்கிறார். .... *

மூ;—மைந்நின்ற கருங்கடல்வா யுலகின்றி
வானவரும் யாமுமெல்லாம்
நெய்ந்நின்ற சக்கரத்தன் திருவயிற்றில்
நெடுங்காலம் கிடந்ததோரீர்
எந்நன்றி செய்தாரா வேதிலோர்
தெய்வத்தை யேத்துகின்றீர்
செய்ந்நன்றி குன்றேல்மின் தொண்டர்காள்
அண்டனையே யேத்தீர்களே. (௧)

| பதம், | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டர்காள் | (அப்ராப்தவிஷயத்திலே) தொண்டு பூண்டிருப்பீர்காள்! | மைநின்ற | மைமாறுதே நின்றாப் போலே |
| | | கரு | கறுத்திருந்துள்ள |
| | | கடல்வாய் | கடலிடத்து [றிக்கே |
| | | உலகு இன்றி | லோகமொன்றுமின் |

அநு;—மை நின்றவின் ப்ரவேசம். கீழிரண்டு திருமொழியாலும் தோழியோடும், இதுக்கு ஸங்கதியருளுகிறார் (ஸர்வேஶ்வரனித்யாதி). (சேர) என்றவநந்தரம், "நிலையிடமெங்குமின்றியிலே அநுபவித்தவர்" என்று சேஷம்.

(௧) கீ-௧௦-௯.

| | |
|---|---|
| வானவரும் தேவதைகளும் | ஏதிலோர் விரோதிகளான தாமஸர்களுடைய |
| யாமும் (மநுஷ்யர்களான) நாமும் | தெய்வத்தை தேவதைகளை |
| எல்லாம் (ஆகிய) கார்யவர்க்கமடங்கலும் | எந்நன்றி செய் என்ன உபகாரம்செய்தாரா தாராகக் கொண்டு |
| நெய் நின்ற நெய்யிட்டு விளங்கா நின்ற | ஏத்துகின்றீர் ஸ்துதிசெய்யா நின்றீர்? |
| சக்கரத்தன் திருவாழியை அணிந்த எம்பெருமானுடைய | செய்நன்றி உபகாரஸ்ம்ருதியை |
| திருவயிற்றில் திருவயிற்றிலே | குன்றேல்மின் குறைக்காதே கொள்ளுங்கோள்; |
| நெடுங்காலம் நெடுநாளளவும் | அண்டனையே ஸர்வேஶ்வரனையே |
| கிடந்தது அடங்கிக்கிடந்தமையை | ஏத்தீர்கள் ஏத்தக்கடவீர்கள். |
| ஓரீர் அறிகிறீரில்லையே; | |

வ்யா;—முதற்பாட்டு. (மைநின்றவித்யாதி) மைமாறுதே நின்றுப் போலேஒத்த அந்தக் கடலிடத்தே லோகமொன்று மின்றிக்கே. (வானவரும் யாமுமெல்லாம்) விபூதியழிகிற தென்று அழியாமல் நோக்குகைக்குக் கடைந்து நெய்யிட்ட திருவாழியை யுடையவன் திருவயிற்றிலேநெடுங்காலம்கிடந்தது, (ஓரீர்) அறிகிறிலீர். பத்துமாஸம் சுமந்ததுக்காகத் "தாய்"என்று நின்றிகோள். (எந்நன்றி யித்யாதி) உபகாரஸ்ம்ருதி கிடக்க ஸ்வாராத தேவதையைப்பற்ற வேண்டாவோ? (ஏதிலோர் தெய்வத்தை) "ஏதிலோர்" என்று-சத்ருக்கள்; "சத்ருக்களுடைய தேவதை" என்கிறது ஸத்வத்துக்கு தமஸ்ஸு விரோதியாகையாலே, தாமஸருடைய தெய்வமென்று "ஏதிலோர் தெய்வம்"என்கிறது. (செய்நன்றி குன்றேல்மின்) உபகாரஸ்ம்ருதியை விடாதே கொள்ளுங்கோள். (தொண்டர்காளித்யாதி) மைநின்ற-கறுத்துக்கொண்டு விபூதியை

---

அரு;—முதற்பாட்டு. (மையித்யாதி) மைநின்ற-மையோடொத்த தாகையாலே, கருங்கடலிடத்தென்று சப்தார்த்தமாய்த் தாத்பர்யமருளுகிறார் (மைம்மாறுதேயித்யாதி). (அந்த) என்றது - கருமையை ப்ரகாசிப்பிக்கிறது. "நெடுங்காலம்" என்றதுக்கு வ்யாவர்த்யம் (பத்தித்யாதி). "மைந்நின்ற" என்ற பதத்துக்கும், "கரும்"என்றதுக்கும் புநருக்தி நேரே பரிஹரிக்கவேண்டியும், முன்பு அவிசதமான வர்த்தங்களை விசதீகரிக்கவும் திருவுள்ளம்பற்றி மீளவும் வ்யாக்யாநம் செய்கிறார் (மைநின்றவித்யாதி). இப்பக்ஷத்தில் கறுப்பாலே கருவுதலைச்சொல்லுகிறது. ... ... ... ... (க)

அழிக்க ஒருப்பட்ட கடலிடத்து, ம்ருத்யுவின் வாயென்னுமா போலே.

(வானவரித்யாதி) ஆஶ்ரயணீயரானவர்களும் ஆஶ்ரயிக்கிற நாமும் மற்றுமுண்டான பதார்த்தங்களும். (எந்நன்றியித்யாதி) ஏதேனும் நன்மை செய்தாலும் ஆராதே "அட்டுதிருக்கச்சுட்டுது தருவாய்"என்னும் தேவதைகளை (க) [மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந-மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந] "பொய்யேயாகிலும் ஓரடிவரநின்றவனைவிடில் நான்பிழையேன்"என்னுமவனைப்பற்றுகிறிகோளோ? (ஏதிலோர்தெய்வத்தை) தமோகுணாபிபூதராயிருக்கையாலே பரமாத்மாவுக்குச் சரீரமென்று உபாஸிக்கப் போகாதவர்களை. (தொண்டர்காள்) அப்ராப்த விஷயங்களிலே தாழ்வுசெய்ய வாசைப்பட்டநீங்கள். (அண்டனையேயேத்தீர்களே) ஸர்வேஶ்வரனையே ஏத்தப்பாருங்கோள். இரண்டு விபூதிக்கும் அண்டமென்று பெயர்.

மூ.—நில்லாத பெருவெள்ளம் நெடுவிசும்பின்
மீதோடிநிமிர்ந்தகாலம்
மல்லாண்ட தடக்கையால் பகிரண்ட
மகப்படுத்தகாலத்தன்று
எல்லாரு மறியாரோ வெம்பெருமா
னுண்டுமிழ்ந்த வெச்சில்தேவர்
அல்லாதார் தா முளரே யவனருளே
யுலகாவ தறியீர்களே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நில்லாத | ஓரிடத்தில் நிலையில்லாத | தட | பெரிதான |
| பெருவெள்ளம் | பெருவெள்ளமானது | கையால் | திருக்கையினாலே |
| நெடு | அபரிச்சிந்நமான | பகிரண்டம் | பரமபதத்தை |
| விசும்பின்மீது | ஆகாசத்துக்குமேலே | | (ப்ரளயம் கொள்ளாதபடி) |
| ஓடி | வழிந்தோடி [யும், | அகப்படுத்தகாலத்து | பாதுகாத்தருளின காலமாகிற |
| நிமிர்ந்தகாலம் | ப்ரவஹித்தகாலத்தை | அன்று | அக்காலத்தையும் |
| மல் ஆண்ட | மிடுக்கையுடைத்தாய் | எல்லாரும் | எல்லாரும் |

(க) ரா-யு-கஅ-ங.

| | | | |
|---|---|---|---|
| அறியாரோ | அறியாதிராநின்றூர்களோ? | தேவர்தாம் | தேவதைகள் தாம் |
| எம்பெருமான் | ஸர்வேஶ்வரன் | உளரே | இராநின்றூர்களோ? |
| உண்டு | அமுதுசெய்து | உலகு | லோகமானது |
| உமிழ்ந்த | (பின்பு) உமிழ்ந்த | ஆவது | ஸத்தைபெற்றிருப்பது |
| எச்சில் அல் லாதார் | உச்சிஷ்டமாகாத | அவன்அருளே | அவனுடைய ப்ரஸாதாதீநமென்பதை |
| | | அறியீர்களே | அறியமாட்டிகோளோ?, |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (நில்லாத) ஓரிடத்தில் நிலைநில்லாத பெருவெள்ளமானது, அபரிச்சிந்நமான ஆகாசத்துக்கு மேலே போய்ப் போருகிறகாலம். (மல்லாண்டித்யாதி) மிடுக்கையுடைத்தான திண்டோளாகிற பெரியகையாலே பஹிரண்டங்களையு மகப்படுத்தினகாலம். அன்றிக்கே; ஸர்வேஶ்வரன் ப்ரளயம்சென்று அடராதபடி தன் திருக்கையாலே பரமபதத்தைத் தன் கைக்கீழே யிட்டுக்கொண்டு நின்றகாலமென்னவுமாம்.

---

அரு;—இரண்டாம்பாட்டு. (நில்லாதவித்யாதி) பத்துமாஸம் தாய்வயிற்றிலே இருந்தும் நாட்டாரறிந்து சொன்னபடியாலே "தாய்"என்று ப்ரதிபத்தி பண்ணலாயிருக்கிறது. "அவன் திருவயிற்றிலே நெடுங்காலம் கிடந்தும் அறிவாரார்" என்னு மபேக்ஷையிலே அருளிச்செய்கிறூரென்று ஸங்கதி.

(திண்டோளாகிற) என்றது-"மல்லாண்ட" என்ற பதத்தாலேஸ்மாரிதமான (க)"திண்டோள் மணிவண்ணு" என்கிறபாசுரத்தினர்த்தம்; இத்தால் ப்ரமாண ப்ரதர்ஶநம் பண்ணினபடி. (பஹிரண்டங்களையு மகப்படுத்தின காலம்) என்றது-(உ)"அண்டரண்ட பகிரண்டத் தொருமாநில மெழுமால்வரைமுற்றுமுண்ட கண்டங்கண்டீர்" என்கிறபடியே மஹாப்ரளயத்தைச்சொல்லுகிறது. இப்போது, "நில்லாதவித்யாதி - நிமிர்ந்த காலம்" என்றது - அவாந்தரப்ரளயமாய், அக்காலத்திலே "எம்பெருமானுண்டுமிழ்ந்த எச்சில் தேவரல்லாதார் தாமுளரே" என்றந்வயிப்பது. "அகப்படுத்த காலத்து" மஹாப்ரளயத்திலே, "அவனருளே-உலகாவதறியீர்கள்" என்றந்வயிப்பது.

" அன்று எல்லாருமறியாரோ? " என்றதுக்கு - வேதாதிகள். ப்ரவ்ருத்தமான காலத்திலே ருஷிகளெல்லாரு மறியாரோவென்று பொருள். இப்படியன்றிக்கே,"கேவலம் அவாந்தரப்ரளயம் தானேயாக்கி,வெள்ளம்நிமிர்ந்தகாலமுமாய் அகப்படுத்த காலமுமானவன்று" என்று ஏகமாக அந்வயமேயாகத் திருவுள்ளம்பற்றி பகிரண்டபதத்துக்கு அர்த்தாந்தரமருளுகிறூர் (அன்றிக்கே

---

(க)திருப்பல்லாண்டு-க. (உ) அமல-௬.

(அன்றெல்லாருமறியாரோ)இவ்வர்த்த மறியாதாருண்டோ? (எம்பெருமானுண்டுமிழ்ந்த) இவனுக்குப் புறம்பாயிருப்பதொன்றைப்பற்றி இவனைக்கைவிட்டிகளோ? (அவனருளே) லோகத்தினுடைய ஸத்தை அவனுடைய ப்ரஸாதாயத்த மென்னுமிடம் அறியீர்களோ? (உ)

மூ.—நெற்றிமேல்கண்ணனும் நிறைமொழிவாய்
நான்முகனும் நீண்டநால்வாய்
ஒற்றைக்கை வெண்பகட்டி லொருவனையு
முள்ளிட்ட வமரரோடும்
வெற்றிப்போர்க் கடலரையன் விழுங்காமல்
தான்விழுங்கி யுய்யக்கொண்ட
கொற்றப்போராழியான் குணம்பரவாச்
சிறுதொண்டர் கொடியவாறே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெற்றிமேல் கண்ணனும் | நெற்றிக்கண்ணனான ருத்ரனையும் | உள்ளிட்ட | உள்ளீடாகவுடைய |
| நிறை | அர்த்தங்களால் நிறை | அமரரோடும் | மற்றதேவதைகளையும் |
| மொழி | வேதங்களை [ந்த | வெற்றிப்போர் | யுத்தஜயிஷ்ணுவான |
| வாய் | வாயாலே உச்சரியா நின்றுள்ள | கடலரையன் | ஸமுத்ராபிமாநிதேவதை |
| நான்முகனும் | சதுர்முகப்ரஹ்மாவை | விழுங்காமல் | விழுங்கவொண்ணாதபடி [வைத்து |
| நீண்ட | தீர்க்கமாய் [யும், | தான்விழுங்கி | தான்திருவயிற்றில் |
| நால் | தொங்காநின்றுள்ள | உய்யக்கொண்ட | நோக்கியருளினவனுய் |
| வாய் | வாயையும் | கொற்றம் | ஐஶ்வர்யஸூசகமாய் |
| ஒற்றைக்கை | ஒற்றைத்துதிக்கையையுமுடைய | போர் | எதிரிகளை எதிர்ந்து பொருகிற |
| வெண்பகட்டில் ஒருவனையும் | (ஐராவதமென்கிற) வெள்ளானைக்குப்பாகனான இந்த்ரனையும் | | |

யித்யாதி). அப்போது-"அத்து" என்றது-சாரியைச்சொல்லு. பரமபதத்துக்கு ப்ரளயம் வர ப்ரஸக்தியில்லையாகிலும், ரஸோக்தியாக இதின் கொடுமையைச் சொல்லுகையிலே தாத்பர்யம். "அல்லாதார் - தாமுளரே" என்கிற ஸ்வரத்துக்கு உட்கருத்தருளுகிறார் (இவனுக்கித்யாதி). ... ... (உ)

| | | |
|---|---|---|
| ஆழியான் | திருவாழியாழ்வானைக் கையிலே யுடைய னுனஎம்பெருமா னுடைய | பரவா ஸ்துதிசெய்யாத சிறுதொண்டர் க்ஷுத்ர ஸங்கரர்களு டைய |
| குணம் | திருக்கல்யாணகுணங் களை | கொடியஆறே கொடுமையிருந்தபடி என்தான்! (என்று ஆஶ்சர்யப்படுகிறார்.) (௩ |

வ்யா. — மூன்றும்பாட்டு. (நெற்றியித்யாதி) லலாடநேத்ரனும், அர்த்தத்தாலே பூர்ணமான வேதத்தை உச்சரியாநின்றுள்ள சதுர்முகனும், நீண்டு நான்றிருக்கிற வாயையும் ஒருகையையுமுடைத்தான வெள்ளையானையையுடைய இந்த்ரனுள்ளிட்டவமரரோடும். (வெற்றிப்போரித்யாதி) கடலுக்கபிமாநியானவன் விழுங்காதபடி தன்வயிற்றிலேவைத்து ரக்ஷித்து, ஐஶ்வர்யஸூசகமாய், எதிரிகளை முடிக்கவற்றான திருவாழியை யுடையவனுடைய குணங்களை, அடைவுகெடச்சொல்லாத தண்ணிய க்ஷுத்ரங்களை ஸஹிக்க வரிதாயிருக்கிற வவர்களுள் க்ரௌர்ய மிருந்தபடியென்? (௩)

மூ.—பனிப்பரவைத்திரை ததும்பப் பாரெல்லாம்
நெடுங்கடலேயான காலம்
இனிக்களைக ணிவர்க்கில்லையென்றுலக
மேழினையுமூழில்வாங்கி
முனித்தலைவன் முழங்கொளிசேர் திருவயிற்றில்
வைத்தும்மை யுய்யக்கொண்ட
கனிக்களவத் திருவுருவத் தொருவனையே
கழல்தொழுமா கல்லீர்களே. (ச)

அரு;—மூன்றும்பாட்டு. (நெற்றியித்யாதி) '''அல்லாதார் தாமுளரே' என்று நீர் சொல்லா நின்றீர்; முக்கண்ணன் முதலானுரைப் பரதெய்வங்களாகச் சொல்லுவாரு முண்டாயிருந்ததே'' என்ன, அத்தை எடுத்துக் கழிக்கிறுரென்று ஸங்கதி.

(நான்றிருக்கிற) தொங்காநிற்கிற. ''பகடு'' - ஆனை. இந்த ப்ரளயத்திலே ப்ரஹ்மாதிகளைக் கடலரையன்விழுங்க ப்ரஸக்தியுண்டோவென்னும் சங்கையிலே, அவர்களபிமாநாந் தர்ப்பூதமான லோகத்திலுள்ளாரை விழுங்குவதே, அவர்களுக்கு மொக்கு மென்றருளிச்செய்ததென்று திருவுள்ளம்பற்றியருளுகிறுர் (கடலுக்கித்யாதி). ... ... ... ... ... (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பார்எல்லாம் | பூமியடங்கலும் | திருவயிற்றில் வைத்து | திருவயிற்றிலே வைத்து |
| பனி | குளிர்ந்து | உம்மை | உங்களை |
| பரவை | பரந்திருக்கிற | உய்யக்கொண்ட | உஜ்ஜீவிப்பித்தருளினவனுய், |
| திரை | அலைகளானவை | முனி | ஸாத்விகர்களுக்கு |
| ததும்ப | எறியும்படி | தலைவன் | தலைவனுய் |
| நெடுங்கடலே யானகாலம் | பெரிய கடலானது வ்யாபித்தகாலத்திலே | கனி | கனிந்திருந்துள்ள |
| இவர்க்கு | "இவ்வுலகத்தார்க்கு | களவம் | களாம்பழம்போன்ற |
| இனி | இனிமேல் | திருஉருவம் | வடிவுடையனுய், |
| களைகண் இல்லை என்று | ரக்ஷகராவார்ஆருமில்லை" என்று | ஒருவனையே | அத்விதீயனுன ஸர்வேஶ்வரனையே |
| உலகம் ஏழினையும் | உலகங்களெல்லாவற்றையும் | கழல்தொழுமா | அடிதொழும்படியை |
| ஊழில்வாங்கி | முறையாலேவாங்கி | கல்லீர்களே | கற்கமாட்டிகோளே. |
| முழங்கு | முழங்காநின்றுள்ளதாய் | | |
| ஒளிசேர் | ஒளிசேர்ந்திருப்பதுமான | | |

வ்யா.—காலாம்பாட்டு. (பனிப்பரவை) குளிர்ந்து பரந்திருக்கிற திரைகளாலே அலையெறிந்துள்ள கடலானது ஸர்வலோகங்களும் தானேயானகாலம். (இனிக்களைகணிவரித்யாதி) "இனி இவர்களுக்கு ரக்ஷகர் ஆருமில்லை" என்று த்ரைலோக்யத்தையும் முறையாலே, ஸத்வஸ்த்தனுன ஸர்வேஶ்வரன், முழங்காநின்றுள்ள ஒளிசேர்ந்திருந்துள்ள திருவயிற்றில்வைத்து, உம்மையுய்யக்கொண்ட. கனிந்திருந்து களாம்போலேயிருந்துள்ள திருவுடம்பையுடைய ஒருவனையே கழல்தொழமாகல்லீர்களே. .... .... (௪)

அரு;—நாலாம்பாட்டு. (பனியித்யாதி) "சிறுதொண்டர்கொடியவாறே" என்று வெறுத்தவாறே, எங்களுக்கு அவன் குணம்பரவும்படி நீர்வழி சொல்லவேணுமென்ன, அவன் திருவடிகளைத் தொழுங்கோளென்கிருரென்று ஸங்கதி.

"பரவை" என்றதினர்த்தம் (பரந்திருந்துள்ள)என்றது. "ஊழில்" என்றதினர்த்தம்-(முறையாலே)என்றது; "வாங்க" என்றுசேஷம். "களவம்போலே" பாணை போலே யென்னுதல். ... ... ... ... ... (௪)

மூ,—பாராருங்காணுமே பரவைமா
நெடுங்கடலே யானகாலம்
ஆரானுமவனுடைய திருவயிற்றில்
நெடுங்காலம் கிடந்ததுள்ளத்து
ஓராதவுணர்விலீ ருணருதிரேல்
உலகளந்தவும்பர்கோமான்
பேராளன் பேரான பேர்களாயிரங்
களுமே பேசீர்களே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| பார் | பூமியிலே |
| ஆரும் | ஒருத்தரையும் |
| காணுமே | காணவொண்ணாதபடி |
| மா நெடுங்கடலே | மஹாஸமுத்ரந்தானே |
| பரவைஆன காலம் | பரந்து (ப்ரளயம்)கொண்ட காலத்திலே |
| ஆரானும் | எவரும் |
| அவனுடைய | அந்த எம்பெருமானுடைய |
| திருவயிற்றில் | திருவயிற்றிலே |
| நெடுங்காலம் | நெடுநாள்வரை |
| கிடந்தது | அடங்கிக்கிடந்தமையை |
| உள்ளத்து | நெஞ்சிலே |
| ஓராத | அநுஸந்திக்கப்பெறாத |
| உணர்வு இலீர் | அறிவுகேடர்களே! (நீங்கள்) |
| உணருதிரேல் | சேதநராயிருந்திகோளாகில், |
| உலகு அளந்த | திருவுலகளந்தருளினவனாய் |
| உம்பர் | நித்யஸூரிகளுக்கு |
| கோமான் | நிர்வாஹகனாய் |
| பேராளன் | மஹாநுபாவனான ஸர்வேஶ்வரனுக்கு |
| பேரான | வாசகங்களான |
| பேர்கள் ஆயிரங்களுமே | ஸஹஸ்ரநாமத்தையே |
| பேசீர்கள் | பேசுங்கள். (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பாராருங்காணுமே) பூமியிலொருத்தரையும் காணவொண்ணாதபடி எங்கும் தானேயாய்க் கொண்டு கடல் பரந்தகாலம். ஒருத்தரும் அவன் திருவயிற்றிலே நெடுங்காலம் கிடந்ததை ஓராத அறிவுகேடர்காள்! (உணருதிரேல்) சைதந்ய

அரு;—அஞ்சாம்பாட்டு. (பாரித்யாதி) "திருவயிற்றிலேவைத்து உய்யக் கொண்டவன் கழல்களை நாங்கள் தொழுகை எங்ஙனே கண்டன்றோ தொழுவது என்ன; நீங்கள் தொழமாட்டிகோளாகிலும் உங்கள் தலையிலே அடியிட்டான்; அவனுடைய பேராயிரத்தைப் பேசலாமே யென்கிறாரென்று ஸங்கதி. ... ... ... ... ... ... ... (ரு)

முண்டாகில் வரையாதே எல்லார்தலையிலும் திருவடிகளைவைத்து, அத்தாலே ப்ரஹ்மாதிகளுக்கு நிர்வாஹகனாய் அளவுடையவனாயிருந்துள்ளவனுடைய பெயரான திருநாமங்களைப்பேசீர்களே. (௫)

மூ.—பேயிருக்குநெடுவெள்ளம் பெருவிசும்பின்
மீதோடிப் பெருகுகாலம்
தாயிருக்கும்வண்ணமே யும்மைத்தன்
வயிற்றிருத்தி யுய்யக்கொண்டான்
போயிருக்க மற்றிங்கோர் புதுத்தெய்வம்
கொண்டாடும் தொண்டீர் பெற்ற
தாயிருக்க மணைவெந்நீராட்டுதிரோ
மாட்டாத தகவற்றீரே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| பேய்இருக்கும் | மநுஷ்யர்களொருவரு(மில்லாதபடி) வெறும்பேய்களேயிருக்கக்கடவ |
| நெடுவெள்ளம் | மஹாப்ரவாஹமானது |
| பெருவிசும்பின்மீது ஓடி;— | |
| பெருகுகாலம் | ப்ரவஹித்தகாலத்திலே |
| தாய்இருக்கும் வண்ணமே | நோன்புநோற்றுப்ரஜையை வயிற்றிலேவைத்து நோக்கும் தாயைப்போலே |
| உம்மை | உங்களை |
| தன்வயிற்று | தன் திருவயிற்றிலே |
| இருத்தி | வைத்து |

| பதம். | உரை. |
|---|---|
| உய்யக்கொண்டான் | உஜ்ஜீவிப்பித்தருளின ஸர்வேஶ்வரன் (இவைநம்மைப்பற்றாமல் புறம்புபோயிற்றனஎன்று) |
| போயிருக்க | வெறுத்திருக்க, |
| இங்கு | இங்கே |
| மற்றுஓர்புதுத் தெய்வம் | மற்றொருக்ஷுத்ரதேவதையை |
| கொண்டாடும் | கொண்டாடுகிற |
| தொண்டீர் | தொண்டர்காள்! |
| பெற்றதாய் | (வருந்திப்) பெற்றதாய் |
| இருக்க | விளங்காநிற்க (அவளை அநாதரித்து) |
| மணை | (அசேதநமானதொரு மணைக்கட்டையை) |
| வெந்நீர் ஆட்டுதிரோ | உபசரியாநின்றீர்கோளோ?; |
| மாட்டாத | செயயமாட்டாத |
| தகவுஅற்றீரே | இரக்கமற்றீர்கோளே. |

அநு;—ஆறும்பாட்டு. (பேயித்யாதி) "பேர்களாயிரங்களைப் பேசீர்களே" என்று சொல்லச் செய்தே ஒருவரும் சொல்லமாட்டாதே வாஸநாபலத்தாலே தேவதாந்தரபஜநத்திலே ஒருப்படுகிற படியைக்க[illegible], "ஐயோ! நீங்கள் இப்படிச் செய்யுமது ந்யாயமோ" என்று சிவிட்கொள்கிறாரென்று ஸங்கதி.

வ்யா.—ஆறும்பாட்டு. (பேயிருக்குமித்யாதி) பேயிருக்கும் என்னவே - மநுஷ்யர்கள் ஒருவருமில்லையென்னுமிடம் தோற்றுகிறது. (தாயிருக்கும்) ப்ரஜையைப் பெறுகைக்கு நோன்பு நோற்று, அப்ப்ரஜையை வயிற்றிலே வைத்துக்கொடிருக்கும் தாயைப்போலே, உம்மை வயிற்றிலே வைத்துஉய்யக் கொண்டவன், "நாம் கொடுத்த கரணங்களைக்கொண்டு நம்மைப்பற்றப்பாராதே புறம்பே போயிற்றனே" என்று வெறுத்துப்போயிருக்க, அங்கே புதுசாயிருக்கிற தேவதைகளைக் கொண்டாடுகிற தொண்டீர்!. (பெற்றதாயித்யாதி) அசேதநமாயிருப்ப தொன்றை வெந்நீராட்டுதிரோ? செய்யமாட்டாத க்ருபையற்றீரே. .... .... .... .... (௬)

மூ.—மண்ணாடும் விண்ணாடும் வானவரும்
தானவரும் மற்றுமெல்லாம்
உண்ணாதபெருவெள்ள முண்ணாமல்
தான்விழுங்கி யுய்யக்கொண்ட
கண்ணாளன் கண்ணமங்கை நகராளன்
கழல்சூடி யவனையுள்ளத்து
எண்ணாதமானிடத்தை யெண்ணாத
போதெல்லா மினியவாறே. (௭)

| பதம். | உரை. |
|---|---|
| மண்நாடும் | பூலோகமும் |
| விண்நாடும் | ஸ்வர்க்கமும் |
| வானவரும் | தேவர்களும் |
| தானவரும் | அஸுரர்களும் |
| மற்றும் எல்லாம் | மற்றுமுண்டான பதார்த்தங்களெல்லாம் (கூடி முயன்றாலும்) |

| பதம். | உரை. |
|---|---|
| உண்ணாத | தகையவொண்ணாத |
| பெருவெள்ளம் | மஹாப்ரவாஹமானது |
| உண்ணாமல் | (உலகத்தை) விழுங்காதபடி [வைத்து |
| தான்விழுங்கி | தான் திருவயிற்றிலே |
| உய்யக்கொண்ட | உஜ்ஜீவிப்பித்தருளினவனாய் |

"போயிருக்க" என்றதுக்குத் தாத்பர்யம் (நாமித்யாதி). "ஈன்றோளிருக்க மணைவெந்நீராட்டுதிரோ" என்று, அவளிருந்து பெற்ற மணையை நீராட்டிப் பூச் சூட்டுவாரைப் போலே, அவனுக்குச் சேஷபூதரை ஆராதிக்கக் கூடுமோ என்றுவிவக்ஷித்தருளுகிறார் (அசேதநேத்யாதி). (க்ருபையற்றீரே) என்றதுக்கு எம்பெருமானுடைய வெறுப்பை எண்ணி, அநுகூலிக்க வேணுமென்று இரங்காதே போனீர்களே, அது ந்யாயமோ வென்று கருத்து. ... (௬)

| | | | |
|---|---|---|---|
| கண்ணுளன் | மஹாக்ருபாளுவாய் | அவனை | அந்த எம்பெருமானை |
| கண்ணமங்கை | திருக்கண்ணமங்கை | உள்ளத்து | நெஞ்சிலே |
| நகராளன் | க்கு நிர்வாஹகனான ஸர்வேஶ்வரனுடைய | எண்ணாத | அநுஸந்தியாத |
| | | மானிடத்தை | மநுஷ்யரை |
| | | எண்ணாதபோது எல்லாம் | ஸ்மரியாத காலமெல்லாம் |
| கழல் | திருவடிகளை [ந்து | இனியஆறே | (எனக்கு) இனிதாகச் செல்லாநின்றபடி. |
| சூடி | (தம்தலையிலே) அணி | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மண்ணுடுமித்யாதி) பூமியும் ஸ்வர்க்கமும், தேவர்களும், அஸுரர்களும், மற்றுமுண்டானபதார்த்தங்களுமெல்லாங்கூட "உண்ணப்போகாதுஎன்று" தகையவொண்ணாதென்று பெருவெள்ளம் உண்ணுதபடிக்கிடாகத் தான்விழுங்கி உய்யக்கொண்ட ஜகந்நிர்வாஹகன்; க்ருபாவானென்னவுமாம். இப்படி க்ருபை பண்ணி ஸந்நிஹிதனுய்க்கொண்டு திருக்கண்ணமங்கைக்கு நிர்வாஹகனானவனுடைய திருவடிகளைப்பேணி, அவனை ஹ்ருதயத்திலே எண்ணாத மநுஷ்யரை. (எண்ணாத போதெல்லாமினியவாறே) பகவத்ஜ்ஞாநமும் வேண்டா; வைஷ்ணவ ஸஹவாஸமும் வேண்டா; அவைஷ்ணவர்களை நினையாதபோது - இனிதென்கை. .... .... .... .... .... .... (எ)

மூ.—மறங்கிளர்ந்த கருங்கடல்நீருரந்துரந்து
பரந்தேறி யண்டத்தப்பால்
புறங்கிளர்ந்தகாலத்துப் பொன்னுலக
மேழினையு மூழில்வாங்கி

---

அநு;—ஏழாம்பாட்டு. (மண்ணுடுமித்யாதி) கீழ்ப்பாட்டிலே "தகவுற்றீரே" என்று ஸவிநயமாகச் சொன்னாலும், குரங்குப் பிடிபோலே பிடித்ததையே பிடித்துக்கொண்டு மூர்க்கராயிருக்கும் படியைக் கண்டு, "இவர்களோடு நாம் வார்த்தையிடுகை நமக்கு துக்க மித்தனை போக்கி பலிப்பதில்லை" என்று கைவாங்குகிறுரென்றுஸங்கதி.

(உண்ணப்போகாது) என்றதுக்கு விவரணம் (தகையவொண்ணுதென்று) என்கிறது. அதாவது - இவையெல்லாம் கூடியும் ப்ரளயத்தைத் தகையமாட்டாதென்று விசாரித்தென்றபடி. ... ... (எ)

அறங்கிளர்ந்த திருவயிற்றினகம்படியில்
வைத்தும்மை யுய்யக்கொண்ட
நிறங்கிளர்ந்தகருஞ்சோதி நெடுந்தகையை
நினையாதார் நீசர்தாமே. (அ)

| பதம். | உரை. |
|---|---|
| மறங்கிளர்ந்த | கொடுமைபொருந்திய |
| கருங்கடல் | கருங்கடலின் |
| நீர் | ப்ரவாஹமானது |
| உரம் | வேகத்தாலே |
| துரந்து | ஓடி |
| பரந்து | சுற்றும்பரம்பி |
| அண்டத்து அப்பாற்புறம் | அண்டகடாஹத்துக்கு அவ்வருகாக |
| ஏறி | வ்யாபித்து |
| கிளர்ந்தகாலத்து | கிளர்ந்த ஸமயத்திலே |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான |
| உலகம்எழினையும் | உலகங்களனைத்தையும் |
| ஊழில்வாங்கி | முறையாலேவாங்கி, |
| அறம் | ரக்ஷணதர்மத்தாலே |
| கிளர்ந்த | விஞ்சின |
| திருவயிற்றின் அகம்படியில் | திருவயிற்றினுள்ளே |
| வைத்து | வைத்து |
| உம்மை | உய்யக்கொண்ட; |
| கருநிறம்கிளர்ந்த | கருமைமிக்கிருந்துள்ள |
| சோதி | தேஜஸ்ஸையுடைய |
| நெடுந்தகையை | ஸர்வேஶ்வரனை |
| நினையாதார்தாம் | நினைக்கப்பெறுதவர்கள் |
| நீசர் | மிகத்தண்ணியர்கள். (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மறங்கிளர்ந்த கருங்கடல் நீருரந் துரந்து பரந்தேறி) உரத்தாலேயோட்டி அண்டத்துக்கவ்வருகாக. புறங்கிளர்ந்த காலத்து, ஸ்ப்ருஹணீயமான லோகங்களை முறையிலே வாங்கி ரக்ஷயத்தினளவல்லாத ரக்ஷணதர்மத்தாலே விஞ்சின திருவயிற்றினுடைய உள்ளேவைத்து உம்மை உய்யக்கொண்ட. (நிறங்கிளர்ந்த) கறுத்திருந்துள்ள தேஜஸ்ஸையுடைய ஸர்வேஶ்வரனை நினையாதார் தண்ணியவர்கள். .... .... .... (அ)

---

அ.ரு—எட்டாம்பாட்டு. (மறமித்யாதி) தாம் உபதேசித்ததிலும் கைவாங்க ஒருப்படவும் க்ருபை காற்கட்டுகையாலே "இன்னும் மீள்வர்களோ" என்னும் நோயாசையாலே நிந்திக்கிறுரென்றுஸங்கதி. மீளவேணுமென்றிறே இவர் நிந்திக்குமது.

"துரந்து" என்றதினர்த்தம் (ஓட்டி)என்றது. "அறங்கிளர்ந்த" என்றதினர்த்தம் (ரக்ஷயத்தினித்யாதி). ... ... ... (அ)

மூ.—அண்டத்தின்முகடழுந்த வலைமுந்நீர்த்
திரைததும்ப வாவாவென்று
தொண்டர்க்கு மமரர்க்கும் முனிவர்க்கும்
தானருளி யுலகமேழும்
உண்டொத்த திருவயிற்றினகம்படியில்
வைத்தும்மை யுய்யக்கொண்ட
கொண்டற்கை மணிவண்ணன்தண்
குடந்தைநகர் பாடி யாடீர்களே. (௯)

| பதம். | உரை. |
|---|---|
| அண்டத்தின் முகடு | அண்டபி(ற்)த்தியானது |
| அழுந்த | உள்ளே அழுந்த, |
| அலை | அலையையுடைய |
| முந்நீர் | கடலானது |
| திரை | திரைக்கிளப்பத்தாலே |
| ததும்ப | செறிய, |
| ஆ ஆ என்று | அய்யோ! அய்யோ! என்று |
| தொண்டர்க்கும் | (தன்னிடத்தில்) பக்திபண்ணினவர்களுக்கும் |
| அமரர்க்கும் | தேவர்களுக்கும் |
| முனிவர்க்கும் | ருஷிகளுக்கும் |
| தான் அருளி | தான் க்ருபைசெய்து |
| உலகம்எழும் உண்டு;— | |
| ஒத்த | (மற்றஅவயவத்தோடு) ஒத்திராநின்றுள்ள |
| திருவயிற்றின் அகம்படியில் வைத்து உம்மை உய்யக்கொண்ட;— | |
| கொண்டல் | மேகம்போலே (உதாரமான) |
| கை | கையையுடையனாய் |
| மணிவண்ணன் | மணி போன்ற நிறத்தையுடையனான) எம்பெருமானுடைய |
| தண் | ஶ்ரமஹரமான |
| குடந்தைநகர் | திருக்குடந்தை என்னும் திருப்பதியை |
| பாடி | (வாயாரப்) பாடி |
| ஆடீர்கள் | ஆடுங்கள். (௯) |

அநு.—ஒன்பதாம்பாட்டு. (அண்டத்தினித்யாதி) இவர், நீசரென்று நிந்திக்க, "நீர் எங்களை நிந்திப்பானென்? நீர் ஒருகால் சொன்னப்போலே ஒன்பதின்கால் சொன்னாலும் ருசிபிறவாமைக்கடி எங்கள்பாபமன்றோ? அதுதீரும் வழி என்" என்ன; (க)"சொல்லுகேன் வம்மின்சூழ் புனல்குடந்தையே தொழுமின்" என்று அடியிலேதானே சொன்னபடியே, "திருக்குடந்தையைப் பாடி ஆடுங்கோள், பாபங்களும் அழியும்" என்று உபதேசிக்க, உபக்ரமித்தபடியைத் தலைக்கட்டுகிறாரென்று ஸங்கதி.

"కుమ్భకోణేకృతం పాపం కుమ్భకోణేవినశ్యతి- கும்பகோணேக்ருதம் பாபம் கும்பகோணேவிநஶ்யதி" என்றிறே அதிநேற்றம்.

(க) ௧-௧-௭.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (அண்டத்தின் முகடழுந்த) அண்டபித்தியானது உள்ளே அழுந்த. அலையையுடைத்தான முந்நீரானது திரைகளாலே செறிய, "ஐயோ, ஐயோ" என்று தன்பக்கலிலே பக்திபண்ணினவர்களுக்கும், மநநம்பண்ணினவர்களுக்கும், தேவர்களுக்கும் தானருளி, உலகமேழையுமுண்டு ப்ரளயம்தேடுகிறதென்று இளைத்துக்காட்டி அல்லாத வவயவத்தோடொத்த திருவயிற்றினுள்ளேவைத்து உம்மை உய்யக்கொண்ட. மேகம்போலே உதாரமான கையையுடையனாய் மணிபோலே ஶ்ரமஹரமானநிறத்தையுடையவன் ஶ்ரமஹரமான திருக்குடந்தையைப்பாடி ஆடீர்களே.

மூ.—தேவரையு மசுரரையும் திசைகளையும்
கடல்களையும் மற்றும்முற்றும்
யாவரையுமொழியாமே யெம்பெருமா னு
ண்டுமிழ்ந்த தறிந்துசொன்ன
காவளரும்பொழில் மங்கைக் கலிகன்றி
யொலிமாலை கற்றுவல்லார்
பூவளரும்திருமகளா லருள்பெற்றுப்
பொன்னுலகில் பொலிவர்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. |
|---|---|
| தேவரையும் | தேவர்களையும் |
| அசுரரையும் | அஸுரர்களையும் |
| திசைகளையும் | திக்குக்களையும் |
| கடல்களையும் | ஸப்தஸாகரங்களையும் |
| மற்றும்முற்றும் | மற்றுமுள்ள |
| யாவரையும் ஒழியாமே | ஸமஸ்த பதார்த்தங்களையும் ஒன்றுதப்பாமல் |
| எம்பெருமான் | ஸர்வேஶ்வரன் |
| உண்டு | அமுதுசெய்து |
| உமிழ்ந்தது | (பின்பு) உமிழ்ந்தருளினதை |
| அறிந்து | உள்ளபடி அறிந்து |
| சொன்ன | அருளிச்செய்த |
| காவளரும் | பூஞ்சோலைகள் வளரப்பெற்ற |
| பொழில் | வயல்களையுடைய |
| மங்கை | திருமங்கைக்கு நிர்வாஹகரான |
| கலிகன்றி | ஆழ்வாருடைய |
| ஒலிமாலை | சொல்மாலையான இப்பாட்டுக்களை |
| கற்று | அப்யஸித்து |
| வல்லார் | (அர்த்தஜ்ஞாநத்திலே) ஸமர்த்தராமவர்கள் |
| பூவளரும் திருமகளால் | பெரியபிராட்டியாராலே |
| அருள்பெற்று | அருளைப்பெற்று |
| பொன்உலகில் | நித்யவிபூதியிலே |
| பொலிவர் | விளங்கப்பெறுவர்கள். |

(௧௦)

வ்யா.—பத்தாம்பாட்டு. (தேவரையுமித்யாதி) இப்பாட்டுக்கு இடையே பொருள். (காவளரும்) திரண்டுபரந்த சோலைகள். (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி பதினோராம்பத்து ஆறுந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

# பதினோராம்பத்து ஏழாந்திருமொழி
## நீணகம்ப்ரவேசம்.

வ்யா;—ஸர்வேஶ்வரன் தன்னை அநுபவிக்கக்கொடுத்த கரணங்களைக் கொண்டு வ்யர்த்தமே திரிகிறவர்களை, அவனுடைய செயல்களை அநுபவியாதவர்கள் கரணங்கள் ஒன்றுமன்றென்கிறார்.

மூ;—நீணகம் சுற்றி நெடுவரைநட் டாழ்கடலைப்
பேணான்கடைந் தமுதம்கொண்டுகந்த பெம்மானைப்
பூணாரமார்வனைப் புள்ளூரும் பொன்மலையைக்
காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல கண்டாமே. (க)

---

அரு;—பத்தாம்பாட்டு. (தேவரித்யாதி) இப்பாட்டுக்கு வ்யாக்யாநத்துக்கு அவகாசம் காணாமையாலே அருளுகிறார் (இப்பாட்டுக்கித்யாதி). (இடையே) என்றது - த்வயத்தின் க்ரமத்திலே யென்னவுமாம்; அதாவது- "திருமகளாலருள்பெற்று" என்றத்தால் "த்வயத்தில்பெரியபிராட்டி யாராலே பேறு" என்கிறபடியே, பலஶ்ருதியிருக்கிறதே யென்கை. (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம꞉.

நீணகம்ப்ரவேசம்;-"சூழ்புனல்குடந்தையே தொழுது என்நாவினாலுய்ய நான் கண்டு கொண்டேன்" என்று தொழுதவராமத்தையே "குடந்தையே தொழுமின்" என்று அடியிலே உபதேசித்து, அத்தைக்கீழ்த்திருமொழியிலும் "தண்குடந்தை நகர் பாடியாடீர்களே" என்றுஉபதேசித்துத் தலைக்கட்டினபின்பும், க்ஷுத்ரபுருஷார்த்தங்களில் நப்பாசையாலே விஷயாந்தரங்களிலே ப்ரவணராய், கரணகளேபரங்களை அதுக்கு உறுப்பாக்குவராயிருக்கையாலே நிந்திக்கிறாரென்று ஸங்கதியை உட்கொண்டு, திருமொழி ப்ரமேயத்தை ஸங்க்ரஹேணவருளுகிறார் (ஸர்வேஶ்வரனித்யாதி). (வ்யர்த்தமே திரிகிறவர்களை,)என்றவநந்தரம் "நிந்தித்து" என்று சேஷம். *

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீள் | தீர்க்கமான | மார்வனை | திருமார்பையுடையனை |
| நாகம் | வாஸுகியை | | |
| சுற்றி | (கடைகயிறாகச்) சுற்றி | புள் | பெரியதிருவடியை |
| நெடுவரை | மந்தரத்தை | ஊரும் | ஏறிநடத்தவல்லானாய் |
| நட்டு | (மத்தாக) நாட்டி | பொன்மலையை | பொன்மலைபோலே |
| ஆழ்கடலை | கம்பீரமான கடலை | | போ(ஸூ) ச்யனான |
| பேணான் | (நமக்குப்படுக்கையன்றோ என்று) பேணா | | ஸர்வேஶ்வரனை |
| கடைந்து | கடைந்து [தவனாய் | காணாதார் | ஸேவிக்கப்பெறாதவர்களுடைய |
| அமுதம் | அம்ருதத்தை | கண் | கண்களானவை |
| கொண்டு | (தேவர்களுக்கு) எடுத்துத்தந்து | என்றும் | ஒருநாளும் |
| உகந்த | திருவுள்ளமுகக்கப் பெ | கண் அல்ல | கண்களாகமாட்டா; |
| பெம்மானை | ஸ்வாமியாய் [ற்ற | கண்டாமே | (இதைநாம்) அறிவோமே. (க) |
| பூணாரம் | ஹாராலங்க்ருதமான | | |

வ்யா,—முதற்பாட்டு. (நீணாகம்சுற்றி) மஹாமேருவிலே சுற்றியும் பின்னையும் வாஸுகி நீண்டபடி. (நெடுவரைநட்டு) சுற்றுடைத்தாய் நீண்டிருந்துள்ள மஹாமேரு ஒருவரால் பேர்க்கும்படியன்றிறே யிருப்பது; அத்தைக்கொடுவந்து ஸமுத்ரத்துக்குக் கண்செறியிட்டாப் போலே நாட்டி. (ஆழ்கடலை) ஒன்றாலும் சலிப்பிக்கவொண்ணாத பெரிய பதார்த்தத்தை. (பேணான் கடைந்து) இரப்பாரைப் பெற்றால் படுக்கையென்றும் பாரான். (அமுதம் கொண்டுகந்த) பிறர்க்கு உபகரித்தானாயிராதே தன் பேறாக உகந்தான். (பெம்மானை) இப்படிச் செய்கிறது உடையவனாகையாலே.

(பூணாரமார்வனை) இவர் தம்முடைய அம்ருதம். (புள்ளூரும் பொன்மலையை) ஸர்வாபரண பூஷிதனாய், பெரியதிருவடிதோளிலிருந்த விருப்பு-ஒரு பொன்மலைமேலே ஒருபொன்மலை யிருந்தாப்

---

அரு;—முதற்பாட்டு. (நீணாகமித்யாதி). (மஹாமேருவை) என்றது-மந்தரத்தை. மந்தரம் மேருவினுடைய ஏகதேசமிறே.

"பூண்களார்ந்தமார்வனை என்று" சப்தார்த்தமுட்கொண்டு, ஸமபிவ்யாஹார தாத்பர்யமருளுகிறார் (ஸர்வேத்யாதி). "யன்" என்று சொல்லிவைத்து

போலே. (காணாதார்கண்ணென்றும் கண்ணல்ல) இதுக்கு முன்பு கண்டவை என்றும் கண்ணல்ல. (கண்டாமே) க்ஷேபமாகக் கண்டாமே யென்கிறார். (க)

மூ;—நீள்வான்குறளுருவாய் நின்றிரந்துமாவலிமண்
தாளாலளவிட்ட தக்கணைக்குமிக்கானைத்
தோளாதமாமணியைத் தொண்டர்க்கினியானை
கேளாச்செவிகள் செவியல்லகேட்டாமே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீள்வான் | நீண்டுவளருவதற்காக | மாமணியை | நீலமணிபோன்றவனாய் |
| குறள்உருஆய் | வாமநவேஷதா(ரூ)ரியாய் | தொண்டர்க்கு | பாகவதர்களுக்கு |
| நின்று | (யஜ்ஞவாடத்திலே) நின்று | இனியானை | போக்யபூதனான ஸர்வேஸ்வரனை |
| மாவலி | மஹாபலியிடத்தில் | கேளா | ஸ்ரவணம் பண்ணப் பெறாத |
| மண் | (மூவடி) மண்ணை | செவிகள் | காதுகள் |
| இரந்து | யாசித்து, | செவி அல்ல | காதுகளாகமாட்டா; (இவ்வர்த்தத்தை, |
| தாளால் | திருவடிகளாலே | கேட்டாம் | பலகால் பெரியோர்கள் பக்கலிலே) கேட்டிரா நின்றோம். |
| அளவிட்ட | அளந்தருளினவனாய், | | |
| தக்கணைக்கு | தக்ஷிணாதாநத்துக்கு | | |
| மிக்கானை | அப்ய(ர்ஹ)ர்ஹிதபாத்ர பூதனாய் [காத | | |
| தோளாத | துளைபட்டு ஒளிமழுங் | | (உ) |

கண்ணல்லவென்று சொல்லக்கூடுமோ வென்னவருளுகிறார் (இதுக்கித்யாதி). பொன்மலை காண்கைக்கு முன்னாக விஷயங்களைக் காண வல்லதுகளாயிருந்தாலும், காலமெல்லாம் "கண்" என்றுசொல்லவொண்ணாது, "பீலிக்கண்" என்றாப்போலே உபசரித்துச் சொன்னதாக வேணுமென்று கருத்து. "கண்டாமே" தாமும் மற்றும்ஸ்ரீவைஷ்ணவர்களையும் கூட்டிக்கொண்டு அவர்களைக்ஷேபிக்கவேண்டி இசைவிக்கிறாரென்றருளுகிறார் (க்ஷேபேத்யாதி). (க)

அரு;—இரண்டாம்பாட்டு. (நீள்வானித்யாதி) பொன்மலையைப் போய் காணமாட்டாரே யாகிலும், இருந்தவிடத்திலிருந்து தங்களை அடிக்கீழிட்டபடியைக் கேட்கச் செவிதாழ்க்கலாமே, அதுவும் செய்யாதார் செவி-செவியன்றென்று செப்புவாருண்டே, அதுவும் கேட்டோமே யென்று க்ஷேபிக்கிறாரென்று ஸங்கதி.

வ்யா;—இரண்டாம்பாட்டு. (நீள்வான்) நீளுகைக்கு நரிப்பூணூ விட்டாப்போலே நின்றபடி. அன்று செய்தகீர்த்தி கொண்டாட நீளவென்னுமாம். (குறளுருவாய்) சுருங்க நின்றதனையும் பெருக்கவளருகைக்கு உறுப்பாக. (நின்றிரந்து) வடிவே அமைந் திருக்கச்செய்தே அதுக்குமேலே அவனைஇரந்து. (மாவலிமண்) அவன் என்னதென்றபிமாநித்தபூமி. (தாளாலளவிட்ட) திருவடி களுக்கிடாகக் கீழே இட்டுக்கொண்டு நின்றபடி. (தக்கணைக்கு மிக்கானை) தக்ஷிணையாக மஹாபலிகொடுத்த கொடை இன்னம் போராதென்னும்படி யிருந்தவன். பூஜ்யதமனானவனை.

(தோளாத மாமணியை) துளைபட்டுச் சிலர் விநியோகம் கொண்டன்றிக்கே அநுபபு(ஷு)க்தமாய் ஒளிமழுங்காதே ஜாதியான ரத்நத்தை. (தொண்டர்க்கினியானை) (க)"உன்னைப்பிரமாணித்தார் பெற்றபேறு" என்று ஆஶ்ரிதர் ஈடுபட்டு நெஞ்சிலே எப்போதும் அநுபவித்திருக்குமவன். (கேளாச்செவிகள்) அவனுடைய கீர்த்தி கேட்கவென்றால், "கேளோம்" என்னுமவர்செவி-செவியல்ல-; (கேட்டாமே) க்ஷேபம். .... .... .... .... (உ)

மூ;—தூயானைத் தூயமறையானைத்தென்னாலி
மேயானை மேவாளுயிருண்டமுதுண்ட
வாயானை மாலைவணங்கி யவன்பெருமை
பேசாதார் பேச்சென்றும் பேச்சல்லகேட்டாமே. (௩.)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தூயானை | பவித்ராணும் பவித்ரனுய், | மேவாள் | தன்பக்கல்பொருந் தாதபூதனையின் |
| தூய | (அபௌருஷேயத்வாதிகளால்) பரிசுத்தமான | உயிர் | ப்ராணனை |
| மறையானை | வேதங்களாலே ப்ரதிபாதிக்கப்படுமவனாய், | உண்டு | (விஷமிஶ்ரஸ்தந்யபாநத்தினால்) முடித்தருளி |
| தென் | அழகிய | அமுது | (அதற்குப்பரிஹாரமாக)தாயின்ஸ்தந்யத்தை |
| ஆலி | திருவாலியிலே | | |
| மேயானை | பொருந்திவர்த்திக்குமவனாய், | உண்ட | அமுதுசெய்த |

(நரிப்பூண்நூலிட்டாப்போலே) என்றது - உத்யோகித்தாப்போலே என்றபடி. முந்தினபக்ஷத்திலே தாத்பர்யம் (சுருங்க வித்யாதி). கீழ்வாக்ய பலிதம் (பூஜ்யேத்யாதி). அர்த்தாந்தரமாதல். ... ... ... (உ)

(க) உ- திருவ-௬க.

| | | | |
|---|---|---|---|
| வாயானை | வாயையுடையனாய் | பெருமை | மாஹாத்ம்யத்தை |
| மாலை | ஆஶ்ரிதவ்யாமுக்த(ஸ்)ஞன ஸர்வேஶ்வரனை | பேசாதார் | பேசப்பெருதவர்களுடைய |
| வணங்கி | திருவடிதொழுது | பேச்சு | பேச்சுக்களானவை |
| அவன் | அந்தஎம்பெருமானுடைய | என்றும் பேச்சல்ல கேட்டாம்- (ந) | |

வ்யா.—மூன்றும்பாட்டு. (தூயானை) வேதைகஸமதிகம்யனானவனை. (தூயமறையானை) இவன்றன்னையே ப்ரதிபாதிக்கும் வேதத்தையுடையவனை. அல்லாதவாஶ்ரயணீயரில் இவனுக்கு வாசி வேதப்ரதிபாத்யனுகை. அல்லாதவற்றிற்காட்டில் வேதத்துக்கேற்றம் இவனையே ப்ரதிபாதிக்கை. (தென்னாலிமேயானை) ப்ரமாணத்திலே கேட்டுப்போகாமே, கண்ணாலேகண்டனுபவிக்கலாம்படி ஸுலபனாய் நின்றவனை.

(மேவாளுயிருண்டமுதுண்டவாயானை) ஆஶ்ரிதத்ரவ்யமும் அநாஶ்ரிதருயிரும் தாரகமானவனை. நஞ்சுக்குப் பரிஹாரமாக அமுதுண்டபடி. (மாலை) இப்படி செய்தது ஆஶ்ரிதர்பக்கலுண்டான வ்யாமோஹம். (வணங்கியவன்பெருமை பேசாதார் பேச்சென்றும் பேச்சல்ல) அவனுடைய கீர்த்திகளையொழிய பேசுமவை கடலோசை பேச்சாயிருக்கச்செய்தேயும், அர்த்தமின்றிக்கேயிருக்கிறப்போலே. (கேட்டாமே) கேட்டுத்திரிகிறிகோளிறே என்று க்ஷேபம். .... .... .... .... .... .... (௩)

அரு;—மூன்றும்பாட்டு. (தூயானையித்யாதி) கீழிரண்டு பாட்டாலும் ஜ்ஞாநேந்த்ரியங்களை நிந்தித்தார்; இனி மூன்றுபாட்டாலே கர்மேந்த்ரியங்களை நிந்திக்கிருரென்றுஸங்கதி.

"மறையானை" என்ற பதத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் (வேதைகேத்யாதி).

" மேவாள் " என்று விசேஷித்தத்தாலே மேவுவாரு முண்டென்று தோற்றுகையாலே யருளுகிருர் (ஆஶ்ரிதேத்யாதி). தாத்பர்யாந்தரம் (நஞ்சுக்கித்யாதி). பேய்முலையுண்டதுக்கு மாற்று- தாய்முலை யுண்டதென்று கருத்து. (கேட்டுத்திரிகிறிகோளிறே என்று க்ஷேபம்) என்றதுக்கு ஶ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து அருளிச் செய்கிற வழியாலே இதரநிந்தை பண்ணினபடி யென்று கருத்து. ... ... ... ... ... (௩.)

மூ;—கூடாவிரணியனைக் கூருகிரால்மார்விடந்த
ஓடாவடலரியை யும்பரார்கோமானைத்
தோடார்நறுந்துழாய் மார்வனையார்வத்தால்
பாடாதார் பாட்டென்றும் பாட்டல்ல கேட்டாமே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கூடா | (தன்பக்கலிலே) பொருந்தாத | கோமானை | நிர்வாஹகனாய் |
| | | தோடுஆர் | தொடுக்கப்பட்டு |
| இரணியனை | ஹிரண்யனுடைய | நறு | பரிமளப்ரசுரமான |
| மார்வு | மார்பை | துழாய் | திருத்துழாய்மாலையை |
| கூர் | கூர்மைபொருந்திய | மார்வனை | திருமார்பிலே அணியப்பெற்ற ஸர்வேஶ்வரனை |
| உகிரால் | திருவுகிர்களாலே | | |
| இடந்த | கீண்டருளினவனாய், | | |
| ஓடா | சத்ருவுக்குப் பிற்காலியாத | ஆர்வத்தால் | ப்ரேமபாரவஶ்யத்தாலே |
| அடல் | க்ரௌர்யத்தையுடைய | பாடாதார் | பாடப்பெறுதவர்களுடைய |
| அரியை | ஸிம்ஹஸ்வரூபியாய், | பாட்டு | பாட்டுக்களானவை |
| உம்பரார் | நித்யஸூரிகளுக்கு | என்றும்பாட்டு | அல்லகேட்டாம். (ச) |

வ்யா;—நாலாம்பாட்டு. (கூடாவிரணியனை) சத்ருவாய் முடியநின்றவனை. (கூருகிரால்) ஆயுதத்தாலன்றிக்கே திருவுகிராலே. (மார்விடந்த) வரபலபுஜபலங்களாலே திண்ணியதான உடலைப் பிளந்தபடி. (ஓடாவடலரியை) ஹிரண்யனுக்குப் பிற்காலியாத அரியை. லோகத்தில் பரிமாறுதபடி யென்னுமாம். (உம்பரார்கோமானை) ஹிரண்யாதிகளைப்போக்கி ப்ரஹ்மாதிகளுக்குக் குடியிருப்புக்கொடுத்து அவர்களுக்குத் தன் ஸ்வாமித்வம் நிலைநிறுத்தினவனை. (தோடார்நறுந்துழாய் மார்வனை) சிறுக்கனுக்கு விரோதியைப்போக்கி மாலையிட்டிருந்தவனை. (ஆர்வத்தால் பாடாதார் பாட்டென்றும் பாட்டல்ல) ப்ரேமபரவசராய்ப் பாடும் பாட்டல்லது பாட்டல்ல. .... .... .... .... .... (ச)

---

அரு.—நாலாம்பாட்டு, (கூடாவித்யாதி) வாகிந்த்ரிய கார்யங்கள் இரண்டாகையாலே அதிலே விடுபேச்சை நிந்தித்து ப்ரபந்த நிஷ்ட்ட கார்யத்தையும் க்ஷேபிக்கிறுரென்று ஸங்கதி,

(பரிமாறுத) நடையாடாத. ... ... ... ... (ச)

மூ;—மையார்கடலும் மணிவரையும் மாமுகிலும்
கொய்யார் குவளையும் காயாவும் போன்றிருண்ட
மெய்யானை மெய்யமலையானைச் சங்கேந்தும்
கையானைக் கைதொழாக்கையல்ல கண்டாமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மைஆர் | மைபோலே கறுத்திருந்துள்ள | மெய்யானை | திருமேனியை யுடையனாய், |
| கடலும் | கடலையும் | மெய்யமலையானை | திருமெய்யமலையிலே ஸந்நிஹிதனாய், |
| மணி | நீலமணிமயமான | சங்கு | ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை |
| வரையும் | மலையையும் | ஏந்தும் | தரித்திராநின்ற |
| மாமுகிலும் | காளமேகத்தையும் | கையானை | திருக்கையையுடையனான ஸர்வேஶ்வரனை |
| கொய்யார் | பறிக்கையிலே பொருந்தின | தொழா | தொழாத |
| குவளையும் | நீலோத்பலத்தையும் | கை | கைகளானவை |
| காயாவும் | காயாம்பூவையும் | | கை அல்ல கண்டாம். (ரு) |
| போன்று | ஒத்து | | |
| இருண்ட | கறுத்திராநின்ற | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மையார்கடலுமித்யாதி) ஒன்றைச்சொல்லி, இன்னது உபமாநமென்னவொண்ணாத வடிவு சொல்லுமிடத்தில் உபமாநம் கொண்டிழியவேணும். அவைதான் இதுக்குப் போராவாயிருக்கும். காமிநிக்குக் காந்தனுடையதேஹமும் தேஹகுணமுமேயாய் வாய்வெருவுமாபோலே, ஆழ்வார்களெல்லார்க்கும் † படி. (மையார்கடலும்)பரிச்சேதிக்கவொண்ணாதிருக்கை. (மணிவரையும்) நெஞ்சாலே முகக்கலாயிருக்கை. (மாமுகிலும்) குளிர்ந்து ஶ்ரமஹரமாயிருக்கை.

(கொய்யார் குவளையும்) தர்ஶநீயமாயிருக்கை. (காயாவும்) நெய்த்திருக்கை. (மெய்யானை) இப்படிப்பட்டவடிவு. (மெய்ய

அரு;—அஞ்சாம்பாட்டு. (மையாரித்யாதி) "பல உபமாநங்களைச் சொல்லுவானென்? உபமேயத்தைமாத்ரம் சொல்லலாகாதோ? உபமாநத்துக்கு விசேஷங்களிடுவானென்?" இப்படி வருந்தியாகிலும் திருமேனியைச் சொல்லுவானென்?" என்கிற சங்காசதுஷ்டயத்தையும் அடைவே பரிஹரிக்கிறார் (ஒன்றையித்யாதி). இப்போது கடலை "மையார்" என்றது- நிஸ்தரங்க ஜலதி யென்றுதோற்றவேண்டி. தரங்கிதப்ரதேசம் வெளுத்திரே தோற்றுவது; ஆழமேசொல்லவேண்டி விசேஷித்தாரென்று கருத்து.

"கொய்கையிலே-பறிக்கையிலே பொருந்தினகுவளை" என்று சப்தார்த்தமாய்த் தாத்பர்யம் (தர்ஶநீயேத்யாதி). (ரு)

† (பா) பணி.

மலையானை ) அறுகாதப் பயணம்போய் பரமபதத்திலே காணவி ராதே ஸந்நிஹிதனானவனை. ( சங்கேந்தும் கையானை ) தொழுகை க்கு இவன் கைபோலே தொழுவித்துக் கொள்ளுகைக்கு அவன்கை. (க)" தமஸ꞉பரமோ தாதா - தமஸ꞉ பரமஇத்யாதி ". ( கை தொழாக் கையல்ல ) தொழாக்கை கையல்ல என்றந்வயம். .... (௫)

மூ;—கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும்
முள்ளார் முளரியு மாம்பலு முன்கண்டக்கால்
புள்ளாயோரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று
உள்ளாதாருள்ளத்தை யுள்ளமாக்கொள்ளோமே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கள் ஆர் | மதுஸ்யந்தியான் | புக்கு | பூமியைஉள்ளேபுகுந்து |
| துழாயும் | திருத்துழாயையும் | இடந்தான் | இடந்தருளின ஸர்வே ஶ்வரனுடைய |
| கணவலரும் | அலரியையும் | பொன் | ஸ்ப்ருஹணீயமான |
| கூவிளையும் | பில்வபத்ரத்தையும் | அடிக்குஎன்று | திருவடிகளிலே (ஸமர் பிக்க உரியவை) என்று |
| முள் ஆர் | கண்டகப்ரசுரமான | உள்ளாதார் | நினையாதவர்களுடைய |
| முளரியும் | தாமரைமலரையும் | உள்ளத்தை | நெஞ்சை |
| ஆம்பலும் | ஆம்பல்புஷ்பத்தையும் | உள்ளமா | நெஞ்சாக |
| முன் | கண்ணுக்கெதிரில் | கொள்ளோம் | கொள்ளமாட்டோம். (௬) |
| கண்டக்கா | ல்பார்த்தால்(இவைகள்) | | |
| புள் ஆய் | ஹம்ஸாவதாரம் செய் தருளினவனாய், | | |
| ஓர் ஏனம் ஆய் | வராஹாவதாரம் செய் தருளி | | |

வ்யா;—ஆரும்பாட்டு. ( கள்ளார் துழாயும் ) செவ்வித் திருத் துழாயும். ( கணவலரும் ) அலரியும். ( கூவிளையும் முள்ளார் முளரியும் ) தாமரையும். ( ஆம்பலுமுன் கண்டக்கால் ) தேடிப்பறிக்க

அ௬—ஆறும்பாட்டு. (கள்ளாரித்யாதி) கீழ்ச்சொன்ன ஜ்ஞானேந்த்ரியங் களுக்கும் கர்மேந்த்ரியங்களுக்கும் நிர்வாஹகமான மநஸ்ஸு - பகவத்விஷயத் துக்கு உறுப்பாகாவிடில், அது மநஸ்ஸன்றென்று நிந்திக்கிறார் மேலிரண்டு பாட்டாலென்று ஸங்கதி.

''கூவிளையும்''-பில்வமும்,''முள்ளார்முளரியும்''என்றது-கண்டகிதமான நாளங்களையுடைத்தான தாமரையும்.''முன்கண்டக்கால்'' என்றதுக்கு வ்யாவர் த்த்யமருளுகிறார்(தேடியித்யாதி).திருத்துழாயோடொக்கமற்றவற்றையும்ஒக்க

(க) ரா-யு-ககச-கரு.

வேண்டா. விஸஜாதியங்களைக்கூட வெண்ணிற்றென்னென்னில்; இவனது த்ரவ்யப்ராதாந்யமன்று; ஸ்நேஹப்ராதாந்யம். ஸ்நேஹ மில்லாதவன்இடில் திருத்துழாயுமாகாது. ஸ்நேஹத்தோடேஇடில் அலரியும் ஆம். ப்ராக்ருதமன்றே அப்ராக்ருதவஸ்துவுக்கு ஸத்ரு ஸம். ஸ்ரீபுருஷோத்தம முடையான் செண்பகம் உகந்து சாத்து வர்; சில ராஜபுத்ரர்கள் செண்பகங்கொண்டு சாத்தத்தேடி முன்பு பூவெல்லாம் வித்துப்போய் ஒரு பூவிருந்தது கடையிலே. இப் பூவுக்குச் செருக்காலே ஒருவர்க்கொருவர் த்ரவ்யத்தைப் போர ஏற்றி, இவர்களிலே ஒருவன் நினைக்க வொண்ணாதபடி த்ரவ்யத் தைப் போரவிட்டுக் கொடுவந்துசாத்தினான். அன்றிரா அவன் ஸ்வப்நம் காண்கிறான். "நீ இட்டபூ எனக்குக் கனத்துச் சுமக்க வொண்கிறதில்லை" என்றருளிச்செய்தான்.

(புள்ளாயேோரேனமாய் புக்கிடந்தான் பொன்னடிக்கு) ஏதே னும் த்ரவ்யமாம்படி தன்னை ஏதேனும் த்ரவ்யமாகச் சிறுகவிட்ட வன். பக்ஷிகளுக்கும் ம்ருகங்களுக்கும் ஆகாது இல்லையிறே. இவனி டுகிறவை மிகையாம்படியிறே சிறுகவிட்டபடி. (உள்ளாதாருள்ள த்தை) நினைவே அமையும். செயல்மிகை. (உள்ளமாக்கொள் ளோமே)வேறேயும் நினைப்பனவுண்டிறே அவர்கள்; தான் நினைக்கு மவையொழிய, நினைக்குமவை ஹ்ருதயமன்றென்கிறார். ரத்நபரீக்ஷ கன் கையிலேபுகுந்து இவன் விலையிட்டாலிறே விலைபெறுவது;அவ் வளவும் முடிகொண்டு திரியுமத்தனை. .... .... (சு)

---

வெடுக்கவொண்ணுமேவென்றுசங்கித்துப்பரிஹரிக்கிறார்(விஜாதீயங்களையித் யாதி).(அன்று)என்றவநந்தரம்"பார்ப்பது"என்றுசேஷம். (விவரணம்ஸ்நேஹ மித்யாதி). த்ரவ்யஸ்வரூபமும்விசாரிக்கவேண்டாவோ?ஸ்நேஹமேபோருமோ வென்னவருளுகிறார்(ப்ராக்ருதேத்யாதி). ஸ்நேஹபூர்வமாகப் பூவிட்டால்,அது அவனுக்கு அத்யந்தம் அலப்யலாபமாயிருக்குமென்றதுக்கு ஸம்வாதமருளு கிறார் (ஸ்ரீ புருஷோத்தமமுடையானித்யாதி).

இவர் "ஹ்ருதயமன்று" என்றால், அது ஹ்ருதயமாகாமல் போமோ வென்னவருளுகிறார் (ரத்நேத்யாதி). (சு)

மூ.—கனையார்கடலும் கருவிளையும் காயாவும்
அனையானை யன்பினலார்வத்தா லென்றும்
சுனையார்மலரிட்டுத் தொண்டராய்நின்று
நினையாதார்நெஞ்சென்றும் நெஞ்சல்லகண்டாமே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கனை ஆர் | மிக்க ஒலியையுடைய | மலர் | மலர்களை(கொணர்ந்து அவன்திருவடிகளிலே) |
| கடலும் | கடலையும் | இட்டு | ஸமர்ப்பித்து |
| கருவிளையும் | கருவிளைப்பூவையும் | தொண்டராய் நின்று | சேஷபூதர்களாய் நின்று |
| காயாவும் | காயாம்பூவையும் | என்றும் | எந்நாளும் |
| அனையானை | ஒத்திராநின்ற ஸர்வேஸ்வரனை, | நினையாதார் | த்யா (ஞ்)னிக்கப் பெறுதவர்களுடைய |
| அன்பினல் | ஸ்நேஹத்தோடும் | நெஞ்சென்றும் | நெஞ்சல்ல கண்டாம் (எ) |
| ஆர்வத்தால் | ஆற்றாமையோடும் | | |
| சுனை ஆர் | தடாகங்களில் நிறைந்திராநின்ற | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கனையார் கடலித்யாதி) உபமானமில்லையென்று பேசாதிருக்க மாட்டாரே. திவ்ய விக்ரஹத்துக்கு உபமானம் அபூமியாகில் ஆத்மகுணங்களுக்கு உள்ளுப்போகாரிறே. (அன்பினலார்வத்தால்) அன்பாவது - ஸ்நேஹம். ஆர்வமாவது-பெருதொழியில் முடியும்படியான ஆற்றாமை. (சுனையார்மலரிட்டு) புஷ்பாத்யுபகரணங்கள் பண்டேசமைத்திருந்தன. அவன் தன்னைத்தாழவிட்டுநின்றுன். (தொண்டராய்) இனி"அவனுக்கிது சேஷம்" என்னுமித்தைஇசையுமித்தனை. (நினையாதார் நெஞ்சென்றும் நெஞ்சல்ல)நினைவுக்கு அநதிஷ்ட்டானமானநெஞ்சு-நெஞ்சல்ல.(எ)

மூ.—வெறியார்கருங்கூந்த லாய்ச்சியர்வைத்த
உறியார்நறுவெண்ணெய் தானுகந்துண்ட
சிறியானைச் செங்கணெடியானைச் சிந்தித்து
அறியாதாரென்று மறியாதார் கண்டாமே. (அ)

---

அரு;—ஏழாம்பாட்டு. (கனையாரித்யாதி) விக்ரஹத்துக்கு ஒருபமானம் அமையாதோ, இத்தனையிட்டு வர்ணிப்பானென்னென்ன வருளுகிறுர் (உபமானமித்யாதி). ஆத்மகுணங்களைப் பேசி அநுபவிக்கப்போகாதோ வென்ன வருளுகிறுர் ( திவ்யவிக்ரஹத்துக்கித்யாதி ). (குணங்களுக்கு) என்றவநந்தரம் "த்ருஷ்டாந்தமிட்டநுபவிக்கிறுர்" என்று சேஷம். ... ... (எ)

| பதம். | உரை. |
|---|---|
| வெறிஆர் | பரிமளப்ரசுரமாய் |
| கரு | கருமை பொருந்திய |
| கூந்தல் | கூந்தலையுடைய |
| ஆய்ச்சியர் | இடைச்சிகளாலே |
| வைத்த | சேமித்துவைக்கப்பட்டதாய் |
| உறிஆர் | உறிகளிலே நிறைந்துள்ள |
| நறுவெண்ணெய் | மணம்மிக்க வெண்ணெயை |
| தான்உகந்து | தான் திருவுள்ளமுகந்து |
| உண்ட | அமுதுசெய்த |

| பதம். | உரை. |
|---|---|
| சிறியானை | (எளிமைக்குறுப்பான) சிறுமையையுடையனாய் |
| செம்கண் | சிவந்த கண்களையுடையனான |
| நெடியானை | ஸர்வேஶ்வரனை |
| சிந்தித்துஅறியாதார் | நெஞ்சாலும் நினைத்தறியாதவர்கள் |
| என்றும் | எப்போதும் |
| அறியாதார் | விஷயவைலக்ஷண்யமறியாதவர்கள்; |

கண்டாமே. (அ)

வ்யா—எட்டாம்பாட்டு. (வெறியார் கருங்கூந்தலாய்ச்சியர் வைத்த) இடைச்சிகள் வைத்த. (உறியார் நறுவெண்ணெய் தானுகந்துண்ட) ஆஶ்ரித த்ரவ்யமாகையாலே பெறாப்பேறு பெற்றானாய் உண்டபடி. (சிறியானை) ஆஶ்ரயிக்குமவர்களுக்கு இனி இல்லை என்னும்படி, தாழவிட்டு முக்த(ஃ)னானவனை. (செங்கணெடியானை) இவர்களைக்கொண்டுபோய் வைக்குமிடத்தில் இதுக்குமேல் இல்லையென்னும்படி உயரப்பரமபதத்திலே வைக்கவல்லவனை. (சிறியானைச் செங்கணெடியானை) ஆஶ்ரிதர்க்கு இப்படி எளியனாய், மேன்மையால் குறையற்றுச் சிவந்த கண்களையுடைய ஸர்வேஶ்வரனை. (சிந்தித்தறியாதார்) நினைத்தறியாதவர்கள். (என்றுமறியாதார்) இங்குத்தை எளிமையும் மேன்மையும் இரண்டுமறியாதவர்கள். .... .... .... .... .... (அ)

---

அரு;—எட்டாம்பாட்டு. (வெறியாரித்யாதி) பாஹ்யகரணங்களோடு ஆந்தரகரணங்களோடு வாசியற என்றும் பகவச்சேஷமாகாவிடில் அவை அஸத்கல்பமென்றார்கீழ். இனி மேலிரண்டு பாட்டாலே கரணிகளான மநுஷ்யர் நினையாவிடில் அஸத்கல்பரென்கிறாரென்று ஸங்கதி.

(இடைச்சிகள் வைத்த) என்றது, அதிகாரிகளுடைய தாழ்மையும் பாராதனென்றுதோற்றுகைக்காகக்கீழ் தாத்பர்யமருளிச் செய்து வாக்யார்த்தமருளுகிறார் (ஆஶ்ரிதர்க்கித்யாதி). ... ... ... ... ... (அ)

மூ.—தேனோடு வண்டாலும் திருமாலிருஞ்சோலை
தானிடமாக்கொண்டான் தடமலர்க்கண்ணிக்காய்
ஆன்விடையேழன்றடர்த்தாற் காளானாரல்லாதார்
மானிடவரல்லரென் றென்மனத்தேவைத்தேனே. (௯)

| பதம். | உரை. |
|---|---|
| தேனோடு | வாயில் தேனோடே |
| வண்டு | வண்டுகளானவை |
| ஆலும் | ஆரவாரம் செய்யாநின்றுள்ள |
| திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையை |
| தான் இடமா | தனக்கிருப்பிடமாக |
| கொண்டான் | அமைத்துக்கொண்டருளினவனாய், |
| அன்று | சுல்கப்ரஸங்கத்திலே |
| தட | விசாலமாய் |
| மலர் | கருநெய்தல் பூப்போன்ற |
| கண்ணிக்காய் | கண்களையுடையளான நப்பின்னைப்பிராட்டிக்காக |
| ஆன்விடைஏழ் | மதித்த ஏழுவ்ருஷபங்களை |
| அடர்த்தாற்கு | நிரஸித்தருளின ஸர்வேஶ்வரனுக்கு |
| ஆளானாரல்லாதார் | ஆட்படாதவர்கள் |
| மானிடவர் அல்லர் என்று | மநுஷ்யகோடியில் சேராதவர்களென்று |
| | (இவ்வர்த்தத்தை) |
| என்மனத்தே | என் ஹ்ருதயத்தில் |
| வைத்தேன் | உறுதியாகநாட்டினேன். (௯) |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (தேனோடுவண்டாலும் திருமாலிருஞ்சோலை தானிடமாக் கொண்டான்) உண்கிறவாயில், தேனுள்ளே இழிச்சுவது, உமிழ்வதாகநின்றுகொண்டு ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணும் வண்டுகள். மதுவும் நித்யமாய்ச் செல்லுகிறபடி. (தடமலர்க்கண்ணிக்காய்) சுனைப்பூப்போலேயிருந்த திருக்கண்கள்.

(ஆன்விடையேழன் றடர்த்தாற்கு) தன்னைப்பேறாதே எருதுகளை அடர்த்தவனுக்கு. (ஆளானாரல்லாதார்) அவன்றன்னைப் பேணுதொழியத் தங்களைப் பேணித் திரியுமவர்களை. (மானிடவரல்லர்) பிரித்துஅவயவங்களைச் சொல்லுகிறதென்? கட்டடங்க மநுஷ்யரல்லர். (என்மனத்தே வைத்தேனே) ஸர்வேஶ்வரன் குற்றங்

அ௩;—ஒன்பதாம்பாட்டு. (தேனித்யாதி) இவர் மனத்திலே வைத்தால் விரோதமென்னென்ன வருளுகிறார் (ஸர்வேஶ்வரனித்யாதி). ஸ்வவிஷயத்தில்குற்றங்களைப்பொறுக்குமென்றபடி. (க) "யத்யப ராதஸஹஸ்ரமஜஸ்ரம்

(க) ஸாத-ஸ்த-௬௮.

களும் பொறுக்குமிறே. அவன் கழித்தவன்றும் க்ருபைபண்ணுமவரிறே ஆழ்வார். இருவருமகப்படக் கைவிடும்படி யானார்கள். (க) "[illegible] - மித்ரமௌபயிகம் கர்த்தும்" என்னுமவளிலும், இவர்க்குவாசியுண்டு. .... .... .... (௬).

மூ.—மெய்ந்நின்ற பாவமகலத் திருமாலைக்
கைந்நின்ற வாழியான்சூழும் கழல் சூடி
கைந்நின்ற வேற்கைக்கலியன் ஒலிமாலை
ஐயொன்றுமைந்து மிவைபாடி யாடுமினே. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மெய்ந்நின்ற | ப்ரக்ருதியிலே அநுபவிக்கக்கடவதாய் நின்ற | கைநின்ற | கைகழலாதே நின்ற |
| பாவம் | பாபங்களுடைய | ஆழியான் | திருவாழியாழ்வானை நிரூபகமாக உடையனான ஸர்வேஶ்வரனுடைய |
| அகல | கழிவதற்காக, | | |
| திருமாலை | ஶ்ரிய:பதியாய், | | |

[illegible]-யதபராதஸஹஸ்ரமஜஸ்ரஜம்த்வயிசரண்ய ஹிரண்ய உபாவஹத்| வரததேநசிரம் த்வமவிக்ரிய:" என்னக்கடவதிறே. (அவன் கழித்தவன்றும்) என்றது- "[illegible]- விக்ருதிமர்பகநிர்பஜநாதகா:" என்கிறபடியே பாகவதாபசாரம் பொறுக்கமாட்டான் ஸர்வேஶ்வரன்; அவன் கழித்தவன்று மென்றபடி.

(க்ருபை பண்ணுமவரிறே ஆழ்வார்)என்றது, (உ)"பயிலும்சுடரொளி"(௩) "நெடுமாற்கடிமை" (௪)"நண்ணாதவாளவுணர்" (ரு)"கண்சோரவெங்குருதி" முதலானவற்றிலே பாகவத வைபவத்தை விஸ்தரேணவருளிச்செய்கையாலே பாகவதாபசாரம் புகுர வழியில்லாதபடி உபதேசிக்கை. இப்படிப்பட்ட ஆழ்வாருடைய உபதேசத்துக்கும் விஷயமாகாதே போனார்க்கு இனிஉஜ்ஜீவந ப்ரஸங்கந்தானுண்டோவென்னுமத்தைக்காட்டுகிறார் (இவருமித்யாதி). "மனத்தே வைத்தேனே" என்ற உத்தமனாலே தம்மதென்று தோற்றுமே என்பானென்னென்ன வருளுகிறார் மித்ரமௌபயிகமித்யாதி). பிராட்டி உபதேசம் கேளாதவனுக்குத் தலையோடே போயிற்று; ஆழ்வாருபதேசத்துக்கு உட்படாதார்க்கு ஸ்வரூபம நேசிக்குமென்று கருத்து. ... ... (௬)

(க)ரா-ஸு-உக-ககூ (உ) தி-வாய் ௩-எ. (௩) தி-வாய்-அ-கO.
(௪) தி-மொ-உ-கூ. (ரு) தி-மொ-எ-௪.

| | | | |
|---|---|---|---|
| சூழும் | எல்லாரையும் சூழ்த்துக்கொள்ளவல்ல | கலியன் | ஆழ்வார் |
| கழல் | திருவடிகளை | ஒலி | அருளிச்செய்த |
| சூடி | (சிரோபூஷணமாக) சூடுமவராய் | மாலை | சொல்மாலையான |
| கைநின்ற | கைசெய்வதற்கு (ஸஹகாரிக்கைக்கு) உறுப்பாயிராநின்ற | ஐஒன்றும் ஐந்தும் இவை | இப்பத்துப்பாட்டுக்களையும் |
| வேல் | வேலை [யரான | பாடி | வாயாரப்பாடி |
| கை | திருக்கையிலே உடை | ஆடுமின் | ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுங்கோள். (௧௦) |

வ்யா—பத்தாம்பாட்டு. (மெய்ந்நின்றபாவமகல) ப்ரக்ருதியிலே அநுபவிக்கக்கடவதாய்நின்றபாபங்கள் அகல. பாபத்துக்கடி ப்ரக்ருதியிறே. (திருமாலை) அவள் முன்னாக ஆஶ்ரயிக்கிலிறே பாபங்கள் அகலுவது. (கைநின்றவாழியான்) * எப்போதும் கைகழலா நேமியானையிறே இருப்பது. (சூழுங்கழல்) எல்லாரையுமாக்கிக்கொள்ளும் திருவடிகள். திருவடிகளுக்கு ஆகாதாரில்லை. இத்திருவடிகளைச் சூடும் ஆழ்வார். (கைநின்ற வேற்கைக்கலியன்) சேஷித்வத்துக்கு அவன் திருவாழியைப் பிடித்தாப்போலே சேஷத்வத்துக்கு இவர் வேலைப்பிடித்தபிடி. (ஒலிமாலை ஐயொன்றுமைந்தும்) பத்தும். (இவைபாடியாடுமினே) முன்பே பாசுர

---

அரு;—பத்தாம்பாட்டு. (மெய்ந்நின்றவித்யாதி) "மானிடவரல்லரென்றென்மனத்தே வைத்தேனே" என்றவர்தாமே பின்னும் ஆசையாலே அதிலே அந்வயித்தால், இப் ப்ரபந்தம் நழுவ விடாதே அநுகூலிக்கப் பண்ணுமென்று ஒருவழியருளிச் செய்கிறாரென்றவதாரிகை.

பாபத்தை "மெய்ந்நின்ற" என்பானென்னவருளுகிறார்(பாபத்துக்கித்யாதி),

(ஆக்கிக்கொள்ளும்) அடிமையாக்கிக்கொள்ளும். "ஐயொன்றுமைந்தும்" என்றால் பதினைன்றுதோற்றாதபடி யருளுகிறார் (பத்தும்)என்று. பாஹ்யகரணங்களை நிந்தித்தவைந்தும், ஆத்மாக்களை நிந்தித்து விடமாட்டாதே ப்ரபந்தத்தை அநுஸந்திக்கச் சொல்லுகிறதுமான தோஷைந்துமாகப் பத்துமருளிச் செய்தாரென்று திருவுள்ளம். ஆத்ம சப்தம், மநஸ்ஸுக்கும் ஜீவனுக்கும் பெயர். (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மிட்டுத் தந்தோம். இனிச் சரீரத்தாலுள்ள விநியோகம் கொள்ளுங்கோள். .... .... .... .... .... .... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி பதினோராம்பத்து ஏழாந்திருமொழி முற்றிற்று,

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

# பதினோராம்பத்து எட்டாந்திருமொழி

## மாற்றமுளவின் ப்ரவேசம்.

வ்யா;—அடியிலே வாதிப்ரதிவாதிகளாயாயிற்று இழிகிறது. இவர்தாம் ஒருவார்த்தை சொன்னுவிறே அவனுக்கு மறுமாற்றமுள்ளது. இவர்சொன்னவார்த்தை ஏதென்னுல்;-இவ்வாத்மவஸ்துவானது அங்குத்தைக்கு ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியும் நாய்ச்சிமார்திருமுலைத் தடத்தோபாதியும் ஸ்ப்ருஹாவிஷயமுமாய்போக்ய

அரு;—மாற்றமுளவின் ப்ரவேசம். இவ்வாழ்வார் அடியிலே "சூழ்புனல் குடந்தையேதொழுமின்" என்று துடங்கினத்தை "தண்குடந்தை நகர்பாடியாடீர்களே" என்று உபதேசித்திருக்கச் செய்தேயும் விஷய ப்ரவணராய்ப் போருகையாலே, அவர்கள் கரணங்களையும் அவர்களையும் நிந்தித்து இசையாதே அஸேவ்ய ஸேவைபண்ணியிருந்தவர், மீளவும் இந்த சாற்றுப்பாட்டிலே பலம் சொல்லித் தலைக்கட்டுகையை விட்டும் "இவை பாடி யாடுமின்" என்று பரோபதேசம் செய்ய வழியில்லை என்னும் சங்கையைப் பரிஹரிக்கிருரென்று திருவுள்ளம்பற்றி, ஆழ்வாருடைய திருவுள்ளத்திலோடுகிற நிருபண விசேஷத்தை உபபாதிக்கிருர் (மாற்றமுளவித்யாதி). தம்முடைய உபதேசமும் க்ரியகரமாகாதபடி அநாதரித்தான் ஈஶ்வரனுகையாலே இவர்களை நிந்திக்க வழியில்லை என்று கருதி, அவன் ஆதரித்திருக்கைக்குத் தம்முடைய ப்ரபந்தத்திலே அந்வயியுங்கோள், அத்தாலேஸகலப்ரதிபந்தகங்களும்போய் ஆநந்தமே பலிக்கும் என்று, மீளவும் பரமக்ருபையாலே உபதேசிக்கை கூடுமென்று கருத்து.

ஸர்வேஶ்வரன் மேலேதானே குற்றம்சுமற்றும்படி யென்னென்ன, அதுக்குக் கருத்தருளுகிருர் (அடியிலேயித்யாதி). "ஆகிலும் சொல்லுவன்"என்கையாலே (வாதிப்ரதிவாதிகள்) என்றது. "மாற்றம்" என்றத்தாலே பூர்வப்ரஶ்நம் வேண்டுகையாலே (அருளுகிருர்இவர்தாமித்யாதி). "பூணாரமார்வனை" என்றத்தையும், "தடமலர்க்கண்ணிக்காய்" என்றத்தையும் திருவுள்ளம்பற்றி

மமாயிருந்தது-அநாதிகாலம்இழந்து அநுபவிக்கவேண்டுவானென்? என்று கேட்டால்,சொல்லலாவன சிலவார்த்தையுள.அவ்வார்த்தை தானென்னென்றால்;—(க) [அங்கைத்தலத்திடையித்யாதி ] என்று மொக்க ஈஸ்வரன் முகத்தில் விழியேனென்று ப்ரதிஜ்ஞையைப் பண்ணி நம்பக்கலிலே விமுகனாய் சப்தாதிகளிலே ப்ரவணனாய், நம் பக்கல்அத்வேஷமுமின்றிக்கே போருகையாலே ஸம்ஸரித்துப் போந்தான்; இதொருவார்த்தை.

(உ) [ அநித்யமஸுகம் லோகம் - அநித்யமஸுகம் லோகம் இத்யாதி]ஸம்ஸாரபயபீதனாய்க்கொண்டு நம்பக்கல் புகுராதே நம்பக்கல் நிரபேக்ஷனாய் கர்மஸாபேக்ஷையைப்பண்ணிப் போந்தவநாதிகால வாஸிதமான புண்யபாபரூபமான கர்மபரம்பரையானது ஜந்மபரம் பரைகளிலே மூட்ட, அவ்வழிகளாலே ஸம்ஸரித்துப் போந்தான். இனி(ங)"கர்தா காரயிதா-கர்தாகாரயிதா''என்றும்,(ச)"கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்வாத் - கர்த்தாஶாஸ்த்ரார்த்தவத்வாத்'' என்றும், (ரு) "ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி- ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி'' என்றும் சொல்லுகிற படியே,கர்த்த்ருத்வ போக்த்ருத்வங்கள் சைதந்ய க்ருத்யமாயாயிற் றிருப்பது. அதில்லாமையாலே ஸம்ஸரித்துப்போந்தான் என் றுப்போலே சொல்லலாம். இவை உனக்கு வார்த்தையல்ல,

---

ப்ரஸ்நம்உதித்ததென்றுகொள்வது."மாற்றம்'' என்றது ஜாத்யேகவசநமாக்கி யருளுகிறார்(சொல்லலாவனவித்யாதி). (இத்யாதி) என்றவநந்தரம் "அப்படி யின்றிக்கே'' என்றுசேஷம். அதாவது-(க) "சிறுமானிடவரைக் காணில் நாணும் கொங்கைத்தலமிவை நோக்கிக்காணீர் கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா'' என்றிருக்கையன்றிக்கே யென்கை.

மூன்றாம்வார்த்தை (இனியித்யாதி) "கர்தா காரயிதா சைவ ப்ரேரகஶ்சானுமோதக: - சத்வாரஸ்ஸமபாகின: - கர்தாகாரயிதாசைவ ப்ரேரகஶ்சாஉநுமோதக:- சத்வாரஸ்ஸமபாகிந:'' என்று வசநசேஷம். ( போந்தான் ) என்ற துக்கு என்னிடத்திலே பாரத்தைப்பொகட்டுப் பரதந்த்ரனாய், என்னைபார்த் திராமையாலே ஸம்ஸரித்துப் போந்தானென்னும் நாலாம்வார்த்தையை ஸூசிப்பிக்கையிலே நோக்கு. இங்ஙனன்றாகில், நாலாம்வார்த்தையாகச் சொன்ன (பாரதந்த்ர்யத்தைப்பற்றி)இத்யாதி கூடாதிறே.

---

(க) நா-தி-கஉ-ச. (உ) கீ-கூ-ஙங. (ங)
(ச) ப்ருஹ்மஸூ- உ-ங-ஙங. (ரு) பூர்வமீமா-ங-எ கஅ.

"ஆகிலும் சொல்லுவன்" இதுபக்ந (भग्न)மாம்படி இவர்க்கு மேலே உத்தரம்சொல்லுவன். எங்ஙனேயென்னில்; ருசியில்லையென்றே முதல்வார்த்தை, ருச்யருசிகளுக்கும் அடியேதென்னில், மநஸ்ஸாயே இருப்பது. அந்தமநஸ்ஸு நீ இட்டவழக்கன்றோ? (௧) "𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚𑌾𑌹𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌃- ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதிஸந்நிவிஷ்ட:" (௨)"தீமனம்கெடுத்தாய்," (௩)"மருவித்தொழும்மனமே தந்தாய்" என்றுசொல்லுகிறபடியாலே ருசிஜநகன் நீயானபின்பு, ருசியில்லை என்று சொன்னவிடம் வார்த்தையல்ல.

அநந்தரம் கர்மமடியாக ஸம்ஸரித்துப்போந்தான் என்றதே? கர்மஸ்வரூபத்தைப் பார்த்தால், அதுக்ரியாரூபமாகையாலே அப்போதே நசிக்குமே. க்ரியாவான்மறக்குமே; அது-நிக்ரஹாநுக்ரஹ ரூபேண உன் திருவுள்ளத்தில் கிடந்தன்றோ அநுபாவ்யமாவது. உனக்கு நிவாரகரில்லாமையாலே அத்தை க்ஷமிக்கத்தீருமே. ஆகையாலே அதுவும் வார்த்தையல்ல. இனி கர்மகர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் சைதந்யக்ருத்யம்; அதில்லாமையாலே ஸம்ஸரித்துப்போந்தானென்னதுவும் வார்த்தையல்ல; உனக்கிது ஶரீரதயாபாரதந்த்ரமாகையாலே, ஸ்வதந்த்ரக்ருத்யமான கர்த்ருத்வம் பரதந்த்ரனுக்குக் கூடாமையாலே, அதுவும் வார்த்தையல்ல; ஶரீரக்ஷணம் ஶரீரியன்றோபண்ணுவான். ஸம்பந்தத்தையும் மறந்தாயோவென்கிறார். ஆனபின்பு உன்னுடைய அநாதரமேஹேது.

இருவரும் என்நினைத்துச்சொன்னார்களென்னில்; அவன் கர்மத்தைப்பற்றி நின்று வார்த்தை சொன்னான்; இவர் ப்ருஹ்மத்

---

இந்தநாலாம் வார்த்தைக்குஉத்தரமருளுகிறார் (சரீரரக்ஷணமித்யாதி).

"ஸர்வஜ்ஞஞான ஸர்வேஶ்வரனும், அவனாலே * மயர்வறமதிநலமருளப்பெற்றவாழ்வாரும், வாதிப்ரதிவாதிகளாம்போது ப்ரமாணங்களை நிஶ்சயித்திறே நிரூபிக்கவடுப்பது" என்னும்ப்ரஶ்நத்தைக் கிளப்பி, வேதத்தில் பூர்வோத்தர பாகங்களைப்பற்றி முதல்வார்த்தையும், உத்தரபாகம் தத்ஸாரமான திருமந்த்ரத்தைப்பற்றி இரண்டாம்வார்த்தையும், திருமந்த்ரம் தன்னில் மத்யமபதத்தைப்பற்ற மூன்றும் வார்த்தையும் நமஸ்ஸு தன்னிலும் ஆர்த்தமான பகவதேகோபாயத்வத்தையும் அசித்வத்பாரதந்த்ர்யத்தைப்பற்ற நாலாம்வார்த்தையுமாக ப்ரமாண விசேஷங்களை ஸூசிப்பிக்கிறார் (இருவருமித்யாதியாலே). இப்படி

---

(௧) கீ-௧௫-௧௫. (௨) தி-வாய்-௨-௭-௮. (௩) தி-வாய்-௨-௭-௭

தைப்பற்றி நின்று அத்தை அழித்தார். அவன் வேதத்தைப் பற்றி நின்று வார்த்தை சொன்னான்; இவர் வேதாந்த தாத்பர்யத்தைப்பற்றி அழித்தார். அவன் ஸ்வரூபத்தைப்பற்றி வார்த்தை சொன்னான்; இவர் ஸ்வரூபயாதாத்ம்யத்தைப்பற்றி நின்றழித்தார். அவன் பாரதந்த்ர்யத்தைப்பற்றி நின்று, ஸாத்யோபாயத்தைப்பற்றி வார்த்தை சொன்னான்; இவர் பாரதந்த்ர்ய காஷ்டையைப்பற்றி நின்று ஸித்தோபாயத்தைப்பற்றி வார்த்தையை அழிக்கிறார். இதுகாணும் உபாஸகரில் காட்டில் ப்ரபந்நனுக்கு ஏற்றம். *மக்கள் தோற்றக்குழிதொடங்கிமேறபாட்டுக்குறையும் இவற்றைச் சொன்னபடி.

(மெய்ந்நின்றவித்யாதி) போக்யதை அளவிறந்திருந்தது; அநுபவித்து வாழுங்கோள் நாடடைய வென்கிறார். [மெய்ந்நின்றபாவமாகல] அநுபவித்தல்லது நசியாதபடியான பாபமானது போகவென்னுதல்; தேஹோபாதிகமானது அகலவென்னுதல். [திருமாலை] விரோதியென்று பேர்பெற்றவற்றையடையப் போக்குவிக்கும் பிராட்டியை அருகேயுடையவனை. (கைநின்ற) * எப்போதும் கை கழலாநேமியானுயிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய போக்யதை அளவிறந்திருந்துள்ள திருவடிகளையென்னுதல். ஸுலபமான திருவடிகளை சிரஸாவஹித்தென்னுதல். ஸர்வேஶ்வரன் ஐஶ்வர்யப்ரகாசகமானதிருவாழியைக் கையிலே யுடையவனைப்போலேசேஷத்வப்ரகாசகமான வேலையுடைய ஆழ்வாரருளிச்செய்த இப்பத்தையும் பாடு

---

நிரூபித்தவர்த்தத்திலீடுபாடு (இதுகாணுமித்யாதி). இத்தனை உத்தரங்களுக்கு ஸூசகமெங்கேயென்ன வருளுகிறார்(மக்களித்யாதி). "நாற்றச்சுவையூறொலியாகிய" என்று சப்தாதிவிஷயங்கள் நீ இட்டவழக்கென்று இவர் உத்தரம் சொல்லுகையாலே, ஸூசிதமென்றுகருத்து. இப்படிநிரூபித்திருந்தவராகையாலே ஸம்ஸாரிகளை நிந்திப்பானென் னென்ன;என்றுவிட்டு, மீளவும உபதேசித்தாரென்று திருவுள்ளம்.

ஆழ்வார் தம்முடைய பரமக்ருபையாலே ஸம்ஸாரிகளைக்குறித்து உபதேசித்தது இப்பாட்டேயாய், மேலே மாற்றமுளவென்று தொடங்கி மேல் ப்ரபந்தங்களிலும் பரோபதேசமில்லாமையாலே இப்பாட்டில் ஆதரம் தோற்றுமளவும் வ்யாக்யாநம் செய்தருளுகிறார் (கைநின்றவித்யாதி). பாட்டுக்

வது ஆடுவதாங்கோள். விரோதிபோக்குகையில் பணியில்லை. அது தன்னடையேபோம். மேலுள்ளது உங்களுக்குஹர்ஷமே.

பகவத்விஷயத்தில் அந்வயியாதாருடைய கரணங்கள், அவர்கள் அவற்றைத் தங்களுக்கு உறுப்பென்று நினைத்தார்களேயாகிலும், அவை அவர்களுக்கு அடைத்தவையல்லவென்றும், பகவத்ப்ராவண்யமில்லாதார் முதலிலே சேதநரல்லரென்றும் சொன்னார் கீழில்திருமொழியில்; இவர்தாம் பிறர் குறையறிந்து பரிஹரிப்பாராய் நின்றார்; நாம் நின்றநிலை ஏதென்று ஆராய்வோம். இவர்தாம் தம்குறைகிடக்கப் பிறர்குறை பரிஹரிக்கப் பார்க்கிறது- தான் குறைவற்றாராக நினைத்திருந்தோ? அன்றிக்கே தம்முடையக்ருபாகுணப்ராசுர்யத்தாலேயோ? தயாவான்களாயிருப்பார் தந்தாம் குறைகிடக்கச்செய்தேயும், பிறர்குறையைப் பரிஹரிக்கப்பார்ப்பர்களிறே. பெருமாள் பிராட்டியைப்பிரிந்து தடுமாறிக்கண்ணுஞ்சுழலை

---

கெல்லாம் தொகுத்தபாவம் (விரோதியித்யாதி). இப்ப்ரபந்தாநுஸந்தாநமாத்ரத்தாலே பிராட்டியும்அவனும் உகந்து உங்களைக்கடாக்ஷித்தால் உங்களுக்குப் புருஷார்த்தம்ஸித்திக்குமென்றுபரமார்த்தத்தைஉபதேசித்தாரென்றுகருத்து

அடியிலே " குடந்தையேதொழுது" என்று ஆராவமுதைப் பருகினவராகையாலே, திருப்பிரிதிதொடங்கி உகந்தருளின நிலங்களில் ப்ரவணரானவர் * தூவிரியமலருழக்கியிலே தூதுவிட்டும், * ஏழையேதலனில் தாமேமுன்னிலையாகத்தமக்கு இவ்விபூதியிலிருப்பு அரிதாயருளவேணுமென்று சரணம்புக, அடியில் ஆராவமுதைப்பருகினவராகையாலே இவரை இன்னமும் உகந்தருளின நிலங்களை அநுபவிப்பிப்போமென்று ஸங்கல்பித்து அதிலே மூட்ட * ஒருநல்சுற்றத்தளவும் பரிபூர்ணமாக வநுபவித்து, அதுக்குமடியான ராமக்ருஷ்ணாத்யவதாரங்களையும்அநுபவித்து, தத(ல)லாபத்தாலேநொந்துமீண்டுதிருவாலியெம்பெருமானடிமேல் "போதணியப்பெற்றோம்" என்று தேறி, ஸம்ஸாரிகளிருக்கும்படியே ஆராவமுதைப் பருகச்சொல்ல, அது செய்யாமையாலே நிந்திக்கிற ஆழ்வாரைக்கண்ட ஸர்வேஸ்வரன், "இவ்வாழ்வாருக்கு இவ்விபூதியில் கால்பாவி ஏழையே தலனாகத் தீர்ந்ததோ? " என்று விசாரிக்கத்தோலி, ஸம்ஸாரமண்டலத்தில் இவரிருப்பைஅறிவிப்பித்தானென்கிறாரென்று திருவுள்ளம்பற்றி, கீழ்த்திருமொழியோடுஇதுக்குஸங்கதியருளுகிறார் (பகவத விஷயத்திலித்யாதி). (கரணங்கள்) என்றநந்தரம் " யாவைசிலவுண்டு " என்று சேஷம்,

யிட்டு வாராநிற்கச்செய்தேயும் மஹாராஜரிழவைக்கண்டபின்பு அவற்றைமறந்து அத்தைப் பரிஹரிக்கப் பார்த்தாரிறே.

"இவைகிடக்க, இவர்தாம்நின்ற நிலையை இவர்க்கறிவிப்போம். ஸம்ஸாரத்தினுடைய பொல்லாங்கையறிவித்தால் இதுவே அமையுமென்றறிந்தாராகில் இங்கேவைக்கிறோம். இதில் பொருந்தாதபடியானாராகில் அமர்ந்தநிலத்திலேகொடுபோகிறோம்" என்றுபார்த்து, "பிறரை இகழ்கிறநீர்தான்நின்றநிலையைப்பார்த்துக்காணீர்" என்ன; தம்மைப்பார்த்தார். ஜ்ஞாநலாபமுண்டேயாகிலும் அவன்உபேக்ஷித்தவன்று இவ்வருகே போகைக்குமுடலாய்,அவன்ஆதரித்தபோது அவ்வருகே போகைக்குமுடலாம்படி பொதுவான நிலத்தில் தேஹஸம்ஸ்ருஷ்டராயிருக்கிற விருப்பைக்கண்டார். குறைவற்றாராயிருக்கிறவர்கள் கோடியிலேயுமாகப் பெற்றதில்லை; இக்குறை நெஞ்சில் படாதே போதுபோக்கியிருக்கிறவர்கள் கோடியிலேயுமாகப்பெற்றதில்லை.

இதுதான் தேஹமாயும் இந்த்ரியமாயும் போக்யமாயும் பந்தகமாய்த்தோற்றியிருந்தது. இதுதான் அஸத்கல்பமாம்படியிறே பிறந்தஜ்ஞாநம். அந்தஜ்ஞாநந்தான் ஆறியிருக்கைக்குஉடலன்றிக்கே, த்வரிக்கைக்கு உடலாயிருக்குமிறே. புற்றினருகே பழுதைகிடந்

(இதுவேஅமையுமென்றிருந்தாராகில்) என்றது-உகந்தருளின நிலத்தில் ப்ராவண்யத்தாலே,(க) "இங்கே திரிந்தேற்கிழுக்குற்றென்" இத்யாதிப்படியே தேறியிருந்தாராகிலென்கை. ஜ்ஞாநமுண்டானல் உம்முடலை-கைங்கர்யத்துக்குஉடலாக்கலாமே, இதுக்கஞ்சக்காரணமென்னென்னவருளுகிறர் (ஜ்ஞாநலாபமித்யாதி). பொதுவாகையாலே அச்சத்துக்கு முடலாமேயென்று திருவுள்ளம்.

"போதணியப்பெற்றோமே" என்றிருக்குமவருக்கு பந்தகமாகாதேயென்ன; ஆகிலும் இவ்வுடம்பொடுசெய்யும் கைங்கர்யம், அபி (ரு) நிஷ்பத்யமான ஜ்ஞாநத்துக்குப் போருமோவென்கிறர் (இதுதானித்யாதி). அந்தஜ்ஞாநந்தானே பயஹேதுவாயிற்றென்கிறர் (அந்தவித்யாதி). எத்தனை சொன்னாலும் அவருக்கு ஸகலகரணங்களும் பகவத்விஷய ப்ரவணமாய், பெறில் தரித்தல், இல்லையாகில் நசித்தலாயிருக்க, இவருக்கு அஞ்சுகைக்கு நிமித்தமுண்டோவென்ன, (புற்றினருகேயித்யாதி). ஆனல் பயமநுவர்திப்பானேன்,

(க) தி-வாய்-அ-கo-ச

தாலும் "பாம்பு" என்றே பயம் அநுவர்த்திக்குமிறே. ஆகையால் இதுதான் அவஶ்யம்பரிஹரித்துக்கொள்ள வேண்டுவதொன்றாயிருக்கிறபடியும், தம்மால்பரிஹரித்துக்கொள்ள வொண்ணாதபடியாயிருக்கிறபடியும், அவனையே கால்கட்டிப் பரிஹரித்துக்கொள்ளவேண்டியிருக்கிறபடியையும் அநுஸந்தித்து, த்வதநுபவவிரோதியானதேஹஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேணுமென்று திருவடிகளிலே விழுந்து சரணம் புகுகிறார். .... .... .... .... .... *

மூ.—மாற்றமுள வாகிலும் சொல்லுவன் மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொ லென்றின்னம்
ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன்
நாற்றச்சுவை யூறொலியாகிய நம்பீ. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நாற்றம் | கந்தமென்ன | சொல்லுவன் | அதுக்குமேலே உத்தரம் சொல்லுகிறேன்; |
| சுவை | ரஸமென்ன | மக்கள் | மநுஷ்யர்களுடைய |
| ஊறு | ஸ்பர்சமென்ன | தோற்றக்குழி | கர்பஸ்தாநமாகிற பெரும்பாழியிலே |
| ஒலி | ஶப்தமென்ன | இன்னம் | இதுக்குமேலும் |
| ஆகிய | ஆகிய இக்குணங்களாய் நின்ற | தோற்றுவிப்பாய்கொல் | பிறப்பித்து ஸம்ஸரிக்கச்செய்வாயோ |
| நம்பீ! | பூர்ணனே! | என்று | வென்று நினைத்து |
| (நான் உன்னைச்சிலகேட்டால்;) | | ஆற்றங்கரை | ஆற்றங்கரையிலே |
| மாற்றம்உள | உனக்குச்சொல்லலாம் மறுமாற்றமுண்டு; | வாழ் | வர்த்திக்கிற |
| ஆகிலும் | நான்சொன்னவற்றுக்கெல்லாம் நீ உத்தரம் சொன்னையேயாகிலும் | மரம்போல் | வ்ருக்ஷம்போலே |
| | | அஞ்சுகின்றேன் | பயப்படாநின்றேன். |

(க)

வ்யா;—முதற்பாட்டு.(மாற்றமுள) "இவ்வாத்மவஸ்துவானது கௌஸ்துபாதிகளோபாதி நிர்தோஷமாய் உன்னாலே தரிக்கப்படுவ

(ஹ) "[illegible]-நபிபேதிகுதஶ்சந" என்றன்றோ ப்ரபந்நர் இருப்பது.

*வழையயேதலனிலே சரணம் புகுந்தாரே, அதுதானே அமையாதோவென்ன வருளுகிறார் (ஆகையாலித்யாதி). *

(க) தை-ஆ-கூ-க.

தொன்றாயிருக்க, இதுஅநாதிகாலம் ஸம்ஸரிக்கும்படி விட்டுவைத்தாய்நீ'' என்றுப்ராப்தாப்ராப்தவிவேகம்பண்ணிச்சொன்னால், அதுக்குஉனக்குச் சொல்லலாம்மறுமாற்றங்களுள. (மாற்றமுள) அதுக்கு அர்த்தமில்லை. ஸம்பந்தத்திலே ஒருகண்ணழிவுண்டாகிலிறே ஒரு மறுமாற்றம்சொல்லிக் கடக்கவிருக்கலாவது. உன்னோடுண்டான குடல்துடக்கு-போட்கனல்ல; உன்கண்வட்டத்தே ஸம்ஸரிக்கிறஇத்தை இல்லைசெய்யவொண்ணாது. இதுக்குநீஎன்னமறுமாற்றம் சொல்லுவது.

(உள) ''நீசேதநனைபின்புபேற்றுக்குடலாகநீயேஅநுவர்த்தித்து வரவேண்டாவோ'' என்று உனக்குச் சொல்லலாம்; ''நாம், * ஆள்பார்த்துழிதருவானாய், எதிர்சூழல்புக்குத் திரியாநிற்க, நீரேயன்றோ இவ்வளவாக மிறுக்குப்பண்ணினீர்'' என்று சொல்லலாம்; ''ஆமேனென்று இசைந்தவின்று வரநிற்கைக்குறுப்பாகவன்றோ நாம்முதலிலேசக்தியையும்ப்ரவ்ருத்தியையும்தந்துவிட்டது'' என்று சொல்லலாம்; நீ ஒரு உத்தரம்தேடி சொல்லுங்காட்டில் நான் படுகிற க்லேசத்துக்குப் பரிஹாரமாயிற்றோ? நான் படுகிறக்லேசத்தைப்பரிஹரித்துக் கொடுநின்றன்றோ உத்தாம் சொல்லுவது. (ஆகிலும் சொல்லுவன்) நான் சொன்னவற்றுக்கெல்லாம்நீஉத்தாம் சொன்னாயேயாகிலும் அதுக்குமேலே உத்தரம் சொல்லுகிறேன்.

(மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொலென்று) ''நீ,

---

அநு.—முதற்பாட்டு, (மாற்றமுளவித்யாதி) ''அரங்கநகரப்பா'' என்றபதத்தை உட்கொண்டு, அர்த்தமில்லையென்னுமத்தை உபபாதிக்கிறார் (ஸம்பந்தத்திலித்யாதி). (போட்கனல்ல) க்ருத்ரிமனல்ல. அப்பனாகையாலே அரங்கத்தில் நித்யமாக நித்ரை செய்யுமதில்லையென்னவொண்ணாதேயென்று கருத்து. ''தாமரைக்கண்ணா'' என்றத்தை உட்கொண்டருளுகிறார் (உன்கண்ணித்யாதி).

மாற்றமுண்டு என்றுசொல்லாதே ''உள'' என்று பஹுவசநமாகச் சொன்னதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (நீயித்யாதி). சொன்னதுக்கெல்லாம் ஒன்றுசொன்னால் அதுக்குமேல் சொல்லும்படி உத்தரங்கள் அநேகமுண்டாகையாலே, எனக்கத்தனை சொல்லப்போகாதென்று தோற்ற பஹுவசநப்ரயோகம் பண்ணினபடியென்று கருத்து.

நீர் சொல்லுமதுதான்எதென்னும் ப்ரஸ்நத்திலே ''மக்களித்யாதி'' என்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (நீயித்யாதி). ''தோற்றுவிப்பாய்''

சொன்னவற்றுக்கு மறுமாற்றம்சொன்னுயாகிலும், பின்னையும்உன்னை வடிம்பிட்டுக்கேட்கவேணுமென்னும் நிர்பந்தமில்லாத மநுஷ்யர்களுடைய கர்ப்ப(ஸ்ரீ)ஸ்தாநத்திலே என்னுடையகர்மாநுகுணமாக ஸம்ஸரிப்பிக்கிருயோ'' என்று. ''ஸம்ஸரிக்கைகுக்கர்மம்பண்ணுவானிவனிறே. அதுக்கீடாக ப்ரவர்த்திப்பிக்குமதன்றோ வேண்டுவது. ஆனாலும் சரீரத்தோடேயிருக்கச் செய்தேயன்றோ உமக்கு ஜ்ஞாநம் பிறந்தது'' என்ன; நெடுநாள் ''தேவோஹம், மநுஷ்யோஹம்- தேவோஹம், மநுஷ்யோஹம்'' என்று அகன்றுபோந்ததும் இச்சரீரத்தோடேயன்றோ? இன்னம் கீழ்கழிந்தகாலம் அநாதி; மேலுள்ளகாலம் அநந்தம்; ஆனபின்பு ஸம்ஸரித்தகாலம் போராதோ? இது தண்ணியதென்றும், அத்தைக்கழித்துத் தருவாய் நீயென்றும்அறிந்தபின்பும் இந்த நோவுபடவேணுமோ?

ஆனாலும்''இத்தைக்கழித்துத்தருவோம் நாம்' என்னுமறிவைப் பிறப்பித்தோமே'' என்ன; (ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன்) ஆகில் நீபிறப்பித்தஜ்ஞாநத்துக்குப்பலம்-இதுவோ? சைதந்யத்தால் கொள்ளும்கார்யம் பயஸ்த்தாநமென்கை. ஆறு பெருகித் தன்வேரையகழ்ந்து பொகடாநின்றால், போநிற்றல், பரிஹரித்துக்கொள்ளுதல், கூப்பிடுதல் செய்யவறியாதிறே. பயத்தில்வந்தால் சேதநனைகையும், பரிஹாரத்தில் வந்தால் அசித்ஸமனைகையுமாயிற்று இவனுக்கு ஸ்வரூபம்; பயமேயிறே இவனுக்குள்ளது. (க)''ஶோகாஸ்ஸூ-அஹம்பீதோஸ்மி''(உ)''நன்றுமஞ்சுவன்''(ங)''மாஶுச:-மாசுச:'' என்பான்வேறொருவனிறே. பரிஹரிக்கை-அஹம்என்கையிறே,'' உன்னுடைய அஹம் புத்தியை நினைத்து அஞ்சினையாகில் என்னுடைய அஹம் புத்தியைஅநுஸந்தித்து ஆறியிருக்கப்பாராய்''என்றானிறே.

என்று கேவலம் அவனைஅநாதரித்துச் சொல்லியிருக்கிறது. (கர்மாநுகுணமாக) என்று கூட்டுவானென்னென்ன வருளுகிறர் (ஸம்ஸரிக்கைக்கித்யாதி).

மேலுக்கவதாரிகை (ஆனாலுமித்யாதி). ''ஆற்றங்கரைவாழ்மரம்போல்'' என்றத்ருஷ்டாந்தத்துக்கு பாவமருளுகிறர் ( ஆறித்யாதி ). அத்தைத்ருஷ்டாந்தமாக எவ்வாகாரத்திலே சொன்னரென்னவருளுகிறர் (பயத்திலே யித்யாதி). (உன்னுடைய அஹம் புத்தியை) என்றதுக்கு '' நான் என்பேற்றுக்கு யத்நம் பண்ணுகை-எனக்குச்சேராதென்று நினைத்தஞ்சினையாகில்'' என்றுகருத்து.

(க) க-ஜிதந்தா-அ. (உ) தி-வாய்-அ-க-க. (ங) கீ-கஅ-சுசு.

